கழக வெளியீடு: அ௬அ

கொங்குவேளிர்

இயற்றிய

# பெருங்கதை

இரண்டாவது

## இலாவாண காண்டம்



பெருமழைப்புலவர்,

**திரு. பொ. வே. சோமசுந்தரனார்**

எழுதிய

விளக்கவுரையுடன்




திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை



உலக மொழிகளுள் தொன்மை வாய்ந்ததும், அன்று தொட்டு இன்றுகாறும் மெய்ப்பொருள்களின் மெய்நிலைபோல் அழியாத்தன்மையுடன் விளங்குவதும் நம் அருமைத் தாய் மொழியாம் தமிழ்மொழி ஒன்றே. மேலும் அஃது அயன் மொழிக் கலப்பால் மயலுற்று உருமாறித் திரிந்து புதுப்பெயர் பெற்று அழியாவண்ணம் அதனைச் செந்நாப் புலவர்கள் போற்றி வந்தனர், வருகின்றனர், வருவர். அதனாலேயே கன்னித் தமிழ் என்னும் கவின்பெற்று அது மன்னிவிளங்குகின்றது.

அதன்கண் அழியாத் தன்மைக்கு அடிகோலியமைந்து விளங்கும் தொல்காப்பிய முதலிய இலக்கணங்களே சிறப்புடைய அரண்களாம். அறிந்தோ அறியாமலோ அவ்வரண்களை அகற்ற வேண்டுமென்று முனைபவர் இவ்வுண்மையை உணர்வாராக. பத்துப்பாட்டு எட்டுத்தொகை முதலிய நூல்களைச் சங்க மருவிய நூல்கள் என்று பெருமை பாராட்டிப் பேசுகின்றோம். அதற்குக் காரணம் அதன்கண் வழங்குஞ் சொற்கள் அனைத்தும் நம் தமிழ் நாட்டில் ஒரோஒன்று ஒவ்வோரிடங்களில் உலக வழக்கில் நிலவு கின்றன என்பதேயாம். பல இடங்களையும் சேர்த்துப் பார்க்கின் எல்லாம் உலக வழக்கில் உள்ளனவென்றே புலனாகும். இந்நிலை இலக்க வரம்பை உயிர்போற் போற்றிவந்தமையால் நேர்ந்த தென்பது தெளிவாகும்.

சங்க காலத்தை யடுத்துத் தோன்றியவற்றுள் காலத்தால் முந்தியதும் சிறப்பானதும் இக் 'கொங்குவேள் மாக்கதை' என் னும் உண்மையினை இதன் உரையாசிரியர் தன் முகவுரையில் நன்கு விளக்கியுள்ளனர்; ஆண்டுக் காண்க. இந்நூலின் பெருமை கதை வடநாட்டுக் கதையாயினும் தமிழ்மொழியின்கண்ணே தான் முதன்முதல் தோன்றிய தென்பதனால் விளங்கும். இந் நூலும் முதலும் முடிவுமில்லாது இடை நடுவினுள்ளனவற்றையே கொண்டு திகழ்கின்றது. அதுவும் தமிழ்ப் பெரும்பேறும் அந் தணச் சான்றோர் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் முயன்று வெளியிட்ட முயற்சிப் பயனேயாம் என்க. ஐயரவர்கள் குறிப்புரை முதலிய விளக்கத்துடன் 1924, 1935 ஆகிய இரண்டு ஆண்டுகளில் இரண்டு பதிப்புகள் வெளியிட்டுள்ளார்கள். அவர் கட்குக் கழகத்தார் நன்றியும் தமிழகத்தார் நன்றியும் என்றும் உரியவாகுக.

இந்நூலின்கண்ணுள்ள இரண்டாவது இலாவாண காண்டம் வித்துவான் வகுப்பிற்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளது. அம் மாணவர்கள் எளிதாகக் கற்றுப் பயன்பெறும் பொருட்டு இதன்பால் அமைந்த நகர்கண்டதுமுதல் சண்பையுள் ஒடுங்கியது ஈறாகிய இருபது காதைகளுக்கும் அடியொற்றிப் பொருள் காணுமாறு தெளிந்த பொழிப்புரையும், விரிந்த விளக்கமும், இன்றியமையா இலக்கணக் குறிப்பும், தக்கமேற்கோள்களும் அமைத்து வெளியிட்டுள்ளோம். இதன் உரையாசிரியர் குறுந்தொகை, பத்துப்பாட்டு முதலிய ஒப்புயர்வில்லாச் செப்பரும் தமிழ் நூற்களுக்கு உரை இயற்றிய பெருமழைப் புலவர், திரு. பொ. வே. சோமசுந்தரனாராவர். இதன் மற்றைய காண்டங்களின் உரைகளும் கழக வழியாக விரைவில் வெளிவரும்.

இக்காதையின்கண் அமைச்சர் சூழ்ச்சித் திறனும், அரசனைக் கடமை வழுவாது ஆளச் செய்வதற்கு எடுத்துக்கொள்ளும் அரும்பெரும் செயலும், அதற்குத் துணையாக ஒத்துழைக்கும் ஏனையோர் திறனும், சிறப்பாகத் தவமுது மகளாம் சாங்கியத் தாயும் பட்டத்தரசியாம் வாசவதத்தையும் ஒத்துழைத்தமை தமிழகத்தார் கொண்டிருந்த உயிரினும் சிறந்த கடமையின் தனிச்சிறப்பைக் காட்டுவனவாகும். மேலும் தன்னுயிர் காக்கும் காதலினும் அனைத்துயிரையும் காக்கும் காவலே முதற் பெருங் கடமை என்பதையும் வலியுறுத்தும். காவல் எனினும், வீரம் எனினும், ஆண்மை எனினும், மறம் எனினும் ஒன்றே. இவற்றை எல்லாம் நுணுகி ஆய்ந்து திறம்பட முடிக்கும் முதலமைச்சன் யூகியின் ஆற்றல் வியக்கத்தக்கது. இவ்வரலாறு இக்காலத்துக்கு வேண்டிய அறிவும் ஆற்றலும் பயக்கும் நெறியினதாக அமைந்துள்ளது.

இதன் ஆசிரியர் புலவர் ; புலவர்ப் போற்றும் புரவலர் ; நிலவுலகாளும் மன்னர்; வேளிர் மரபினர். ஆதலால் எல்லாமுணர்ந்து இனிமையும், எளிமையும், திட்பநுட்பச் செறிவும், பிறவும் பொதுள யாத்துள்ளார். அதற்கேற்றவாறு அத்தகைய எல்லா நயங்களும் அமைய உரையும் திகழ்கின்றது. உண்மைத் தமிழ்ப் பண்பாட்டை உலகிற்கு மீட்டும் கொண்டுவரத் துணைசெய்வது தொன்மைத் தமிழ் நூல்களேயாம். அதனால் இதனைத் தமிழ் அன்பர்கள் அனைவர்களும் வாங்கியும் வாங்குவித்தும் பயன் பெறச் செய்வார்களாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# முன்னுரை

இந்நூல் நமது செந்தமிழ் மொழியிற் சிறந்து விளங்கும் தொடர்நிலைச்செய்யுள் நூல்களுள் ஒன்று. இது கொங்கு வேளிர் என்னும் நல்லிசைப் புலவரான் இயற்றப்பட்டதாம். இஃது அருக சமயச் சார்பாக எழுந்ததொரு நூல் ஆகும்.

ஆசிரியர் தொல்காப்பியனார்,

"அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபெனுஅப்
பொருந்தக் கூறிய எட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யுள் உறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே." (தொல். செய். சூ. க.)

எனத் தொடர்நிலைச் செய்யுட்குரிய எண்வகை வனப்பினையும் தொகுத்தோதி இவற்றுள்,

"தொன்மை தானே
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே,"
(தொல். செய். உ௩௭.)

என்னும் நூற்பாவானே பழைய கதையைப் பொருளாகக் கொண்டியற்றப்படுந் தொடர்நிலைச் செய்யுள் தொன்மை என்னும் வனப்பிற்று என்றும், கூறி மேலும் அத் தொடர்நிலைச் செய்யுள் தானே,

"இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்
பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும்
தோல் என மொழிப தொன்மொழிப் புலவர்."
(தொல். செய். உ௩௮.)

என்றும் இனிதின் இலக்கணம் வகுத்தருளினர்.

இந் நூற்பாக்களின் கருத்தாவது: அம்மை முதலிய எண் வகை வனப்புக்களும், தொடர்நிலைச் செய்யுள் உறுப்புக்களாம்; இவற்றுள், பழையதொரு கதை பொருளாகக்கொண்டு செய் யப்படும் தொடர்நிலைச் செய்யுள் தொன்மை எனப்படும். அது தானே குவிந்து மெல்லென்ற சொல்லானும் பரந்து வல்லென்ற சொல்லானும் அறம் பொருள் இன்பம் பயப்ப வீடென்னும்

விழுமிய பொருள் பயப்பச் செய்தவழித் தோல் என்னும் வனப்பிற்றும் என்பதாம். இத்தகைய நூல்கள் கொச்சகத்தானும் ஆசிரியத்தானும் வெண்பாவானும், வெண் கலிப்பாவானும் மற்றும் இன்னோரன்ன செய்யுட்களானும் கூறப்படும் இவ்விலக்கணம் பற்றி ஆசிரியத்தானே உதயணன் வரலாறுகிய பழையதொரு கதையைப் பொருளாகக் கொண்டு இயற்றப் பட்டது இப் பெருங்கதை என்னும் தொடர்நிலைச் செய்யுள் என்றுணர்க. தொடர்நிலைச் செய்யுள் எனினும், காப்பியம் எனினும் ஒக்கும். மேலும்,

"ஞகாரை முதலா ளகாரை யீற்றுப்
புள்ளியி றுதி இயைபெனப் படுமே." (தொல் - செய். உ௪0.)

என்னும் இலக்கணம் பற்றி இந்நால் இயைபென்னும் வனப் புடைத்தாகத் தன்பால் அமைந்த சிற்றுறுப்புக்களாகிய செய்யுள் ஒவ்வொன்றும் னகர மெய்யீற்றின் இற்று மேல்வருஞ் செய்யுளோடு பொருட்டொடராகவும் சொற்றொடராகவும் இயைபு படச் செய்யப்பட்டுள்ளது.

இதனை, "இயைபென்றதனானே பொருளும் இயைந்து சொல்லும் இயைந்து வரும் என்பது கருத்து; சீத்தலைச் சாத்தனுராற் செய்யப்பட்ட மணிமேகலையும் கொங்கு வேளிராற் செய்யப்பட்ட தொடர்நிலைச் செய்யுளும் போல்வன," எனப் பேராசிரியர் இந்நாற் பாவினுக்குக் கூறிய விளக்கத்தானும் உணர்க.

இனித் தமிழிலுள்ள எந்த நூலுக்கும் வடமொழி முதலியவற்றில் முதனூல் காட்ட விரும்பும் இயல்புடைய சிலர் இப் பெருங்கதைக்கும் பிறமொழியில் முதனூல் காட்டப் பெரிதும் முயன்று கையறவெய்தினர்.

அத்தகையோர் குணாட்டியர் பைசாச மொழியில் இயற்றிய "பிருகத் கதா" என்னும் நூலே இதற்கு முதனூல் ஆதல் வேண்டும் என்றும் கி. பி. ரு-ஆம் நூற்றாண்டில் அல்லது சு-ஆம் நூற்றாண்டிலிருந்த துர்விநீதன் என்னும் கங்கராசன் பைசாச மொழியிலிருந்து மொழி பெயர்த்தமைத்த பிருகத் கதையே இதன் முதனூல் என்றும் தத்தமக்குத் தோன்றியவாறே கூறிப் போந்தனர். இவற்றுள் குணாட்டியர் நூல் இப்பொழுது இல்லை. மேலும் அது சைவசமயச் சார்பானதென்று அந் நூலினின்றும் பிற்காலத்து மேற்கோளாகப் போந்த பகுதிகளான் அறியப்படுகின்றது. கங்கராசன் இவ்வாசிரியர்க்குக் காலத்தாற் பிற்பட்டவன் என்று தெரிகின்றது.

இனி, இப்பெருங்கதை தோன்றிய காலத்தை ஆராய்ந்து வரையறை செய்தற்குச் சான்றுகள் நன்கு கிடைக்கவில்லை;

எனினும், சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார், இப்பெருங் கதையினை, "கூத்தியர் இருக்கையுஞ் சுற்றியதாகக் காப்பிய வாசனை கலந்தவை சொல்லி என இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்தின் இடைச்சங்கத்துத் தொல்காப்பியம் புலப்படுத் திய மாகீர்த்தியாகிய நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைக் களத்து அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் இருந்தையூர்க் கருங்கோழி மோசியாரும் வெள்ளூர்க் காப்பியனாரும் சிறு பாண்டரங்கனாரும் மதுரை யாசிரியன் மாறனாரும் துவரைக் கோமகனும் கீரந்தையாரும் என்றித் தொடக்கத்தார் ஐம்பத் தொன்பதின்மர் உள்ளிட்ட மூவாயிரத்து எழுநாற்றுவர் தம் மாற் பாடப்பட்ட கலியுங் குருகும் வெண்டாளியும் முதலிய செய் யுள் இலக்கியம் ஆராய்ந்து செய்த உதயணன் கதையுள்ளும்," என்று இவ்வொரு நூற்கே பெரிதும் பாராட்டுரை வழங்கிச் சிந்தாமணிக்கு முற் கூறியிருத்தலைக் கூர்ந்து நோக்குமிடத்தே இந்நூல் சிந்தாமணி மணிமேகலை முதலியவற்றிற்கும் முற்றோன் றிய தென்று அப் பெரியார் கருதினர் என்பது விளங்கும்.

இனி இப் பெருங்கதையைக் கொங்குவேளிர் அருகசமயம் இத் தமிழகத்தே நன்கு பரவி வளர்ச்சியுற்றிருந்த காலத்தே தான் செய்தனர் ஆதல் வேண்டும்; அக்காலம் சிந்தாமணி சிலப்பதிகாரம் முதலிய மாபேரிலக்கியங்கள் தோன்றுதற்குக் காரணமாக இருந்ததும், கடைச்சங்க காலத்திற்கும், தேவார காலத்திற்கும் இடைப்பட நிகழ்ந்ததும், ஆகிய காலமே என்று ஒருவாறு துணியலாம்.

ஆயின் சிந்தாமணி முதலியவற்றை ஐம்பெருங் காவியம் என்று வழங்கிய சான்றோர் இந்நூலினை மறந்தது என்கொல்? என்றோர் வினா சிலர் உளத்தே தோன்றுதல் கூடும். அவ் வினாவிற்கு ஐம்பெருங் காவியம் என்னும் வழக்குப் பிற்காலத் தார் வழக்கென்றும் அவர் சூளாமணியை விடுத்தமைக் குற்ற காரணம் என்னை? என்றும் கூறி மறுக்க.

இனி இந்நூற்கு முதனூல் தான் யாது? மற்றிது தோன் றியது எவ்வாறு? எனக் கடாவுவார்க்குக் கூறுதும்.

அருகசமயத்தினரால் வழி வழியாகக் கேள்வி மாத்திரை யானே போற்றப்பட்டு வந்த முடிவேந்தர் வரலாற்றின் தொகுதி யை அவர் பெருங்கதை என்று வழங்கி வந்தனர் என்றும், அப் பெருங்கதைப் பகுதிகளினின்றும் பல்வேறு காலத்திலும் நாட்டிலும் வாழ்ந்திருந்த பற்பல புலவர்களும் பல்வேறு நூல் களை இயற்றிக்கொண்டனர் என்றும், அருகசமயம் வடநாடும் தென்னாடுமாகிய எவ்விடத்தும் நன்கு பரவி இருந்தமையால்

அவ்வந்நாட்டுப் புலவர்கள் தத்தம் மொழியாலே நூல் செய்வார் ஆயினர் என்றும், அருகசமயம் நஞ்செந்தமிழ் நாட்டில் ஓங்கியிருந்த காலத்தே அச் சமயநெறி நின்றொழுகிய வேளிர் இக் கதையில் ஒரு பகுதியாகிய உதயணன் கதையைப் பொருளாக அமைத்து நந்தண்டமிழில் இப் பெருங்கதையை ஆக்கியருளினர் என்றும் அதனால் இது முதனூலே என்றும் கருதுவது பொருந்தும் என்றே எமக்குத் தோன்றுகின்றது.

இனி, இப் பெருங்கதையில் ஒரு நிகழ்ச்சியினை மணிமேகலை ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார் தமது நூலில் ஓரிடத்தே,

> " கொடிக்கோ சம்பிக் கோமக னாகிய
> வடித்தேர்த் தானை வத்தவன் தன்னை,
> வஞ்சம் செய்துழி வான்றளை விடீஇய
> உஞ்சையிற் றோன்றிய யூகி அந்தணன்
> உருவுக் கொவ்வா உறுநோய் கண்டு
> பரிவுறு மாக்களின்." (மணி. கரு: ௬௧-௬.)

என அழகாகக் குறிப்பிட்டுள்ளார்.

இப்பெரியார் இங்ஙனம் பரிவுறு மாக்களை ஒரு நூலிற் கண்டே கூறுகின்றார் ஆதல் வேண்டும். அம் மாக்களின் பரிவினை இப் பெருங்கதையிலே அவர் கண்டிருப்பர். ஆனால் அந் நிகழ்ச்சி இருக்கவேண்டிய முற்பகுதி இப்பொழுது நமக்குக் கிடைக்கவில்லை. ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார் காலத்திலேயே இவ் வுதயணன் கதை நம் நாட்டிற் பயில வழங்கி வந்தது என்பது தேற்றமே.

இனி இதுகாறும் கூறியவை கொண்டு இந்நூல் நந்தமிழ் மொழியிலே இயற்றப்பட்டதொரு முதனூலே என்பதும், இந் நூல் சிந்தாமணி முதலிய ஐம்பெருங்காப்பியங்கட்கும் முற்பட்டது என்பதும் போதரும்.

இனி, இவ்வுதயணன் கதையைப் பொருளாகக் கொண்டெழுந்த வடநூல்களும் தமிழ் நூல்களும் பலவுள. அவை யெல்லாம் தம்முள் கதைப்போக்காற் பெரிதும் மாறுபாடுடையன. அவை வருமாறு:

க. பிருகத் கதா சுலோக சங்கிரகம்.
உ. பிருகத் கதா மஞ்சரி.
௩. பிருகத் கதா சரித் சாகரம்.
௪. உதிதோதய காவ்யம்.
௫. ரத்னவளி.

௬. சொப்பன வாசவதத்தா.
௭. பிரிய தரிசிகா.
௮. பிரதிஞ்ஞா யௌகந்தராயணம்
௯. வாசவதத்தா.
௧௦. மிருச்சகடிகை.
௧௧. கருப்பூர மஞ்சரி.
௧௨. காதம்பரி.
௧௩. உதயண குமார காவியம். (இது தமிழ்)
௧௪. வச்சத் தொள்ளாயிரம். (இதுவும் தமிழ்நூலே; இஃது இறந்து போயிற்று.)

இனி,

“வேட்டொழிவ தல்லால் வினைஞர் விளைவயலுள்
தோட்ட கடைஞர் சுடுநந்து - மோட்டாமை
வன்புறத்து மீதுடைக்கும் வச்சத் திளங்கோவை
இன்புறுத்த வல்லமோ யாம்.”

எனவும்,

“வாடை குளிர மருந்தறிவார் இல்லையோ
கூடல் இனியொருகாற் கூடாதோ - ஓடை
மதவா ரணத்துதயன் வத்தவர்கோ னட்டிற்
கதவான தோதமியேன் கண்.”

எனவும்,

“உன்னுயிரும் என்னுயிரும் ஒன்றென்ப தின்றறிந்தேன்
மன்னுபுகழ் வச்சத்தார் மன்னவா-உன்னுடைய
பொன்னகைத் தெங்கையர்தம் பொற்கைநகச் சின்னங்கண்
டென்னகைத் தேயெரிகை யால்.”

எனவும் வரும் இப்பழம் பாடல்கள் அவ்வச்சத் தொள்ளாயிரம் என்னும் நூலின்கண் உள்ளனவாதல் கூடும் என்று எண்ண இடனுளது.

இனி, இந்நூல் தோன்றிய காலம் தமிழ்மொழிக்கண் ஒரு மறுமலர்ச்சி தோன்றிய காலம் என்று தோன்றுகின்றது. என்னை? கடல்கொண்ட கவாடபுறத்தே நிகழ்ந்த முதற் சங்ககாலந் தொடங்கி இப்பொழுதுள்ள மதுரையின் நிகழ்ந்த கடைச்சங்க காலம் முடிய நிகழ்ந்த அந்நீளிய கால மெல்லாம் நம் செந்தமிழ் மொழியில் தோன்றிய இலக்கிய மெல்லாம் ஒரே வகைப் பண்பாடுடையனவேயாம். அக் காலத்துத்

தமிழ்ச் சான்றோர் சமயக் கணக்கர் மதிவழிச் செல்லாது தனி நெறி நின்று அறம் பொருள் இன்பம் என்னும் மூவகை உறுதிப் பொருள்களையும், அகம்புறம் என்னும் இருவகைப் பொருள் நெறியின்கட்படுத்தி ஒப்பற்ற இலக்கியங்களைப் படைத் தளித்தனர்.

இவர்களினது சமயஞ்சாராச் சால்புடைமைக்குத் திருக் குறளும் தொல்காப்பியமும் அழியாத சான்றுகளாகும். இனி மக்களின் உள்ளம் எப்பொழுதும் புதுமையை விரும்பும் இயல் புடையதாம் இவ் வியல்பானே மொழிகளில் மறுமலர்ச்சி தோன்றுகின்றது. கடைச்சங்க காலத்தின் பின்னர் நந்தமி ழகத்தில் புத்த சமண சமயங்கள் தலைதூக்கின. அவை மன்னர் சான்றோர் முதலிய மக்களின் நெஞ்சத்தைத் தம் புதுமையானே பெரிதும் கவர்ந்து கொண்டன. இக் காரணத் தால் இக்காலத்தே சமயச் சார்புடைய இப்பெருங்கதை சிந்தா மணி மணிமேகலை முதலிய அருமந்த பெருங் காப்பியங்கள் தோன்றலாயின.

இக் காப்பிய மெல்லாம் சமயச் சார்புடையன எனினும், பண்டைக் காலந்தொட்டுப் பண்பட்டு வந்த நமது தமிழ்ப் பண் பாட்டினைத் தம்முயிராகப் போற்றித் தம்மகத்தே பொதிந்து கொண்டிருத்தலை அறிகின்றோம். இக்காலமே நமது பண்டைய இலக்கிய முறைமை முற்றுப் பெற்ற காலமும் ஆகும்.

இனி, இம் மறுமலர்ச்சிக் காலத்தே தோன்றிய இப் பெருங் காப்பியமெல்லாம் பண்டைத் தமிழ்ப் பண்பாட்டினைத் தம்முயிராகக் கொண்டமையாலேதான் அந் நூல்கள் மேற் கொண்ட சமய நெறிகள் தளர்ந்திளைத்த காலத்தும், இவற்றின் சுவையுணர்ந்த நந்தமிழ்ச் சான்றோராற் பெரிதும் போற்றிக் கொள்ளப்பட்டன ; இன்னும் இவை நந்தமிழ்மொழி உளதாகும் காலமெல்லாம் தமிழ் மக்களாற் போற்றவேபடும் என்பது உறுதி.

இனி, இவ்வினிய தமிழ்க் கருவூலங்களை அழியவும் சிதைய வும் இறந்தொழியவும்விட்டு இவற்றைப் பேணும் மதுகையில் லாத தமிழ் மக்கள் வாளா உயிர்த்திருந்த இருட்காலம் ஒன்றும் இத்தமிழகத்தே நிகழ்ந்ததுண்டு.

"சிலப்பதிகாரம், மணிமேகலை, சங்கப்பாட்டு, கொங்குவேண் மாக்கதை, பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க் கணக்கு, இராமன்கதை, நளன்கதை, அரிச்சந்திரன்கதை முதலிய இலக்கியங்களை ஒருபொருளாக எண்ணி வாணாள் வீணாள் கழிப்பர்" என்று மனந் துணிந்து வரைந்த கூவலாமை

கள் தோன்றுதற்குக் காரணமாயிருந்த இவ்விருட் காலத்தே தான் இப் பெருங்கதை முதலிய நூல்கள் பேணப்படாது அக் காலத்தார் நிலையை நமக்கு அறிவுறுத்துவன போன்று சீர் குலைந்து நிலைகுலைந்து அழிந்தும் கெட்டும் போயின. அவ் விருட் காலத்தும் அழியாதெஞ்சி இற்றைநாள் நமக்குக் கிடைத் துள்ள இப் பெருங்கதை நூலில் ஐந்து காண்டங்கள் உள்ளன. அவற்றுள்ளும் முதலில் உள்ள உஞ்சைக் காண்டத்தில் முப் பத்தொரு முழுக் காதைகளும், முப்பத்திரண்டாம் காதையில் முற்பகுதியும், மகத காண்டத்துப் பதினோராங் காதை முழு தும், கஉ-ஆம் காதை கஎ-ஆங் காதைகளின் முற்பகுதிகளும் கO-ஆம் கசூ-ஆங் காதைகளின் பிற்பகுதிகளும், நரவாண காண்டத்தின்கண் கூ-ஆங் காதைக்குப் பின்புள்ள பகுதியும் காதைகளும் அழிந்தொழிந்தன. இப்பெருங் கதையின் இறுதி யில் துறவுக் காண்டம் என்று ஒரு காண்டம் இருந்து அழிந் திருத்தல் வேண்டும் என்றும் அறிஞர்கள் கருதுகின்றார்கள்.

இனி,

"செய்கை அழிந்து சிதன் மண்டிற் றாயினும்
பெய்யா ஒருசிறை பேரில் உடைத்தாகும்,"

என்ற நாலடியின் கூற்றிற் கிணங்க இங்ஙனம் சிதைந் தொழிந்த விடத்தும் இப்பெருங்கதை செந்தமிழின்பம் நுகர்வார்க்கு அவர் விரும்புவன எல்லாந் தரும் திறமுடையதாகவே இன்றும் திகழ்கின்றது.

இனி, "சிறந்த இலக்கியம் வெறும் பூம்பொழில் போல்வது மட்டும் அமையாது; அஃது இன்சுவைத் தீங்கனி நல்கும் பழ மரத் தோட்டம் போன்றும் அமைதல் வேண்டும்," என்று மேலை நாட்டு வித்தகர் ஒருவர் கூறியிருந்ததனை யாம் ஓதிய துண்டு. அஃதிப்பொழுது எம் நினைவில் எழுகின்றது.

இப் பெரியார் இதனால் நமக்கு உணர்த்துவதாவது :—

சிறந்த இலக்கியம் வெறும் எதுகை மோனை அடுக்கு முதலிய சொல்லழகும் உவமை முதலிய அணியழகும் இசை யழகும் உடையனவாக மட்டும் இருத்தல் போதியதாகாது: மக் களுக்கே சிறந்த பேறுகளாகிய உறுதிப் பொருள்களையும் அவை அழகிய முறையில் ஊட்டி உயிர்க்கு ஆக்கமளிப்பன வாகவும் இருத்தல் வேண்டும் என்பதாம்.

"அறம் பொருள் இன்பம் அடைதல் நூற்பயனே."

என்பதும்,

"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்"

என்பதும் நந்தமிழ்ச் சான்றோர் அமிழ்த மொழிகள் ஆகும்.

இனி, இச் செந்தமிழ் நாட்டிற் றோன்றிய நல்லிசைப் புலவர்களுட் சிறந்தவராகிய கம்பநாடர் தமது பெருங்காப்பியத்தில் ஓரிடத்தே சிறந்த இலக்கியம் எப்படி இருக்கவேண்டும் என்பதை ஓர் உவமை கூறுமுகமாய் உணர்த்தியருளினர்; அது வருமாறு :

"புவியினுக்கு அணியாய் ஆன்ற பொருள்தந்து புலத்திற்றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறியளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென்(று) ஒழுக்கமுந் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா விரியினை வீரர் கண்டார்."

(கம்ப. சூர்ப்ப - க.)

என்பதாம்.

இதன்கண் அடங்கிய கருத்துக்கள் மிகவும் சீரியன. இதன்கண் அடங்கிய கருத்திற் கெல்லாம் இப்பெருங்கதை எடுத்துக் காட்டாகத் திகழும் சிறப்புடையது என்பேம்.

இப்பெருங்கதையைத் தட்டித் திறந்த பகுதிகளில் எல்லாம் பண்டைத் தமிழ் மணம் கமழ்கின்றது. தமிழகத்திற்கே இந்நூல் ஒரு பேரணிகலனாய் விளங்குகின்றது. யாண்டும் அறத்தின் திறமும், பொருளின் பெற்றியும், இன்பத்தின் இயல்பும், வீட்டின் விளக்கமும், இந்நூலிற் பேசப்படுகின்றன. கம்பநாடர் "ஆன்ற பொருள்" என்றது இவற்றையே யாம். தன்பால் அமைந்த சுவையானே ஓதுவார் உளத்தே பதிந்து பேரின்பம் தரும் இயல்புடையதாக இப்பெருநூல் அமைந்திருக்கின்றது.

சிறந்த இலக்கியங்கள் தங்கட் பயிலும் சொல்லானும் தொடையானும் இசையானும் அறமுதற் பொருளானும் தம்மைப் பயில்வோர் உளத்தே இன்பப் பெருக்கினைச் செய்து அவர் உளத்தைப் பண்படுத்துந் தன்மையுடையனவாதல் வேண்டும். இப்பெருங் கதை நமக்கு நல்கும் இன்பச் சிறப்பினை இனிச் சிறிது காண்போம்.

## இலக்கிய இன்பநதிற்கு ஓர் எடுத்துக்காட்டு

பெருங்கதை என்னும் இப்பெருங் காப்பியத் தலைவனாகிய உதயண குமரனின் தேவியராகிய வாசவதத்தையும், பதுமாபதியும், ஒருநாள் தம் தோழியரை இருகூறாகப் பிரித்துப் பந்தாடும்படி செய்து மகிழ்வாராயினர். அம்மகளிர் ஆடலை

ஆடவர் காணுதல் மரபன்று. எனவே, அவ்வாடலைக் காண வேணவாக்கொண்ட உதயண வேந்தன் பெண்வேடங்கொண்டு ஒரு பிடியிலேறிச் சென்று அம் மகளிர் பந்தாடும் அழகினைக் கண்டு களிகூர்ந்தான். கோப்பெருந் தேவியர் இருவருடைய தோழியரும் கண்டோர் வியக்கும்படி திறம்பட ஆடாநின்றனர். திறம்பட ஆடியவருள்ளும் தலைசிறப்ப 'மானனீகை' என்னும் ஒரு தோழி அனைவருடைய பாராட்டினையும் பெற்றாள். இவளுடைய பந்தாட்டத்தினைக் கண்ட உதயணன் பெரிதும் வியந்தான்; மேலும் அம் மானனீகையின் பேரழகும் அக்கலையழகோடு கலந்துவிடவே, அவ்வேந்தன் அவள்பால் கட்டுக் கடங்காத காமவேட்கையுடையனாயினான்.

பந்தாட்டம் முடிந்த பின்னர் உதயணகுமரன் தன் மாளிகைக்குச்சென்று காமத்தால் தவித்துக்கொண்டிருந்தான். மானனீகை என்பவள் வாசவதத்தையின் ஒப்பனைமகள் என்பதும், அவளே எப்பொழுதும் வாசவதத்தைக்கு அணிசெய்கின்றாள் என்பதும் அவள் யவன மொழியும் கற்றிருக்கின்றாள் என்பதும் உதயணன் பிறரை வினவித் தெரிந்துகொண்டான். அவ்விரவு தன் மாளிகைக்கு வந்த வாசவதத்தையைக் கூர்ந்து நோக்கித் "தேவி! நினக்கு ஒப்பனை செய்தவர் யார்? இவ்வொப்பனை உன் இயற்கை யழகைக் கெடுக்கின்றது. யானே நின் அழகிற் கேற்ப அணிவன்காண்" என்று கூறி அவ்வொப்பனைகளைக் கலைத்துவிட்டுப் பூந்தாதினைச் சந்தனத்தோடு குழைத்து முல்லையரும்பாகிய எழுதுகோலிற் றோய்த்து அவ் வாசவதத்தைக்குக் கோலஞ் செய்வான் போன்று, யவன மொழியாலே வாசவதத்தையின் நெற்றியில் ஒரு திருமுகம் வரைந்து மானனீகையின்பால் விடுத்தான்.

**அத்திருமுகப் பொருள் வருமாறு:—**

"ஓடியா விழுச்சீர் உதயணன் ஓலை
கொடியேர் மருங்குல் குயின்மொழிச் செவ்வாய்
மானனீகை காண்க! சேணுயர்
மாட மீமிசை மயில்இறை கொண்டென
ஆடன் மகளிரோ டமர்ந் தொருங்கீண்டி
முந்துபந் தெறிந்தோர் முறைமையிற் பிழையாப்
பந்துவிளை யாட்டினுள் பாவைதன் முகத்துச்
சிந்தரி நெடுங்கண்என் நெஞ்சகம் கிழிப்பக்
கொந்தழற் புண்ணொடு நொந்துயிர் வாழ்தல்
ஆற்றேன் அவ்வழல் அவிக்கும் மாமருந்து
கோற்றேன் கிளவிதன் குவிமுலை யாகும்
பந்தடி தானுறப் பறையடி யுற்றவென்

சிந்தையும் நிலையும் செப்புதற் கரிதெனச்
சேமம் இல்லாச் சிறுநுண் மருங்குற்(கு)
ஆதார மாகி அதனொடு தளரா
அருந்தனந் தாங்கி அழியும் என்நெஞ்சிற்
பெருந்துயர் தீர்க்கும் மருந்து தானே (நீயே)
துன்றிய வேற்கண் தொழிலும் மெய்யழகும்
பைங்கொள் கொம்பாப் படர்தரும் இந்நோய்
ஆழ்புனற் பட்டோர்க்(கு) அரும்புணை போலச்
சூழ்வளைத் தோளி காமநற் கடலில்
தாழ வுறாமல் கொள்க தளர்ந்(து) உயிர்
சென்றால் செயல்முறை ஒன்றுமில்! அன்றியும்
அடுக்கிய இளமை தலைச்செலின் நாம்தரக்
கிடைப்ப(து)இல் இரப்போர்க்(கு) அளிப்பது நன்றென
நினைத்த வாசகம் நிரப்பின்று எழுத
இடத்தளவு இன்மையின் கருத்தறி வோர்க்குப்
பரந்துரைத் தென்னை பாவை இக்குறை
இரந்தனென் அருள்.'' (ச: கங. சுங - கக)

அன்பர்களே, “சொன்னலங் கடந்தது காமச்சுவை.” என்பர். இத்திருமுகத்தில் தன் காதலுள்ள முழுவதையும் உதயணன் திறந்து காட்டியே இருக்கின்றான். எனினும் தன் மனக் கருத்தெல்லாம் சொல்லின் அடங்காமை கண்டு நொந்து போகின்றான்.

இனி, நமது பேரிலக்கியங்களுள்ளும் இவ்வுதயணன் வரைந்த காதற் கடிதந் தரும் அளவு இன்பம் செறிந்த பகுதிகள் பெரும்பாலன அல்ல. இக் காதற்கடிதம் எத்தனை முறை திரும்பத் திரும்ப ஓதினும் தித்திக்கும் தன்மையுடையதாதல் உணர்க.

இன்பஞ் செறிந்த செய்யுள் இஃதென அதனை நுகர்ந்த ஒருவன் மற்றொருவனுக்குச் சுட்டிக் காட்டலாவதன்றி இச் செய்யுள் இன்னின்ன காரணத்தால் இன்பமுடைத்தாயிற்று, என்றுதல் செய்யுளின்பத்திற்கு இன்ன இலக்கணம் என்றுதல் கூறிக் காட்டுதல் இயலாது என்ப. அங்ஙனமே மானனீகை யின்பாற் காதல்கொண்ட உதயணன் வரைந்த இக்காதற் கடிதம் நல்கும் இன்பம் இத்தகையது என்று சொல்லிக்காட்ட இயலாதேம் ஆகின்றேம் அல்லமோ.

“.....................நிரப்பின் றெழுத
இடத்தள வின்மையிற் கருத்தறி வோர்க்குப்
பரந்துரைத் தென்னை?''

என்றே யாமுங் கூறி அமைகின்றேம்.

இனி இலக்கியங்கட்குப் பெருஞ்சிறப்பளிப்பன அவற்றி லமைந்த சுவைப் பகுதிகளே ஆகும். இச்சுவை தராமாட்டா தன இலக்கியங்களும் ஆகமாட்டா. சுவை :—நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்னும் இவ் வெட்டுமாம். இவற்றிற்கும் நிரலே இந் நூலி னின்று ஒவ்வொன்று காட்டுதும்.

க. நகைச்சுவை

ஆசிரியர் தொல்காப்பியனார் சுவையுள் நகையினை முன் னிறுத்தியதற்கும் சிறந்த காரணம் உண்டு. அம் முறையி லேயே யாமும் காட்டுதும். (முற் கூறப்பட்ட) உதயணன் தன் னுள்ளத்தைத் திறந்துகாட்டி வாசவதத்தையின் பிறைநுதலிற் பொறித்துத் தனக்கு விடுத்த திருமுகத்தை உணர்ந்து மான னீகை, "தேவீ! பெருமகன் எழுதிய பேரலங்காரத் திருமுகம் அழகுடைத்து," என அவளை மருட்டினளாய் இச் சொற் றொடர் உதயணனால் கோலஞ்செய்யப்பட்ட நின் அழகிய முகம் அழகுடைத்து என்றும், உதயணனால் நினது நுதலிற் பொறிக் கப்பட்ட ஓலைப்பாசுரம் இனிமையுடைத்து என்றும் பொருள் படுதல் உணர்க) மறுநாட் காலையில் அத் திருமுகத்திற்கு மறு மொழியாக அவ்வாசவதத்தையின் நுதலிலேயே, "நெறிமயிர்க் கருகே அறிவரிதாக முழுதியல் அருள்கொண்டு அடியனேன் பொருளா எழுதிய திருமுகம் பழுதுபடல் இன்றிக் கண்டேன். காவலன் அருள்வகை என்மாட்டு உண்டே ஆயினும் ஒழிக எம்பெருமகன். மடந்தையர்க் கெவ்வாறு இயைந்ததை இயை யும்? பொருந்திய பல்லுரை உயர்ந்தோர்க்கு ஆகும். சிறி யோர்க்கு அருளிய உயர்மொழி வாசகம் இயைவதன்றால். இவ் வயின் ஒருவரும் காணார் என்று காவலுள் இருந்து பேணுசெய் தல் பெண் பிறந்தோருக்கு இயல்பும் அன்றே. அயலோர் உரைக்கும் புறஞ்சொலும் அன்றி அறந்தலை நீங்கும் திறம்பல வாயினும் குறைந்த என் திறத்து வைத்ததை இகழ்ந்து மறப் பது பொருள்," என்று இனிதின் வரைந்து அவன்பால் விடுத் தாள்.

இம்மானனீகை என்பவள் யார் என்று உதயணனுதல், வாசவதத்தையாதல் அறிந்ததில்லை. ஒரு தோழி-திறமுடைய தோழி-என்று மட்டுமே அவர்கள் அறிவர். ஆனால் இதனை ஓதும் யாமோ அவள் கோசல மன்னனின் மகள் என்றும் ஒரு காரணத்தால் இங்கே வந்து வாசவதத்தைக்குத் தோழியாக உள்வரிக் கோலத்தோடு கரந்துறைவாளாயினள் என்றும் நன்குணர்வோம். நனி உயர்ந்த வேந்தர் குடிப்பிறந்தாளாகிய அம் மானனீகை எழுதிய இத்திருமுகம்,

"நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்." (குறள் : கூகக)

என்னும் அருமைத் திருக்குறளுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்ந்து நமக்கு அளவற்ற இன்பம் அளித்தலும் உணர்க.

சான்றாண்மையுடைய உதயணன் நெஞ்சம் தன் தகுதிக் கேற்றவிடத்தேதான் நெகிழ்ந்துளது. மானனீகைதானும் உதயணன்பாற் காதல் பெருகிய உள்ளத்தினளேனும் தன் உயர்குடி பிறப்பிற்கேற்ப இங்ஙனம் மறுத்தனள் ஆயினும், உதயணன் மீண்டும் மீண்டும் நெருக்குதலானும், ஊழும் அங்ஙனம் இருத்தலானும் ஒருவாறு உடம்பட்டு அரண்மனையின் பூம்பொழிலில் அமைந்ததொரு மண்டபத்தைக் குறிப்பிட்டு அம்மண்டபத்திற்கு எம்பெருமான்! இற்றை இரவில் எழுந்தருள்க! என்று (தமிழ்முறைப்படி) இரவுக் குறியிடம் கூறி விட்டாள்.

"மாதர் நோக்கின் மானனீகை" மறுமொழியைப் பெற்ற உதயணன் அவள்பால் காமம் பெருகிக் காதல் கடிகொள அற்றைப் பகலை அரிதினிற் கழித்து அவள் குறிப்பிட்ட மண்டபத்தை ஆரிருளிலடைந்தான். ஆண்டு மானனீகையையும் கண்டு.....................

இஃதிங்ஙனமாக உதயணன் ஒழுக்கத்தில் வாசவதத்தை ஐயுற்று அவனைப் பின்தொடர்ந்து ஆராய்தற்குத் தன் உயிர்த் தோழியாகிய காஞ்சனமாலையை விடுத்திருந்தாள். இவ்வாற்றால் காஞ்சனமாலையும் உதயணனை அவன் அறியாது பின் தொடர்ந்து அம்மண்டபத் தயலிலே மறைவாக இருந்து ஆண்டைய நிகழ்ச்சிகளை ஒற்றியறிந்து தன் தலைவிக்குக் கூறி விட்டனள்.

மறுநாள் இரவினும் அக்காதலர் அம்மண்டபத்தே கூடுவது என்று முடிவு செய்திருந்தபடியால் வாசவதத்தை மானனீகையைச் சிறைப்படுத்திவிட்டு மறுநாள் இரவில் தானே சென்று காஞ்சனமாலையை ஒருசார் மறைய வைத்து அம் மண்டபத்திலே புகுந்திருந்தனள். பின்னர்ப் புதுக் காதலியைக் காண்டற்கு விரைந்தெய்திய உதயணன், அம் மண்டபத்தே புகுந்து அங்கிருந்த வாசவதத்தையை மானனீகையாக மதித்து ஆர்வத்தோடே தன் மலர்க்கையை அவள் பணைத்தோளில் வைத்தனன். வாசவதத்தையும் வாய்வாளாது வேந்தன் செய்வது காண்குவம் என்று கருதி அவன் கையினைத் தன் கையாற்

றள்ளினள். மானனிகையே ஊடினாள் என்று நினைத்த உதயணன் உள்ளுள்ளே உவந்து,

"முரசு முழங்கு தானை அரசொடு வேண்டினும்
தருகுவல் இன்னே பருவரல் ஒழியினி
மானே! தேனே! மானனீகாய்!"

என்று பணிமொழி பலகூறி அவள் காலைப் பற்றமுயன்றான்.

வாசவதத்தைதானும் மீண்டும் அவன் உரைப்பது கேட்க எண்ணிக் கால் கொடாது மறுத்து ஒதுங்கினள்.

அந் நீக்கத்தைப் பொறாத உதயணன் இவட்கு ஒரு புதுமைச் செய்தியைக் கூறுமாற்றால் இவளை ஊடல் தீர்ப்பேன் என்று கருதி "மானே தேனே மானனீகாய் ஒருமொழி கேள்! வாசவதத்தை,

"இயைந்த நெஞ்சுடை யாமிரு வர்க்கும்
கழிந்த கங்குலின் நிகழ்ந்ததை எல்லாம்
கனவது முந்திய வினைய தாதலின்
அதனிற் கண்டு எனக்கு ஒளியாது."

உரைத்தனள் காண். உரைக்கவே ஒரு வழியானே அவளை யான் மருட்டித் தெளிவித்தேன்" என்று கூறியவாறே அவளை அணுக அணுக அவளும் பெயர்ந்து பெயர்ந்து போயினள்.

இங்ஙனம் ஊடல் முதிரவே என் செய்வான் அளியனே! அளியன்! உதயணன் அவள் காலில் வீழ்ந்து வணங்கினான்.

அதுகண்ட வாசவதத்தை கொல்லெனச் சிரித்து,

"மிக்கோய் கூறிய மானும் தேனும் மானனீகையும் யான் அன்று; என் பெயர் வாசவதத்தை" என்றாள். அந்தோ அப்பொழுது அவன் நிலைமை என்னும்?

அன்பர்களே! நகைதானும் முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச் சிரித்தலும் என மூன்று வகைப்படும் என்ப. அவற்றுள் ஈண்டுக் காட்டிய பகுதி பெருகச் சிரித்தற்கு ஏதுவாகும் இயல்புடைத்து. இப்பெருங்கதையில் இம்மூவகைச் சிரிப்புக்கும் நிலைக்களனுவன பற்பல பகுதிகள் உள்ளன. அவற்றைப் பயின்றே இன்புறுதல் வேண்டும்.

### உ. அவலச் சுவை

இச்சுவை பிறத்தற்கிடமான பகுதிகள் இப்பெருங்கதையில் மிக்குள்ளன. உஞ்சைக் காண்டத்தில் (௩௬) உழைச்சன

விலாவணை, (சஎ) உரிமை விலாவணை என்பனவும், இலாவாண காண்டத்தில் (கo) யூகிக்கு விலாவித்தது, (கக) தேவிக்கு விலாவித்தது என்பனவும் ஆகிய நான்கு காதைகளும் இவ் அவலச் சுவைக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளன.

யூகி என்னும் அமைச்சன் இறந்துபட்டானாகக் கருதிய உதயணகுமரன்,

"மாழாந்து உயிர்வாழ்வு ஒழிகெனச்
சிதர்பொறி எந்திரம் போலச் சிதர்ந்து
தாரும் பூணும் மார்பிடைத் துயல்வரச்
சோருங் கண்ணினன் துளங்கிமெய்ம் மறப்ப
இடியே றுண்ட நாகம் போலக்
கொடியேர் சாயல் கொழுங்கவின் வாடப்
பூவிருங் கூந்தல் புல்லென விரிய
வாசவ தத்தையும் வத்தவன் மார்பின்
மம்மர் எய்திய மயக்க நோக்கி
விம்ம லெய்திய வியன்பெருங் கோயில்
அழுகை ஆகுலங் கழுமிய பின்றை" (உ. கo: கoகூ-ககஅ)

எனக் காப்பியத் தலைமக்கள் இருவரும் அவலித்தலும்,

"மாதாங்கு தடக்கை மன்னருள் மன்னன்
நளிகதிர் மண்டில நாண்முதற் றோன்றி
ஒளியிடப் பெறாஅ உலகம் போல
இருளகம் புதைப்ப மருளகத் தெய்தித்
தருமமும் கருமமும் தளரச் சாஅய்
ஆழின் அல்லதை அரசியல் வழாமை
வாழ்த லாற்றேன் யான் என மயங்கி"
(உ. கo: கங௨ - கங௮)

உதயணன் அவலித்தலும்,

வாசவதத்தையைத் தீப்பற்றிய அரண்மனையிற் புகுந்து யாண்டும் தேடி அவள் இறந்துவிட்டாளாகக் கருதிய காஞ்சனமாலை கல்லும் மண்ணும் உருகும்படி வாய்திறந்து,

"நாவலந் தண்பொழில் நண்ணார் ஓட்டிய
காவலன் மகளே! கனங்குழை மடவோய்!
மண்விளக் காகி வரத்தின் வந்தோய்!
பெண்விளக் காகிய பெறலரும் பேதாய்!
பொன்னே! திருவே! அன்னே! அரிவாய்!
நங்காய்! நல்லாய்! கொங்கார் கோதாய்!
வீணைக் கிழத்தி! வித்தக உருவீ!

தேனேர் கிளவீ! சிறுமுதுக் குறைவீ!
உதயண குமரன் உயிர்ப் பெருந்தேவீ!
புதையழல் அகவயிற் புக்கனை யோளனக்
கானத் தியிடைக் கணமயில் போல. (உ. கஅ: எசு-அசு)

அவலித்தலும் ஒருசில எடுத்துக் காட்டுக்களாம்.

இன்னோரன்ன பகுதிகள் உணர்ச்சியோடு கதை தழுவி ஓதுவாருடைய கண்களிலே அவலக் கண்ணீரைத் தோற்றும் பெற்றியன.

### ரு. இளிவரற் சுவை

உதயணகுமரன் காம அளற்றில் இறங்கி எளியனாயினான்; என இடபகன் யூகிக்குக் கூறுகின்ற,

"போகப் பெருநுகம் பூட்டிய காலை
மாக விசும்பின் மதியமும் ஞாயிறும்
எழுதலும் படுதலும் அறியா இன்பமொடு
ஒழுகுபுனல் அகழினை உடையெனக் கிடந்த
முழுமதில் நெடுங்கடை முதற்பெரு நகரம்
தாரணி யானை பரப்பித் தலைநின்று
ஆருணி அரசன் ஆள்வதும் அறியான்
தன்னுயிர் அன்ன தம்பியர் நினையான்
இன்னுயிர் இடுக்கண் இன்னதென் றறியான்
அவையும் கரணமும் அவைவகுத் திருவான்
அந்தி மந்திரத் தருநெறி யொரீஇத்
தந்தையொ டொறுக்கப் படாஅன் சிந்தை
அகன்உணர் வில்லா மகனே போலத்
தன்மனம் பிறந்த ஒழுக்கின னாகிப்
பொன்னகர் தழீஇய புதுக்கோப் போலச்
செல்வியுங் கொடாஅன் இவ்வியல் புரிந்தனன்
அண்ணல்" (உ. க: கஅ ச- கககூ)

என்னும் இப்பகுதி இளிவரற் சுவை பிறப்பித்தற்கோர் சிறந்த எடுத்துக்காட்டாம்.

இனி, இராச கிரிய நகரத்தே உதயணன் மாறு வேடத்தோடு சென்றிருந்த பொழுது அந்நகரத்து மன்னன் மகள் காமக் கோட்டத்திற்கு வழிபாடு செய்யச் சிவிகையிற் சென்றாளாக. அப்பொழுது மக்கள் நெருங்கி நின்று அக் காட்சியைக் கண்டு களித்தனர். இத்துணை ஆரவாரத்தோடு செல்லும் இப்பெருமாட்டிதான் யாவளோ? என்று அறிய விரும்பிய உதயணன் அக் கூட்டத்தினை ஊடறுத்துச் சென்றான். அங்

னம் செல்வானை ஆண்டு நின்ற காவலர் கடிந்து தடுத்தனர். அந்நிலைமை தனக்கெய்தியதனை நினைத்த உதயணன் தன்னுள்.

"நெஞ்சுநிறை துயரமொடு
நீக்கச் சென்றனனென் நெருநல்; இன்றிவண்
நீக்கப் பட்டனனென் ஆதலின் நிலையா
ஆக்கமுங் கேடும் யாக்கை சார்வா
ஆழிக் காலிற் கீழ்மேல் வருதல்
வாய்மை யாமென" (ங. சு: உக - ஙசு.)

நினைத்து வருந்தினன் எனவரும், இம் மொழிகள் இளிவரற் சுவைக்கு ஒப்பற்ற இலக்கிய மாதலோடு காஞ்சித்திணைப் பொருளை எத்துணை அழகாக விளக்குகின்றன காண்மின்.

## ச. மருட்கைச் சுவை

இனி மருட்கைச் சுவைக்கு நிலைக்களனாகிய பகுதிகள் இப் பெருங்கதையின்கட் பற்பல உள்ளன ; ஈண்டு இரண்டொன்று காண்பேம்.

இறந்தவரை எழுப்பித் தரும் விச்சையை யுடைய ஒரு முனிவனைப் பற்றி அமைச்சர்கள், என்னே ! இஃதென்னே ! என்னே ! இஃதென்னே !

"இருநிலம் புகுதலும் ஒருவிசும் பிவர்தலும்
வருதிரை நெடுங்கடல் வாய்க்கொண் டுமிழ்தலும்
மந்தரம் ஏந்தலும் என்றிவை பிறவும்
கண்டும் அறிதும் கண்கூ டாகச்
செத்தோர்ப் புணர்க்கும் விச்சையொடு புணர்ந்தோர்க்
கேட்டும் அறியலம் வீட்டருஞ் சிறப்பின்
புண்ணியம் உடைமையின் நண்ணின னிவன்
ஒருதலை யாகத் தருதல் வாய்," (ங. ச: அசு - கூச.)

என்று வியந்தோதலும்,

விரிசிகையின் அழகைக் கண்ட நகரமாந்தர்,

"குடிமலி கொண்ட கொடிக்கோ சம்பி
வடிநவில் புரவி வத்தவர் பெருமகற்கு
ஆக்கம் வேண்டிக் காப்புடை முனிவர்
அஞ்சுதரு முதுகாட்டு அஞ்சா ரழலின்
விஞ்சை வேள்வி விதியிற் றந்த
கொற்றத் திருமகள் மற்றிவ டன்னை
ஊனார் மகளி ருள்வயிற் றியன்ற

மானேர் நோக்கின் மடமகள் என்றல்
மெய்யன் றம்மொழி பொய்யென் போரும்,''

(சு. கஎ : ௩உ-௩௦.)

எனவரும் இத்தொடக்கத்து வியத்தகு மொழிகளும் காண்க.

## ரு. அச்சச் சுவை

அச்சத்தையும் சுவையாக்கி அகமகிழ நம்மனோர்க் களிக்கும் நல்லிசைப் புலவர் ஆற்றல் பெரிது! பெரிது!

உஞ்சை நகரத்திலே தீப்பற்றிக் கொண்டது. அப்பொழுது ஆண்டு நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் அச்சச்சுவைக்கு ஒப்பற்ற எடுத்துக் காட்டுகளேயாக அமைந்துள்ளன.

"ஈற்றுப் பெண்டிர் இளமகத் தழீஇ
ஊற்றுநீர் அரும்பிய உள்ளழி நோக்கினர்
காற்றெறி வாழையிற் கலங்கிமெய்ந் நடுங்கி
ஆற்றேம் யாமென்று அலறினர் ஒருசார்
போதுகொண் டணியிற் பொறுக்க லாற்றுத்
தாதுகொண் டிருந்த தாழிருங் கூந்தலர்
கருங்கேழ் உண்கண் கலக்கமொ டலமரப்
பெருஞ்சூற் பெண்டிர் பேரழல் நோக்கி
வருவோர்க் கண்டு வணங்கினர் ஒருசார்
தவழும் புதல்வரை ஒருகையாற் றழீஇப்
பவழம் சேர்ந்த பல்காழ் அல்குலர்
அவிழ்ந்த பூந்துகில் அங்கையின் அசைஇ
நகைப்பூங் கோதையொடு நான்ற கூந்தற்கு
மிகைக்கை காணாது புகைத்தீ எறிப்பப்
படைத்தோன் குற்றம் எடுத்துரைஇ இறக்கேம்
அங்கித் தேவன் அருளென அயன்மனைப்
பொங்குநீர்ப் பொய்கை புக்கனர் ஒருசார்"

(க. ௨௩: ௧௩௬ - ௧௫௨.)

என்றற் றொடக்கத்தன அச்சச்சுவைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாம்.

## சு. பெருமிதச்சுவை

பெருமிதம் என்பது வீரம். இது கல்வி தறுகண் புகழ் கொடை என்னும் நான்கும் பற்றிப் பிறக்கும். கீழ்க்காட்டும் ஒரு பகுதியே இந் நான்கிற்கும் சிறந்த எடுத்துக் காட்டாதல் உணரலாம். (உதயணன்பாற் கற்று நிரம்பிய பிரச்சோதனன் மக்கள் அரங்கேறிய பொழுது ஆன்றோர் அப் பிரச்சோதன மன்னனை நோக்கிக் கூறியது.)

"பனிவிசும் பியங்குநர் பாடோர்த்து நிற்பக்
கனிகொள் இன்னிசைக் கடவுள் வாழ்த்தித்
தேவ கீதமொடு தேசிகந் தொடர்ந்த
வேத இன்னிசை விளங்கிழை பாடத்
திருந்திழை மாதர்கொல் தெய்வங் கொல்லென
இருந்தவர் தெருளார் இசைபுகழ்ந் தேத்தி
நாலுஞ் செவியும் நுண்ணிதின் நுனித்தே
யாழும் பாடலும் அற்றம் இன்றி
விலக்கும் விடையும் விதியின் அறிந்து
துளக்கில் கேள்வித் தூய்மையின் முற்றி
வத்தவ நாடன் வாய்மையிற் றருக்கும்
கொற்ற வீணையும் கொடுங்குழை கொண்டனள்
இறைகெழு குமரரும் ஏனை விச்சைத்
துறைநெறி போகிய துணிவினர் ஆயினர்
தேயாத் திருவ நீயுந் தேரின்
நிலங்கொடை முனியாய் கலங்கொடை கடவாய்
வேள்வியிற் றிரியாய் கேள்வியிற் பிரியாய்
இனேயோய் தாணிழல் தங்கிய நாடே
வயிர வெல்படை வானவர் இறைவன்
ஆயிரங் குஞ்சரத் தண்ணல் காக்கும்
மீமிசை உலகினுந் தீதிகந் தன்றெனத்
தொல்லிசை யாளர் சொல்லெடுத் தேத்த,"

(க. ௩எ : கஉஎ - கசஅ.)

எனவரும். அன்பர்களே ஆ! ஆ! இப்பகுதி பெருமிதச் சுவையோடு விழுமிய வீறுடைய தீவிய தண்டமிழின்பத்தை வாரி வழங்கும் தன்மையதாதலும் உணர்க. இத்தகைய ஒப்பற்ற இன்பப் பகுதிகள் தாம் இப் பெருங்கதையில் எத்தனை! எத்தனை!

## எ. வெருளிச் சுவை

வெருளிச் சுவை தோன்றுதற்கு, உறுப்பறை, குடிகோள், அலை, கொலை என்னும் நான்கும் நிலைக்களன் என்பர் ஆசிரியர் தொல்காப்பியனார்.

உதயணன் வாசவதத்தையை வஞ்சகமாகக் கவர்ந்து போயினன் என்ற செய்தியை மறமாச்சேனன் என்னும் மன்னர் மன்னனுக்கு வராகன் என்னும் பணியாள் வந்து கூறுகின்றான். அச் செய்திகேட்ட அவ்வடல் வேந்தன்,

"செருச்செய் நெடுங்கண் தீயெனச் சிவப்பப்
பிரச்சோ தனனெனும் பெரும்பெயர் விளக்கம்
மகிழ்ச்சி எய்தி வத்தவற் றெளிந்த

இகழ்ச்சி அளற்றுள் இறங்கிற் றின்றெனச்
சுற்ற மாக்களைச் சுடுவான் போலப்
பொற்றார் மார்பன் பொங்குபு வெகுண்டு
முகைநகை முத்தொடு தகைமுடி தயங்க
அருவரை அகலத்(து) ஆரம் புரளத்
திருமுடி அண்ணல் தீப்படச் சீறி
எழுவுறழ் திணிதோள் எடுத்தனன் ஓச்சிப்
பொழிமணித் திண்தூண் பொறிபடப் புடைத்து
மாற்றுச் சிங்கத்து மறக்குரல் கேட்ட
ஏற்றுச் சிங்கத்தின் இடித்தெழுந் துரறி
... ... ... ...
எள்ளி இறந்த இன்னா மன்னனைப்
பற்றுபு தம்மென்" (க. சஎ : க00 - கஉக.)

எனக் கட்டளையிட்டான் எனவரும்.

பிற்றைநாட் புலவராகிய கம்பநாடரும் இப் பிரச்சோதன னிடத்தேதான் தமது காப்பியத்திலே வரும் இராவணன், இரணியன் முதலியோர்க்கு வெகுளக் கற்றுக் கொடுத்திருத்தல் வேண்டும் என்று எமக்குத் தோன்றுகிறது. இது, குடி கோள் நிலைக்களனாகப் பிறந்த வெகுளி எனப்படும்.

அ. உவகை

உவகை என்பது, செல்வம் அறிவு புணர்ச்சி விளையாட்டு என்பன நிலைக்களனாகத் தோன்றும் மகிழ்ச்சி என்ப. எனவே காமம்பற்றி வரும் சுவையெல்லாம் இதன்கண் அடங்கும். பெருங் காப்பியத்திற்குக் காமச்சுவையும் அவலச்சுவையுமே தலைசிறந்த சுவைகளாகும் என்ப. அவலமும் காமச்சுவை சார்வாகத் தோன்றின் மிக இனிமையுடையதாம். தமிழர் மேற்கொண்ட அகம்புறம் என்னும் இரு பகுதிகளினும் இவ்வவலச் சுவை நிரலே முல்லை நெய்தல் பாலை என்னும் மூவகை அக ஒழுக்கத்தி னும் காஞ்சி என்னும் புறவொழுக்கத்தினும் மிகுதியாகக் காணப் படும். இன்பம்பற்றிய அவலமும் இன்பச் சுவையே யாகும். இச் சுவையின் சிறப்பை "வடநூலுட் போசராசனும் சுவைபல என்று கூறுவார் கூறுக. யாங் கூறுவது இன்பச் சுவை ஒன் றனையே என இதனையே மிகுத்துக் கூறினன்" என ஆசிரியர் பரிமேலழகர் (குறள் - காமத்துப்பால் முன்னுரை.) நுண்ணிதின் எடுத்துக் காட்டினர்.

திருத்தக்க முனிவர்பாற் சில புலவர்கள் " ஆருகத சமயஞ் சார்ந்த புலவர் துறவு பாடுவரல்லது காமச்சுவை கனியக் கர்ப்

பியம் இயற்ற அறியார்" என்று கூறினர் என்றும், அதுகேட்ட முனிவர் அச்சுவை கெழுமப் பாடுவதிலும் ஆருகதர் ஆற்றல் மிக்கவரே என்று அப்புலவர்கட்குக் காட்டும் பொருட்டுத் தமது சீவக சிந்தாமணியை அச் சுவை ததும்பவியற்றினர் என்றும் ஒரு கதை வழங்குகின்றது. இப் பெருங்கதை அவ் உவகைச் சுவையில் சீவக சிந்தாமணியினும் ஒரு சிறிது உயர்வுடைய தாகவே விளங்குகின்றது. இந் நூலின்கண் வரும் பல காதைகள் காமச்சுவைக்கே நிலைக்களனாகத் திகழ்வதைக் காணலாம். அவற்றையெல்லாம் ஓதியே உணர்தல் வேண்டும். ஒரு பானை சோற்றிற்கு ஒரு சோறு பதம் பார்த்தல் போன்று ஒன்றிரண்டு ஈண்டுப் பார்ப்போம். ... ... ...

## ஊடலும் கூடலும்

கலையுள்ளம் படைத்த உதயணகுமரன் பதுமாபதியின் மாளிகையில் அவளோடு அளவளாவி இருக்கும்பொழுது அம் மாளிகையின்கண் எழுதப்பட்டிருந்த ஒரு மான் ஓவியத்தினையும் அதன் கண் அழகினையும் கூர்ந்து நோக்கி அவ் வழகில் கருத்தொன்றி நின்றானாக; அது கண்ட பதுமாபதி தன் மருங்கிருந்தும் இக் கயவன் நம் அழகைப் பொருட்படுத்தாமல் வேறெதனையோ கூர்ந்து நோக்குகின்றனனே என்று சினந்து அவ்வுதயணன் செவியிற் படும்படி,

"சூட்டுமுகந் திருத்தி வேட்டுநறு நீரின்
மயிரும் இறகும் செயிரறக் கழீஇக்
கோல்நெய் பூசித் தூய்மையுள் நிறீஇப்
பாலுஞ் சோறும் வாலிதின் ஊட்டினும்
குப்பை கிளைப்பறாக் கோழி போல்வர்
மக்கள் என்று மதியோர் உரைத்ததைக்
கண்ணிற் கண்டேன் என்று கைந்நெரித்துக்"
(ந - கச : க0அ - கசச.)

கூறிப் பின் தன்னையே நோவாளாய்,

தம்மால் வந்த தாங்கரும் வெந்நோய்
தம்மை நோவ தல்லது பிறரை
என்னது நோவல் ஏதம் உடைத்தெனக்
கருங்கேழ் உண்கண் கயலெனப் பிறழ்ந்து
பெருங்கயத் தாமரைப் பெற்றிய வாகத்
திருநுதல் வியர்ப்பெழுந் திருநிலத் திழிதர
நிலாவுறு திருமுக நிரந்துடன் மழுங்கி" (ஷை - ககஎ-கஉஉ.)

ஒருபால் ஒதுங்கினள். இந்நிலைமையைக் கண்ட உதயணன் பெரிதும் அஞ்சி,

"கரும்பேர் கிளவி கதிர்முகை முறுவற்
... ... ... ...
பெருந்தடங் கண்ணி! பிழைப்பொன் றுணரேன்
அரவுவாய்க் கிடப்பினும் அலர்கதிர்த் தண்மதிக்
குருவுக்கதிர் வெப்பம் ஒன்றும் இல்லை
சிறியோர் செய்த சிறுமையுண் டெனினும்
தரியாது விடாஅர் தாமனி பெரியோர்
என்பது சொல்லி" (ங. கச : சஙஉ - கசங.)

இரந்து அவளது சிறுபுறம் நீவித் தோடுதிருத்தி நலம் பாராட்டிச் செவ்வி தேர்ந்து தழுவ முயல்வானுக; அந் நங்கை இவற்றானும் ஊடல் தீராமல் ஒருபாற் செல்லுங்கால் அம் மாளிகை உச்சியின் மேலிருந்து ஒரு கூகை அக் கூரிருட் பொழுதில் அஞ்சுதகக் குழறிற்று. அவ் ஒலியானே அவள் நெஞ்சந்துட்கென்று அஞ்சி நடுங்கியவளாய் அண்ணலைக் கதுமெனத் தழுவிக் கொண்டனள். அவ்வச்ச முயக்கத்தை உதயணன் பெரிதும் விரும்பி

"மெல்லியன் மாதரொடு மேவன கிளந்து
புல்லியும் தனைத்தும் புணர்ந்தும் பொருந்தியும்
அல்குலும் ஆகமும் ஆற்றநலம் புகழ்ந்தும்
அமரர் ஆக்கிய அமிழ்துஎனக்கு இளையோள்
தன்முனை எயிற்றுநீர் தானென அயின்றும்
ஒழுகா நின்ற காலை" (ஷை : கடுக - கசுச.)

எனவரும்.

## பெருங்கதையிற் சங்க காலத்துத் தண்டமிழ் வளம்

இவ் வுதயணன் கதை இடைகடை என்னும் இருவகைச் சங்க நூல்களையும் நன்கு ஆராய்ந்து செய்யப்பட்டது என்று அடியார்க்கு நல்லார் கூறியதற்கிணங்க இப் பெருங்கதைப் பெருங்காப்பியத்தில் யாண்டும் பண்டைத் தமிழ்வளம் மிக்குக் காணப்படுகின்றது. கடைச்சங்க காலத்தின் இறுதியில் நந்தமிழ் இலக்கியத்தில் ஒரு மறு மலர்ச்சி உண்டாயிற்று என்று முன்னர் விளம்பினும். மறுமலர்ச்சி என்பது பழைய நலனெலாம் புத்துருவத்திற் றோன்றுவதேயாம். பழையவற்றை அழித்துப் புதியதாகத் தோன்றுமொன்றனை மறுமலர்ச்சி என்னல் பொருந்தாது. அதனைப் புரட்சி என்று வேண்டுமானுல் கூறலாம். புரட்சியினும் மறுமலர்ச்சியே மக்கட்கு நலமளிக்கவல்லது. மாந்தர் உள்ளம் பழமையை வெறுத்துப் புதுமையை அவாவும் ஒரு பண்புடையது. ஆதலால் சான்றோர்கள் இன்றியமையாப் பழைய நலங்களைப் புத்துருவிற் சமைத்து மீண்டும் அதனை மாந்தர்

விரும்பும்படி செய்கின்றனர். இத்தகைய மறுமலர்ச்சி காலந் தோறும் நிகழ்ந்து வருதலை வரலாறுகளும் நமக்கு நன்கு காட்டா நின்றன. மாந்தர் நலம் வளர்வதற்கு இம் மாற்றம் இன்றியமையாதென்றும் தோன்றுகின்றது. ஒரு மறுமலர்ச்சிக்குப் பின்னர் அதற்கு முன்பு பயிற்சியிலிருந்த முறை நின்றுவிடும். இம் முறைப்படி மூன்று சங்ககாலத்தும் பயின்று வந்த தமிழ் இலக்கிய ஆக்கநெறி இம் மறுமலர்ச்சிக் காலத்தே நின்றுவிட்டது. இம் மறுமலர்ச்சியினூற் றோன்றிய இப் பெருங்கதையும் சிந்தாமணியும் சிலப்பதிகாரமும் பிறவுமாகிய காப்பியங்கள் மிக அழகான முறையில் நம் பண்டைச் சங்கத்தமிழ்ப் பண்பாட்டினை நமக்குப் பேணிப் புத்துருவந் தந்து அளிக்கின்றன. இவற்றுள் முன்தோன்றிய காரணத்தால் இப் பெருங்கதை ஏனைக் காப்பியங்களினும் பெரிதும் பண்டைப் பண்பாடு மிக்கு மிளிர்வதாகின்றது. இந்நூலின் செய்யுட் போக்குப் பெரும்பாலும் பண்டைய பாட்டுந் தொகையும் பதினெண்கீழ்க் கணக்குமாகிய சங்க நூல்களின் போக்கையே பெரிதும் ஒத்திருக்கின்றது. அங்ஙனம் ஒத்தியங்கும்போதே அம் மறுமலர்ச்சிக்குரிய புதுமையும் இப் பெருங்கதைச் செய்யுளின்கண் யாண்டும் காணப்படுகின்றது.

இக் காரணத்தால் இப் பெருங்கதை நம் பண்டைத் தமிழ் நூல்களுக்கு நுண்ணுரை கண்டுரைத்த அடியார்க்கு நல்லார், பேராசிரியர் முதலிய உரையாசிரியரெல்லாருக்கும் மேற்கோள் நூலாக அமைந்தது.

இனி, இப் பெருங்கதையில் திருக்குறள் நாலடிநானூறு முதலியவற்றிற் கூறப்படும் பொருள்கள் தகுந்த இடங்களிலே அழகாக எடுத்தாளப்படுகின்றன.

நம் அருமைத் திருக்குறளை எடுத்தாளாத புலவர்களே இலர் எனினும் இந் நூலின்கண் அத்திருக்குறள் மணிகள் எடுத்தாளப்படும் முறை சிறந்ததாகக் காணப்படுகின்றது. இந் நூலில் உறுப்பினர்களாக வருகின்ற தலைவன் முதலியோர் கூற்றாக அத் திருக்குறட் கருத்துக்கள் அங்கங்கே வருகின்றன. சிலவிடங்களில் இக் காப்பிய உறுப்பினர் தங் கூற்றோடு திருக்குறட் கருத்துக்களைப் பாலோடு தேன் கலந்தாற் போன்று அளாவித் தருகின்றனர். இதோ பாருங்கள்,

"வியன்கண் ஞாலத் தியன்றவை கேண்மின்
நன்றாய் வந்த ஒருபொருள் ஒருவற்கு
நன்றே யாகி நந்தினு நந்தும்
நன்றாய் வந்த ஒருபொருள் ஒருவற்கு
அன்றாய் மற்றஃ தழுங்கினும் அழுங்கும்

தீதாய் வந்த ஒருபொருள் ஒருவற்குத்
தீதே யாகித் தீயினும் தீயும்
தீதாய் வந்த வொருபொருள் ஒருவற்கு
ஆசில் பெரும்பொருள் ஆகினும் ஆகும்எனச்
சேயவர் உரைத்ததைச் செவியிற்கேட்கும்" (உ. க: இஎ-கூகூ)

எனவரும் இவ்வுரைகள்,

"நல்லவை எல்லாஅந் தீயவாந் தீயவும்
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு" (குறள்: நஎரு.)

எனவரும் திருக்குறள் நினைவாலே எழுந்த அத் திருக்குறளின் விளக்கமே ஆகும்.

இன்னும் காண்மின், உதயணனைக் காதலித்த வாசவதத்தை தன் தந்தை தனக்கு வேறிடத்தே மணம் பேசுகின்றான் என்று கேள்வியுற்றபொழுது நொந்து கூறுபவள்,

"விதுப்புறு நடுக்கமொடு விம்முவனள் ஆகி
இது மெய்யாயின் இன்னுயிர் வேண்டி
வாழ்வோர் உளரேனிற் சூழ்கதன் வினையென
ஆவி நுண்டுகில் யாப்புறுத் தாயினும்
சாவ துறுதி யான்" (க. நகூ : கூக - கூரு.)

என்று கூறுகின்றாள். இப் பகுதியைப் பாடுங்கால் வேளிரின் நெஞ்சத்தே,

"செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை" (குறள்: ககருக.)

என்னும் திருக்குறள் நினைவுமுகிழ்த்திருத்தல் வேண்டும் என்பது மிகையன்று.

இனிப் பிரச்சோதன மன்னன் தன் மக்கள் கலை பயின்று நிரம்பினர் என்று தன் தேவியர்க்குக் கூறியபொழுது

"திருநுதல் ஆயத்துத் தேவியர் நடுவண்
பெற்ற நாளினும் பெரும்பூட் புதல்வரைக்
கற்ற நாள்வயிற் கலிசிறந் துரைஇ
மகிழ்ச்சிக் கிளவி மழையென இசைப்ப" (க-நஎ: எஅ-அக.)

எனவரும் புலவர்மொழி,

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன்எனக் கேட்ட தாய்" (குறள்: கூக)

என்னும் திருக்குறளின் விளக்கமேயன்றோ.

இனிக் "கவற்சியிற் கையறல் நீக்கி முயற்சியில்
குண்டுதுறை இடுமணல் கோடுற அழுந்திய

பண்டிதுறை யேற்றும் பகட்டிணை போல
இருவேம் இவ்விடர் நீக்குதற் கியைந்தனம் ''
(க - ருங : ௯௨ - ௯௫.)

எனவருமிது,

" மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பா டுடைத்து " (குறள் : ௬௨௪.)

எனவரும் திருக்குறள் நினைவாலெழுந்ததாம். இதோ,

" ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும் '' (குறள் : ௭௬௩.)

என்னுமித் திருக்குறளை,

" மத்துறு கடலிற் றத்துறு நெஞ்சினர்
பைவிரி நாகத் தைவாய்ப் பிறந்த
ஒலிப்புயிர் பெற்ற எலிக்கணம் போல
ஒழிந்தோர் ஒழிய '' (க. ருசு : ௨௭௨ - ௨௭௫.)

என்னுமிதன்கண் காண்மின்.

" நவிலுெறும் இனிய ஞானம் போலப்
பயிலுெறும் இனியநின் பண்புடைக் கிழமை
உள்ளுதொ றுள்ளுதொ றுள்ளம் இன்புற ''
(௫. ௭ : ௧௪௮ - ௧௫௦.)

என்னுமிது,

" நவிலுெறு நூனயம் போலும் பயிலுெறும்
பண்புடை யாளர் தொடர்பு '' (குறள்: ௭௮௩.)

எனவரும் திருக்குறளிற் பிறிதன்று.

" உடையழி காலை உதவிய கைபோல்
நடலை தீர்த்தல் நண்பன தியல்பு '' (௫. ௩ : ௩௬ - ௪௦.)

என்னுமிது,

" உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு '' (குறள்: ௭௮௮.)

என்னுந் திருக்குறள் ஆசிரியத்தாலே அமைந்தது.

தமிழ் எனும் அளப்பருஞ் சலதியின் மூழ்கி ஆண்டுள்ள அழகிய கருத்துக்களும் சொற்களுமாகிய அரும்பெறல் மணிகளை எடுத்து, இப் பெருங்கதை என்னும் கருவூலத்தே ஒரு கிழத்தி கூறுதலே முல்லைப்பொருளாயும், பிரிந்துபோகின்றான் திறங்கூறுவன வெல்லாம் பாலையாயும் வருதலின் அம்முல்லைப் பொருளாகிய மீட்சிக்கும் தலைவி இருத்தற்கும் உபகாரப்படுவது கார்காலமாம். என்னை? வினைவயிற் பிரிந்து மீள்வோன்

சேரக் குவித்துத் தந்துள்ளார் இதன் ஆசிரியராகிய கொங்கு வேளிர் என்னும் நல்லிசைப் புலவர் என்று சுருக்கமாகக் கூறி விடுதல் அமையும். அங்ஙனமன்றி அப் பண்டைத் தமிழ்வளனெல்லாம் இதன்கண் எடுத்துக்காட்ட இச் சிறு முன்னுரை இடந்தராதன்றோ!

இயற்கைப்பொருள்களாகிய நிலன், கடல், வானம், காலம், முதலியவற்றை ஓதுவோர் உளத்தே கண்கூடாகக் கொணர்ந்து நிறுத்தவல்ல வருணனைப் பகுதிகள் இந்நூலின்கண் யாண்டும் நிரம்பியுள்ளன. அவ்வருணனைகளினும் எத்தனை எத்தனை உயரிய கருத்துக்களை இப்புலவர் பெருமான் உவமைமுதலியவற்றாலே நமக்கு உணர்த்துகின்றார். இதோ ஒரு மாலைப்பொழுது வருகின்றது காண்மின். நாள்தோறும் நாம் காணும் வறிய மாலைப்பொழுதாக வந்து வாயில்லை

## திருத்தம்

முன்னுரை 28 ஆம் பக்கம் இறுதியிலுள்ள கீழ்க்கண்ட நான்கு வரிகளை 31 ஆம் பக்கம் இறுதியில் சேர்த்துப் படிக்கவும்:

"கிழத்தி கூறுதலே முல்லைப்பொருளாயும், பிரிந்துபோகின்றான் திறங்கூறுவனவெல்லாம் பாலையாயும் வருதலின் அம்முல்லைப் பொருளாகிய மீட்சிக்கும் தலைவி இருத்தற்கும் உபகாரப்படுவது கார்காலமாம். என்னை? வினைவயிற் பிரிந்து மீள்வோன்"

லறம் இனிது நடவாது கண்டீர்! ஆதலான் "மாண்பொடு புணர்ந்த மாசறு திருநுதற் கற்புடையீராகிய நுங்கடன் அது (அப் பிரிவுத் துன்பத்தை) நோன்றலே ஆயிற்று. ஆதலின் ஆற்றியிருமின்! நும்மை நீத்துறையுநர் மீண்டு வருவதாக நுமக்குக் கூறிய கால எல்லையும் இதுதான்" என்று பரிவுடன் அம் மாலைப்பொழுது தனது முல்லை நகைதோன்ற ஆறுதல் கூறி வருகின்றது. அம் மாலைப் பொழுதிலே.

இனித் தாம் ஈட்டிய பொருள் எல்லாம் வறியோர்க்குதவி புகழும் புண்ணியம் எய்தமாட்டாராய்த் தமக்கும் ஓர் அந்திப் பொழுதுண்டு; அது அணித்தாய் வரும் என்பதனையும் சிந்தியாமல்

"வெறுக்கைச் செல்வம் வீசுதல் ஆற்றாது
மறுத்துக் கண்கவிழ்ந்த மன்னர் போல

வாசம் அடக்கிய வாவிப் பன்மலர்
மாசில் ஒள்ளொளி மணிக்கண் புதைப்ப''வும்
(டி. கரு - கஅ.)

இங்ஙனம் குவிந்த மலர்களை நினைத்துப் பசியோடு வந்த மணிவண்டுகள் தாம்

''பெருமை பீடற நாடித் தெருமந்து
ஒக்கல் உறுதுயர் ஒப்புதல் உள்ளிப்
பக்கந் தீர்ந்த பரிசிலர் உந்தவா
செறுமுகச் செல்வரிற் சேராது'' (டி. கக - உஉ.)

போகின்றாற் போன்று அவ் வச்சை மலர்களைச் சேராமல்,

''உறுபொருள் உள்ளது உவப்ப வீசி
வெறுவது விடாஅ விழுத்தகு நெஞ்சத்து
உரத்தகை யாளர் சுரத்துமுதற் சிறார்
எல்லுறு பொழுதிற் செல்லல் ஓம்பி
மகிழ்பதம் அயின்றிசி னுங்கு மல்லிகை
அவிழ்தா தூதி அளிதுயில் அமர'' (டி - உங - உஅ.)

வருகின்றது. ஆ! ஆ! எத்தனை எத்தனை இனிய நினைவுகள் இச் சிறுபுன் மாலைப் போதில் முகிழ்க்கின்றன. இஃதன்றோ சிறந்த புலமை நலம். தேடியவெல்லாம் புதைத்துவிட்டுத் தம் மந்திக் காலத்தே வாய்வாளாது வறிதே அவற்றையெல்லாம் வைத்திழந்து போகும் மாந்தர் அக்காலத்தும் இக்காலத்தும் ஏன் முக்காலத்தும் உளர் அல்லரோ ?

இனிப் பண்போடும் பசியோடும் தன்னாற் படைக்கப்பட்ட நல்லிசைப் புலவனைப் பேணும் சிந்தையில்லாப் புன் செல்வரே மிக்க இப் பேருலகத்தே பண்புடைய உறுபொருள் உள்ளது உள்ளி வீசும் புரவலரையும் அவ்விறைவன் படைத்தே வைத்திருக்கின்றான். இம் மாலைக் காலத்தே புல்லியோர் போலத் தாமரை மலர்கள் வண்டென்னும் அப் பாணனை வரவேலாது விட்டன எனினும் இம்மாலைப் போதிலே தன்னிறத்தானும் மணத்தானும் அவ்வண்டுப் பாணனை அம் மல்லிகை வள்ளல் முகனமர்ந்து வரவேற்றுப் புதிய தேனையூட்ட அவன் கவலை தீர்ந்து அம்மல்லிகை வள்ளல் அகத்திலேயே புக்கு மலர்ப் படுக்கையிற் றுயில் கொள்ளுகின்றான். இன்னும் அம் மாலைப் பொழுதிலே இனிக் கருங்கால் நாரைகள் சேய்மையிற் சென்று வயலிலே ஆரல் தேர்ந்து தம்மன்புடைய பார்ப்புக்களை எண்ணி அவ் வாரலைத் தம் வயிறே பெரிதென்று உண்ணாமல் தம் கவுளில் அடக்கிக் கொணர்ந்து தம் அருமைப் பார்ப்பினுக்கு வந்து ஈந்து இன்புறுகின்றன, அன்பு! அன்பு! அன்பு!

அன்பர்களே இப் பெருங்கதையிற் காணப்படும் இயற்கைக் காட்சிகளும் அவை பற்றுக் கோடாக எழும் சிந்தனை அமிழ்தமும் சாலப் பல.

இனி இப் பெருங்கதையில் வருகின்ற ஐந்திணைக் காட்சிகளை ஒரு சிறிது கண்டு இச் சிற்றுரையை முடிப்பாம்.

இலக்கியங்களில் திணை துறை முதலிய வரையறையோடு திகழ்வன இப்பேருலகத்தே செந்தமிழ் இலக்கியங்கள் மட்டுமே ஆகும். இத் தமிழிலக்கியங்களை மனதிற்கொண்டே கம்ப நாடரும் 'அகத்துறைகள் தாங்கி ஐந்திணை நெறியளாவிச் சான்றோர் கவிபோலக் கோதாவிரி கிடந்தது' என்று கூறினர். ஈண்டுச் சான்றோர் என்றது தமிழ்ச்சான்றோரையே என்பது தேற்றம்.

வேளிர் இப்பெருங்கதையை வடவர் நாட்டினிகழ்ந்த வரலாற்றினைப் பொருளாகக்கொண்டு இயற்றியவிடத்தும் அக் கதையாகிய நன்றாரிலே இவர் செந்தமிழ்ப் பூம்பொழிலிலே மலர்ந்த பண்புகளாகிய நறுமலர்களையே தொடுத்தமைத்திருக்கின்றார் என்பது இதனைப் பயில்வோர் நன்கு உணரலாம்.

செந்தமிழ்க்கே உரிய முதல் கரு உரி என்னும் முவ்வகைப் பாகுபாட்டினும் இவர் உள்ளம் பெரிதும் ஊடுருவி நின்றமையாலே இக் காப்பியம் நறுந்தமிழ் மணமே சால உடைத்தாய் விளங்குகின்றது.

இவர் முதல் கரு உரி என்னும் முப்பொருளையும் நினைந்து அவற்றை அழகுற அமைத்துள்ள ஓரிடத்தை மட்டும் ஈண்டுக் காட்டுவாம்.

உஞ்சையினின்றும் உதயணகுமரன் வாசவதத்தையைக் கைப்பற்றிக் கொண்டு செல்லும் வழியில் இவர் முல்லை முதலிய நிலங்களைப் பாடுதற்குத் தகுந்த வாய்ப்புண்டாக்கிக்கொள்ளுகின்றார். அவற்றுள் முல்லை நிலமாகிய முதற்பொருளை நினைந்தவுடன் இப் புலவர் பெருமானுக்கு அந்நிலத்து எஞ்சிய முதற்பொருளும் கருப்பொருளும் உரிப் பொருளும் உள்ளத்தே தோன்றுகின்றன. முல்லைக்குப் பெரும்பொழுது கார்காலமாகும்; சிறுபொழுது மாலைப்பொழுது ஆகும். இவற்றைக் "காரும் மாலையும் முல்லை" என்னும் தொல்காப்பியத்தானும் (அகத். சூ.) உணர்க. இருத்தலும் அகன் நிமித்தமும் அம் முல்லைக்கு உரிப்பொருளாம். இவை முல்லைக்கு உரியவாதற்கு, ஆசிரியர் நச்சினார்க்கினியர் நுண்ணிதிற் காரணங்கள் உணர்த்தினர் "பிரிந்துமீளுந் தலைவன்திற மெல்லாம் பிரிந்திருந்த

விரைபரித் தேரூர்ந்து பாசறையினின்று மாலைக் காலத்து ஊர்வயின் வரூஉங் காலம் ஆவணியும் புரட்டாதியும் ஆதலின், அவை வெப்பமுந் தட்பமும் மிகாது இடை நிகர்த்தவாகி ஏவல் செய்துவரும் இளையர்க்கு நீரும் நிழலும் பயத்தலானும் ஆர்பதம் மிக்கு நீரும் நிழலும் பெறுதலிற் களி சிறந்து மாவும் புள்ளும் துணையோடு இன்புற்று விளையாடுவன கண்டு தலைவற்குந் தலைவிக்கும் காமக்குறிப்பு மிகுதலானு மென்பது.

புல்லை மேய்ந்து கொல்லேற்றோடே புனிற்றாக் கன்றை நினைந்து மன்றிற் புகுதரவும் தீங்குழல் இசைப்பவும் பந்தர் முல்லை வந்து மணங் கஞற்றவும் வருகின்ற தலைவற்கும் இருந்த தலைவிக்கும் காமக் குறிப்புச் சிறத்தலின் அக் காலத்து மாலைப் பொழுதும் உரித்தாயிற்று'' எனவரும். (தொல். அக. சூ. ௬. உரை.)

இங்ஙனம் ஆசிரியர் நச்சினார்க்கினியர் தந்த அருமந்த நுண்ணிய விளக்கத்தை ஓதிய உணர்ச்சியோடே இப் பெருங் கதையில் வருகின்ற முல்லைத்திணைச் செய்யுட் பகுதியை இனிக் காண்பாம்.

''பொருள்வயிற் பிரிவோர் வரவெதி ரேற்கும்
கற்புடை மாதரிற் கதுமென உரறி
முற்றுநீர் வையக முழுது முவப்பக்
கருவி மாமழை பருவமோ டெதிரப்
பரவைப் பௌவம் பருகுபு நிமிர்ந்து
கொண்மூ விதானந் தண்ணிதிற் கோலித்
திருவில் தாமம் உருவுபட நாற்றி
விடுசுடர் மின்னொளி விளக்க மாட்டி
ஆலி வெண்மணல் அணிபெறத் தூஉய்க்
கோல வனப்பிற் கோடணை போக்கி
அதிர்குரன் முரசின் அதிர்த லானாது
தாநிறத் தண்டுளி தானின்று சொரிந்து
வேனில் தாங்கி மேனி வாடிய
மண்ணக மடந்தையை மண்ணுநீ ராட்டி
முல்லைக் கிழத்தி முன்னருள் எதிரப்
பல்லோர் விரும்பப் பரந்துகன் அகன்று
பொருள்வயிற் பிரிந்து பொலங்கல வெறுக்கையொடு
இருள்வயின் வந்த இன்னுயிர்க் காதலன்
மார்பகம் மணந்த நேரிழை மடந்தையர்
மருங்குல் போலப் பெருங்கவின் எய்திய
சிறுகொடி ஊழும் பரப்பி மற்றவர்
முறுவல் அரும்பிய முல்லை அயல

குரவுந் தளவுங் குருந்துங் கோடலும்
அரவுகொண் டரும்ப அறுகால் வண்டினம்
அவிழ்பதம் பார்த்து மகிழ்வன முரலக்
கார்வளம் பழுனிக் கவினிய கானத்(து) (க. சக: எக-கoக)

நிகழும் நிகழ்ச்சியினைப் பிற்காண்பாம்.

அன்பர்களே! இச் செய்யுளருமையை ஈண்டுச் சிறிது நினையாமல் அப்புறம் அகல்வதோ! முல்லைநிலம் என்ற நினைவு முகிழ்த்தவுடன் வேளிர் திருவுள்ளத்தே அதனை வளம்படுத்தும் கார்கால நினைவும் ஒருங்கே முகிழ்க்கின்றது. மழைபெய்தலை யாரே உவவார்! எனவே "முற்றுநீர் வையகம் முழுதும் உவப்பக் கருவி மாமழை" தனக்குரிய பருவமொடெதிரப் "பரவைப் பெளவம் பருகுபு நிமிர்ந்து" வருகின்றது. மழை கடவுட்டன்மை யுடையது; மழையே கடவுள் என்பது தமிழர் கொள்கை. கடவுள் வாழ்த்தோடு வான்சிறப்பை அடுத்தோதிய வள்ளுவர் கருத்தும் இஃதேயாகும். அம்மழை வரும் அழகையும் ஆரவாரத்தையும் காண்க.

இனி இம்முகில்கள் முழக்கத்தோடே இப்புலவர் அகச் செவியின்கண் அந்நிலத்தே பொருள்வயிற் பிரிந்த தலைவர் வருகையை எதிர்பார்த்திருக்கும் கற்புடை மாதரின் நெஞ்சக் குமுறல் நன்கு கேட்கின்றது. ஆதலால் அம்முகிலின் குமுறலுக்கு அத்தமிழ் மகளிரின் நெஞ்சக் குமுறலே சிறந்த உவமையாகும் எனக்கண்டு "கற்புடை மாதரிற் கதுமென உரறி" என்று நுண்ணிதில் ஓதுவாராயினர்.

முல்லைநிலத்து மகளிர் பொருள்வயிற் பிரிந்த தம் கணவரை எதிர்பார்த்துப் பிரிவுத் துன்பத்தைத் தாங்கி ஒருவாறு ஆற்றியிருக்கின்றனர் என்னும் இத்தமிழ்ச் செய்தியோடு இப்புலவர் நெஞ்சத்தே தோன்றும் மற்றொரு வியத்தகு நினைவினைக் காணுங்கள். முல்லைநிலமே ஒரு தலைவியாவாளாம்; அவள் தலைவன் கார்காலம் என்பவனும்; அவனும் உலகத்தே அறம் பொருள் இன்பம் சிறப்புற நிகழ்த்தற் பொருட்டுத் திரைகடலோடியும் திரவியம் தேடச் சென்றிருந்தானும்; மானிடத் தலைவர்கட்குச் சென்றோர் முகப்பப் பொருள் கிடவாதாயினும் இத் தெய்வத் தலைவனுக்கோ வேண்டும் ·பொருள் யாண்டும் முகப்பக் கிடத்தலிற் "பரவைப் பெளவம் பருகு நிமிர்ந்து" தன் காதலியை நினைந்து விரைந்து வருகின்றானும். பொருள் உடையார்க்கு எல்லாம் எளிதே கை கூடுதல் இயல்பேயன்றோ. தன் பிரிவாகிய வேனில் வெப்பத்தாலே தன் கிழத்தி மேனி வாடிக் கிடக்கின்றாள்; ஆதலின் தன் முகிலாலே உலகமெல்லாம் ஒரு பந்தரிட்டான்: அப்பந்தரின்கண் வானவில்லாகிய ஒரு

பூமாலையை அழகுற நாற்றினன்; மின்னலாகிய விளக்குகளை எங்கும் மாட்டினன் (மின்சாரத்தால் இப்புலவர் பெருமான் உலக மெல்லாம் விளக்கேற்றினர் என்பதனை நினைந்து மகிழ்க) ஆலி வெண்மழையாகிய பொருளாலே தன் கிழத்தியை மண்ணு நீராட்டினனும்.

இச்செவ்வியிலேயே தன் காதலியை ஆற்றியிருக்கப் பணித்துப்,

"பல்லோர் விரும்பப் பரந்துகண் அகன்று
பொருள்வயிற் பிரிந்து பொலங்கல வெறுக்கையொடு
இருள்வயின்"

தலைவனும் தலைவியின்பால் வந்து சேர்ந்தான். ஆ! ஆ! உலக மெல்லாம் இன்பம்! இன்பம்! இன்பம்! எங்கும் அன்பு அன்பு அன்பு இதோ காண்மின் கார்காலமாகிய தன காதலை எய்திய நிலமகள் அத் தமிழ்த் தலைவியர் இடைபோன்ற தன் கருப்பொருளாகிய முல்லைக் கொடியை எங்கும் தோற்றுவிக்கின்றுள். அம் முல்லையோ அத் தமிழ்த் தலைவியர் முறுவல் போன்று மலர்கின்றன. இனி இம்முல்லைப் பாட்டில் எஞ்சிய பகுதியைக் கூர்ந்து காண்மின்.

"ஏர்வளம் படுத்த எல்லைய வாகி
உறங்குபிடித் தடக்கை ஒருங்குநிரைத் தவைபோல்
இறங்குகுரல் இறடி இறுங்குகடை நீடிக்
கவைக்கதிர் வரகும் கார்பயில் எள்ளும்
புகர்ப்பூ அவரையும் பொங்குகுலைப் பயறும்
உழுந்துங் கொள்ளும் கொழுந்துபடு சணயும்
தோரையுந் துவரையும் மாயவும் பிறவும்
அடக்க லாகா விடற்கரு விளையுட்
கொல்லை பயின்று வல்லை யோங்கிய
வரையின் அருகா மரையா மடப்பிணை
செருத்தற் றீம்பால் செதும்புபடப் பிலிற்றி
வெண்பூ முசுண்டைப் பைங்குழை மேயச்
சிறுபிணை தழீஇய திரிமருப் பிரலை,
செறியிலைக் காயா சிறுபுறத் துறைப்பத்
தடவுநிலைக் கொன்றையொடு பிடவுதலைப் பிணங்கிய
நகைப்பூம் புறவிற் பகற்றுயில் அமரா
வரித்தார் அணிந்த விரிப்பூந் தொழுதிப்
புல்லுதள் இனத்தொடு புகன்றுவிளை யாடும்
பல்வினைப் படப்பைப் படியணை பெருங்கடி
பகர்விலைப் பண்டமொடு பல்லோர் குழீஇ
நகரங் கூஉ நாற்றம் நந்திப்

பல்லாப் படுநிரைப் பயம்படு வாழ்க்கைக்
கொல்லைப் பெருங்குடிக் கோவலர் குழீஇய
முல்லைப் பெருந்திணை''

எனவரும்.

இத்தகைய செய்யுட்களை பாட்டுந் தொகையுமாகிய பழந் தமிழ்ப் பனுவல்களைப் பயின்ற திருவுடையார் பெரிதும் ஓதியுவந் திருப்பர் எனினும் அப்பழம் பனுவலின் பண்பு கெடாமல் அவையே இப்பெருங்கதையின்கண் மறுமலர்ச்சிக்குரிய புதுமை யின்பத்தோடு விளங்குவதனை அறிவுடையோர் உணரலாம்.

இனி இங்ஙனமே இப்பெருங்கதையின்கண் யாண்டும் வரு கின்ற நிலமுதலியவற்றின் வருணனைகளைக் கண்டின்புறலாம்.

இனி, இப்பெருங்காப்பியத் தலைவனாகிய உதயணகுமரன்

"இளமையும் வனப்பும் இல்லொடு வரவும்
வளமையும் தறுகணும் வரம்பில் கல்வியும்
தேசத் தமைதியும் மாசில் சூழ்ச்சியொடு
என் வகைப் (க. ௩௬ : அகூ-கூஉ.)

பண்பும் உடையனாய் அப்பெருந்தன்மைக்கேற்ற சொற் செயலுடையனாய்ச் சிறந்து இந்நூலை ஓதுவோர் உளத்தே தொழுதகு தெய்வமாய்த் தோன்றி இன்புறுத்துகின்றான்.

இங்ஙனமே! இத்தலைவனுக்கு எவ்வாற்றானும் ஒப்பவளாகிய வாசவதத்தையோ,

"ஒண்மையும் நிறையும் ஓங்கிய ஒளியும்
பெண்மையும் பெருமையும் ............
நிலம்புடை பெயரினும் விசும்புவந் திழியினும்
கலங்காக் கடவுள் கற்பும் ............

உடையளாய் இக் குணநலங்களோடே,

"யாற்றறல் அன்ன கூந்தல் யாற்றுச்
சுழியெனக் கிடந்த குழிநவில் கொப்பூழ்
வில்லெனக் கிடந்த புருவம் வில்லின்
அம்பெனக் கிடந்த செங்கடை மழைக்கண்
பிறையெனச் சுடரும் சிறுநுதல் பிறையின்
நிறையெனத் தோன்றும் கறைபயில் வாண்முகம்
கிளியென மிழற்றும் கிளவி கிளியின்
ஒளிபெறு வாயின் அன்ன ஒள்ளுகிர்
வேயெனத் திரண்ட மென்தோள் வேயின்
விளங்குமுத் தன்ன துளங்கொளி முறுவல்
காந்தள் முகிழன்ன மெல்விரல் காந்தள்

பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை
அன்னத் தன்ன மென்னடை அன்னத்துப்
புணர்வின் அன்ன தண்டாக் காதல்
அணிக்கவின் கொண்ட அதிநாக ரிகத்து

(ச. கக: கூச - அஉ.)

உயிர் ஓவியமாய் இப்பெருங்கதையினைக் கற்றோர் நினைவிலே என்றென்று நின்று நிலவுவதொரு பத்தினிக் கடவுளாகக் காணப்படுகின்றாள்.

இங்ஙனமே சான்றாண்மைக்கே ஓர் எடுத்துக்காட்டாக இக்கதையில் வரும் சாங்கியத்தாய் என்னும் தவமுதாட்டியின் சொற்களும் செயல்களும் நம் சிந்தைக்குத் தெவிட்டாத இன்னமுதமாகின்றன. இன்னும் காஞ்சனமாலையும் யூகி முதலிய அமைச்சரும் பிறருமாய் இக்காப்பியத்திற் காணப்படும் உறுப்பினரெல்லாம் ஒவ்வொருவகையில் நம்மனோர்க் கின்பம் நல்கும் வள்ளலாகவே திகழ்கின்றனர்.

இனிப் பண்டைக் காலத்து நூல்களுள்ளும் மிக விரிந்த பெருநூலாகிய இப்பெருங்கதை அப்பண்டைக் காலத்தைப் பற்றி ஆராயும் வரலாற்றுநூற் புலவர்கட்கும் ஒப்பற்றதொரு சாதனமாகும் என்பது சொல்லாமலே அமையும்.

இனி, இப்பெருங்கதைக்குச் சிலப்பதிகாரம் சிந்தாமணி முதலிய நூல்களுக்கு உரைகண்ட அடியார்க்கு நல்லாரும் நச்சினார்க்கினியரும் போன்ற பழைய உரையாசிரியன்மார் உரைகாணாமற் போனது இது பயிலப்படாமைக்குக் காரணமாகலாம்.

ஒப்பற்ற இப்பெருநூலை இக்காலத்தே பயில்வார்க்கு ஓரளவு உதவியாயிருக்கும் என்னும் ஒரு கருத்தை மேற்கொண்டே இப்பெருங்கதையின்கண் இரண்டாவது காண்டமாக அமைந்த இவ் விலாவாண காண்டத்திற்கு யாம் பொழிப்பும் விளக்கமுமாய் அமைந்த இவ்வுரையினை எழுதத் துணிந்தேம். பிழைகளைப் பொறுத்து எம்மை மன்னிக்கும்படி பெரியோரை வேண்டுகின்றேம்.

"கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது"

என்னும் அருமைத் திருக்குறள் எமக்கு மேலும் ஊக்கந் தருகின்றபடியால் பெருங்கதையில் எஞ்சிய காண்டங்களுக்கும் இது போன்றே உரை எழுத எண்ணியுள்ளேம்.

மேலப்பெருமழை,
1-7-1956.

இங்ஙனம்,
பொ. வே. சோமசுந்தரன்.

# நூலாசிரியர் வரலாறு

இந்நூலாசிரியர் கொங்குவேளிர் என்னும் நல்லிசைப்புலவர் ஆவார். இப்பெயரானே இப்பெரியார் கொங்குநாட்டிலே சிறந்து விளங்கிய வேளிர்குடியிலே பிறந்தவர் என்பது விளங்கும்.

"நீதப் புகழ் உதயேந்திரன் காதை நிகழ்த்துதற்குக்
கோதற்ற மங்கையின் மூன்று பிறப்புற்ற கொள்கையன்றி
மேதக்க சொற்சங் கத்தார் வெள்கவே கொங்குவேள் அடிமை
மாதைக் கொடுத்தரம் சொன்னது வுங்கொங்கு மண்டலமே''

எனவரும் கொங்குமண்டல சதகமும் (கூகூ.) இதற்குச் சான்றாகும்.

[இதன்கண் "மங்கை" என்றது கொங்கு மண்டலத்தில் இப்பொழுது 'விசயமங்கலம்' என்று கூறப்படும் மூதூரினை என்பர் ஆராய்ச்சியாளர்.]

வேளிர்குடி என்பது பண்டைநாள் தமிழகத்திற் சிறந்து திகழ்ந்த பெருங்குடிகளில் ஒன்று. வேளிர் என்பதன் பொருள் வேளாண் மரபினர் என்பதாம். இம்மரபினர் முடியரசர்க்கு மகட்கொடைக்குரியராகவும் குறுநில மன்னராகவும் இருந்து கோலோச்சி வந்தனர் என்றும் அறிகின்றோம். அழுந்தூர் வேள் நாங்கூர்வேள் இருங்கோவேள் என்பாரும் இவ் வேளிர் குடித்தோன்றல்களே. இவ்வேளிர்குடி நாட்டினைப் பற்றிப் பதினெண் வகைப்படும் என்பர். அப்பதினெண் வகையுள் ஒன்றாகிய கொங்குவேளிர் குடியிற் பிறந்தமையால் இவர் குடிப் பெயராலேயே வழங்கப்பட்டனர். இவர்தம் இயற்பெயர் தெரிந்திலது.

கொங்குவேளிர் புலவர் ஆதலோடு புரவலரும் ஆவார். இவர் தம் நாட்டில் ஒரு செந்தமிழ்ச் சங்கம் நிறுவித் தமிழ்ப் புலவரைக் கூட்டி அவரையும் தமிழ்மொழியையும் பேணிவந்த பெரியோர் என்று தெரிகின்றது. இவர் இங்ஙனம் தமிழாராய்ந்தே இப் பெருநூலை இயற்றினர் என்பதனை,

"சான்றோர் செய்யுட்களினும் கூத்தியர் இருக்கையும் சுற்றியதாகக் காப்பிய வாசனை கலந்தவை சொல்லி என, இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்தின் இடைச் சங்கத்துத் தொல்காப்பியம் புலப்படுத்திய மாகீர்த்தியாகிய நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைக்களத்து அகத்தியனாரும், தொல்காப்பியனாரும், இருந்தையூர்க் கருங்கோழி மோசியாரும் வெள்ளூர்க்

காப்பியனாரும், சிறுபாண்டரங்கனாரும், மதுரையாசிரியன் மாற னாரும், துவரைக் கோமகனும், கீரந்தையாரும் என்றித் தொடக் கத்தார் ஐம்பத்தொன்பதின்மர் உள்ளிட்ட மூவாயிரத்து எழு நூற்றுவர் தம்மால் பாடப்பட்ட கலியும் குருகும் வெண்டாளி யும் முதலிய செய்யுள் இலக்கியம் ஆராய்ந்து செய்த உதயணன் கதையுள்ளும்" என அடியார்க்கு நல்லார் உரைத்தலானும் உணரலாம்.

இனி இந்நூலாசிரியர் கடைச்சங்ககாலத்தை ஒட்டிய காலத்தே மணிமேகலை ஆசிரியர் சிலப்பதிகார ஆசிரியர்களா கிய சீத்தலைச் சாத்தனார்க்கும் இளங்கோவடிகளார்க்கும் முன் னர் உயிர் வாழ்ந்தவர் என்று கருத இடனுளது. என்னை? மணிமேகலை ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார் தங் காப்பியத்தில்,

"கொடிக்கோ சம்பிக் கோமக னாகிய
வடித்தேர்த் தானை வத்தவன் தன்னை
வஞ்சஞ் செய்துழி வான்றளை விடூஉிய
உஞ்சையிற் றோன்றிய யூகி யந்தணன்
உறுவுக் கொவ்வா உறுநோய் கண்டு
பரிவுறு மாக்களின்" (மணிமே. கரு-கூக-கூ.)

என்று கூறுதலை நோக்கின் அவர்தாம் பயின்றதொரு உதய ணன் கதையாகிய பெருநூலின்கண் கண்டதொரு காட்சி யையே எடுத்திங்ஙனம் கூறுகின்றார் என்றுணரலாம். சீத்தலைச் சாத்தனார் காலத்தே வடமொழியில் உதயணன் கதை பற்றிய நூல்கள் தோன்றவில்லை. குணாட்டியர் இயற்றியதாகக் கூறப் படும் பைசாசமொழிக் காப்பியம் கி. பி. ௬-ஆம் நூற்றாண் டிற்றான் முதன் முதலாக வடமொழியில் மொழிபெயர்க்கப் பட் டது என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர் ஆதலால், சீத்தலைச் சாத்தனார் இப்பெருங்கதையையே பயின்று கூறுகின் றார் என்னலாம். இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள பெருங் கதையில் அந்த யூகி யந்தணன் உருவுக் கொவ்வா உறுநோய் கண்டு மாக்கள் பரிவுறும் பகுதி இறந்துபோயிற்று; ஆதலால் அதனைக் காண்டற்கில்லை.

இந்நூலிற் செய்யுணடையை சமயச் சார்பான சொற்களை யும், நிகழ்ச்சிகளையும் அகற்றி, நோக்கின் நந்தம் அருமைப் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையுமாகிய மேற்கணக்கு நூல் களின் செய்யுணடையையே பெரிதும் ஒத்திருத்தலானும், இப் புலவர் பெருமான் முற்கூறப்பட்ட மணிமேகலை சிலப்பதிகாரம் முதலியவற்றின் ஆசிரியர்கட்குக் காலத்தால் முற்பட்டவர் என்று துணியலாம்.

கொங்குமண்டல சதகத்தில் "உதயேந்திரன் காதை நிகழ்த்துதற்கு மூன்று பிறப்புற்றனர்" என்பது. புத்தர் அச் சமயத்தைத் தோற்றுவிக்க இருபத்தேழு பிறப்புகள் எடுத்து இறுதிப் பிறப்பில் தோற்றுவித்தனர் என்பது போன்றதொரு உபசாரவழக்கு என்னலாம். அங்ஙனம் கூறுவதன் கருத்து இச்செயல் ஒருபிறப்பிலே செய்து முடிக்கவியலாத சிறப் புடைத்து என்பதேயாம்.

இப்புலவர் பெருமான் அக்காலத்தே சிறப்புற்றோங்கிய அருக சமயத்தை மேற்கொண்டவர். அவ்வருக சமயத்தே கர்ண பரம்பரையாக வழங்கி வந்ததும் அச்சமயச் சார்பான முடிவேந்தர் வரலாறும் ஆகிய "பிருகத்கதா" என்னும் வரலாற்றில் இவர் ஒரு கூற்றினைப் பொருளாகக் கொண்டு இந்நூலை இயற்றினர் என்று தோன்றுகின்றது. இவ்வுதய ணன் கதை அப்பிருகத் கதையின் ஒரு பகுதியே ஆதலின், "பெருங்கதை" என்றே வழங்கப்பட்டது.

**வாழ்க கொங்குவேளிர் வண்புகழ்.**

# உள்ளுறை



---

# பெருங்கதை



## இரண்டாவது
## இலாவாண காண்டம்

[உதயணன் இலாவாண நகரத்தில் உறைந்த பொழுது நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறும் பகுதி]

**இதன்கண் :** உதயணன் உஞ்சை வேந்தன் மகளாகிய வாசவதத்தையைக் கைப்பற்றித் தமர் நகரமாகிய சயந்தி நகரத்தே புகுதலும், அந்நகரமாந்தர்களாலே வரவேற்கப் படுதலும், அம்மாந்தர் உதயணனையும் வாசவதத்தையையும் புகழ்ந்து பாராட்டுதலும், அந்நகரத்தின்கண் உதயணன் வாசவ தத்தையை மணம்புரிந்து மகிழ்தலும், ஆருந்திங்களில் உடன் மயிர் களையும் சடங்கு நிகழ்தலும், வாசவதத்தையையும் உதயண னையும் மங்கல நீராட்டுதலும், அருகக்கடவுள் திருக்கோயிலே வழிபாடு செய்தலும், நகர்வலஞ் செய்தலும், யூகி என்னும் அமைச்சன் வருகையும், அவன் தன் மாயச்சாக்காட்டை மனங் கொளத்தேற்றுதலும், மற்றும் அவன் செயல்களும், யூகி இறந் தான் என உதயணன் புலம்புதலும், உருமண்ணுவா என்னும் அமைச்சன் உதயணனைத் தேற்றுதலும், உதயணன் தெளி தலும், உதயணன் இலாவாண நகரத்திற்குச் செல்லுதலும், ஆண்டு நிகழ்ந்தனவும், உதயணன் ஒரு துறவியைக் காண்டலும், அவர் கூறுவனவும், உண்டாட்டு நிகழ்த்துதலும், உதயணன் விரிசிகை என்னும் ஒரு பேதைக்கு மலர்மாலை புனைந்து சூட்டு தலும், வாசவதத்தை ஊடுதலும், அவள் ஊடல் தீர்தலும், உதயணன் மகிழ்தலும், யூகி சூழ்ச்சியாலே வாசவதத்தையை உதயணனிடமிருந்து பிரித்தலும், உதயணன் வாசவதத்தை இறந்தாளாகக் கருதி வருந்துதலும், உதயணனுக்குச் சான்றோர் கழிபெருங்காமத்தால் விளையும் தீமையை உணர்த்துதலும், யூகி முதலியோர் துறவியர் பள்ளியை எய்துதலும், யூகி முதலியவர் சண்பை என்னும் ஒரு நகரத்தே மித்திரகாமன் இல்லத்தே வதிதலும், பிறவும் கூறப்படும்.

# க. நகர் கண்டது

**இதன்கண் :** உதயணன் வாசவதத்தையோடு கேளிர் நகரமாகிய சயந்தியை அடைதலும், அவர் வருதலை உணர்ந்த அந்நகரமாந்தர் மகிழ்ந்து நகரத்தை ஒப்பனை செய்து பெருவாயிலின்கண் மங்கலப் பொருள் ஏந்தி வந்து எதிர்கொள்ளுதலும், அம்மாந்தர் உதயணனைப் பாராட்டி வரவேற்றலும், வாசவதத்தையைப் புகழ்ந்து பாராட்டுதலும், உதயணன் வாசவதத்தையோடு உஞ்சையினின்றும் வெளிப்பட்டுச் சயந்தி புகுதற்குப் பற்பல உதவியுஞ் செய்த யூகி என்னும் அமைச்சனைப் படர்க்கையில் வைத்துப் பாராட்டி வாழ்த்துதலும், இங்ஙனமாக உதயணன் வாசவதத்தையோடு அந்நகரின்கண் புக்கு வதிதலும் பிறவும் கூறப்படும்.

சயந்தியம் பெரும்பதி இயைந்தகம் புகுதலின்
தாதுமலர் அணிந்த வீதி தோறும்
பழுக்குலைக் கமுகும் விழுக்குலை வாழையும்
கரும்பும் இஞ்சியும் ஒருங்குடன் நிரைத்து
முத்துத் தரியமும் பவழப் பிணையலும்
ஒத்த தாமம் ஒருங்குடன் பிணைஇப்
பூரணப் பெருங்கடைத் தோரண நாட்டி
அருக்கன் வெவ்வழல் ஆற்றுவ போல
விரித்த பூங்கொடி வேறுபல நுடங்க
எண்வகைச் சிறப்போடு கண்அணங் கெய்த
விடாஅ விளக்கொளி வெண்பூந் தாமமொடு
படாகையும் விதானமும் பாற்கடல் கடுப்ப
இருமயிர் முரசம் உரும்என உரறக்
கடமுழக் கின்னிசை இடைஇடை இயம்ப
வெந்துயர் அருவினை வீட்டிய அண்ணலை
இந்திர வுலகம் எதிர்கோண் டாங்கு
மகளிரும் மைந்தருந் துகணிலந் துளங்க
நற்பெருங் கடைமுதல் நண்ணுவனர் குழீஇப்
பொற்பெருங் குடத்திற் புதுநீர் விலங்கி
இருள்கண் புதைத்த இருங்கண் ஞாலத்து
விரிகதிர் பரப்பிய வெய்யோன் போல
வெங்கண் இருட்டுயர் இங்கண் நீக்கிய

போங்குமலர்த் தாரோய் புகுகேன் போரும்
............ ............ ளுட்கா தொழுகிற்
பகைவர் எண்ணம் பயமில என்னும்
நீதிப் பெருமைநூல் ஓதியும் ஓராய்
யானை வேட்கையிற் சேனை நீக்கிப்
பற்ரு மன்னனிற் பற்றவும் பட்டனை
போற்ருேடிப் பாவையை உற்றது தீரக்
கோற்றம் எய்திக் கோண்டனை போந்த
மிகுதி வேந்தே புகுகேன் போரும்
பயங்கேழ நன்ருடு பயம்பல தீரப்
புகுந்தனை புகன்றுநின் புதல்வரைத் தழீஇ
ஒன்ரு மன்னனை ஓடுபுறங் கண்டு
நின்னகர் நடுவண் மன்னுகேன் போரும்
மாயோன் மார்பில் திருமகள் போலச்
சேயோன் மார்பிற் செல்வம் எய்தற்கு
நோற்ற பாவாய் போற்றேனப் புகழ்நரும்
திருமலர்ச் சேங்கண் செல்வன் தன்னேடு
பெருமகன் மடமகள் பின்வரக் கண்டனம்
உம்மைச் செய்த புண்ணியம் உடையம்
இம்மையின் மற்றினி என்ரு கியரேன
அன்புறு கிளவியர் இன்புறு வோரும்
மண்மீக் கூரிய மன்னவன் மடமகள்
பேண்மீக் கூரிய பெருநல வனப்பின்
வளைபோலி பணைத்தோள் வாசவ தத்தை
உளள்என மற்றியாம் உரையிற் கேட்கும்
அவள்நலங் காண இவண்வயின் தந்த
மன்னருண் மன்னன் மன்னுகேன் போரும்
கருத்திற் சூழ்ச்சியோடு கானத் தகவயிற்
பேருத்திறல் வேந்தன்எம் பெருமாற் சிறைகோள
மாயச் சாக்காடு மனங்கோளத் தேற்றி
ஆய மூதூர் அகம்புக் கவன்மகள்
நாகுவளை முன்கை நங்கையைத் தழீஇப்
போகேனப் புணர்த்த போகாப் பெருந்திறல்
யூகியு மன்னுக உலகினுள் என்மரும்

வியன்கண் ஞாலத் தியன்றவை கேண்மின்
நன்ருய் வந்த ஒருபொருள் ஒருவற்கு
நன்றே யாகி நந்தினு நந்தினும்
நன்ருய் வந்த ஒருபொருள் ஒருவற்கு
அன்ருய் மற்றது தழுங்கினும் அழுங்கும்
தீதாய் வந்த ஒருபொருள் ஒருவற்குத்
தீதே யாகித் தீயினுந் தீயும்
தீதாய் வந்த ஒருபொருள் ஒருவற்கு
ஆசில் பெரும்பொருள் ஆகினும் ஆமெனச்
சேயவர் உரைத்ததைச் செவியிற் கேட்கும்
மாயி காஞ்சனம் வத்தவர் இறைவற்குப்
பெருஞ்சிறைப் பள்ளியுள் அருந்துயர் ஈன்று
தீயது தீர்ந்தத் தீப்பொருள் தீர்ந்தவன்
செல்வப் பாவையைச் சேர்த்திச் செந்நெறி
அல்வழி வந்துநம் அல்லல் தீர
நண்ணத் தந்தது நன்ரு கியரெனக்
கண்ணிற் கண்டவன் புண்ணியம் புகழ்நரும்
ஓங்கிய பெருங்கலந் தருக்கிய உதயணன்
தேங்கமழ் கோதைஎன் திருநுதன் மாதரை
வேண்டியுங் கொள்ளான் வேட்டனென் கொடுப்பிற்
குலத்திற் சிறியவன் பிரச்சோ தனனென
நிலத்தின் வாழ்நர் இகழ்ச்சி அஞ்சி
யானை மாயங் காட்டி மற்றுநம்
சேனைக் கிழவனைச் சிறையெனக் கொண்டு
வீணை வித்தகம் விளங்கிழை கற்கென
மாணிழை அல்குன் மகள்நலங் காட்டி
அடற்பேர் அண்ணலைத் தெளிந்துகை விட்டனன்
கொடுப்போர் செய்யும் குறிப்பிது தென்மரும்
மற்றும் இன்னன பற்பல பயிற்றி
மகளிரும் மைந்தரும் புகழ்வனர் எதிர்கொள
அமரர் பதிபுகும் இந்திரன் போலத்
தமர்நகர் புக்கனன் தானையிற் பொலிந்தென்.

## உரை

### க. நகர் கண்டது

அஃதாவது, வாசவதத்தையோடு வந்த உதயணன், தன் கேளிர் நகரமாகிய சயந்தியிற் புக்கதனைக் கூறும் பகுதி என்றவாறு.

இனி, இரட்டுறமொழிதல் என்னும் உத்தியான் சயந்தி நகரத்து வாழும் மக்கள் தம் நகரத்திற்கு வந்த உதயணனையும் வாசவதத்தை யையும் அறிந்து எதிர்கொண்டது என்றும் கொள்க. இப் பொருட்கு நகர் என்பது ஆகுபெயராம்.

க - கூ: **சயந்தியம் பெரும்பதி............வேறுபல நுடங்க.**

**(பொழிப்புரை.)** வாசவதத்தையோடு உதயணன் தன் கேளிர்நகரமாகிய சயந்தி என்னும் அழகிய பெரிய நகரத்தின் கண் உறைதலை நெஞ்சாலே ஒருப்பட்டு வந்து, அந் நகரத்தின் கண் புகாநிற்றலின் அந் நகரத்துள்ள மகளிரும் மைந்தரும் பெரிதும் மகிழ்ந்து, மலர் பரப்பி அணிசெய்யப்பட்ட அந் நகரத் தெருக்கள்தோறும், கமுகு முதலியன நட்டுப் பெருவாயி லிடத்தே முத்தாலியற்றிய மேற்கட்டியினையும், பவழமாலைகளை யும் பிறமாலைகளையும் பிணைத்து நாற்றிப் பூரணகும்பம் வைத்துத் தோரணம் நாட்டி ஞாயிற்றின் வெப்பத்தை ஆற்றுவனபோல அசையாநிற்கும் நிறமும் அளவும் வேறுபட்ட பற்பல கொடிகளை உயர்த்து இங்ஙனம் அந் நகரத்தினை அணிசெய்து என்க.

**(விளக்கம்.)** க. சயந்தி - உருமண்ணுவா என்னும் அமைச்ச னுடைய நகரங்களில் ஒன்று. அரசன் உறைதற்கு ஏற்ற நகர் என்பார், 'அம் பெரும்பதி' என்றார். கேளிர் நகரமாதலின் அதன்கட் புக்குறை தல் தகும் என மனத்தால் ஒருப்பட்டு என்பார், 'இயைந்து புகுதலின்' என்றார். புகுதலின் என்றது, அந் நகரத்து மக்கள் மகிழ்ந்து வரவேற் றற்கு ஏதுவாய் நின்றது.

உ. தாது - மகரந்தம். அணிந்த - அணியப்பட்ட.

ங. பழுக்குலை - பழுத்தகுலை. விழுக்குலை - சிறந்த குலை.

ச. நிரைத்து - நிரல்பட நட்டு.

ரு. உத்தரியம் - மேற்கட்டி. பிணையல் - மாலை.

சா. ஒத்த தாம் - தம்முள் இணையொத்த மாலை என்க. பிணைஇ - பிணைத்து.

எ. பெருங்கடை - பெருவாயில். பூரணம் - பூரணகும்பம்; நிறை குடம். தோரணம் - மாவிலை பனங்குருத்து முதலியவற்றாலியற்று மொரு மாலை. அம் மாலையினைக் கழிநட்டுக் கட்டுவர் ஆதலின் தோரணம் நாட்டி என்றார்.

அ. அருக்கன் - ஞாயிறு. கொடிகள் விண்முட்ட உயர்ந்து நின்று ஆட உயர்த்தி என்பார், அருக்கன் வெவ்வழல் ஆற்றுவபோல நுடங்க

என்றார். நுடங்க - அசையாநிற்ப "இவ்வாறு அந்நகரத்தினை ஒப்பனை செய்து" என்பது இசையெச்சம்.

மேல், அம் மக்கள் மங்கலப் பொருள் ஏந்தி நகரப் பெருவாயிலின் கண் வந்து குழுமி எதிர்கொள்ளுதல் கூறுகின்றார்.

கo - கச: என்வகைச் சிறப்பொடு........இடைஇடை இயம்ப.

(பொ - ரை.) கடவுளர்க்குச் செய்யும் எட்டுவகைச் சிறப்புப் பொருள்களுடன் கண்டோர் கண்கள் ஒளி குறைந்து வருத்த முற, உடையராய், நுந்தா விளக்கும் வெண்ணிற மலர்மாலை களும் ஏந்தியவராய், அடையாளப் பெருங்கொடியும், மேற்கட்டி யும் உயர்த்தி, விழாமுரசம் இடிபோல முழங்கவும், குடமுழா முதலிய இன்னிசைக் கருவிகள் இடந்தோறும் இடந்தோறும் முழங்காநிற்பவும் என்க.

(வி - ம்.) கo. என்வகைச் சிறப்பு - அருகக் கடவுளுக்குச் செய்யப்படும் எட்டுவகைச் சிறப்புக்கள்; அவை: தூபதிபக் காட்சி, தேவதுந்துபி, தெய்வத் துவனி, சிங்காதனம், பிண்டி, வெண்சாமரை, மலர்மழை, மும்மைக் குடை என்பன. "முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு இறையென்று வைக்கப்படும்" (குறள். ருஅஅ) என்பவாகலின் இறைவனுக்குரிய சிறப்புக்கள் உதயணனுக்கும் பொருந்துவனவாயின என்க.

கo - கக. கண் அணங்கு எய்தும்படி ஒளிரும் ஒளியினின்றும் தவிராத ஒளி விளக்கு என்க. எனவே நுந்தாவிளக்கு என்பதாயிற்று. அணங்கு - வருத்தம்.

கக. மங்கலமாலையாதலின் வெண்பூந்தாமம் எனப்பட்டது.

கஉ. படாகை - அடையாளக்கொடி; பெருங்கொடியுமாம். விதானம் - மேற்கட்டி; பந்தருமாம். பாற்கடல் போன்று தோன்றும் படி எடுத்தென்க.

கங. இருமயிர் முரசம் - கரிய மயிரினைச் சிவாது போர்த்த முரசம்; "புலியைப் பொருது கொன்று நின்று சிலைத்துக் கோட்டுமண் கொண்ட ஏறு இறந்துழி, அதன் உரிவையை மயிர்சிவாமற் போர்த்த முரசு" என்றவாறு; என்னை? "புனைமருப்பு அழுந்தக் குத்திப் புலி யொடு பொருதுவென்ற, கனைகுரல் உருமுச் சீற்றக் கதழ்விடை யுரிவை போர்த்த துனைகுரல் முரசம்" என்றார் பிறரும் (சீவகசிந் - உஅகக)

உரும் - இடி. உரற - முழங்க.

கச. கடம் - குடமுழா. இன்னிசைக் கருவியாகலின் வேறு கூறினர். குடமுழா முதலிய இன்னிசைக் கருவிகள் என்க. இடை - இடம். அடுக்கு பன்மை பற்றி வந்தது. இயம்ப - முழங்க.

கரு - கசூ: வெந்துயர் அருவினை..........புதுநீர் விலங்கி.

(பொ - ரை.) வெவ்விய பிறவித்துன்பத்திற்குக் காரண மான இருவினையையுங் கெடுத்த தலைவனாகிய அருகக்கடவுளை

வானவர் தம்முலகத்தே எதிர்கொண்டாற்போல, மண்திணிந்த நிலம் நெளியும்படி அழகிய அந் நகரப் பெருவாயிலிலே எய்திப் புதிய கடவுணீராலே நிரப்பப்பட்ட பொற்குடம் முதலியவற்றை ஏந்தியவராய்க் கூடி நின்று, எதிர்கொள்ளாநிற்ப என்க.

உதயணன் புகுதலின் அந் நகரமக்கள் நிரைத்துப் பிணைஇ நாட்டி நுடங்க ஒப்பனை செய்து உரற இயம்ப அண்ணலை இந்திர உலகம் எதிர்கொள்ளுமாறுபோல நிறைகுடம் முதலிய ஏந்திப் பெருவாயிலிற் கூடி எதிர்கொண்டு என்க.

(வி - ம்.) கடு. வெந்துயர் அருவினை - வெவ்விய பிறவித் துன்பத்திற்குக் காரணமான கடத்தற்கரிய வினை என்க. அண்ணல் - தலைவன்; ஈண்டு அருகக் கடவுள்.

கசு. இந்திர வுலகம்; ஆகுபெயர்; வானவர் என்க.

கஎ. துகள்நிலம் - மண்டிணிந்த நிலம், நிலத்தின்கண் துகள் எழுந்து இயங்கும்படி குழீஇ எனினுமாம்.

கஅ. நண்ணுவனர்: முற்றெச்சம். நண்ணி என்க. குழீஇ - கூடி.

ககூ. புதுநீர் - புதுவதாகக் கொணர்ந்த தீர்த்தநீர். விலங்கி - குறுக்கிட்டு; புதுநீரோடு வந்து எதிர்கொண்டென வருவித்து முடிக்க.

மேலே, அம் மகளிரும் மைந்தரும் உதயணனையும் வாசவதத்தையையும் புகழ்ந்து வரவேற்றல் கூறுகின்றார்.

**உ௦ - உரு: இருள்கண் புதைந்த............புகுகென் போரும்.**

(பொ - ரை.) பெரிய இடத்தையுடைய உலகத்தே வாழும் உயிர்களின் கண்ணை மறைத்துத் துயர் செய்யும் இருளினைத் தனது விரிந்த சுடரைப் பரப்பிப் போக்கி இன்பஞ்செய்யும் ஞாயிறுபோல, இவ் வுலகத்தே தோன்றி உயிர்களினது வெவ்விய இருள்போன்ற துயரத்தை நீக்கியருளிய பெருமானே வருக! என்று பாராட்டுவாரும் என்க.

(வி - ம்.) உ௦. கண் - உயிர்களின் கண்கள் என்க. புதைத்தல் - மறைத்தல். இருங்கண் ஞாலம் - பெரிய இடத்தையுடைய- உலகம். ஞாலத்துத் தோன்றிப் பரப்பிய வெய்யோன் என்க.

உக. வெய்யோன் - ஞாயிறு.

உஉ. பொருட்குக் கூறிய துயரத்தை உவமைக்கும் கூட்டி உயிர்களின் துயரத்தை என்க.

உரு. பொங்குமலர் - தேன்மிக்குப் பொங்கும் மலர்.

**உச - ருக: .......உட்கா தொழுகிற்........புகுகென் போரும்.**

(பொ-ரை.) (அஞ்சப்படுவனவற்றை அஞ்சி, அஞ்சப்படாதவற்றை) அஞ்சி ஒழுகின் அங்ஙனம் ஒழுகும் வேந்தனுடைய

பகைவர் எண்ணங்கள் பயன்இலவாய்க் கழியும் என்னும் நீதிப் பெருமையினையுடைய நூலினை ஓதியிருந்தும் தெளியாயாய், தெய்வயானையைப் பெறல்வேண்டும் என்னும் வேட்கை காரணமாகப் பாதுகாவலாகிய படைகளை நீக்கித் தமியையாய்ச் சென்று பகைமன்னனாலே சிறையாகப் பற்றவும்பட்டாய்! பின்னர் நினது பிழையாலே எய்திய அச் சிறுமை தீரும்படி, அப் பகைமன்னன் மகளாகிய வாசவதத்தையையும் கவர்ந்துகொண்டு வெற்றியுடனே வந்த மன்னருட் சிறந்த மன்னனே! வருக என்று பாராட்டுவோரும் என்க.

(வி - ம்.) உசு. இங்குச் சில சொற்கள் அழிந்தன. அவை: அஞ்சுவன அஞ்சி அஞ்சப்படாதவற்றை என்னும் பொருள் தருவன போலும். உட்காது - அஞ்சாமல்.

உகு. அஞ்சவேண்டுவவற்றை அஞ்சி அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சாதொழுகும் வேந்தனுக்கு அவன் பகைவரானே தீமைசெய்ய இயலாது என்று கூறும் நீதிநூலினை ஓதியிருந்தும் நினக்குப் பாதுகாவலாகிய சேனையை நீக்கித் தனியே சென்று சிறைப்பட்டனை அங்ஙனமாயினும் இறுதியில் அதுவும் நன்மையேயாயிற்று என்றவாறு.

உஎ. யானை - தன்னிடத்தினின்றும் மறைந்த தெய்வயானை. வேட்கை - அதனை மீளவும் பெறல் வேண்டும் என்ற அவா.

உஅ. பற்றுமன்னன் - பகைமன்னன், பிரச்சோதனன்.

உகூ. பொற்றொடிப் பாவை - வாசவதத்தை. உற்றது - எய்திய அச் சிறுமை.

ங௧. மிகுதிவேந்தே - வேந்தருள் மிக்க வேந்தே. இது நினக்குத் "தீதாய் வந்த வொருபொருள். ஆசில் பெரும் பொருளாயிற்று நீ வாழ்க" என்று வாழ்த்தியபடியாம்.

ஙஉ - ஙரு: பயங்கெழு நன்னாடு........மன்னுகென் போரும்.

(பொ - ரை.) பல்வேறு வளங்களும் பொருந்திய நல்ல நாடு அவ் வளமெல்லாம் கெடும்படி, பிரச்சோதனனாகிய பகைவேந்தன் சிறையிடைப்புக்கனை; இனிப் பெருமானே! நீ நினது பகை மன்னனாகிய ஆருணிவேந்தனை வென்று நினது குடிமக்களை விரும்பி அளிசெய்து நின் தலைநகராகிய கௌசாம்பியின்கண் இருந்து நீடுழி நிலைத்து வாழ்வாயாக! என்று வாழ்த்துவோரும் என்க.

(வி - ம்.) ஙஉ. பயம் - பயன். ஈண்டு வளம்.

ஙங. புகுந்தனை - சிறைபுக்கனை. புகன்று - விரும்பி. நின் புதல்வர் - நின் குடிமக்கள். தழீஇ - அணைத்து; அணைத்தல். இன்சொற் சொல்லுதலும் தளர்ந்துழி வேண்டுவன கொடுத்தலும் முதலாயின.

"குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கு முலகு"　　(குறள் - ௫௪௪.)

என வரும் திருக்குறளை நினைக.

௩௪. ஒன்னு மன்னன் - பகைமன்னன். அவன், பாஞ்சால நாட்டரசனாகிய ஆருணி என்பவன். ஓடுபுறம் - தோற்றோடுங்காற் றோன்றும் முதுகு. ஓடுபுறங்கண்டு என்றது வென்று என்றவாறு.

௩௫. நின்நகர் - நின்னுடைய கோசம்பி நகரத்தை. மன்னுதல் - நீடுழி நிலைபெற்று வாழ்தல்.

மேல்: அம் மக்கள் வாசவதத்தையைப் பாராட்டுகின்றனர்.

௩௬ - ௩௮: மாயோன் மார்பில்............புகழ்நரும்.

(பொ - ரை.) திருமால் மார்பின்கண் வீற்றிருந்து இன்பமுறுகின்ற திருமகள்போல முருகனை ஒத்த உதயணன் மார்பிற் றங்கி இன்பமுறுதற்கு முற்பிறப்பிலே தவஞ்செய்த நங்கையே எம்மைப் பாதுகாத்தருள்வாயாக! என்று புகழ்வோரும் என்க.

(வி - ம்.) ௩௬. மாயோன் - திருமால், பொருட்குக் கூறிய செல்வத்தை உவமைக்குங் கூட்டுக. செல்வம் - ஈண்டு இன்பம்.

௩௭. சேயோன் - உதயணன். உவம ஆகுபெயர்; முருகக் கடவுளை ஒத்தவன் என்பது கருத்து. மார்பிற் செல்வம் - இன்பம். மார்பென்றது மெய்யை. "இவ்வாறெங்கும் விளையாடி இளையான்மார்பின் நலம் பருகி" (சீவக. ௨௭0௧.) என்றார் பிறரும்.

போற்று - போற்றுக; எம்மைப் பாதுகாப்பாயாக. தமக்கு அரசியாகலின் அங்ஙனம் வேண்டினர்.

௩௯ - ௪௩: திருமலர்ச் செங்கண்............இன்புறுவோரும்.

(பொ - ரை.) செந்தாமரைமலர்போன்ற சிவந்த அழகிய கண்களையுடைய நம் வேந்தனாகிய உதயணனோடு பிரச்சோதன மன்னன் இளமகளாகிய வாசவதத்தை வருதலை முற்பிறப்பிற் செய்த தவம் பெரிதுடையேமாகலிற் கண்டு மகிழ்ந்தேம். இனி இப் பிறப்பிலே இதனினும் சிறந்த பேறு யாது எய்துதல் வேண்டும்! என்று அன்புடைய மொழிகள் பல பேசி இன்ப மடைவோரும் என்க.

(வி - ம்.) ௩௯. திருமலர் என்றது சிறப்பாலே தாமரைமலரைக் குறித்து நின்றது. என்னை? 'பூவிற்குத் தாமரையே' என்பவாகலின். செங்கண் என்றமையால் செந்தாமரை என்க. செல்வன் - அரசன்.

௪0. பெருமகன் - வேந்தன்; பிரச்சோதனன். மடமகள் - வாசவதத்தை.

௪௧. உம்மை - முற்பிறப்பு. புண்ணியம் - ஈண்டுத் தவம்.

சஉ. இம்மை - இப் பிறப்பு. என்ருகியர் என்னும் வினை, சிறந்த பேற்றினைப் பெற்றேம் இனி ஒன்றும் வேண்டேம் என்பதுபட நின்றது.

சங. அன்புறு கிளவி - அன்புகெழுமிய மொழி.

சச - சசு : **மண்மீக் கூரிய............மன்னுகென் போரும்**

**(பொ - ரை.)** அகன்ற நிலப்பரப்பினையுடைய பிரச்சோதன மன்னவன் மகளாகிய வளையலாலே பொலிவுற்ற மூங்கில் போன்ற தோளினையுடைய வாசவதத்தை என்பாள் ஒருத்தி இவ்வுலகினுள் வாழும் மகளிருள் வைத்து மிகப்பெருகிய பெண்மைப் பெருநலமும் அழகும் உடையளாய்த் திகழ்கின்றனள் எனப் பிறர் பிறர்கூறும் மொழிகளை யாம் கேட்டிருக்கின்ருேம், அல்லது கண்ணுற் கண்டதில்லை. அத்தகைய நங்கையின் பேரழகினை எங்கண்களாலே கண்டு மகிழும்படி இந் நகரத்தே கொணர்ந்து காட்டிய வேந்தர்வேந்தனுகிய உதயணன் நீடூழி நிலைத்து வாழ்க! என்று வாழ்த்துவோரும் என்க.

**(வி - ம்.)** சச. மீக்கூரிய மண்மன்னவன் என மாறுக. மீக்கூருதல் - மேலும் மேலும் பெருகுதல். மீக்கூறிய என்றும் பாடம். இதற்கு, உலகத்தாரால் உயர்த்துக் கூறப்பட்ட என்க.

சரு. மீக்கூரிய பெண் பெருநலம் என்க. ஈண்டும் மீக்கூறிய என்றும் பாடம் உண்டு. பெண் - பெண்மைத்தன்மை. பெருநலம் - பெரிய நன்மை. வனப்பு - அழகு.

சஎ. உளளென-இருக்கின்ருள் என்று பிறர் பிறர் கூற. கேட்கும்-தன்மைப் பன்மை; கேட்குதும் - கேட்டிருக்கின்ருேம் என்றவாறு.

சஅ. அவள் என்றது அத்தகைய சிறப்புடைய நங்கை என்பதுபட நின்றது. நலம் - அழகு. இவண்வயின் - இவ்விடத்தே.

மேலே அம் மக்களுட் சிலர் இந் நிகழ்ச்சிக்கு உறுதுணையாயிருந்த யூகி என்னும் அமைச்சனைப் பாராட்டுகின்ருர்.

ருo - ருசு : **கருத்திற் சூழ்ச்சியொடு........உலகினுள் என்மரும்**

**(பொ - ரை.)** காட்டின் அகத்தே எம்பெருமானைத் தமித்த வழிப் பேராற்றலுடைய அரசனுகிய பிரச்சோதனன் தன் மனத்தின்கண் வஞ்சகச் சூழ்ச்சியோடே சிறைசெய்யா நிற்ப, பொய்யேயாகிய தனது சாவுச்செய்தியை உலகத்தார் மெய்யென்று தெளியும்படி செய்து கூட்டமிக்க அப் பிரச்சோதனனுடைய பழைதாகிய உஞ்சை நகரத்துள்ளே புக்கு அப் பிரச்சோதனன் மகளாகிய வாசவதத்தையைக் கைக்கொண்டு செல்வாயாகவென உதயணனுக்கு அறிவித்து அதற்கேற்றன செய்த அழியாத பேராற்றலையுடைய யூகி என்னும் அமைச்சனும் இவ்வுலகத்தே நீடூழி நிலைபெற்று வாழ்வானுக என அவ் வமைச்சனைப் புகழ்வோரும் என்க.

(வி - ம்.) ௫௦. சூழ்ச்சி - உதயணனை எங்ஙனம் சிறைசெய்வது என்று ஆராய்ந்த வஞ்சகச் சூழ்ச்சி யென்க.

௫௧. பெருந்திறல், பெருத்திறல் என எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது. பெருந்திறல்வேந்தன் என்றது இகழ்ச்சிக் குறிப்பு. எதிர்நின்று வெல்லும் திறலிலாத எளிய மன்னன் என்பது கருத்து. எம்பெருமான் என்றது உதயணனை.

௫௨. மாயச் சாக்காடு - பொய்யாகிய சாவுச்செய்தி.

௫௩. ஆயம் - குழு. மூதூர் - உஞ்சை நகரம். அவன் - அப்பிரச்சோதனன்.

௫௪. நாகுவளை - பெண்சங்கு, ஈண்டு நாகு என்பது வாளா இயல் படையாக நின்றது. நங்கை, வாசவதத்தை. போகா - அழியாத.

௫௬. யூகி - உதயணனுக்குக் கண்போற் சிறந்த முதலமைச்சன் யூகியும் என்னும் உம்மை இறந்தது தழீஇ நின்றது. என்மரும் - என்போரும்.

இனிச் சிலர் உதயணனுக்கு வாசவதத்தையை நல்கிய புண்ணியத்தைப் பாராட்டுகின்றனர்.

௫௭ - ௬௬. **வியன்கண் ஞாலத்து............செவியிற் கேட்கும்**

(பொ - ரை.) "அகன்ற இடத்தையுடைய இவ் வுலகத்தின் கண்ணே நிகழாநின்ற சில உண்மையை எல்லீரும் கேளுங்கள்! வரும்பொழுது, நன்மையாக வந்ததொன்று ஒருவனுக்கு மேலும் மேலும் நன்மையேயாகிப் பெருகினும் பெருகும்; வரும்பொழுது நன்மையாக வந்ததொன்று ஒருவனுக்குத் தீமையாக மாறி அவனது முன்னைய நன்மையோடே அழியினும் அழியும்: வரும்பொழுது ஒருவனுக்குத் தீமையாக வந்ததொன்று மேலும் மேலும் தீமையாகவே அவனைத் துன்புறுத்தினும் துன்புறுத்தும்; அன்றி ஒருவனுக்கு வருங்கால் தீமையாக வந்ததொன்று அவனுக்குக் குற்றமற்ற நன்மைதரும் பெரிய பொருளாக ஆக்கமுறினும் ஆக்கமுறும்" என்று உயர்ந்தோர் அறிவுறுத்தும் மொழியினை யாம் கேள்விமாத்திரையானே கேட்டிருப்போம்; என்க.

(வி - ம்.) ௫௭. வியன்கண் - அகலிடம். ஞாலம் - உலகம். இயன்றவை - நடவாநின்ற உண்மைகள்.

௫௮. நன்று - நன்மை. இன்பந்தருவனவாகவந்த ஒரு செயல் என்க.

௫௯. நந்துதல் - பெருகுதல்.

௬௧. அன்றாய் - நன்மையல்லாத தீமையாய்.

௬௩. தீப்பினும் தீக்கும் என்னும் பிறவினைகள் தீயினும் தீயும் எனத் தன்வினையாய் நின்றன.

௬௫. ஆசில் - குற்றமற்ற.

௬௬. சேயவர் - உயர்ந்தோர். கேட்கும் - கேட்டிருப்பேம்.

௬௭ - ௭௩ : மாயிகாஞ்சனம்...........புண்ணியம் புகழ்நரும்

(பொ - ரை.) அவ் வுயர்ந்தோர் மெய்ம்மொழிக்கேற்ப நமது வத்தவநாட்டு மன்னனாகிய உதயணனுக்கு வருங்கால் தீதாய் வந்த மாயிகாஞ்சனமென்னும் யானைமாயச்செயல் அவனைப் பெரிய சிறையிடத்தே செலுத்திப் பொறுத்தற்கரிய துன்பத்தைக் கொடுத்துத் 'தீதேயாகி,' முடிந்து, பின்னர் அத் தீத் தன்மை தவிர்ந்து, அத் தீமையைச் செய்த பிரச்சோதன மன்னன் செல்வமகளாகிய வாசவதத்தையைக் கூட்டுவித்து மேலும் இருளிடத்தே செவ்விய நெறியிலே வந்து நம்மனோர் அல்லலும் திரும்படி நம்மை எய்தச் செய்தது ; இங்ஙனமாகத் தீதாய் வந்த அஃது ஆசில் பெரும்பொருளாய் மேலும் நன்மையே ஆகுக ! என்று கூறி அம் மக்கள் அவ் வுண்மையைக் கேட்டன்மாத்திரையே யன்றிக் கண்கூடாகவும் கண்டு, அங்ஙனம் வந்த தீதும் நன்மையாதற்குக் காரணமான அவ் வுதயணனுடைய பழைய நல்வினையுடைமையைப் பாராட்டுவோரும் என்க.

(வி - ம்.) ௬௭. மாயிகாஞ்சனம் - மாயவித்தை. வத்தவரிறை - உதயணன். மாயிகாஞ்சனமாகிய தீதாய் வந்தது முதலில் அருந்துயர் ஈன்று தீதாகவே முடிந்தது என்க.

௬௯. தீர்ந்து என்னும் எச்சம் இரண்டனுள் முன்னையது முடிந்து என்னும் பொருட்டு ; ஏனையது தவிர்ந்து என்னும் பொருட்டு.

௭0. செல்வப் பாவை - பெறற்கருஞ் செல்வம் போன்றவளும் பாவைபோல்பவளுமாகிய வாசவதத்தை என்க. செந்நெறி - செவ்விய வழி. அல்வழியில் செந்நெறி வந்து என மாறிக் கூட்டுக.

௭௧. அல்வழி - இருள்வழி, இருள்வழி செந்நெறியாதற்குக் காரணமும் அவன் முன்னை நல்வினையே என்பது கருத்து.

௭௨. நன்றாகியர் - நன்றே யாகுக. இங்ஙனமே மேலும் நன்மையே யாகுக என்று வாழ்த்தியபடியாம்.

௭௪ - ௮௪ : ஓங்கிய பெருங்கலம்,.......குறிப்பிஃதென்பரும்

(பொ - ரை.) உயர்ந்த கோடவதி என்னும் யாழுடைமை யானே செருக்குற்ற உதயணன் தேன்மணக்கும் மாலையினையும் அழகிய நெற்றியினையும் உடைய என் மகளைத் தானே விரும்பி வந்து மணஞ்செய்துகொள்வா னல்லன். இனி யானே அவனுக்குக் கொடுத்தலை விரும்பி வலிந்து கொடுப்பேன் ஆயின் நிலத்தில் வாழ்வோர் "பிரச்சோதனன் குலத்தில் தாழ்ந்தவ

னாகலின் இங்ஙனம் செய்தான்" என இகழும் இகழ்ச்சியை அஞ்சி அப் பிரச்சோதனன், பொய்யானை ஒன்றனைக் காட்டி அதன்வாயிலாய் நம் உதயணனைச் சிறைப்பிடித்துப் பின்னர் வீணைக்கல்வியை வாசவதத்தை இவன்பாற் பயில்வாளாக என்பது தலைக்கீடாக அவ் வாசவதத்தையின் அழகினை அவனுக்குக் காட்டி, வெற்றியும் புகழுமுடைய நந் தலைவனது பெருந்தகைமையையும் தெளிந்து ஒருபாயத்தாலே தன் மகளோடு செல்லும்படி செய்து சிறைவிடு செய்துவிட்டான்; இங்ஙனம் ஆதல்வேண்டும் என்பது அப் பிரச்சோதன மன்னன் கருத்தேயாகும் என்று கூறுவோரும் என்க.

(வி - ம்.) ஓங்கிய பெருங்கலம்-ஏனையாழினுள் வைத்து உயர்ந்த யாழாகிய கோடவதி. பெருங்கலம் - பேரியாழ். பெருங்கலம் உடைமையிற் றருக்கிய உதயணன் என்க. தருக்குதல் - யான் யாரினும் சிறந்தேன் எனச் செருக்குறுதல்.

உயர்குடிப் பிறந்தோர் மகளிரைப் பிறரை இரந்து மணஞ்செய்து கொடார் ஆகலின் இரந்து கொடுத்தல் இகழ்ச்சியாயிற்று.

எக. யானை மாயம் - மாய யானை.

அ0. நம் சேனைக்கிழவன் என்றது உதயணனை. உண்மையில் சிறைபிடித்தல் அவன் கருத்தன்றென்பார் 'சிறையெனக் கொண்டு' என்றார்.

அக. வீணை வித்தகம்-வீணைவித்தை. விளங்கிழை: அன்மொழித் தொகை.

அஉ. மாணிழை-மாட்சிமையுடைய அணிகலன் அணிந்த. நலம் அழகு.

அங. அடற்பேர் அண்ணல் - போரின்கட் புகழுடைய தலைமையுடையோன்; உதயணன்.

அச. பிரச்சோதனமன்னன் உதயணன் தன்மகளைக் கவர்ந்து போதலை அறியாதிருந்தானல்லன், அறிந்தே போக்கினன் என்பார் அண்ணலைத் தெளிந்து கைவிட்டனன் என்றார். தெளிதல், தன்மகட்கேற்ற கணவன் இவனிற் சிறந்தாரிலர் என்று தெளிதல்.

அரு - அஅ: பற்றும் இன்னன........தானையிற் பொலிந்தென்

(பொ - ரை.) அச் சயந்தி நகரத்து மகளிரும் மைந்தரும் இத் தகையனவாகிய பாராட்டுரை பற்பல பன்முறையும் மொழிந்து எதிர்கொள்ளா நிற்ப, உதயணன் வாசவதத்தையோடு தன் உறவினர் நகரமாகிய அச் சயந்தியின்கண்ணே, படைவீரர் பலர் சூழப் பொலிவுற்றுத் தனது தலைநகரமாகிய அமராவதியின்கண் வானவர் எதிர்கொள்ளப் புகும் இந்திரனைப்போலப் புகுந்து வதிந்தனன் என்க.

(வி - ம்.) அஙு. மற்றும் - மேலும்: அன்றி அசையாக்கலு மாம். இன்னன - இவைபோல்வனவாகிய பாராட்டுரைகள். பயிற்று தல் - பன்முறையும் கூறுதல்.

அசு. மகளிரும் மைந்தரும்: எண்ணும்மை. புகழ்வனர்: முற் றெச்சம். புகழ்ந்து என்க.

அஎ. வானவராலே எதிர்கொள்ளப்பட்டுத் தன் நகராகிய அமராவதியிற் புகும் இந்திரன்போல என்க.

அஅ. தமர் - தம்மவர்; உறவினர். நகர் - நகரம், நாளுக்குநாள் விரிந்து இடனுவது என்பது பொருள். புக்கனன் - புகுந்தனன்; சேர்ந்தனன். புகு என்னும் பகுதியடியாகப் பிறந்த வினைப்பெயர்: ஈண்டுத் தன்னொற்றிரட்டி இறந்தகாலங் காட்டிற்று. தானை - படை வீரர்; அன்றி நால்வகைப் படைப்பெருக்கமுமாம்.

க. நகர்கண்டது முற்றிற்று.

---

# உ. கடிக்கம்பலை

[இதன்கண், உதயணன் திருமணநாளை ஆராய்ந்துரைக்கும் கணிகள் சிறப்பும், வள்ளுவன் திருமணநாளை முரசறைந்து நகர்க்கு அறிவித்தலும், நகரமாந்தர் இல்லங்களை ஒப்பனை செய்தலும், அறக்கோட்டமும், ஆண்டு நிகழ்வனவும், பணிமகளிர் செயலும், அருகன் கோயிலின்கண் நிகழ்வனவும், தெருக்களை அணிசெய்வோர் செயலும், முதுவணிகர் மொழிவனவும், தாயர் மக்களை அணிந்து விடுதலும், களிமாக்கள் செயலும், பாகர் யானைகளை நடத்தி வருதலும், மங்கலநீர் கொணர்தற்குரிய மகளிர் செயலும், பிறவும் ஓதப்படும்.]

பொலிந்த சும்மையொடு பொன்னணி மூதூர்
மலிந்தகம் புக்கபின் மண்பொறை கூரப்
பெறலரும் பெருங்கிளை இறைகொண் டீண்டி
இன்மகிழ் இருக்கை ஏயர் மகனொடு
தண்மகிழ் நெடுங்குழல் தத்தொளித் தாமத்து
மதிக்கவின் அழித்த மாசறு திருமுகத்(து)
அணிக்கவின் கொண்ட ஐயரித் தடங்கண்
வனப்புவீற் றிருந்த வாசவ தத்தை
வதுவைச் செல்வம் விதியிற் கூறுவென்
எண்தரும் பெருங்கலை ஒண்துறை போகிக்
கண்ணகன் புணர்ப்பிற் கவின்பெற நந்தி
விண்ணகம் விளங்கு மேதகு நாட்டத்த
நாற்பொருள் உணர்ந்து பாற்பொருள் பன்னி
நூற்பொருள் நுனித்துத் தீப்பொருள் ஓரீஇ
அலகை வேந்தற் குலகங் கொண்ட
ஒழுக்க நுனித்த வழுக்கா மரபின்
புணர்ப்பியல் காட்சியன் புரையோர் புகழ
நிழற்பெருங் குடையு நேரா சனமும்
செருப்பொடு புகுதலுஞ் சேனை யெழுச்சியும்
யானையுந் தானையும் ஏனைய பிறவும்
மண்ணகக் கிழவர் மனக்கோள் அருது
விண்ணகக் கிழவனின் விழுப்பங் கூறித்
தம்மிற் பெற்ற தவம்புரி தருக்கத்(து)

அரும்பரி சாரத்துப் பெருங்கணி வகுத்த
நன்னாள் இதுவெனப் பன்னா டறியப்
பசும்பொற் பலவார் விசிந்து பிணிஉறீஇக்
கோதை முத்தோடு தாமந் ததைஇ
ஏற்றுரி போர்த்த இடிஉுறழ் தழங்குரல்
கோற்றேழில் வேந்தன் கொற்ற முரசம்
பெரும்பணைக் கொட்டிலுள் அரும்பலி யோச்சி
முற்றவை காட்டிக் கொற்றவை பழிச்சித்
திருநாள் படைநாள் கடிநாள் என்றிப்
பெருநாட் கல்லது பிறநாட் கறையாச்
செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்
நறுவெண் சாந்தோடு மாலை அணிந்து
மறுவில் வெண்டுகில் மருங்கணி பெறீஇ
அணைமிசை அமர்தந் தஞ்சுவரு வேழத்துப்
பணையெருத் தேற்றிப் பல்லவர் சூழத்
தேர்திரி மறுகுதோ றார்முழு தறியப்
பொலிக வேல்வலம் புணர்க பூமகள்
மலிக மண்மகள் மன்னுக மன்னவன்
மல்லன் மூதூர்ப் பல்லவர் கேண்மின்
திருவொடு புணர்ந்து தீயவை நீக்கி
உருவொடு புணர்ந்த ஒளியினர் ஆகுமின்
பல்களிற் றியானைப் படைப்பெரு வேந்தன்
மெல்லியற் குலமகள் மிடைமணிப் பைம்பூண்
சிலம்பொலிச் சீறடிச் சென்றேந்து புருவத்(து)
இலங்கொளி வாட்கண் இன்னகைத் துவர்வாய்
வாசவ தத்தையொடு வதுவை கூடிக்
கோல நீள்மதிற் கோடிக்கோ சம்பி
மாலை மன்னவன் மணமகன் ஆகும்
காலை இதுவெனக் கதிர்மணிக் கடிப்பிற்
கண்அதிர்ந் தியம்ப இன்மொழி பயிற்றிக்
கல்லென அறையும் ஒல்லென் கம்பலை
அறைந்தறி வுறீஇய பின்றை நிறைந்த
பெரும்பெயர் மூதூர் விரும்புபு துவன்றிப்
படையமை நெடுமதிற் கடைமுகந் தோறும்

பசும்பொன் தோரணம் விசும்புற நாட்டி
அரும்பொன் தாரோ டணிகதிர் முத்தின்
இரும்பெருந் தாமம் ஒருங்குடன் வளைஇ
உத்தம வேழத் துயர்புறம் பொலிய
வித்தக வெண்குடை விரகுளி கவிப்ப
மணிக்கைக் கவரி மரபின் வீசுநர்
புடைக்களி றொருங்குடன் புகூஉம் அகலத்(து)
அடைப்பமை பெரும்பொறி யாப்புமுதற் கோளீஇப்
பத்திர மணிந்த சித்திரக் கதவின்
வாயில் தோறும் வலத்தும் இடத்தும்
நாயில் மாடத்துத் தாள்முதல் எல்லையுள்
சதிரத் திண்ணைத் தண்பூம் பந்தருள்
பழுக்காய்க் குலையும் பழங்காய்த் துணரும்
களிக்காய்ப் பறியும் துவர்க்காய் உம்பலும்
பளிச்காய்க் குப்பையும் பலம்பெய் பேழையும்
தளிரிலை வட்டியோடு தாதுபல அமைத்துச்
சுண்ணப் பெருங்குடம் பண்ணமைத் திரீஇ
எண்ணு தீயுநர் இன்மொழிக் கம்பலும்
தண்ணிழற் பொதிந்த வெண்மணற் பந்தர்
கண்ணுறக் கவினிக் கைப்புடை நிறைந்த
செல்வச் சாலையோடு பல்வழி யெல்லாம்
அந்த ணாளரோ டல்லோர் பிறர்க்கும்
அமுதின் அன்ன அறுசுவை அடிசில்
நெய்ச்சூட் டமைந்த சிற்றூண் பந்தரோ(டு)
எப்பொழு தாயினும் அப்பொழு தீயுந்
தூம நவின்ற நாமக் கைவினை
மடைத்தொழில் வழாஅ வாழ்க்கையர் பயின்ற
அறச்சோற் றட்டில் அகத்தும் புறத்தும்
முரட்கோல் இளையர் அரண்மாட் டியற்றி
முட்டாது நடாஅம் அட்டூண் கம்பலும்
பவழப் புட்டத்துப் பளிக்குமணித் தூணின்
திகழ்பொன் போதிகைச் செம்பொன் செழுஞ்சுவர்
வெள்ளி வேயுள் வெள்ளியம் பலகைப்
பீடிகை நிரைத்த மாட மறுகிற்

கோடுப்போர் வீழ்த்த குங்குமக் குழையலும்
தோடுப்போர் வீழ்த்த தூவேள் ளலரும்
வேதியர் கடைத்தலை வேள்விச் சமிதையும்
வாதிகர் கடைத்தலை வாசச் சுண்ணமும்
கலந்தோர் உதிர்த்த கலவைச் சாந்தமும்
புலந்தோர் பரிந்த புதுப்பூ மாலையும்
சிறாஅர் வீழ்த்த செம்பொற் கண்ணியும்
அறாஅ மறுகின் ஆவணப் பலியும்
பசுங்காய் தேவிட்டும் பற்கூட் டரத்தமும்
இயங்குநர் இன்புற இன்னவை பிறவும்
காட்டெனக் கமர்ந்து கூட்டுநர் அமைத்த
கலவைக் கொழுங்களி எழுதுகள் அவித்து
வெறிக்களங் கடுப்ப வீதியு முற்றமும்
நிறைப்போது பரப்பி நெடுங்கடை தோறும்
அணித்தகை சிதைத்தனர் இவரென ஆடும்
முனித்தலைச் சிறாரை முன்னில் வாங்கித்
தாயரைக் காட்டியவர் தவறெடுத் துரைக்கும்
ஏவன் மகளிர் வாய்மொழிக் கம்பலும்
வண்ணக் கலிங்கத்துக் கண்ணறைக் கண்டம்
தலையோடு தலைவர இலையடுக் கிரீஇக்
கச்சுவாய் கொடித்து முத்துப்புரி நாற்றி
ஒண்மணித் தாரோடு பன்மணிப் புளகம்
விலங்கு நீளமும் இலங்கித் தோன்றி
மிழற்றுபு விளங்கும் எழிற்பொலி வெய்த
வல்லவன் புனைந்த பல்வகைக் கம்மத்து
மங்கலப் பெருங்கொடி மங்குல்வா னத்துள்
உரற்றுமழை கிழிக்கும் ஒண்மணி உச்சிப்
பல்லோர் காணும் பரூஉத்திரள் அடியிற்
பன்மணிக் கண்டத்துக் கண்ணிழற் கலங்கி
ஓங்குபு நிமிர்ந்த காம்பொடு கவ்விப்
பயில்பூம் பத்திக் குயில்புரை கொளுவின
வட்டமைத் தியற்றிய வலம்புரி சாற்றி
ஆடகப் பொற்கயிற் றரும்பொறி யாப்பின
வயிரப் பல்லரிப் பயில்பூம் பத்திக்

கிண்கிணித் தாரோடு கலவிய கதிரணி
கோளுவோடு படாஅக் கோடிப்பவ ழத்துத்
தாமந் தாழ்ந்து தலைமுதற் கோத்த
நீலக் காழ்மிசை நெற்றி மூழ்கி
உண்ணுகுப் போலையுட் கண்விரித் தியற்றிய
பாத சக்கர மாறெதிர் நீர்தரக்
கோதைத் தாமமொடு கோட்டைமுதற் கோத்த
இலங்கொளி முக்குடை எந்திரத் தியங்க
அறிவர் சரித முறையிற் சுட்டி
உரையும் ஓத்தும் புரையாப் புலமைப்
பெரியோர் நடாவுந் திரியாத் திண்ணெறி
ஒராஅ உலகிற் கோங்குபு வந்த
அராஅந் தாணத் தருச்சனைக் கம்பலும் அருகன் கோயில்
கண்ணிற் கண்ட நண்வினைக் கம்மம்
கையிற் புனையுங் கழிநண் ணுளர்
எட்டினுங் கிடையினு முட்டமை கிழியினும்
நாற்றமுந் தோற்றமும் வேற்றுமை யின்றி
எற்ப விரீஇய இலையுங் கொழுந்தும்
கொழுந்திற் கேற்ற அழுந்துபடு குலாவும்
குலாவிற் கமைந்த கோலச் சந்தியும்
முகிழும் போதும் மகிழ்சுழல் அலரும்
அன்னவை பிறவும் பன்மரம் பண்ணித்
தீட்டினர் அன்றியு நாட்டினர் நிறீஇக்
கழைமுதற் கொளீஇக் கைபுனை வனப்பின்
இழைமுதற் கொளீஇய எழில வாகிக்
காம வல்லியுங் கதலிகை யணிந்த
தாம வல்லியுந் தண்பெரும் படாகையும்
காலேந் திரமுங் கைவயிற் பிரியா
நூலேந் திரமு நோக்கினர் போகாப்
பத்திப் படாமுஞ் சித்திரக் கோடியும்
இன்னோ ரன்ன என்னோர் சேரியும்
உறப்புணர்த் தார்க்குஞ் சிறப்பொலிக் கம்பலும்
இடியுறழ் முரசின் இறைமகன் அணியும்
முடியணி ஒழிய முற்றணிப் பெருங்கலம்

யாவர் வேண்டினும் யாவரு மீமின்
ஈத்ததின் இரட்டி கோத்தரு நமக்கென
நாற்பெருந் திசையு நகரங் காடியுள்
வாய்த்த செய்தொழில் வாணிகர்க் கறையும்
கோப்பெரு முதியர் வாய்ப்பறைக் கம்பலும்
குடிக்கணி கொடுக்குங் கொற்றத் தானை
இடிக்கண் முரசின் ஏயர் பெருமகன்
வதுவை நாப்பட் புதுவது புணர்ந்து
நங்கையர் தம்மொடு செலீஇ எங்கையர்
வருக ஈண்டென வழிதின் ஓடும்
தம்மமர் புதல்வரைத் தலையடி காறும்
கம்மப் பல்கலங் கைபுனைந் தணிந்து
செம்மலின் விடுக்குஞ் சிறந்த சாயல்
அம்மென் கூந்தல் அரிவையர் கம்பலும்
வத்தவர் இறைவன் வதுவையுள் நம்மோ(டு)
ஒத்தவர் வரிசை ஒத்துப் புகுதலிற்
பத்திபட நிரைத்த பைங்குலைத் தாறும்
தெங்கின் ஊறலுந் தேம்பிழித் தேறலும்
தாங்கரும் பெண்ணைப் பூங்குலை அமுதமும்
மதுவுஞ் சீதமும் புதுமலர் வேரியும்
உக்கிர ஊறலும் சிக்கரத் தெளியலும்
..............................காஞ்சியத் தெளிவும்
கரும்பின் ஊறலும் பெரும்போதித் தேனும்
இவையும் பிறவுஞ் சுவைதெரி யாளர்
விட்டுணல் ஆற்று மட்டுமலி நறுங்கள்
பெய்ம்மின் தம்மின் ஈமின் பிறர்க்கெனத்
தம்மில் தோறும் உண்மகிழ்ந் துரைக்கும்
கள்ளுண் ணாளர் ஒள்ளொலிக் கம்பலும்
மாற்றுத்தொழின் மன்னர் மயங்கிய ஞாட்பினுள்
கூற்றுத்தொழில் இளையர் குடர்சூடு மருப்பின
வெம்படை மிகப்பலர் மெய்ம்மிசை எறியினும்
தம்படைக் கோல்காப் பணபுடன் பயிற்றி
மூத்தோர் பெண்டிர் நீத்தோர் மகாஅரென
நாற்பா லோரையு நூற்பாற் செய்தொழிற்

பாகர் வேண்டினும் பையுள் செய்யா
வேக உள்ளத்து வேழந் தெரிந்து
நிரந்தன காட்டிய நேயந் தோன்றப்
பார்படு முத்தொடு தாருடன் பூட்டி
ஐவகை வண்ணத்துக் கைவல் கம்மியர்
கொடியும் பத்தியும் வடிவுபட எழுதிச்
சூழியும் ஓடையுஞ் சுடர்மணிக் கோவையும்
ஊழறிந் துயர்த்த உத்தம உயர்ச்சிய
மண்ணுநீர் சுமக்கற்குப் பண்ணுமுறை பிழையாக்
கோல யானை நாலிரண்டு மிகையா
ஆயிரம் அணிந்தவை கோயிலுட் டரூஉம்
பாகியல் உள்ளத்துப் பாகர் கம்பலும்
மணியரி அடக்கிய மாண்வினைப் பகுவாய்
அணிமிழற் றரவத் தம்பொற் கிண்கிணி
சிலம்பொடு சீறடிப் புறம்புதைத் தரற்றவும்
அம்மென் மருங்கு லசைய அடிபரந்த
கொம்மை கொண்ட தன்மைய வாகிக்
கோங்கரும் பழித்த வீங்கிள மென்முலை
உட்பட விட்ட வட்ட நடக்கத்துச்
சுண்ண இலேகை வண்ணஞ் சிதைய
மண்ணிய நித்தில வடத்தொடு புரளும்
பல்கலஞ் சுமத்தல் ஆற்றாது பையென
ஒல்குபு நடங்கும் ஒருபிடி நசுப்பினர்
மண்ணக மருங்கின் மதிபல பயின்றன
விண்ணகம் என்னையும் விடுக்குங் கொல்லென
மதியகம் வெள்க வனப்பொடு புணர்ந்த
கதிர்விடு திருமுகத் தெதிர்வன போலச்
சென்றுவந் துலாவுஞ் சேயரிக் கண்ணினர்
ஈன்றோர் மாட்டும் எதிர்முக நோக்காது
மான்தோங் கூறு மம்மர் நோக்கினர்
பொன்னணி கொண்ட பூந்தண் சிகழிகைக்
கன்னி மகளிர் கண்அணங் குறூஉம்
ஒவ்வா அணியினர் ஒப்பக் கூடி
மண்ணகக் கிழவற்கு மண்ணுநீர் சுமக்கும்

புண்ணியம் உடையீர் போதுமின் ஈங்கென
வாயில் தோறும் வந்தெதிர் கொள்ளப்
போர்வை மடக்கார் போலியப் புகுதரும்
கோயின் மகளிர் கோல மெல்லடி
நூபுரங் கலந்த பாடகக் கம்பலும்
அன்னவை பிறவும் பன்னூ ருயிரம்
ஓடிவில் கம்பலை ஒருங்குதலைக் கூடிக்
கடிகமழ் செல்வங் கலந்தன்றால் நகரேன்.

---

## ௨. கடிக்கம்பலை

அஃதாவது : உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் திருமணவிழா நிகழ்ந்தபொழுது சயந்தியில் உண்டான ஆரவாரங்களைக் கூறும் பகுதி என்றவாறு.

### உரை

௧ - ௬ : பொலிந்த சும்மையொடு.......விதியிற் கூறுவென்

[௧ முதல் ௬ வரையில் புலவர் கூற்று.]

(பொ - ரை.) இங்ஙனமாக ஆரவாரத்தோடு உதயணன் வாசவதத்தையோடு சயந்தியின்கண் மகிழ்ச்சிமிக்குப் புகுந்த பின்னர், அவன் பெருங்கேளிர் நிலஞ்சுமக்கலாற்ருதபடி வந்து குழுமி உறையாநிற்ப, ஏயர் மரபினனாகிய அவ் வுதயணனுக்கும், குழல் முதலியவற்றையுடைய வாசவதத்தைக்கும் நிகழ்ந்த திருமணவிழாவின்பத்தை நூன்முறையானே கூறுவேன் கேண்மின் ; என்று கொங்குவேளிர் கூறுகின்ருர் என்க.

(வி - ம்.) இது நுதலிப்புகுதல் என்னும் உத்தி.

௧. சும்மையொடு பொன்அணி பொலிந்த மூதூர் அகம் மலிந்து புக்கபின் என இயைத்துக்கொள்க. சும்மை - ஆரவாரம். பொன் முதலியவற்ருல் ஒப்பனை செய்யப்பட்ட மூதூர் என்க. மூதூர்-ஈண்டுச் சயந்தி.

௨. அகத்தின்கண் மகிழ்ச்சி மலிந்து என்க. மண்-நிலம். பொறை-சுமை.

௩. பெருங்கிளை - மிகுந்த உறவினர். இறைகொண்டு - தங்கி. ஈண்டி இறை கொள்ளாநிற்ப என்க.

௪. இன்மகிழ் இருக்கை - இனிய மகிழ்ச்சிக்குக் காரணமான இருக்கை. ஏயர்மகன் - ஏயர்குலத் தோன்றலாகிய உதயணன்.

௫. தண்மகிழ் - குளிர்ந்த மகிழமலர் மாலையினையுடைய. ஒளி தத்துதாமம் என மாறுக. ஒளிதாவும் பொன்மாலையும் மணிமாலையும் என்க. மாசின்மையானே மதியின் கவினை அழித்த திருமுகம் என்க.

௬. மதி - திங்கள். ௭. திருமுகத்து அழகிற்கு மேலும் அழகாந் தன்மையுடைய கண்; "வனப்பின்மேலும் வனப்புடைத்தாகி" என்பர் மேலும், (மகத - ௧உ : ௬௩.)

௭. ஐ - மென்மை. அரி - செவ்வரி. தடங்கண் - பெரிய கண்.

௮. வனப்பு - உறுப்பெல்லாம் திரண்டவழி உண்டாவதோர் அழகு. வீற்றிருத்தலாவது, அழிவின்றி நிலைபெறுதல்.

௯. வதுவைச் செல்வம் - திருமணவின்பம். விதி - நூன்முறை. கேண்மின் என்பது சொல்லெச்சம்.

௧௦ - ௧௭ : எண்தரும் பெருங்கலை.......புணர்ப்பியல் காட்சியன்.

[௧௦ முதல் உ௪ வரையில் ஒரு தொடர். இதன்கண், கணிவன் சிறப்புக் கூறப்படுகின்றது.]

(பொ - ரை.) உறுதிப்பொருள் நான்கனையும் உணர்ந்து கலைத்துறையிற் பயின்று முதிர்ந்து, வானத்தின்கண் அகன்ற இடத்தின்கண் பொருந்துதலையுடையவாய் அழகுபெற மிக்கு விளங்காநின்ற மேம்பாடுடைய நோக்கத்தின்கண்ணவாய்க் கணிதக் கூற்றிற்பட்ட நாளுங் கோளுமாகிய பொருள்களை ஆராய்ந்து அவற்றிற்குரிய நூல்களையும் கற்றுத் தெளிந்து, அவற்றின் இயக்கத்தாலே நிகழும் நன்மை தீமைகளை உணர்ந்து, தீயவற்றை ஒழித்து வேந்தனுக்குரிய ஒழுக்கத்தோடே கருதிய பொருள்கள் தவிராத முறைமையாலே நன்மைதரும் காலத்தைப் புணர்க்கும் இயல்பினையுடைய மெய்க்காட்சியாளனும் என்க.

(வி - ம்.) ௧௦. எண் தரும் பெருங்கலை - சிந்தனை தருகின்ற பெரிய கலைகள் என்க. துறைபோகி-அத் துறைகளிற் பயின்று முதிர்ந்து.

௧௧ - ௧௪. விண்ணகம் கண்ணகல் புணர்ப்பின் கவின்பெற நந்தி விளங்கும் பாற்பொருள் ; மேதகு நாட்டத்த பாற்பொருள் எனத் தனித்தனிக் கூட்டுக. விண்ணின்கண்ணே அகன்ற இடத்திலே பொருந்துதலையுடையவாய் அழகுற மிக்கு விளங்காநிற்பனவும், மேம் பட்ட பார்வையின்கண்ணவாய் உள்ளனவும் கணிதத்தின்பாற் பட்டனவும் ஆகிய நாள்கோள் ஆகிய பொருள் என்க.

௧௩- நாற்பொருள் - அறம்பொருள் இன்பம் வீடென்பன. இனி கணிதநூற் பொருள் நால்வகைப்படுத்தப்பட்டன உளவாயிற் கொள்க. பால்பொருள், ஆறங்கங்களுள் கணிதத்தின்பாற்பட்ட பொருள். அவை நாள் கோள் ஊழி யாண்டு முதலியன. பன்னுதல் - ஆராய்தல்.

௧௪. நூல் - கணிதநூல். தீப்பொருள் - தீய பயனைத்தரும் நாள் கோள் முதலியவற்றையுடைய காலம் என்க. ஒரீஇ - ஒழித்து.

கரு. அலகை வேந்தன் - அரசர்க்கு மேம்பாட்டின் வரம்பாகத் திகழும் அரசன் என்க. அலகை - வரம்பு ; எல்லை. வேந்தன் - ஈண்டு உதயணன்.

கசு. நுனித்த - பலவறி சொல். கருதப்பட்டவை. இப்பொருள் ஓரீஇ என்றதனால், நற்பயன் தரும் காலத்தை வேந்தன் ஒழுக்கத்தோடே வழுக்கா மரபிற் புணர்க்கும் இயல்புடைய என்றும். காட்சி - மெய்க் காட்சி.

கஎ - உச : புரையோர் புகழ............பெருங்கணி வருத்த

(பொ - ரை.) உயர்ந்தோர் புகழும்படி குடை முதலிய சிறப்புக்களை உடையவனும், தன் அரசர் இந்திரன்போன்று தம் மனத்தேகொண்ட கொள்கை நிறைவேறிச் சிறப்புறும்படி செய்பவனும், அரசர் தம்மிற்றாமே நோற்றுப் பெற்ற தவப்பயன் போல்பவனும், சொற்போரில் வெல்லுதற்கரிய தன்மையுடையவனும், அரசன் பணியாளனும் ஆகிய பெரிய கணிவனாலே கூறப்பட்ட என்க.

(வி - ம்.) கஎ. புரையோர் - உயர்ந்தோர்.

கஅ - உ0. குடை ஆசனம் செருப்பொடு புகுதல் சேனையோடு எழுதல் யானை தானை உடையனாதல் என்னும் சிறப்புக்களையுடைய கணி என்க.

உக. மண்ணகக்கிழார் -அரசர். மனக்கோள் - கருத்து.

உஉ. விண்ணகக்கிழவன் - இந்திரன். நிலவுலகத்து வேந்தர்தம் கருத்து நிறைவேறுதலானே, இந்திரன் போன்று சிறப்புறும்படி செய்யும் கணி என்க.

உங. அரசர் தம்மில் தாமே நோற்றுப் பெற்ற தவம் அனையான் என்க. என்றது செயலையும் காலத்தையும் கூட்டி நற்பயனைத் தவிராது சேர்த்தலிற் றவம் போன்றவன் என்றவாறு உவமச்சொல் வருவித்துக் கூறப்பட்டது.

உங—உச. புரி தருக்கத்து அரும் பரிசாரத்துக் கணி - நிகழ்த்தா நின்ற சொற்போரின்கட் பிற கணிகளாலே வெல்லுதற்கரிய கணி, பரிசாரத்துக்கணி எனத் தனித்தனிக் கூட்டுக. அரசவைக் கணிவன் ஆகலின் தருக்க வன்மை கூறல் வேண்டிற்று. பரிசாரம் - பணித் தொழில். பெருங்கணி - சிறப்புடைய கணிவன்.

உரு. முதல் ௬௫. வரையில், திருமணச் செய்தியை முரசறைந்து அறிவிக்கும் வள்ளுவன் தன்மையும், செயலும் கூறப்படும்.

உரு - உகூ : நன்னுள் இதுவெனப்........கொற்றமுரசம்

(பொ - ரை.) நல்ல நாள் இஃதென்று பல நாட்டினரும் அறியும்படி, பசிய பொன்னிற வாராலே இறுகக் கட்டுதலுற்று முத்த மாலையும் மலர் மாலையும் அணியப்பட்ட உரிபோர்த்த இடிபோன்று முழங்கும் வெற்றி முரசத்தை என்க.

௨௫. தலைநகரத்தே முரசறைந்து அறிவிக்கும் செய்தி பிறநாட்டு ஒற்றரானும் பிறரானும் பிறநாட்டும் பரவுதல் உண்மையின் பன்னாடறிய எனப் பட்டது.

(வி-ம்.) ௨௬. பசும்பொன்னிற மூட்டப் பட்ட பல வார் என்க. பிணியுறீ - இகட்டி.

௨௭. கோதையாகிய முத்தம் ; முத்து மாலை. ததைஇ - சூட்டி.

௨௮. ஏற்றுரி போர்த்த - காளையினது தோலாற் போர்க்கப் பட்ட. இடியை ஒத்து முழங்கும் குரலையுடைய முரசம் என்க. தழங்கு குரல் - தழங்குரல் என நின்றது.

௨௯. கோல் தொழில் - செங்கோல் நடத்தும் தொழில்.

௩௦ - ௩௮ : பெரும்பணைக் கொட்டிலுள்........பணையெருத் தேற்றி

(பொ-ரை.) பெரிய முரசக் கொட்டிலிலே அரசவையோர் காணும்படி கொற்றவைக்கு மடை கொடுத்து வாழ்த்தித் திருநாள், படை போர்மேற்செல்லும் நாள், மண நாள் என்னும் இந்நாள்களினன்றிப் பிற நாட்களிலே முரச முழக்குதலில்லாத செல்வத்தையும், சேனையையும், உடைய முதிய வள்ளுவன், வெண்மை நிறமுடைய சாந்தம் மாலை துகில் முதலியவற்றை அணிந்து கொண்டு, யானையின்மேல் அணையிடத்தே ஏறியிருந்து பருத்த அதன் எருத்தத்தில் ஏற்றி என்க.

நாடு அறிய முரசத்தை வள்ளுவ முதுமகன் அணிந்து பெறீஇ, வேழத்து அணை மிசை அமர்ந்து அதன் எருத்தத்தே ஏற்றி என இயைக்க.

(வி-ம்.) ௩௦. பணைக் கொட்டில். முரசமிருக்கும் கொட்டில்.

௩௪. முற்றவைக்கு அம்முரசினைக் காட்டி என்க. கொற்றவை - வெற்றித்திருவாகிய இறைவி. பழிச்சி - வாழ்த்தி.

௩௫. மங்கலச் செய்தியை அறிவித்தற்கு அறிகுறியாக வெண்மை நிறமுடைய சாந்த முதலியவற்றை அணிந்து என்க.

௩௭. அமர்தந்து ; அமர்ந்து - இருந்து.

௩௮. பணை எருத்து - பருத்த பிடர்.

௩௮ - ௪௪ : பல்லவர் சூழத்.......ஒளியினர் ஆகுமின்

(பொ-ரை.) மாந்தர் பலரும் புடைசூழத் தேர்கள் திரியாநின்ற தெருத்தோறும் ஊரிலுள்ளோர் எஞ்சாது அறிந்துகொள்ளும்படி "நம் மன்னன் வேல் வெற்றியாலே பொலிவுறுக! செல்வம்எய்துக! உலகம் வளத்தான் நிறைக! அரசன் நிலைபெறுக!" (என முன்னர் வாழ்த்திப் பின்னர் மாந்தரை விளித்து) வளமுடைய சயந்தியில் வாழும் பலரும் கேளுங்கள்! நீவிர் நன்மை

யோடே பொருந்தித் தியவை கடிந்து எழிலோடே சேர்ந்த புகழினையும் உடையர் ஆகுமின் ! என வாழ்த்தி என்க.

(வி - ம்.) ௩அ. பல்லவர் - பலர்.

௩௯. தேர்திரி மறுகு - தேரோடுந் தெரு. ஊர் : ஆகுபெயர்.

௪0. வேல்வலம் - வேலான் எய்தும் வெற்றி. பூமகள் - திருமகள்.

௪௧. மலிக - நிறைக. மண்மகள் - நிலவுலகம்.

௪௨. மல்லல் - வளம்.

௪௩. திரு - நல்லன.

௪௪. உரு - அழகு. ஒளி - புகழ்.

௪௫ - ௫௫ : பல்களிற் றியானைப்........பின்றை

(பொ - ரை) களிற்றியானைப் படைகளையுடைய பெரிய மன்னனாகிய பிரச்சோதனனுடைய குலமகளாகிய மென்மையையும், அணிகலனையும், சிறடியினையும், புருவத்தினையும், கண்ணையும், இனிய நகையையும், பவழ வாயையும் உடைய வாசவதத்தையொடு மணம்புணர்ந்து கோசம்பி மன்னனாகிய உதயணன் மணமகனாகும் காலம் இஃதாம் என்று, குறுந்தடியாலே முரசத்தின் கண் அதிர்ந்து முழங்கும்படி கேள்விக்கினிய மொழிகளைக் கூறி அறையா நின்ற ஒல்லென்னும் ஆரவாரமுண்டாக முழக்கி அறிவுறுத்திய பின்னர் என்க.

(வி - ம்.) ௪௫. வேந்தன் - பிரச்சோதனன். ௪௬. குலமகளாகிய வாசவதத்தை என்க. மணிமிடை பைம் பூண் என மாறுக. ௪எ. சிறடி - சிறிய அடி. சென்றேந்து புருவம் - நீண்டுயர்ந்த புருவம். ௪அ. இலங்காநின்ற ஒளியையுடைய வாள் போலும் கண் என்க. இனிய நகையினையுடைய பவழ வாய் என்க. துவர் - பவழம். ௫0. கோலஞ் செய்யப்பட்ட நீண்ட மதிலையும் கொடியினையும் உடைய கோசம்பி என்க. கோசம்பி - உதயணனுடைய தலை நகரம். ௫௧. மாலை - வெற்றிமாலை. மன்னவன் - உதயணன். ௫௨. காலை - முழுத்தம். மணிவைத் திழைத்த குறுந்தடி. ௫௩. கண் - முரசத்தினுடைய கண். இன்மொழி - கேள்விக்கினிய மொழி ; என்றது திருமணச் செய்தியை. ௫௪ - கல்லென, ஒல்லென என்பன ஒலிக்குறிப்பு மொழிகள். கம்பலை உண்டாக அறைந்தென்க. ௫௫. அறிவுறீஇய - அறிவுறுத்திய.

இனி, ௫௬. முதல் எ௫ வரையில் அச்செய்தி கேட்ட மக்கள் தத்தமில்லத்தை ஒப்பனை செய்தல் கூறப்படும்.

௫௫ - ௬0 : பெரும் பெயர் மூதூர்.......ஒருங்குடன் வளைஇ

(பொ - ரை.) நிறைந்த பெரிய புகழினையுடைய அச்சயந்தி மாந்தர் அத்திருமண நிகழ்ச்சியைப் பெரிதும் விரும்பிக் கூடிப் படையையுடைய நெடிய மதிலொடு கூடிய பெருவாயில்

தோறும், தோரணக் கம்பங்கள் வானைத் திண்ட நட்டு, பொன் மாலைகளோடே முத்து மாலைகளையும் ஒருங்கே வளைத்துக் கட்டி என்க.

௩௬. பெரும் பெயர் - பெரும் புகழ். விரும்புபு - விரும்பி ; அத் திருமண நிகழ்ச்சியைப் பெரிதும் விரும்பி என்க. துவன்றுதல் - குழுமுதல். ௩எ. படை - காவற் படை. போர்க்கருவிகளுமாம். மதிலையுடைய கடை என்க. கடை - வாயில் ௩௯. அழகிய ஒளியையுடைய முத்தாலாய மிகப் பெரிய மாலைகளையும் என்க. வளைஇ - வளைத்துக் கட்டி.

௪௧ - ௪எ : உத்தம வேழத்து........வாயில் தோறும்

(பொ - ரை.) உயர்ந்த இலக்கணமமைந்த யானையின் முதுகினிடத்தே அழகுறும்படி குடை கவியா நிற்பவும், அம்முதுகிடத்தே கவரி வீசுநர் நின்று வீசா நிற்பவும், இத்தகைய இரட்டை யானைகள் ஒரே சமயத்திற் புகுந்து செல்லுதற்கியன்ற அகலத்தோடே அடைத்தலமைந்த பெரிய பொறியினை அடியிலே இணைத்து உருவங்கள் செதுக்கி அணி செய்யப்பட்ட அழகிய கதவுகளையும் உடைய அப் பெருவாயிலிடந் தோறும் என்க.

(வி - ம்.) ௪௧. உத்தம வேழம் - சிறந்த இலக்கணம் அமைந்த யானை. புறம் - முதுகு. ௪௨. வித்தகம் - சிறந்த தொழிற்றிறம். விரகுளி - உபாயமாக.

௪௨. மணிக்கைக்கவரி - மணிகளாற் செய்த காம்பினையுடைய சாமரை. ௪௪. புடைக்களிறு - இருபக்கத்துச் செல்லும் இரண்டு யானைகள். இரண்டு யானைகள் ஒரே சமயத்தில் புகுதற்கேற்ற அகலமுடைய வாயில் ; கதவினையுடைய வாயில், எனத் தனித்தனிக் கூட்டுக. இதனாற் கூறியது, இரண்டு யானைகளின்மேலே குடையுயர்த்தி அவ்வியானையின் முதுகின் மேனின்று சாமரை வீசா நின்றபடியே அவ்வியானைகள் ஒரே சமயத்தில் புகுதற்கேற்ற உயரமும் அகலமும் உடைய பெருவாயில் என்பதாம்.

௪௬. அடைப்பு - அடைத்தல். பொறி - இயந்திரம். பத்திரம் - உருவம்.

௪எ - எ௬ : வலத்தும் இடத்தும்........இன்மொழிக் கம்பலும்

(பொ - ரை.) வலப்பக்கத்தும் இடப்பக்கத்தும் உள்ள ஞாயில்மாடத்து அடியின்கண் அமைந்த சதுரமான திண்ணையிடத்தில் அமைக்கப்பட்ட குளிர்ந்த அழகிய பந்தரின் கண், பழுக்காய்க்குலை முதலியவற்றை அமைத்துப் பண்ணமைத்த சுண்ணக் குடங்களையும் வைத்துத் தமர் பிறர் என்று எண்ணாது யாவர்க்கும் வழங்குவோருடைய முகமன் மொழிகளாலே எழுந்த ஆரவாரமும் என்க.

(வி - ம்.) சுஎ. நாயில்-ஞாயில். ஞாயில் மாடம்-மதிலகத்தோர் உறுப்பு. சுஅ. தாயில் மாடம் என்றும் பாடம். இதற்குத் தாய்மனை யிடத்து மாடம் என்க. தாள் முதல் எல்லை - அடியின் கண். சுகூ. சதிரம் - சதுரம் - சம நாற்கோணம். எ0. பழுக்காய் - முதிர்ந்தகாய். பழம் காய்த்துணரும் - பழத்துணரும் என்க. துணர் - கொத்து. எக. களிக்காய் - களிப்பாக்கு. பறி - ஓலையான் முடைந்ததொரு பெட்டி, துவர்க்காய் - பாக்கு; துவர்ப்புடைய பிற காய்களுமாம். உம்பல் - ஒரு வகை ஓலைப் பெட்டி. இதனை இக்காலத்தார் உமல் என்று வழங்குவர். எஉ. பளிக்காய் - பச்சைக் கருப்பூரம். பளிங்குக்காய் - பளிக்காய் என மருவிற்று. பலம் - பழம். தளிர் இலை - கொழுந்து வெற்றிலை. வட்டி - தாளம். (தாம்பாளம்) தாது - மணப்பொடி. எ௩. சுண்ணம் - சுண்ணும்பு. பண்ணமைத்து - மணம் நிற முதலிய ஊட்டிப் பண்படுத்தி. இரீஇ - வைத்து. எ௫. எண்ணாது - தமர் பிறர் என்று கருதாமல் என்க இன்மொழி - வருவோரை வரவேற்கும் முகமன் மொழி.

எசு - அஎ : தண்ணிழற் பொதிந்த........அட்டுண் கம்பலும்

(பொ - ரை.) தண்ணிய நிழலாலே பொதியப்பட்ட வெள்ளிய புதுமணல் பரப்பிய பந்தரோடே கண்ணுக்குப் பொருந்த அணி செய்யப்பட்டுப் பக்கத்தே நிறைந்த பண்டகசாலைகளிடத்தும் இன்னோரன்ன பிற விடத்து மெல்லாம், அந்தணர்க்கும் பிறர்க்கும் அமிழ்தம் போன்ற ஆறுசுவையுடைய அடிசிலும் நெய்யில் அடப்பட்ட சிற்றுண்டியும் வழங்குதற்கு வைக்கப்பட்ட பந்தரிடத்தும், எப்பொழுது விரும்பினும் அப்பொழுதே வழங்கும் மடைத் தொழிலில் தப்பாத தொழிலையுடையோர் உறையாநின்ற அறச் சோற்றட்டிலின் உள்ளும் புறத்தும், வலிய கோலையுடைய காவலிளையருடைய பாதுகாவலகத்தே சமைத்து முட்டுப்பாடின்றி நிகழ்த்தாநின்ற அட்டுணல் எழா நின்ற ஆரவாரமும் என்க.

வெண் மணற் பந்தராற் கவினி பக்கங்களிலே நிறைந்த செல்வச் சாலையிடத்தும், சிற்றூண்பந்தரிலும், வாழ்க்கையர் பயின்ற அறக் கோட்டத்தின் அகத்தும் புறத்தும், இளையர் அரணின்கண் சமைத்து முட்டாது நடத்தும் அட்டுண் கம்பலையும் என்க.

(வி - ம்.) எஎ. கண்ணுற - கண்ணுக்குப் பொருந்திய. கவினி - அழகுற்று. செல்வச்சாலை - உணவுப்பொருள் தொகுத்து வைத்த இடம்: உட்கிரகம் - இக்காலத்தார் இதனை உக்கிராணம் என்பர். எகூ. அல்லோர் - அந்தணர் அல்லாதார். அக. நெய்ச்சூடு - நெய்யில் சமைக்கப்பட்ட பண்டம். அ௩. தூமம் - புகை. பிறர் அஞ்சுதற்குக் காரணமான கைத்தொழிலாகிய மடைத்தொழில் என்க. புகையினூடு தீயிடைச்செய்யும் தொழிலாதலால் நாமக்கைவினை என்றார். நாமம் - அச்சம் அச. வழாஅ - வழுவாத. அ௫. அறச்சோறு அடும் இல் - அறக்கோட்டம்.

அ௬. முரண் - வலி. அரண்மாட்டு - பாதுகாவலின் அகத்தே. அஎ. முட்டாது - முட்டுப்பாடின்றி. நடாஅம் - நடத்துகின்ற. அட்டுண்கம்பல் - அட்டுண்டலாலே உண்டாகும் ஆரவாரம்.

அஅ - ௧0௨ : பவழப் பட்டத்து........காட்டெனக் கமர்ந்து

(பொ - ரை.) பவழப்பட்டத்தினையும் மணித்தூணையும், பொன் போதிகையினையும் பொன்சுவரையும் வெள்ளியால்வேயப் பட்ட கூரையினையும் நிரலாக இடப்பட்ட வெள்ளிப்பலகைகளா லாகிய இருக்கையினையும் மாடமாளிகைகளையுமுடைய கடைத் தெருவின்கண் வழங்குவோராற் சிந்தப்பட்ட குங்குமச்சாந்தமும் தொடுப்போர் சிந்திய மலரும், அந்தணர் முன்றிலிற்கிடக்கும் சமிதைகளும், வாதிகர் முன்றிலிடத்தே கிடக்கும் சுண்ணமும், மணப்பொருள் கூட்டுவோர் உதிர்த்த சாந்தமும், ஊடிய மகளிர் அறுத்துவீசிய மலர் மாலையும், சிறுவர்கள் போகட்ட பொன் மாலையும், வணிகரானே தெய்வத்திற் கிடப்பட்ட பூசனைப் பொருளும், தம்பலமும் ஆகிய இவற்றையும் இன்னோரன்ன பிறவற்றையும் குப்பை என்று கருதி (௧0௬) ஏவல்மகளிர் அவற்றைக்களைந்து என்க.

(வி - ம்.) அஅ. பட்டம் - ஈண்டுத் தூணிற்கிட்ட பூண். பளிக்குத் தூணும் மணித்தூணும் என்க. அக. போதிகை - ஒருமாடத்துறுப்பு.

௯௧. பீடிகை - கடை. நிறைத்த மாடப் பீடிகைமறுகு என மாறுக. ௯௨. குழையல் - சாந்து. ௯௩. தூவெள்ளலர் - தூய வெண்ணிறமலர். ௯௫. வாதிகர் - வாசிகர். வாசனைப் பொருளைக் கூட்டுவோர். ௯௬. ஆவணப்பலி - வணிகர்கள் மாலைப்பொழுதில் தெய்வத்திற்கிடும் பலிப்பொருள். "நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது, மல்லல் ஆவணம் மாலையயர" எனவரும் நெடுநல் வாடையும் உணர்க. (௪௩. ௪.)

௧00. பசுங்காய் - பச்சைப்பாக்கு. பற்கூட்டரத்தம் - தம்பலம்.

௧0௨. காட்டு - குப்பை; "காட்டுக்களைந்து கலங்கழீஇ" (ஆசாரக். ௪௬.) என்புழியும் அஃதப் பொருட்டாதலறிக. கமர்ந்து என்பது களைந்து என்னும் பொருட்டுப் போலும்.

௧0௨ - ௧0௬ : கூட்டுநர் அமைத்த......வாய்மொழிக் கம்பலும்

(பொ-ரை.) மணங்கூட்டுவோராலே இயற்றப்பட்ட கொழு விய சந்தனக் குழம்பாலே தெருக்களில் எழாநின்ற துகளை அவித்து, (௧0௪) செல்வோர் இன்புறும்படி வெறியாடுகளம் போலத் தோன்றும்படி தெருக்களிலும் முற்றத்திலும் நிறைந்த மலர்களைப்பரப்பி அணிசெய்து அம் முன்றிலிலே ஆடாநின்ற இளஞ்சிறுரை அழைத்துக் கொடுபோய் அவரவர் தாயர்க்குக் காட்டி இவர் யாம் செய்த அணிகளைச்சிதைத் தொழித்தனர் என்று அச்சிறுர் செய்த பிழையினை அவர்க்கு எடுத்துக்கூறு

நிற்கும் பணிமகளிரின் மொழிகளாலே எழுந்த ஆரவாரமும் என்க.

(வி - ம்.) ௧0௨. கூட்டுநர் - மணப்பொருள் கூட்டும் வாசவர். "வாதிகர் கடைத்தலை வாசச்சுண்ணமும்" என முன்னும் வந்தது (௬௫.) ௧0௩. கொழுங்களி-கொழுவிய சந்தனக்குழம்பு. களியாலே துகளை அவித்தென்க. ௧0௪. வெறிக்களம் - வேலன் வெறியாடுங் களம். "நெருப்பின் அன்ன பல்லிதழ் தாஅய் வெறிக்களம் கடுக்கும் வியலறை" (௧௪௯ - ௫0). என்றார் மலைபடுகடாஅத்தினும். ௧0௫. நெடுங்கடை - நெடிய முன்றில். ௧0௬. அணித்தகை - ஒப்பனையழகு. ௧0௭. முனித்தலைச்சிறார் - துறவிகளின் தலைபோன்று பேணப் படாத தலையினையுடைய சிறுவர். முன்றில் - முற்றம். (இல்முன்)

[௧௧0. முதல் ௯௮. வரை. அருகன் கோயில் வருணனை.]

௧௧0 - ௧௧௭ : வண்ணக் கலிங்கத்துக்........பெருங்கொடி.

(பொ-ரை.) பல்வேறு வண்ணங்களையுடைய துகில்களாலே இயற்றப்பட்ட வண்ணச்சிலைகளை ஒன்றன் தலைப்பு மற்றொன்றன் தலைப்போடே பொருந்த இலைகளினது அடுக்குப் போலே அடுக்கிவைத்து, அவற்றின் விளிம்புகளை அழகு செய்து, மேலும் முத்துவடங்களையும் ஏனை மணிமாலைகளையும் மணிவைத்திழைத்த கண்ணாடிகளையும் தூங்கவிட்டு, அகலத்தானும் நீளத்தானும் விளங்கித்தோன்றி ஒலித்துத் திகழாநின்ற அழகானே பொலிவுறும்படி தொழில் வன்மையுடையவனாலே பல்வேறு தொழிற்றிறம்படப் புனைந்த மங்கலப்பெருங் கொடிகளை என்க.

(வி - ம்.) ௧௧0. வண்ணக்கலிங்கம் - நிறமூட்டப்பட்ட துகில். கன்னறைக்கண்டம் - வண்ணங்களாலே இடமறுக்கப்பட்ட துணி. ௧௧௧. இலையடுக்கு-இயற்கையிலே செடிகொடிகளிலே காம்பின் கண் இலையடுக்கிருக்குமாறு என்க. ௧௧௨. கச்சுவாய் - அத்துகிலின் விளிம்பென்க. கோடித்தல் - ஒப்பனை செய்தல். முத்துப்புரி - முத்துவடம். மணித்தார் - ஏனை மணிமாலை. புளகம் - கண்ணாடி.

௧௧௪. விலங்கு - அகலம் (குறுக்கு). மணிமாலைகள் நாற்றியிருத்தலான் காற்றில் ஆடுங்கால் மிழற்றி என்க. மிழற்றுதல் - ஒலித்தல். ௧௧௬. வல்லவன் - அத்தொழில்வன்மை பெற்றவன். கம்மம் - ஈண்டு ஒப்பனைத்தொழில்.

௧௧௭ - ௧௨௯ : மங்குல்...........நெற்றி மூழ்கி

(பொ - ரை) முகிலைக்கிழிக்கும் உச்சியினையும் பருத்துத் திரண்ட அடியினையும் அவ்வடியினிடத்தே பல்வேறு மணிகள் வைத்து இழைக்கப்பட்ட கண்டங்களையும் உடையவாய்க் காண்போர் கண்ணொளியைக் கலக்கும் தன்மையுடையவாய் மிக உயர்ந்த காம்புகளைக் கவ்வியிருப்பனவாய், வட்டிலே வைத்து

வலப்புறமாக முறுக்கப்பட்ட பொன்கயிற்ருேடு கொடிகள் ஏறவும் இறங்கவும் செய்யும் பொறிகள் கட்டப்பட்டனவாய் வயிர மணி முதலிய மணிகளை நிரல்பட வைத்திழைத்த பலவாகிய பூத்தொழிலையும் பத்திகளையும் உடைய சதங்கை மாலையோடே கொளுக்களோடே அமைந்த பவழமாலைகளை உச்சியினின்றும் அடிகாறும் தூக்கப்பட்டனவாய்த் திகழும் நீலநிறக் கழிகளி டத்தே கொளுவி அணி செய்யப்பெற்ற (கஉ௮) அராஅந் தாணத்து என முடியும்.

(வி - ம்.) ககஎ. மங்குல் - முகில். கக௮. உரற்றுமழை - முழங்கும் முகில். ஒண்மணிவைத்திழைத்த உச்சி என்க. ககக. பலரும் வியந்துபார்க்கின்ற அடி என்க. கஉ0. மணிக்கண்டம் - மணிகள் வைத்து இழைத்த வகுப்பறைகள். கண்ணிழல் - கண்ணொளி. கலங்கி - கலக்கி. காம்பு - பெருங் கொடிமரத்தின்கண் பல்வேறு கொடிகளைக் கொளுவுதற்கெனச் செருகப்பட்ட காம்புகள் என்க. கஉஉ. பூம் பத்தி - பொலிவுடைய நிரல். குயில்புரை - தொழில் மேம்பாடுற்ற என்க. கொளு - பொருத்துவாய். கஉ௩. வட்டு - கயிறு முறுக்கு மொரு கருவி. வலம்புரி - வலப்பக்கமாக முறுக்கியபுரி. கஉச. ஆடகப்பொன் - நால்வகைப் பொன்னில்வைத்து ஆடகமென்னும் பொன் என்க. பெரிய மரத்தின் தலையிடத்தே கோக்கப்பட்ட நீனிறக் காம்பின்மேல் கொளுவி என்க. பெரிய கொடிமரத்தில் அமைந்த காம்புகளிலே தலையிடத்தே உள்ள நீலக்காம்பின்கண் அம்மங் கலப் பெருங்கொடிமாட்டி அணிசெய்யப்பட்ட அராஅந்தாணத்து என்க.

கஉ0 - க௩௩ : உண்ணுருப் போலையுள்.......எந்திரத்தியங்க.

(பொ - ரை.) பனையினது அகமடற்குருத்தினை விரித்து வட்ட வடிவினவாய்ச் செய்யப்பட்ட நீர்ப்பொறிகள் ஒன்றற் கொன்று மாறுபட்டு நீரினைச் சிதருநிற்ப; மாலையோடு பொகுட் டின்கண் கோக்கப்பட்ட ஒளியுடைய முக்குடையும் பொறிக ளாலே சுழலா நிற்பவும் என்க.

(வி - ம்.) கக0. உள் நுகுப்பு ஓலையுள் - பனையினது அகமடற் குருத்தோலையுள். க௩க. பாதசக்கரம் - பாதம் வைக்கப்பட்ட சக்கர வடிவிற்ருய தொரு நீர் சிதறும் இயந்திரம் என்க. க௩உ. கொட்டை- தாமரை மலர் அகத்துள்ள பொகுட்டு, தாமரைப் பொகுட்டுப் போன்று செய்யப்பட்ட பீடத்திலே கோக்கப்பட்ட காம்பையுடைய முக்குடை என்க. முக்குடைகளாவன - சந்திராதித்தம், நித்த விநோ தம், சகலபாசனம் என்பன.

க௩ச - க௩௮ : அறிவர் சரிதம்.......அருச்சனைக் கம்பலும்.

(பொ - ரை.) உரையானும் ஓதற்ருெழிலானும் ஒப்பற்ற புலமையையுடைய சான்ருேர்கள் மாறுபடாத திண்ணிய மெய்ந் நெறிச் செலவினையுடையராய் இவ்வுலகம் உயரும் பொருட்டு வந்து அவதாரஞ் செய்த தீர்த்தங்கரர் முதலிய அறிவருடைய

வரலாற்றினைக் கூறுநிற்பவும் மாந்தர் அருகக்கடவுளை அருச்சிக்கவும் இவ்வாற்றான் எழுந்த ஆரவாரமும் என்க.

(வி - ம்.) ௧௩௪. அறிவர் - தீர்த்தங்கரர் முதலிய சான்றோர். உரை - சொல்வன்மை. ஒத்து - கல்வி. புரையாப்புலமை - ஒப்பில்லாத புலமை. அராஅந்தாணம்-அருகன் கோயில். (௧௧௭) மங்கலப் பெருங்கொடியை (௧௨௧) நீலக்காழ்மிசை மாட்டி ஒப்பனை செய்யப்பட்ட (௧௩௮) அராஅந்தாணத்தின்கண் பெரியோர் அறிவர் சரிதம் சுட்டி நடாவுதலானும், மக்கள் அருகக்கடவுளை அருச்சித்தலானும் எழுந்த ஆரவாரமும் என இயைபு காண்க.

௧௩௯. முதல் - ௧௫௭ - வரை ஒருதொடர். இதன்கண் சேரிகளை அணிசெய்தல் கூறப்படும்.

௧௩௯ - ௧௪௮ : கண்ணிற்கண்ட........நாட்டினர் நிறீஇ

(பொ-ரை.) கண்ணாலே கண்டதொரு உருவினைக் கையாலே இயற்றுவதாகிய கலைத்தொழிலில் மிகநுணுக்கமுடைய கம்மியர் ஏடு நெட்டி துணி முதலியவற்றாலே நாற்ற முதலியவற்றால் இயற்கை மரத்தினின்றும் வேற்றுமை தோன்றாமல் செயற்கை மரங்களை இயற்றி, அவற்றிற்கு நிறமூட்டி அங்கங்கே நட்டு நிறுத்தி என்க.

(வி - ம்.) ௧௩௯. "கண்டதே செய்பவாம் கம்மியர்" என்றார் பிறரும்; (நான்மணி - ௪௧.) ௧௪௦. இத்தொழிற்கு நுண்மாண் நுழைபுலம் காரணமாதலின் "கழிநுண்ணாளர்" என்றொரு பெயர் கூறினர். ௧௪௧. ஏடு - இதழ்; ஓலையுமாம். கிடை - நெட்டி. கிழி - துணி. "கிழியினும் கிடையினும் தொழில்பல பெருக்கிப், பழுதில் செய்வினைப் பால்கெழு மாக்களும்" என்றார் இளங்கோவடிகளாரும். (சிலப். ௫ : ௩௩. ௪.) ௧௪௨. நாற்றம் - மணம். தோற்றம் - உருவம். ௧௪௩. விரீஇய - விரிந்த. ௧௪௪. அழுந்து - பதிவு. குலா - வளைவு. ௧௪௫. கோலச்சந்தி - அழகிய மூட்டுவாய். ௧௪௬. முகிழ் - மொட்டு. போது - மலர். மகிழ் - வண்டு. ௧௪௮. தீட்டினர் : முற்றெச்சம். தீட்டி - நிறமூட்டி. நிறீஇ - நிறுத்தி.

௧௪௯ - ௧௫௭ : கழைமுதற் கொளீஇக்........சிறப்பொலிக் கம்பலும்.

(பொ - ரை.) மேலும் மூங்கிற் கழியிலே கட்டி ஒப்பனை செய்த அழகுடையவாகிய காமவல்லி முதலிய கொடிகளையும், நாழிகை வட்டில் முதலிய பொறிகளையும், கண்டோர் போகாமைக்குக் காரணமான படாங்களையும், ஓவியமெழுதப்பட்ட கொடிகளையும், இன்னோரன்ன பிறவற்றையும் பலவேறு வகுப்பினர் வாழும் எல்லாச்சேரிகளினும் பொருந்தவைத்து மகிழ்ச்சியாலே ஆரவாரியாநிற்கும் சிறப்பாரவாரமும் என்க.

(வி - ம்) கழிநுண்ணாளர் என்னோர் சேரியிடத்தும் மரம்பண்ணி நிறீஇ காமவல்லி முதலியவற்றைப் பொருந்தப்புணர்த்து ஆர்க்கும் கம்பலும் என்க.

௧௪௧. கழை - மூங்கில். இழை - நூற்கயிற்றுக்கு ஆகுபெயர். இருபுறத்தும் மூங்கில் நட்டு (௧௫௦) நூற்கயிற்றிலே யாத்த அழகுடையவாகி என்க.

௧௫௧. காமவல்லி.- கற்பகத்தருவில் படரும் ஒரு கொடி. இஃது ஆகுபெயராய் ஒருவகைத் தோரணக்கொடியை உணர்த்தியது. கதலிகை - துகிற்கொடி. ௧௫௧. தாமவல்லி-ஒருவகைத் தோரணக்கொடி. படாகை - அடையாளக்கொடி. ௧௫௨. காலேந்திரம்-நாழிகைவட்டில். ௧௫௪. நூலேந்திரம்-கயிற்றால் இயங்கும் பொறிகள். ௧௫௫. பத்தி - நிரல். பத்திப்படாம் - ஒருவகைத் துகிற்கொடி. சித்திரம்வரையப் பட்ட கொடியென்க. ஏனோர் சேரியும் - பலவேறுவகைப்பட்ட மாந்தர் வாழும் எல்லாச்சேரியிலும் என்க.

௧௫௮ - ௧௬௪ : இடியுறழ் முரசின்...........வாய்ப்பறைக் கம்பலும்.

(பொ - ரை.) அரசன் மாத்திரம் அணியுந் தகுதியுடைய முடிக்கலன் ஒழிய, ஏனை அணிகலன் அனைத்தையும் யாவர் கேட்பினும் எல்லீரும் வழங்குமின்! நுமக்கு நம் மன்னன் நீயிர் வழங்கியதினும் இருமடங்கு வழங்குவன் என்று, நகரத்தின்கண் நான்கு திசையினும் அமைந்த அங்காடியின்கண் தொழில் செய்யும் வணிகர்க்குத் தலைமைவாய்ந்த முதுவணிகர் வாய்ப் பறையறைந்து கூறுகின்ற ஆரவாரமும்; என்க.

(வி - ம்.) ௧௬௧ - ௨. முடிக்கலன் அரசர்க்குரிய அணியாகலின் அஃதொழிய என்றார். பெருங்கலம் - பேரணிகலன். ௧௬௦. யாவர் வேண்டினும் இரப்போர் தகுதியை அளவாது கொடுமின் என்றவாறு. ௧௬௧. கோ - அரசன். ௧௬௨. அங்காடி - கடைத்தெரு. ௧௬௪. கோப்பெருமுதியர் என்றது வணிகர்குழுத் தலைமையாளரை.

௧௬௫ - ௧௭௩ : குடிக்கணி கொடுக்கும்.......அரிவையர் கம்பலும்.

(பொ - ரை.) அரிவையர் அணிசெய்து கொள்ளாமல் வாளா ஓடாநின்ற தம் மக்களை, எந்தையிர்! இங்கே வருக! என்று அழைத்துப் பலவேறு அணிகலன்களாலும் தலைமுதலாக அடியீறாக அணிந்து அழகுறுத்தி, இனி நீயிர் நும் தந்தையரோடு ஏயர்பெருமகன் திருமணவிழாவிற்குச் சென்று வருக! என்று கூறி விடுத்தலாலே எழுகின்ற ஆரவாரமும் என்க.

(வி - ம்.) ௧௬௫ - ௬. தான் பிறந்த குடியைப் புகழால் அழகு செய்பவனும், வெற்றியையுடைய படைகளையுடையவனும், இடி போன்று முழங்கும் வெற்றிமுரசினை யுடையவனும், ஏயர்குடித் தோன்றலுமாகிய உதயணன் என்க. ௧௬௭. வதுவை - திருமணவிழா. நாப்பண் - நடுவே. புதுவது புணர்ந்து - புதிய ஒப்பனையோடு பொருந்தி என்க. ௧௬௮. செலீஇ - சென்று. எந்தையர் என்றது மக்களை; விளி. ௧௬௯. வறிதின் - அணியின்றி. ௧௭௦. அமர் - விருப்பம். ௧௭௧. கம்மத்தொழிலாலியற்றிய பலவேறு அணிகலன்களாலே என்க. ௧௭௨. செம்மல் - சிறப்பு. சாயலையும் கூந்தலையும் உடைய அரிவையர் என்க.

**௧௭௬ - ௧௮௭ : வத்தவர் இறைவன்..........ஒள்ளொலிக் கம்பலும்**

(பொ-ரை.) கள்ளுண்போர் தம்மில்லங்கடோறும் இருந்து, உதயணன் திருமணவிழவின்கண் பிறரெல்லாம் நம்மோடு வரிசை ஒத்தவராய்ப் புகுதலாலே அவரெல்லாம் நம்போல மகிழ்ந்திருக்கும் பொருட்டு இளநீர்க்குலையும், தெங்கின் கள்ளும், தேனாற் சமைத்த கள்ளும், பனங்கள்ளும், பழச்சாற்றால் சமைத்த கள்ளும், கரும்பினாற் சமைத்த கள்ளும், மலரினின்றும் சமைத்த கள்ளும், உக்கிரக் கள்ளும், சிக்கரக் கள்ளும், கஞ்சியாற் சமைத்த கள்ளும், கருப்பஞ்சாறும், தேனும் முதலிய நறிய கள்ளினைக் கொணர்மின்! எமக்கும் வழங்குமின்! இப் பிறர்க்கும் வழங்குமின்! என்று முன்னரே கள்ளுண்டமையானே உண் மகிழ்ந்து கூறுதலால் எழாநின்ற ஆரவாரமும் என்க.

(வி - ம்.) உதயணன் மணவிழாவிற்கு நம்மோடு வரிசையொத்து எல்லோரும் புகுதலாலே அவர்க்கும் தாறு முதலியவற்றைக் கொணர் மின் எமக்கும் பெய்ம்மின் பிறர்க்கும் ஈமின் என்று கள்ளுண்போர் செய்யும் ஆரவாரமும் என்றவாறு.

௧௭௬. வத்தவர் இறைவன் - உதயணன். ௧௭௯. பைங்குலைத் தாறு - இளநீர்க் குலை. ௧௭௭. ஊறல் - கள். தேறல் - கள். ௧௭௮. பெண்ணை-பனை. தாங்குதற்கரிய வெறிதரும் பனங்கள் என்க. அமுதம்: ஆகுபெயர்; கள். ௧௮0. மது, சீதம், வேரி, உக்கிரவூறல், சிக்கரத் தெளியல் என்பனவும் கள் வகைகள் என்க. ௧௮௧. கஞ்சியாலியற்றிய கள். மட்டு மலிநறுங் கள் - தேனை மிகப்பெய்து சமைத்த நறிய கள் என்க. ௧௮௭. கள்ளுண்ணுளர் - களிமாக்கள். ஒள் ஒலி - பொருள் தெளிந்த ஒலி.

[இனி, யானைப்பாகர் செய்யும் ஆரவாரம் கூறுகின்றார்.]

**௧௮௮ - ௧௯௫ : மாற்றுத்தொழில் மன்னர்...........வேழந்தெரிந்து**

(பொ - ரை.) பகைமன்னர் வந்து கலந்த போர்க்களத்தின் கண்ணே, அப் பகைமன்னர் மறவருடைய குடர்களை மாலையாகச் சூட்டிக்கொள்கின்ற மருப்புக்களை உடையனவும், பகைவர் கொடிய படைகளைத் தம்மேல் எறிந்தவிடத்தும், பின்னிடாத தன்மையோடே பழக்கியனவும், மூத்தோர் முதலிய நால்வகையோரையும் தம் பாகரே விரும்பியபொழுதும் இன்னல் செய்ய உடன்படாதனவும், சினமிக்க உள்ளமுடையனவும் ஆகிய யானைகளை ஆராய்ந்துகொண்டு என்க.

(வி - ம்.) ௧௮௮. மாற்றுத் தொழில்மன்னர் - பகையரசர். ஞாட்பு - போர்க்களம். ௧௮௯. கூற்றுத்தொழில் - (மறலிபோன்று) கொல்லும் தொழில். ௧௯௧. தம்படைக்கண் ஒல்காப் பண்பு என்க. அஃதாவது தமது படையினின்றும் ஓடாத வன்மை என்றவாறு. ௧௯௨. நீத்தோர் - துறவியர். மகாஅர் - சிறுவர். ௧௯௩. நூல் - யானை நூல்.

ககசு. பையுள் - துன்பம். ககரு. வேகம் - சினம். தெரிந்து - ஆராய்ந்து எடுத்து.

ககசுசு - உ0ரு : நிரந்தன காட்டிய.........பாகர் கம்பலும்

(பொ - ரை.) தம்முள் அன்புதோன்ற மன முதலியன ஒத்தனவும் முத்துமாலையும் மலர்மாலையும் அணிந்து எழுதுதல் வல்ல கம்மியரானே கொடி முதலியன அழகுண்டாக எழுது வித்துச் சூழி முதலியவற்றையும் அணிந்து, மண்ணுநீர் சுமத்தற்கு அணிசெய்யும் முறைமை அறிந்து பண்ணுறுத்தப் பட்டனவும் உத்தம இலக்கணத்திற்குத் தக உயர்ந்த உயர்ச் சியையுடையனவும் ஆகிய ஆயிரத்தெட்டியானைகளை அரண் மனையினுள்ளே கொணராநின்ற பாகுநூல் பயின்று முதிர்ந்த யானைப்பாகர் எடுக்கும் ஆரவாரமும் என்க.

(வி - ம்.) ககசு. காட்டிய நேயம் தோன்ற நிரந்தன என்க. நிரந்தன - தம்முள் ஒப்புடையன. ககஎ. பார் - பருமை. தார் - மாலை. ககசு. ஐவகை வண்ணம் - வெண்மை கருமை பசுமை செம்மை பொன்மை. கககூ. வடிவு - அழகு. உ00. சூழி - மத்தகஅணி. ஓடை - நெற்றிப்பட்டம். உ0க. ஊழ் - முறைமை. உயர்த்த - உயர்ந்த. உ0உ. மண்ணுநீர் -மங்கல நீராடற்குரிய நன்னீர். பண்ணுமுறை - ஒப்பனை செய்யும் வகை. உ0ங. நாலிரண்டு மிகையா ஆயிரம் என்றது ஆயிரத்தெட்டு என்றவாறு. உ0ச. கோயில் - அரண்மனை. பாகு - பாகர்தொழில்.

[உ0சு முதல் உகரு வரை மங்கல நீர்கொணர்தற்குரிய மகளிர்]

உ0சு - உகசு : மணியரி அடக்கிய......ஒருபிடி நுசுப்பினர்

(பொ - ரை.) அழகாக இசைக்கின்ற இசையினையுடைய பொற்சதங்கையும் சிலம்பும் சிறிய அடியினை மறைத்துக்கிடந்து ஆரவாரிக்கவும், இடை ஒசியவும், பரிய கோங்கரும்பினைப் பழித்து விம்மிய இளைய மெல்லிய முலைகளையும் அம் முலைகள் அகப்பட வட்டமும் வளைவும்பட எழுதிய தொய்யில்நிற மழியும் படி முத்துவடத்தோடே கிடந்து புரளும் பிற அணிகலன்களைச் சுமக்கமாட்டாமல் ஒசிந்து வளையாநின்ற ஒருபிடி யளவிற்றாகிய இடையினையும் உடையரும் என்க.

(வி - ம்.) உ0சு. மணிகளைப் பரலாகத் தம்முள் அடக்கிய கிண்கிணி, மாண்வினைப் பகுவாய்க் கிண்கிணி, அணிமிழற்றும் அரவக் கிண்கிணி, அம் பொற் கிண்கிணி எனத் தனித்தனிக் கூட்டுக. மாண் வினை - மாட்சிமையுடைய தொழிற்றிறமமைந்த. பகுவாய் - பிளவு பட்ட வாய். உ0எ. அணி மிழற்று அரவம் - அழகிதாய் ஒலிக்கும் ஓசை என்க. ஈண்டு அணி - இனிமைப்பண்பின் மேற்று. கிண்கிணி - சதங்கை. உ0கூ. மருங்குல் - இடை. அடி - அடிப்பகுதி. உக0.

கொம்மை-பருமை. ௨௧௨. வட்டவடிவமாகவும் வளைவாகவும் சுண்ணத்தால் எழுதப்பட்ட தொய்யில் என்க. சுண்ணம் - இஃது ஒன்பதுவகை மணிகளும் பொன்னும் சந்தனமும் கற்பூரமும் புழுகினும் பனிநீரினும் நனையவைத்து இடித்ததொரு பொடி. இலேகை - எழுத்து. ஈண்டுத் தொய்யில். முலைமேல் எழுதப்பட்ட என்பார் முலை உட்பட விட்ட என்றார். விட்ட - எழுதிவிட்ட என்க. ௨௧௪. மண்ணிய - கழுவிய. நித்திலவடம் - முத்துவடம். பையென - மெல்லென. ௨௧௫. ஒருபிடி நுசுப்பு - ஒரு கைப்பிடியினகத்தே அடங்குமளவிற்றாகிய இடை.

**௨௧௭ - ௨௨௩ : மண்ணக மருங்கின்........மம்மர் நோக்கினர்**

(பொ - ரை.) மண்ணிடத்தே பற்பல திங்கள் மண்டிலம் உளவாய்த் திரிகின்றன ஆதலால் இஃதொரு அரும்பொருளன்றெனக் கருதி வானம் தன்னைக் கைவிட்டொழியுமோ என்று திங்கள் மண்டிலம் நாணுதற்குக் காரணமான ஒளிவிடுகின்ற மிக அழகிய முகத்தின்கண்ணே தம்முள் ஒன்றைஒன்று எதிர்ப்பனபோன்று பிறழாநின்ற செவ்வரி பரந்த கண்களையும் பெற்றோரிடத்தும் எதிரிட்டு நோக்காததும் மானைப்பழித்த அழகுடையதும் ஆகிய மயக்கமுடைய பார்வையினையும் உடையோரும் என்க.

(வி - ம்.) ௨௧௭. மண்ணுலகத்தே பலமதிகள் உளவாதலால் இஃதொரு அரும்பொருளன்றென வானம் என்னைக் கைவிடுமே என்று எண்ணித் திங்கள்மண்டிலம் நாணுதற்குக் காரணமான வனப்பையும் ஒளியையும் உடைய முகம் என்க.

௨௧௯. வெள்குதல் - நாணுதல்.

௨௨௨. ஈன்றோரையும் எதிரிட்டு நோக்காது என்க. இது நாண மிகுதி கூறிற்று. ௨௨௩. மான் : ஆகுபெயர். மான்நோக்கு எம்மைப் போன்ற அழகுடையன அல்ல என்று பழிகூறும் நோக்கு என்க. மம்மர் - மயக்கம்.

**௨௨௪ - ௨௨௯ : பொன்னணி கொண்ட........வந்தெதிர் கொள்ள**

(பொ - ரை.) பொன்னாலாகிய அணிகலன்களால் அழகு செய்யப்பட்ட சிகழிகையை உடையாரும் கன்னிமைப்பருவத்தினரும் காண்போர் கண்ணை வருத்தும் ஒளியையுடைய பல்வேறு அணிகலன்களை அணிந்தவருமாய் உதயணனுக்கு மங்கல நீர் சுமத்தற்குரிய புண்ணியமுடையீர் வருக என்று தம்மைத் தம் வாயிலிடத்தே சிலர் வந்து எதிர்கொள்ளா நிற்ப என்க.

(வி - ம்.) ௨௨௪. சிகழிகை - கொண்டை. ௨௨௬ - ௭. காண்போர் கண்ணைக் கூசும்படி செய்யும் அணி ஒன்றனை ஒன்றொவ்வா அணி எனத் தனித்தனிக் கூட்டுக. ௨௨௮. போதுமின் - வம்மின். போதுமின் எனச் சிலர்வந்து எதிர்கொள்ள என்க.

**௨௩௦ - ௨௩௫: போர்வை மடக்கார்...........கலந்தன்றால் நகரென்.**

**(பொ - ரை.)** மேலாடையை மடக்காதவராய் வந்து புகா நின்ற அரண்மனைப் பணிமகளிருடைய சிலம்பும் பாடகமும் செய்யும் ஆரவாரமும் இன்னோரன்ன பிறவுமாகிய பன்னூறாயிரம் ஆரவாரங்களும் ஒருங்குசேர்ந்து மணங்கமழும் திருமணவிழாவின்கண் கலந்து பேராரவாரமாயின அச் சயந்திநகரத்தின்கண் என்க.

**(வி - ம்.)** போர்வை மடக்கவேண்டாச் சிறப்புடைமகளிர் என்பார் போர்வை மடக்கார் என்றார். "தானை மடக்கா மான மாந்தர்" என்றார் முன்னரும் (உஞ்சை. ௩௨ - ௫௬.).

௨. கடிக்கம்பலை முற்றிற்று.

---

# ௩. கட்டில் ஏற்றியது

இதன்கண்: சயந்தியின்கண் உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் நடத்தற்குரிய திருமண விழாவிற்குக் கணிமாந்தர் நன்னாள் அறிந்து கூறுதலும், திருமணப் பந்தர் இயற்றுதலும், தெய்வங்கட்கு மடைகொடுத்து வாழ்த்துதலும், தெய்வந் தொழுதலும், செம்முதுபெண்டிரும் கன்னிமகளிரும் கடவுளரை வழிபடுதலும், காஞ்சனை வாசவதத்தையை உதயணன் பக்கலிற் சேர்த்துதலும், உதயணன் திருமணச் சடங்கியற்றுதலும், பள்ளிக்கட்டிலின் மாண்பும், வாசவதத்தையையும் உதயணனையும் சயந்திமாந்தர் பள்ளிக்கட்டிலேற்றி மகிழ்தலும், பிறவும் கூறப்படும்.

கடிகமழ் செல்வங் கலந்த காலை
இடியுறழ் முரசின் ஏயர்பெரு மகற்கும்
பிடிமகிழ் யானைப் பிரச்சோ தனன்மகள்
வடிமலர்த் தடக்கை வாசவ தத்தைக்கும்
ஓருயிர்க் கிழமை ஓரை அளக்கும்
பேரிய லாளர் பிழைப்பிலர் நோக்கி
வழுவில் செந்தீப் பழுதில வேட்கும்
பொழுதுமற் றிதுவெனப் புரையோர்க் குரைப்ப
அறுதொழில் முத்தீ அருந்துறை போகிய
மறைநவில் நாவின் மரபியல் அந்தணன்
பல்பூம் பந்தருட் செல்வஞ் சிறக்கும்
இருநிலத் திலக்கணம் இயற்பட நாடி
வெண்மணல் நிரப்பங் கோளீஇக் கண்ணுறப்
புண்ணியப் பலாசின் கண்ணிறை சமிதை
முக்குழிக் கூட்டத் துட்பட ஓக்கி
ஆற்றுச் செந்தீ அமைத்தனன் மேற்கோள
ஐஒன்ப தின்வகைத் தெய்வ நிலைஇய
கைபுனை வனப்பிற் கான்முதல் தோறும்
ஆரணங் காகிய அணிமுளை அகல்வாய்ப்
பூரண பொற்குடம் பொலிய இரீஇ
வெண்மணன் ஞெமிரிய தண்ணிழற் பந்தருள்
ஐஇய வாசஆன் நெய்யோடு கலந்த

ஐவகை உணவோடு குய்வளங் கொளீஇ
நறிய வாகிய அறுசுவை அடிசிற்
பெருஞ்சோற் றமலை பரந்துபலர் மிசையும்
மிச்சில் எய்தா உட்குவர் ஒருசிறை
........விசை அம்மிக் குணதிசைக் கோணத்(து)
ஈடமை பீடிகை பாடுபெற இருந்த
பொன்னயி ராணி முன்வயிற் பேணிப்
பன்னிய பனுவற் பார்ப்பன முதுமகன்
அந்தண் ஆவிரை அலரும் அறுகையும்
நந்தி வட்டமும் இடைஇடை வலந்த
கோல மாலை நாற்றி வானத்(து)
அருந்ததி அரிவையோ டாணிகற் பரவும்
பொருந்துமொழிப் புறநிலை புணர்ந்துபலர் வாழ்த்தி
நூன்முறை படைத்த நான்முகக் கடவுள்
தாண்முதல் தானத்துத் தகைபெற இரீஇப்
பாலுலை வெந்த வாலவிழ்க் கலவையும்
தேனுலை வெந்த தூநிறத் துழவையும்
புளியுலை வெந்த பொன்னிறப் புழுக்கலும்
கரும்புலை வெந்த கன்னற் றுழவையும்
நெய்யுலை வெந்த மைந்நிறப் புழுக்கொடு
பொன்னகல் மணியகல் செப்பகல் வெள்ளி
ஒண்ணிறப் போனக மண்ணக மலிர
அரிவையர் அடுமடை அமிழ்துகொண் டோச்சிப்
பஞ்ச வாசமொடு பாகுவலத் திரீஇ
அஞ்செஞ் சாந்தமொடு மஞ்சள் நீவி
இருப்பகல் நிறைந்த நெருப்புநிறை சுழற்றித்
தேவர் தூம மேவர எடுப்பி
மலையினீர் ஆயினு மண்ணினீர் ஆயினும்
அலைதிரைப் பௌவத் தகத்தினீர் ஆயினும்
விசும்பினீர் ஆயினும் விரும்பு வந்துநம்
பசும்பொன் உலகம் பற்றுவிட் டொழிந்து
குடைநிழற் றானைக் கொற்றவன் மடமகள்
மடையமை[illegible] துண்டு மங்கலந் தம்மென
ஒப்பக் கூறிச் செப்புவனர் அளிப்பக்

கன்னி மகளிர் துன்னுவனர் சூழ
நான்முகக் கடவுளொடு தாண்முதல் தானம்
அன்னத் தொழுதியின் மென்மெல வலங்கொண்(டு)
அம்மென் சாயற் செம்முது பெண்டிர்
உழுந்துஞ் சாலியும் உப்பு மலரும்
பசுங்கிளிச் சிறையெனப் பக்கம் நிறைத்த
பாகுஞ் சாந்தமும் போகமொடு புணர்ந்த
மங்கல மரபின அங்கையுள் அடக்கிக்
கொழுமுகைச் செவ்விரல் போதெனக் கூப்பி
எழுமுறை இறைஞ்சுகென் றேத்துவனர் காட்ட
ஐதேந் தல்குலர் செய்கையிற் றிரியா
மடைத்தொழில் கழிந்தபி னடைப்பட நாட்டி
அரம்போழ் அவ்வளை அணிந்த முன்கைச்
சுருங்காச் சுடரொளிச் செம்பொற் பட்டம்
சூளா மணியொடு துளங்குகடை துயல்வரும்
புல்லகம் பொருந்திய மெல்லென் ஓதிப்
பொன்னணி மாலை பொலிந்த பூமுடீஇ
வண்ணப் பூமுடி வாசவ தத்தையைச்
செண்ணக் காஞ்சனை செவ்விதின் தழீஇ
இலக்கந் திரியா தியற்பட இரீஇ
நலத்தகை மன்னவன் நட்பொடு புணர்த்த
புண்ணியப் புறநடைப் பண்ணமை இருக்கையன்
உறுவரை உதயத் துச்சிமுக நோக்கி
அமைதிக் கொப்ப அளந்துகூட் டமைத்த
சமிதைக் கிரிகை சால்புளி கழிப்பி
மந்திர விழுநெறித் தந்திரம் பிழையாது
துடுப்பிற் றேய்த்த சேதா நறுநெய்
அடுத்த செந்தீ அங்கழல் ஆர்த்திப்
பைம்பொற் கிண்கிணி பரட்டுமிசை ஆர்க்கும்
செந்தளிர்ச் சீறடி செவ்வனம் பற்றிப்
போகமுங் கற்பும் புணர்ந்துடன் நிற்கென
ஆகுபொருள் கூறி அம்மிமுதல் உறீஇ
நன்னெய் தீட்டிய செம்மலர் அங்கைப்
பொம்மல் வெண்பொரி பொலியப் பெய்தபின்



நன்னிலை உலகினுள் நாவல் போலவும்
பொன்னணி நெடுமலை போலவும் பொழில்வயின்
மன்னுக இவரெனத் தன்னெறி பிழையான்
விதியிற் கூறிய விளங்கிழை வேட்கும்
அதிரா நெறியின் அத்தொழில் கழிந்தபின்
மதியின் அன்ன வாண்முகம் பொலிய
ஒடுகொடி மூக்கின் ஊடுபொழ்ந் தொன்றுய்க்
கூடுதல் வலித்த கொள்கைய போலப்
பொருது பொங்குலாம் போதரித் தடங்கண்
அமிழ்துசேர்ந் தனஅக விதழ்நாண் இறக்கமொடு
பிறந்தஇற் பெருங்கிளை நிறைந்தொருங் கீண்டப்
பால குமரர் தோள்புகன் றெடுப்ப
நாடு நகரமுங் கூடுதற் கருளி
யாயு மெந்தையுந் தீமுன் னின்று
வாயிற் கூடுதல் வராதிவண் வந்தென
வலிபுணர் வதுவைக்குச் சுளியுநள் போல
நடத்தல் தேற்ரு மடத்தகை மாதரை
வளைபொலி முன்கை வருந்தப் பற்றித்
தளையவிழ் தாரோன் வலமுறை வந்து
மறுவில் காதன் மக்களைப் பெறுகென
முறைமையிற் பிழையாது முகிழ்விரல் பற்றித்
தகாஅக் காலந் தலைவரும் எனினும்
பகாஅக் காதலொடு பத்திமை ...........
செஞ்சுடர் போன்ற அங்குலி நுழையா
வெஞ்சுடர் வீரன் நெஞ்சுமுதல் நீவித்
தென்மருங்கு மடுத்த தீர்த்தப் புன்மிசை
மென்மருங் கெழிலியை மெல்லென நடாஅய்
வதுவைத் தானம் பொதுவந் தொன்றி
அந்த ணாளர் ஆசிடை கூற
வெந்திறல் வேந்தன் பைந்தொடி யொடும்
உத்தர கோணத் தத்தக அமைத்த
ஏற்றுரி அதன்மிசை ஆற்றுளி இருந்து
படுசுடர்ச் செக்கர்ப் பசலை தீர
விடுசுடர் மதியமொடு வெண்மீன் இவர்ந்த

வடபான் மருங்கிற் சுடர்மீக் கூரிய
கற்புடை விழுமீன் காணக் காட்டிப்
பொற்றொடி நுதன்மிசைப் புனைவிரல் கூப்பி
மன்னிய உலகினுள் நின்னியல் பாக
என்வயின் அருளென மும்முறை இறைஞ்சுவித்(து)
எதிர்த்த விரதமோ டியல்பிற் பிழையாது
சதுர்த்தி இருந்து கதிர்த்த காப்பொடு
மெய்ம்முதல் திரியாது வேண்டுங் கிரிகையிற்
கைம்முதற் கேண்மை கழுமிக் கழிந்தபின்,
மருப்பினும் பொன்னினும் மணியினும் புனைந்த
திருத்தகு திண்கால் திருநிலை பெற்ற
வெண்பூம் பட்டின் திண்பிணி அமைந்த
பள்ளிக் கட்டில் வெள்ளிதின் விரிந்த
கோடுயர் பல்படை சேடுறச் சேர்த்தி
வயிரமும் வெள்ளியும் பவழமும் பொன்னும்
மணியு முத்தும் அணிபெறப் பரப்பி
அடிநிலை அமைத்து முடிநிலை காறும்
தாம நாற்றிக் காமங் குயின்ற
கோலச் செய்கை வாலணிப் பொலிந்த
எட்டி காவிதிப் பட்டந் தாங்கிய
மயிலியன் மாதர் இயல்பிற் படுத்த
கட்டின் மீமிசைக் கட்டலர் கமழும்
ஒண்டார் மார்பின் உதயண குமரற்குத்
தண்டாக் காதலொடு தக்கவை அறிந்து
விண்ணவர் கிழவன் வீற்றிடங் கடுப்ப
மண்ணக மன்னர் மரபறிந் தியற்ற
அவ்வளைப் பணைத்தோள் அதிநா கரிகியைக்
கைவயிற் பிழையாது காஞ்சனை தழீஇ
உண்மை யுணரா நுண்மைப் போர்வை யிவள்
பெண்மை காணினே பிழைப்பிலன் யானெனத்
தன்னொளி சமழ்த்திவள் பெண்ணொளி புகற்ற
மண்ணார் டணிப்பூண் மாதரை இரீஇயபின்
கண்ணார் குருசிலைக் கவின்பெற ஏற்றித்
தகைமலர்த் தாரோன் தடக்கை பற்றியவள்

முகைமலர்க் கோதை முடிமுதல் தீட்டிச்
செம்போன் தால மலிரப் பெய்த
மங்கல அயினி மரபுளி உறீஇ
ஒல்லென் சும்மையொடு பல்வளந் தரூஉம்
உருமண் ணுவாவின் பெருநகர் மாந்தர்
ஆசில் செங்கோல் அவந்தியன் மடமகள்
வாசவ தத்தையொடு வத்தவர் இறைவனை
முட்டில் செல்வமொடு முறையிற் பிழையாது
கட்டிலேற் றினராற் கருதியது முடித்தேன்.

---

## ௩. கட்டிலேற்றியது

*அஃதாவது—உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் திருமணச் சடங்குகள் நிகழ்வித்துப் பின்னர் அவரைப் பள்ளிக் கட்டிலில் ஏற்றிய தனைக் கூறும் பகுதி என்றவாறு.*

### உரை

[க. முதல் அ: வரையில் கணிகள் உதயணனுக்கும் வாசவதத் தைக்கும் திருமணச் சடங்கு நிகழ்த்தற்குரிய நல்ல முழுத்தத்தை ஆராய்ந்து கூறுதல் கூறப்படும்.]

க - அ: கடிகமழ் செல்வங்........புரையோர்க் குரைப்ப

(பொ - ரை.) *இங்ஙனமாகத் திருமணம் பற்றிய மகிழ்ச்சி ஆரவாரம் சயந்தியின்கண் எழுந்தபொழுது, நல்ல முழுத்தத் தைக் கணித்தறியும் சிறந்த கணிகள், நாள் கோள் முதலிய வற்றை விழிப்புடன் ஆராய்ந்து, உதயணனுக்கும் வாசவதத் தைக்கும் உயிர் ஒன்றென்னும் உரிமையைத்தரும் திருமண வேள்வி வேட்டற்கேற்ற நல்ல முழுத்தம் இஃதென்று பெரி யோர்க்கு உணர்த்தாநிற்ப என்க.*

(வி - ம்.) க. கடி கமழ் செல்வம் - மணங் கமழ்தற்குக் காரணமான திருமண விழா வின்பம் என்க. உ. இடியுறும் முரசு - இடிபோல முழங்கும் முரசு. ஏயர் பெருமகன் - உதயணன். ௩. பிடியோடு இன்புறும் களிற்று யானைகளை மிகுதியாகவுடைய பிரச்சோதனன் மகள் என்க. இங்ஙனம் கூறியது இக் காதை வாசவதத்தையோடு உதயணன் கூடி மகிழ்தலை உணர்த்துவதென்னும் நினைவினால் என்க.

௪. திருமணச் சடங்கு கை பிடித்தலே ஆகலின், 'வடிமலர்த் தடக்கை' எனக் கையினை விதந்தெடுத்தோதினார்.

௬. ஒருயிர்க் கிழமை - உயிரை ஒன்றுக்கும் உரிமை. ஓரை - முழுத்தம். ௯. பேரியலாளர் - பெரிய இலக்கணமறிந்த கணிமக்கள். புரையோர் - உயர்ந்தோர்.

[௯ - ௩௭. திருமணப்பந்தரியல்பு]

௯ - ௧௬ : அறுதொழிலின் முந்தீ........அமைத்தனன் மேற்கொள

(பொ - ரை.) அறுதொழிலையுடையவனும் அவற்றுள் வேள்வித் தொழிலின்கண் சிறப்புடையவனும், இடையறாது வேதத்தைப்பயின்றடிப்பட்ட செந்நாவுடையவனும், இருமரபும் தூயவனும் ஆகிய பார்ப்பனன் பூவானியற்றிய பந்தரிடத்தே செல்வம் பெருகுதற்குரிய நல்லிலக்கணமமைந்த நிலத்தை இலக்கணத்தானே ஆராய்ந்து அந்நிலத்தில் வெள்ளிய மணலைப்பரப்பி முக்குழியமைத்து அவற்றின்கண் சமிதைகளை யிட்டு அவியாத வேள்வித்தியை வளர்த்து மேற்கொண்டும் என்க.

(வி - ம்.) ௯. அறுதொழில் : பார்ப்பனர்க்குரிய ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் என்பன. முத்தீ : ஆகவனீயம், தெக்கணுக்கினி, காருகபத்தியம் என்பன. அவை நாற்கோணமும் முக் கோணமும் வில் வடிவமாயும் உள்ளன என்ப.

௧0. மரபியல் அந்தணன் என்றது தாய் மரபும் தந்தை மரபுமாகிய இருமரபானும் தூய அந்தணன் என்றவாறு. ௧௩. நிரப் பம் கொளீஇ - நிரவி; சமஞ்செய்தென்க. ௧௪. பலாசு - புரசமரம். சமிதை - வேள்வித்தியிலிடும் விறகு. பலாசு முதலிய சமிதை என்க.

௧௫. முக்குழி - மூன்றாகிய வேள்வித்திக்குழிகள்; யாக குண்டம். ஓக்கி - செலுத்தி; போகட்டென்க. ௧௬. ஆற்ரு - அவித்தற் கியலாத. அமைத்தனன் : முற்றெச்சம்; அமைத்தென்க.

௧௭ - ௨௬ ; ஐ ஒன்ப தின்வகை........உட்குவர் ஒருசிறை

(பொ - ரை.) நாற்பத்தைந்துவகைத் தெய்வங்களையும் மந் திரத்தானே நிலைபெறச் செய்த ஒப்பனையழகுடைய காலிடந் தோறும் தெய்வத்தன்மையுடைய கூலமுளைகளையுடைய அகலி டத்தே பொன்னாலாகிய நிறைகுடங்களை அழகுற அமைத்து, மணல் பரப்பப்பட்ட அப்பந்தரினகத்தே நெய்யொடு கலந்த ஐந்துவகைப்பட்ட சிற்றுண்டிகளோடே தாளிப்பு வளமுடைய நறிய அறுசுவை அடிசிலாகிய பெருஞ்சோற்றுத்திரளையை அந்தணர் பலரும் பரவ இருந்துண்ணுநிற்பவும் எஞ்சிய உணவுப்பொருள் குவித்துக்கிடக்கும் ஒருபக்கத்திலே என்க.

(வி - ம்.) ௧௮. நிலைஇய - நிலைக்கச் செய்த. மந்திரத்தானே தெய் வங்களை நிலைக்கச் செய்த கால் என்க. கால் - பந்தர்க்கால். ௧௭. கை புனைவனப்பு - ஒப்பனை செய்யப்பட்ட அழகு. ௨0. இரீஇ - இருத்தி; வைத்தென்க. ௨௧. ஞெமிரிய - பரப்பிய. ௨௨. ஐஇய வாசம் -

வியத்தகுமணம். ஆனெய் - பசு நெய், வான் என்று கொண்டால் தூயதூஉமாம். உடு. ஐவகையுணவு. "கடிப்பன, நக்குவன, பருகுவன, மெல்லுவன, விழுங்குவன" என்னும் ஐந்துவகையவாகிய உண்டிகள் என்க. குய் - தாளிப்பு. உகூ. அமலை - திரளை; கட்டி. பலர் என்றது வேள்வி செய்யும் அந்தணரை. உசு. எச்சில் - எஞ்சிய பொருள். உட்குவரு எனற்பாலது உட்குவர் எனநின்றது. பொருளிருக்கு மிடமாகலின் பிறர் நுழைதற்கு அஞ்சுகின்ற ஒருபக்கம் என்க.

உஎ - ௩எ :...விசை அம்மிக் குணதிசை........தகைபெற இரீஇ

(பொ - ரை.) முற்கூறப்பட்ட பார்ப்பன முதுமகன் அம்மியிடப்பட்ட கிழ்த்திசை மூலையில் பெருமையுடையதொரு மேடையின்மேல் இருந்த அயிராணிக்கு முன்னர் வணங்கி ஆவிரை மலர் முதலியவற்றை யிடையிடையே வைத்துத் தொடுத்த அழகிய மாலையினைத் தூக்கி அருந்ததியையும் வதிட்டமுனிவனையும் பொருந்து மொழிகளாலே வாழ்த்தாநிற்கும் அந்தணர் பலரும் வந்து மணமக்களைப் புறநிலையாகவும் வாழ்த்தாநிற்ப வேதவொழுக்கத்தைப் படைத்த நான்முகனுக்குரிய இடத்திலே இருந்து என்க.

(வி - ம்.) உஎ. குணதிசைக் கோண மென்றது வடகிழக்கு மூலையினை. உஅ. ஈடு - பெருமை. பீடிகை - மேடை. பாடு - சிறப்பு. ௩0. அயிராணி - அரசாணி. ௩க. அந்தண் ஆவிரையலர் - அழகிய குளிர்ந்த ஆவிரம் பூ. அறுகை - அறுகம்புல். ௩உ. நந்திவட்டம் - நந்தியாவட்டமலர். வலந்த - கட்டிய. ௩௩. கோல மாலை - அழகிய மாலை. ஆணிகன் - வசிட்ட முனிவன். ௩ரு. பொருந்து மொழியாலே அரிவையொடு ஆணிகற்பரவும் பார்ப்பனர் பலர் புறநிலை வாழ்த்தாக வாசவதத்தையை வாழ்த்தாநிற்ப என்க. வாழ்த்தி என்பதனைச் செயவெனெச்ச மாக்குக. புறநிலை வாழ்த்தாவது.

"வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிக"

என்று வாழ்த்துவது என்க. பார்ப்பன முதுமகன் பேணிநாற்றிப் பலர் வாழ்த்தத் தகைபெற இரீஇ எனக் கூட்டுக. ௩எ. இரீஇ-இருந்தென்க.

௩அ - சரு : பாலுலை வெந்த........அமிழ்துகொண்டோச்சி

(பொ - ரை) பாலுலை முதலிய உலைகளிலே வெந்த கலவை முதலியவற்றைப் பொன் முதலியவற்றாற் செய்யப்பட்ட அகல்கள் நிறையும்படி மகளிர் சமைத்துத்தந்த கடவுட்பலியாகிய உணவினைப்படைத்து என்க.

(வி - ம்.) வால் அவிழ்க் கலவை - வெள்ளிய சோற்றோடு கலந்த கலவை. ௩அ. தேனுலை - தேனை நீராக வைத்த உலை. தூநிறம் - வெண்ணிறம். துழவை - துடுப்பால் துழாவிச் சமைத்த உணவு.

சo. புளிநீரில் வெந்த பொன்னிறமான புளிஞ்சோறு என்க. சக. கன்னற்றுமுவை - கருப்பஞ்சாற்றிற் சமைத்த அக்காரவடிசில். சஉ. மைந்நிறப்புழுக்கு - கருநிற உணவு.

சங. பொன்னாலும் மணியாலும் செம்பாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட அகல்கள் என்க. சச. போனகம் - உணவு. மலிர - நிறையும்படி. மடை - தெய்வத்திற்கிடும் உணவுப் பலி. அமிழ்து: ஆகுபெயர். சரு. ஒச்சி - கொடுத்தென்க.

### [தெய்வங்களை வழிபடுதல்]

### சசு - ருசு: பஞ்சவாசமொடு........செப்புவனர் அளிப்ப

(பொ - ரை.) ஐவகை மணப்பொருள்களோடே வெற்றிலையையும் வலப்பக்கத்தே வைத்து சந்தனத்தோடே மஞ்சளையும் தடவி இரும்பாற் செய்த அகலிடத்தே நிறைக்கப்பட்ட நெருப்பு நிறைகளைச்சுற்றி நறும்புகை கொடுத்து, "தேவீர்! நீயிர் நுமக்குரிய பசும்பொன் உலகைவிட்டு மலையிடத்திருப்பினும், அல்லது நிலத்திடத்தே உறையினும், அல்லது கடலிடத்தே உறையினும், அல்லது வானிடத்தே வதியினும், யாண்டிருப்பினும், அவற்றைவிட்டுப் பிரச்சோதனமன்னன் மடமகளாகிய வாசவதத்தை நுமக்குத்தரும் இப்பலியினை விரும்பி ஈண்டு வந்து இவற்றை நுகர்ந்து இவட்கு ஆக்கமளியுங்கோள்" என அனைவரும் ஒருசேரக்கூறி வழங்காநிற்ப என்க.

(வி - ம்.) சசு. பஞ்சவாசம்-"தக்கோலம் ஏலம் இலவங்கம் சாதிக்காய் கப்பூரம்" என்னுமிவை. பாகு - வெற்றிலைபாக்கு. சஅ. நிறை: ஆகுபெயர். சஅ. இருப்பகலின் நிறைந்த நெருப்பின்கண் மணப்பொருள்களையிட்டு நறுமணப் புகை எடுப்பி என்றவாறு. சகூ. தேவர் தூமம் - தேவர்க்கெடுக்கும் நறுமணப்புகை. ருo. மலையினீர் - மலையிடத்துறைவிர்! ருக. பௌவம் - கடல். ருஉ. விரும்புபு - விரும்பி. ருங. நுமக்குரிய பசும் பொன்னுலகத்தை விட்டு மலை முதலிய இடங்களில் உறைவீராயினும் என இயைக்க. ருஇ. மடை - கடவுட் பலி (நைவேத்தியம்) ருசு. தம்மென - தாருங்கோள் என்று.

### [முதுபெண்டிரும் கன்னி மகளிரும் தெய்வந்தொழுதல்.]

### ருஎ - சுஅ: கன்னி மகளிர்............நாட்டி

(பொ - ரை.) பந்தற்கால்கடோறும் நான்முகக் கடவுள் முதலிய தெய்வங்கட்கமைந்த இடங்களைச் செம்முது பெண்டிர் தம்மைக் கன்னிமகளிர் நெருங்கி அன்னப்பறவையின் கூட்டம் போன்று சூழாநிற்ப மென்மெல வலம் வந்து உழுந்தும் நெல்லும் உப்பும் மலரும் வெற்றிலைச் சுருளும் சந்தனமும் ஆகிய நுகர்ச்சிக்கமைந்த மங்கலப் பொருள்களைத் தமது அங்கையில்

அடக்கிக் கொண்டு காந்தள் இதழ் போன்ற தம் செவ்விய விரல்களைக் குவிந்த மொட்டுப்போலக் குவித்து "எல்லீரும் இங்ஙனம் ஏழுமுறை வணங்குமின்" என உழுந்து முதலியவற்றைத் தூவி வணங்கிக் காட்டாநிற்ப அக்கன்னி மகளிர் அவ்வணங்குதற்றொழிலில் பிறழாமல் வணங்கித் தெய்வங்கட்கு மடைகொடுத்த பின்னர் என்க.

(வி-ம்.) முதுபெண்டிர் தம்மைக் கன்னி மகளிர் சூழத் தானும் வலங்கொண்டு கையுள் அடக்கிக் கூப்பி இறைஞ்சுகென்று ஏத்திக் காட்ட அவரும் ஏத்த இங்ஙனமாக மடைத் தொழில் கழிந்த பின்னர் என்றவாறு.

ருஎ. துன்னுவனர் : முற்றெச்சம். துன்னி - நெருங்கி என்க.

சஅ. நான்முகக் கடவுளோடு பிற தெய்வங்கள் உறையும் தாள் முதல் தானம். தாள் - பந்தர்க்கால். "ஐயொன்பதின் வகைத் தெய்வம் நிலைஇய கைபுனை வனப்பிற் கான் முதல்" என்றார், (கஎ-அ) முன்னரும்.

ருக. அன்னத் தொழுதி - அன்னப்பறவைக் கூட்டம். இது கன்னி மகளிர் கூட்டத்திற்கு உவமை. சுO. அம்மென் சாயல் செம்முது பெண்டிர் என்றது சுமங்கலியராகிய பேரிளம் பெண்டிரை. சுஉ. பசுங்கிளிச் சிறை வெற்றிலைச் சுருட்கு உவமை என்க. சுரு. முகை என்றது காந்தளரும்பினை. போது - குவிந்த மலர் என்க. சுசு. ஏத்துவனர் : முற்றெச்சம்; ஏத்தி என்க. ஐது - மெல்லிதாகிய. சுஅ- மடைத்தொழில் - தெய்வத்திற்கு மடை கொடுக்கும் தொழில் என்க.

**[சுஎ - எஎ. காஞ்சனை வாசவதத்தையை உதயணன்பால் இருக்கச் செய்தல்.]**

**சுகூ - எஎ : அரம்போழ் அவ்வளை............நட்பொடு புணர்த்த**

**(பொ-ரை.)** அழகிய வளையலணியப்பட்ட முன்கையினையும் சூளாமணியும் பொன்பட்டமும் புல்லகமுமாகிய தலைக்கோலங்கள் பொருந்திய கூந்தலையும் அதனைப் பொன்மாலையோடே மலர்மாலையையும் இட்டு அணிந்து அழகிய கொண்டையாக முடித்த முடியினையும் உடைய வாசவதத்தையைக் காஞ்சனை என்பாள் செம்மையுறத் தழுவி அழைத்து வந்து குறிப்பிடம் பிறழாமல் பண்புற இருத்திப் பேரழகுடைய உதயணனது கேண்மையோடு கூட்டாநிற்ப என்க.

(வி-ம்.) சுகூ. அரம்-வாளரம்; ஈர்வாள். அரத்தாற் பிளக்கப் பட்ட அழகிய வளை என்க. எO. சுருங்கா - மழுங்காத என்க. பட்டம் - ஒருவகைத் தலைக்கோலம். எக. சூளாமணி - முடிமணி, அசைகின்ற இறுதிப்பகுதியையுடைய புல்லகம் என்க. எஉ. புல்லகம் - தென்பல்லி வடபல்லி என்னும் தலைக்கோலம் என்பர் அடியார்க்கு நல்லார் (சிலப் - சு : சுOசு-அ. உரை). ஓதி - கூந்தல். எங. முடீஇ - முடித்து. எரு. சென்னக் காஞ்சனை - ஒப்பனை மகளாகிய காஞ்சனை

என்பாள் என்க. செண்ணம் - ஒப்பனை. எசு. இலக்கம் - குறிப்பிட்ட இடம். என்றது மணமகளை இருக்கச்செய்யும் இடம் என்றவாறு. இயற்பட - பன்புறும்படி. இரீஇ - இருக்கச் செய்து. எஎ. நலத்தகை - பேரழகு. மன்னவன் - உதயணன்.

[எஎ - கஎஈ. உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் திருமணச் சடங்கு நிகழ்வித்தல்.]

எஅ - கூ0 : புண்ணியப்புறநடை........பொலியப் பெய்தபின்.

(பொ-ரை.) கால்களோடே ஒப்பனை பொருந்திய புண்ணிய மணையிடத்தே இருந்த அப் பார்ப்பன முதுமகன் கிழ்த்திசையை நோக்கித் தகுதிக்கேற்ப அளந்து கூட்டி அமைக்கப் பெற்ற சமிதைத் தொழிலை நிறைவுடனே செய்து நூலிற் கூறிய முறை தப்பாதபடி ஓதாநின்ற சிறந்த மந்திர வழிப்படி அகப்பையிற் றேய்த்த ஆன் நெய்யினை வேள்வித்தியின்கட் பெய்து போகமும் கற்பும் ஒருங்கே கூடி நிலை நிற்பனவாக என்று அச்சடங்கினது குறிப்புப் பொருளைக் கூறிப் பின்னர், உதயணன் கையாலே வாசவதத்தையின் சிற்றடியைப் பற்றுவித்து அம்மியின் மேல் வைப்பித்து நல்ல நெய்பூசப்பட்ட அந்த மணமக்களின் அங்கைகளானே மங்கலப் பொரியினை அவ்வேள்வித்தீ பொலிவுறும்படி பெய்வித்த பின்னர் என்க.

(வி - ம்.) எஎ. புறம் நடைப்பன் அமை புண்ணிய இருக்கையன் என மாறுக. புறம் என்றது மணவிருக்கையின் பக்கத்தே என்றவாறு நடையிருக்கை-கால்களோடு கூடிய தவிசு என்றவாறு. பன்-ஒப்பனை. இருக்கை என்றது, ஈண்டு வேள்வி செய்யும் அந்தணன் இருக்கும் மணைப் பலகையினை. வேள்வி மணையாகலின் புண்ணிய இருக்கை எனப் பட்டது.

எகூ. உதயத்துறுவரை எனமாறி உதயகிரியின் உச்சியை நோக்கி அளந்து அமைத்த தொழில் எனினுமாம். அ0. அமைதி-இடவமைதி. அக. சமிதைக் கிரிகை - வேள்வித்தீவளர்க்கும் தொழில். கழிப்பி - கழித்து. அஉ. தந்திரம் - நூல் அஈ. துடுப்பு - அகப்பை. சேதா-சிவப்புப் பசு. அச. ஆர்த்தி - நுகர்வித்து. அரு. பரட்டுமிசை கிண் கிணி ஆர்க்கும் அடி தளிரடி, சிறடி எனத் தனித் தனிக் கூட்டுக. அசு. பற்றி என்னும் தன் வினையைப் பற்றுவித்து எனப் பிறவினையாக்குக. உதயணனுற் பற்றுவித்தென்க. அஅ. உறீஇ-வைப்பித்து. கூ0. பொம்மல் - பருத்தல். தீப்பொலிவுறும்படி பெய்தபின் என்க.

கூக - கூரு : நன்னிலை உலகினுள்..........அந்தொழில் கழிந்தபின்.

(பொ - ரை.) தனது நெறியிற்றப்பாத பார்ப்பன முதுமகன், இவ்வுலகின்கண் மேருவின் பக்கலில் நிற்கும் நாவன் மரம் போலவும் அம்மேருமலை போலவும் பிரிவின்றி நீடூழி நிலைபெற்று வாழ்க என்று வாழ்த்தாநிற்ப நூல் விதியிலே கூறப்பட்ட திருமணச் சடங்குமுறை பிறழாமல் செய்யாநிற்ப அத்தொழின் முடிந்த பின்னர் என்க.

(வி - ம்.) நன்னிலையுலகம் என்றது சம்புத் தீவை என்க. நாவல், இது மேருமலையின் பக்கலில் அழிவின்றி நிற்குமொருமரம் என்ப. இம் மரமுண்மையின் இத்தீவு சம்புத்தீவு என்றும், நாவலம் பொழில் என்றும் வழங்கப்படுகின்றது. மேருவும் நாவன்மரமும் நீடூழி பிரிவின்றி நிலைத்திருப்பது போன்று நிலைத்திடுக என்று வாழ்த்தியபடியாம்.

கக. மிலேச்சர் முதலியோர் வாழ்கின்ற ஏனைத் தீவுகள் போன்றன்றி உயிர்கள் அறமுதலிய உறுதிப் பொருளினை உணர்ந்து தவநெறி நின்று வீடு பெறுதற்கிடமாகத் திகழ்தலின் நாவலம்பொழில் நன்னிலையுலகம் எனப்பட்டது. கூஉ. பொழில் - நாவலம் பொழில். கூச. விளங்கிழை: அன்மொழித் தொகை வாசவதத்தை என்க. வேட்கும் - திருமண வேள்வி செய்யும் (அத்தொழில் முடிந்த பின்னர்) என்க.

கூசு - கOஎ : மதியின் அன்ன........மடத்தகை மாதரை.

(பொ - ரை.) திங்கள்போன்று ஒளிவிடும் முகம்பொலிய இருந்து ஒழுகிநுற் போன்று நீண்ட மூக்கினூடே பிளந்து ஒன்றனை ஒன்று கூடும் கோட்பாடுடையன போன்று ஒன்றனை ஒன்று பொருது வந்து உலாவாநிற்பனவும் தாமரைப்போதினை ஒப்பனவும் அத்தாமரையின் அகவிதழ் நாணுதற்குக் காரணமான மென்மையினை உடையனவும், அமிழ்தத்தைப்பெய்து வைத்தாற்போன்ற அருள் நிரம்பப் பெற்றனவும், அகன்றனவும் செவ்வரி கருவரியோடியனவும் ஆகிய கண்களையுடையவளும், தான் பிறந்த இல்லத்திற்குரிய சுற்றத்தார் வந்து நிறையவும் பாலகுமாரர் விரும்பி மைத்துனமுறைமை காரணமாக உதயணன் தோள்மாலையை எடுத்துத் தந்தோளிலே புனையா நிற்பவும் நாட்டிலுள்ளோரும் நகரப்பெருமக்களும் வந்து கூடும்படி அருள் செய்து தன் தாயுந் தந்தையும் தீ முன்னர் நின்று நீருடன் கொடுப்பவும், கூடுதல் நிகழும்படி வாராமல் இவ்வதுவை இங்ஙனே இவ்விடத்தே வந்தது என்று கருதி வலிதாகக் கைபற்றிப் புணர்தற்கிடமான இவ் வதுவைக்கு உடன்படாமல் சினப்பவள் போன்று தாழ்ச்சியோடே நடக்க அறியாமல் தடுமாறி நடக்கின்றவளுமாகிய வாசவதத்தையை என்க.

(வி - ம்.) கூசு. மதியின் அன்ன - திங்களைப்போன்ற; முகம் பொலிய இருந்து என்க. கூஎ. "ஒழுகு பொற்கொடி மூக்கும் உருப்பசியை உருக்குமே என்றார் தேவரும்" (சீவக. கசுடு) கூஅ. ஊடு போழ்ந்து - ஊடே துளைத்து. கூகூ. போது - தாமரைமலர். கOO. அமிழ்தம் - அருளுக்கு உவமை. அத்தாமரையின் அகவிதழ் நாணுதற்குக் காரணமான மென்மையையும் என்க. இறக்கம் - தளர்ச்சி.

கOக. பிறந்த இல் - தான் பிறந்த பிரச்சோதனன் இல்லம்.

கOஉ. பாலகுமரர் - பிரச்சோதனன் மக்கள். பாலகுமரர் புகன்று தோள் எடுப்ப என மாறுக. புகன்று - விரும்பி. தோள் எடுப்ப என்றது மைத்துனர் மணமகன் தோளிற் றந்தோள் மாலையை எடுத்தணிதலாகியதொரு சடங்கினைச் செய்ய என்றவாறு.

௧௦௪. என் தாயுந்தந்தையும் தி முன்னர் நின்று நீருடன் அளித்தல் வாயிலாய் வாராமல் இம்மணம் இங்ஙனம் வலிதிற்பற்றிப் புணரும் மணமாய் வந்தது என்று அதற்கு உடன்படாது சினப்பவள் போன்று தடுமாறி நடப்பவளாகிய வாசவதத்தையை என்க.

௧௦௫. வலிபுணர்வதுவை - வலிந்து பற்றிச்செய்யும் திருமணம். சுளியுநள் - சினப்பவள். நாணத்தாலே நடக்கமாட்டாதாட்குக் கவி ஒருகாரணம் கற்பித்தபடியாம். மாதர் - வாசவதத்தை.

௧௦௮ - ௧௧௯ : வலைபொலி முன்கை..........ஆசிடை கூற.

(பொ - ரை.) தாரோனாகிய உதயணன் அவள் வருந்தும் படி முன்கையிடத்தே பற்றித் தீயினை முறையாக வலம்வந்து குற்றமற்ற நன்மக்களைப் பெறுவாயாக என்று கூறிப்பின்னர் அவளது விரலைப்பற்றி அல்லற் காலம் வந்துழியும் மாறுத காதலோடே.........சிவந்த சுடரை ஒத்த தனது விரலை அவள் நெஞ்சிடத்தே நுழைத்துத் தடவித் தென்றிசைக் கண்ணே பரப்பிய தருப்பைப் புல்லின்மேலே அவ்வாசவதத்தையை மெல்ல நடத்திச்சென்று, அவையிடத்தே மணத்தவிசின்மேல் வந்து அமராநிற்ப அந்தணர் வாழ்த்த என்க.

(வி - ம்.) ௧௦௯. தாரோன் - உதயணன். தீயினைவலமுறை வந்தென்க. ௧௧௦. மறுவில் காதல்-குற்றமற்றமெய்யன்பு. ௧௧௧. முகிழ்-காந்தளரும்பு. ௧௧௨. தகாஅக்காலம்-துன்பமுறுங்காலம். ௧௧௩. பகாக் காதல் - மாறுத அன்பு. ௧௧௪. அங்குலி - விரல். மணமகன் தன் விரலாலே மணமகள் நெஞ்சினைத் தடவுதல் ஒருசடங்கென்க. ௧௧௫. வெஞ்சுடர் - ஞாயிறு. ஞாயிற்றை ஒத்த உதயணன் என்க. ௧௧௬. தீர்த்தப்புல் - தூய தருப்பை. ௧௧௭. எழிலி - அழகி- நடாஅய் - நடத்தி. பொது - அவை. ௧௧௯. ஆசிடை - வாழ்த்து.

௧௨௦ - ௧௨௯ : வெந்திறல் வேந்தன்............இறைஞ்சுவித்து

(பொ - ரை.) பின்னர் வேந்தன் மகளாகிய வாசவதத்தை யோடே வடகிழக்கின்கண் அழகுதக்கிருக்க அமைத்த விடைத் தோலிருக்கையின்மீது முறைப்படி வந்து அமர்ந்து ஞாயிறு பட்டுச் செக்கராகிய பசலை தீர்ந்தபின்னர் திங்களோடு வெள்ளிய நாண்மீன்கள் இயங்காநின்ற வானத்தின் வடபகுதி யின்கண் ஒளிமிக்கு விளங்கும் சிறந்த மீனாகிய அருந்ததியினை வாசவதத்தை காணுமாறு காட்டி அவள்தன் நெற்றியின் மேலாகக் கைகளைக் குவித்து நிலைபெற்ற இவ்வுலகிடத்தே யான் நின்னைப்போன்று மாசறு கற்புடையேன் ஆகும்படி அருள்வாய் என்று கூறி மூன்றுமுறை வணங்கும்படி செய்து என்க.

(வி - ம்.) ௧௨௦. வெந்திறல் வேந்தன் என்றது-பிரச்சோதனனை. பைந்தொடி : அன்மொழித் தொகை. வாசவத்தையோடென்க. ௧௨௧. உத்தரகோணம் என்றது, வடகிழக்குமூலையை. அ - அழகு. ௧௨௨. ஏற்றுரி-ஆனேற்றின் தோலாற்செய்ததொரு இருக்கை என்க.

ஆற்றுளி - விதிப்படி. கஉங. வீழ்கின்ற ஞாயிற்ருலே உண்டாகும் செக்கராகிய பசலை என்க. கஉச. இவர்தல் - இயங்குதல். கஉரு. கற்புடை விழுமீன் என்றது அருந்ததியை. காண்டல் அருமை தோன்றக் காணக் காட்டி என்ருர். கஉஅ. நின்னியல்பு - நின்னை ஒத்த திண்ணிய கற்புடையேன் ஆகும் தன்மை. இறைஞ்சுவித்து - வணங்கச் செய்து.

கஙo - கஙரு : எதிர்த்த விரதமொடு.......கழுமிக் கழிந்தபின்.

(பொ - ரை.) பின்னர் அவாவினை எதிர்த்தடக்கி நான்கு நாட்கள் நோற்பதாகிய சதுர்த்தி நோன்பிருந்து பாதுகாவலோடே உடல் முதலிய மூன்று கருவிகளும் தத்தமியல்பிற் பிறழாதவாறு செய்யவேண்டிய சடங்குகள் அனைத்தும் செய்து கைப்பற்றுதலாகிய திருமணவிழா முற்றுப்பெற்ற பின்னர் என்க,

(வி - ம்.) கஙo. புதுமணமக்கள் அவாவினை அடக்கி நோற்றல் அருமை என்பது தோன்ற எதிர்த்த விரதம் என்ருர். காமத்துன்பத்தால் உடல் முதலியன மாறுபடாதபடி காப்போடிருந்து என்க. கஙக. சதுர்த்தி - நான்குநாள்; இது ஆகுபெயராலே நான்கு நாட்கள் நோற்பதொரு நோன்பினைக் குறித்து நின்றது. ஈண்டு விரதம் என்றது மெய்யுறு புணர்ச்சி யொழிந்தமைதலை என்க. "மூன்று இரவின் முயக்கமின்றி ஆன்ருேர்க் கமைந்த வகையாற் பள்ளிசெய்து ஒழுகி நான்காம் பகல் எல்லை முடிந்தகாலத்து" என ஆசிரியர் நச்சினர்க்கினியார் வகுத்த (தொல்-கற். சூ. ௫) நல்லுரையும் நோக்குக. அகநானூற்று உரையாசிரியர் "ஓரில் கூடிய உடன்புணர் கங்குல்" எனவரும் அரு-ஆம் செய்வரியில் ஓரில் - சதுர்த்தியறை" எனக் கூறுதலும் காண்க.

கதிர்த்த காப்பு - கூர்த்த காவல். கஙஉ. மெய்முதலிய கருவிகள் என்க. கஙரு. கைம்முதற் கேண்மை என்றது, கைப்பிடித்தலை. "பாணிக்கிரகணம்" என்பது மது. கழுமி - நிறைவுற்று.

[கஙச - கசரு. பள்ளியறையின் மாண்பு ]

கஙச - கசரு : மருப்பினும் பொன்னினும்........கட்டின் மீமிசை.

(பொ - ரை.) யானை மருப்பாற்செய்து பொன்னுனும் மணியானும் அணி செய்யப்பட்ட அழகு தக்கிருக்கின்ற திண்ணிய கால்களோடே அழகு நிலைபெற்ற வெள்ளிய பூவேலையாற் சிறந்த பட்டிகுலே திண்ணிதாகக் கட்டப்பட்ட பள்ளிக்கட்டிலின்மேல் வெள்ளிய விளிம்புயர்ந்த விரிந்த பலவாகிய படுக்கைகளை ஒன்றன்மேலொன்ருய் அழகுற அடுக்கி வயிரம் முதலியவற்றை அழகுறப்பரப்பி அடிநிலையை அமைத்து அவ்வடிமுதல் முடிவரையில் மலர்மாலைகளைத் தூக்கி இங்ஙனமாகக் காமப்பண்பினைத் தூண்டுதற்குக் காரணமான ஒப்பனைத்தொழில்களானே, வெள்ளிய அணிகலன்களாலே பொலிவுற்றவரும் எட்டிப்பட்ட முதலிய சிறப்புக்களைப் பெற்றவரும் மயிலியலோருமாகிய மகளிர்கள் இயற்றிய பள்ளிக்கட்டிலின்மீது என்க.

(வி - ம்.) கடூ௬. மருப்பு - யானைத்தந்தம். பள்ளிக்கட்டிற்கால்கள் யானை மருப்பாலியற்றுதலை, "தச நான் கெய்திய பணைமருள் நோன்றாள் இகன் மீக்கூறும் ஏந்தெழில் வரிநுதல் பொருதொழி நாகம் ஒழியெயிறு எறிந்து சீரும் செம்மையும் ஒப்ப வல்லோன் கூருளி குயின்ற...... குடத்த" எனவரும் நெடுநல்வாடையானும் (கககு - உக.) அறிக.

மருப்பாற் செய்துபொன்னானும் மணியானும் புனைந்த என்க.

கடூஅ. ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கப்படுதலானே விளிம்புயர்ந்த பல படுக்கைகள் என்க. "சிறுபூளை, செம்பஞ்சு, வெண்பஞ்சு, சேணம், உறுதூவி என்ற ஐவகைப்படுக்கையினையும் அழகுற அடுக்கி என்க. கடூகூ. வயிரம் முதலியவற்றைப் பரப்பி அடிநிலை அமைத்து என்றது. வயிரமாலை முதலியவற்றைக் கட்டிலின் கீழே வீழ நாலுபுறமும் நாற்றி என்றவாறு.

கசக. முடிமுலை - உச்சி. கசஉ. தாமம் - மலர்மாலை. காமப்பண்பு மிகும்படி குயின்ற கோலச் செய்கை என்க. குயிலுதல்-செய்தல்.

கசச. எட்டிப்பட்டம், காவிதிப்பட்டம் தாங்கிய மகளிர் என்றது அப்பட்டங்களைப் பெற்ற சான்றோர் மனைவியரை என்க. மகளிர்க்கும் அப்பட்டம் வழங்கும் வழக்கம் உண்டெனக் கருதவும் இடனுண்டு.

[கசசு - கசுஎ. வாசவதத்தையையும் உதயணனையும் நகரமாந்தர் கட்டிலேற்றுதல்.]

**கசசு - கருசு : கட்டலர் கமழும்.......மாதரை இரீஇயபின்.**

(பொ - ரை.) தார் கமழா நின்ற மார்பினையுடைய உதயணனுக்கு அன்போடே தகுந்தவற்றை அறிந்து, அரசர்க்குச் செய்யும் முறைமையினையும் உணர்ந்து, இந்திரன் வீற்றிருக்கும் பள்ளிக்கட்டில் போன்று அமைப்ப வளை முதலியவற்றையுடைய வாசவதத்தையைக் காஞ்சனை என்பாள் கையாற் றழீஇ அழைத்து வந்து அவளை அப் பள்ளிக் கட்டிலின்மேல் இருக்கச் செய்த பின்னர் என்க.

(வி - ம்.) கசசு. கட்டலர் - முறுக்குடைய மலர். ஒண்தார் - ஒளி மாலை. கசஅ. தண்டாக்காதல் - அமையாத அன்பு. தக்கவை- அவன் பெருமைக்குத் தகுந்தவை. கசகூ. விண்ணவர் கிழவன் - இந்திரன். கருO. மன்னர் மரபு - அரசர்க்குச் செய்யும் முறைமை. கருக. அவ்வளை-அழகிய வளையல். பணை - மூங்கில். அதிநாகரிகி - மிக்க அருட்பண்புடையவளாகிய வாசவதத்தை என்க. கருஉ. தழீஇ - தழுவி.

கருசு. உண்மையுணரா நுண்மைப் போர்வை - உளதாந்தன்மை உணரப்படாத நுண்மையினையுடைய மேலாடை என்க.

அந்நுண்போர்வை உதயணன் இவளது பெண்மை நலத்தினைக் காணுங்கால் அந்தோ யான் உய்கிலேன் என்று கருதித் தனதொளி மழுங்கி அவளது பெண்மை ஒளியை வெளிப்படுத்து விரும்பும்படி செய்ய என்க. அஃதாவது மெல்லிய மேலாடைக்கும் மேலாக வாசவதத்தை மெய்யொளி வெளிப்பட்டு விளங்கா நிற்ப என்பது கருத்து.

"இவள் பெண்மை காணின் யான் பிழைப்பிலன்" என்பது போர்வையின் கூற்று. இஃது "சொல்லாமரபினவற்றொடு கெழீஇ தொழிற்படுத்து" உரைத்தபடியாம் என்க. உதயணன் என வினை முதல் வருவித்துக் கூறுக. யான் பிழைப்பிலேன் என்றது- என்னைக் களைத்தகற்றுவன் என்றவாறு.

கருசு- மாதரை என்றது சுட்டின் பொருட்டாய் நின்றது. இரீஇய பின் - இருத்திய பின்னர்.

**கருள - கசுஎ : கண்ணூர் குருசிலைக்.......கருதியது முடித்தென்.**

(பொ - ரை.) தலைமைத்தன்மையுடைய உதயணனை அழகுற அப்பள்ளிக் கட்டிலின்மேல் ஏறும்படி செய்து அவ்வுதயணனுடைய கையைப்பற்றி வாசவதத்தையின் உச்சிமுதல் அடிகாறும் தொடுவித்துப் பின்னர் பொன் தாலம் நிறையப் பெய்த மங்கலச்சோற்றினை விதிப்படி ஊட்டி இங்ஙனமாகச் சயந்தியம் பெரும்பதியிலுள்ள மாந்தர் பிரச்சோதனனுடைய மகளாகிய வாசவதத்தையுடனே வத்தவநாட்டு மன்னனாகிய உதயண குமரனை முட்டில்லாத செல்வத்தோடு முறை பிறழாமல் தாம் கருதிய செயலைச் செவ்வனே செய்து பள்ளிக்கட்டிலின்மேல் ஏற்றினர் என்க.

(வி - ம்.) கருள. கண்ணூர்-கண்ணுக்கு நிறைந்த, (அழகுடைய குருசில் என்க) குருசில் - தலைவன், உதயணன். கவின் - அழகு.

கருஅ. தகைமலர் - அழகியமலர். தாரோன்-உதயணன். அவள்-அவ் வாசவதத்தையினுடைய. கருகூ. கோதையினையுடைய முடி முதலாகிய உறுப்புக்களைத் தொடச்செய்து. இங்ஙனம் தொடுவித்தலொரு சடங்கென்க. தீட்டி - தீண்டச் செய்து. தீண்டு என்பதன் பிறவினை.

கசுO. பொற்கலம் - பொன்னாலாகிய உண்கலம். மலிர-நிறைய

கசுக. மங்கல அயினி. மங்கலச்சோறு. உறீஇ - உறச்செய்து; ஊட்டி என்றவாறு. கசுஉ. சும்மை - ஆரவாரம். கசுங. பெருநகர் என்றது சயந்தி நகரத்தினை.

கசுச- அவந்தியன் - பிரச்சோதனன். அவனுடைய நாடு அவந்தி நாடு. இனி அவந்தி என்பது அவன்றலை நகராகிய உஞ்சையின் மற்றொரு பெயராகக் கொள்வாரும் உளர்.

கசுசு. முட்டில் செல்வம் - குறை வற்ற செல்வம்.

**ரு. கட்டிலேற்றியது முற்றிற்று.**

---

# ௪. ஆறு திங்கள் உடன்மயிர் களைந்தது

இதன்கண், உஞ்சைவேந்தனுகிய பிரச்சோதனன் மாண்பும், அவன் மனைவியர் மாண்பும், வாசவதத்தையின் தாயாகிய கோப்பெருந்தேவியின் மாண்பும், மயிர்வினைக் கல்யாணப் பந்தர்க் கால் அமைத்தலும், இடந்திருத்தலும், உதயணன் வருகையும் அவன் மருங்கு வாசவதத்தையை இருத்தலும், அந்தணர் செயலும், நாவிதன் செயலும், பிறவும் கூறப்படும்.

கருதியது முடித்த கடிநாட் கோலமொடு
பருதி ஞாயிற் றுருவொளி திகழக்
கலிகெழு மூதூர் கைதொழு தேத்த
வலிகெழு நோன்றாள் வத்தவர் இறைவன்
முதுநீர்ப் பொழிலகந் தெதிரின் றேதப்
பதினு றுயிரம் பதினறு வகைய
சுருக்க மின்றிச் சூழ்ந்துடன் திரியாப்
பெருக்கத் தானைப் பிரச்சோ தனற்குப்
பெருநில மன்னர் திருநகர்ப் பிறந்துதம்
நாட்டுப்பெயர் பொறித்த சூட்டுப்பொலி சுடர்நுதற்
கோடிப்பூண் திளைக்குங் கோல ஆகத்து
வடிப்போழ்ந் தன்ன வாளரித் தடங்கண்
அருந்தவர்க் காயினுந் திருந்துமுகம் இறைஞ்சாது
செங்கதிர் விரும்பும் பைங்கொடி நெருஞ்சிப்
பொன்புனை மலரின் புகற்சி போல
வெறுத்த வேட்கைத் தாமுளஞ் சிறப்பக்
காதலற் கவாஅங் காம நோக்கத்(து)
ஈரேண் ணுயிரர் பேரேணப் பட்ட
ஓவியர் உட்கும் உருவக் கோலத்துத்
தேவியர்க் கெல்லாந் தேவி யாகிக்
கோவீற் றிருப்புழிப் பூவீற் றிருந்த
திருமகள் போல ஒருமையின் ஒட்டி
உடன்முடி கவித்த கடனறி கற்பின்
இயற்பெருந் தேவி வயிற்றகத் தியன்ற
வட்டப் பெரும்பூண் வாசவ தத்தையொடு

கட்டி லேற்றங் கடந்த பின்னர்
உயர்ந்த நண்பின் உருமண் ணுவாவும்
வயந்தக குமரனும் வத்தவர்க் கியற்றிய
........ாளங் கழிந்து மூதூர் வாயிற்
றம்பெயர் நிறீஇய மன்பெரு மாந்தரும்
நிறையோம் பொழுக்கத்து மறையோம் பாளரும்
பன்னகர் தோறு மன்னவன் வேண்ட
முனைவர் வகுத்த புனைபூண் அகலத்துக்
காழகத் தொன்னூற் கருதுநெறி நுனித்ததன்
ஆழமைக் கடங்கா அமைவரு காட்சி
அரும்பொருள் உணரும் பெருங்கணிச் சங்கமும்
திணைகளுங் கணக்கரும் இனையவர் மொய்த்து
நாற்கயி றமைத்துக் கோற்கயிறு கொளீஇ
நன்குநிலை பெற்ற நாற்பத் தையணங்(கு)
உண்பதம் எட்டெட் டெண்வர வாங்கி
எண்பத் தெழுகோற் றண்கையிற் றழீஇக்
கணக்க மாந்தர் கயிறிட் டளந்த
மணக்காற் பந்தருள் வடமேன் மருங்குல்
குலத்தொடு புணர்ந்த நலத்தகு நண்பின்
அழுக்கா றகன்ற ஒழுக்கா றோம்பிக்
கைவினை ஐந்துங் கற்றகத் தடக்கி
மெய்யிற் றூய்மையொடு மேதகு வனப்பிற்
செயிர்வினை கடிந்துதஞ் சிறப்புவழித் தாங்கி
மயிர்வினை நுனித்த மாசில் கம்மத்துச்
சிற்பியற் புலவர் நற்கென நாட்டிப்
பதர்ச்சொற் பருப்பொருள் பன்னுபு நீக்கிப்
பொருட்சொல் நிரப்பும் புலவர் போலக்
கல்லும் ஓடும் புல்லுங் கரியும்
உமியு மயிரும் என்பும் உட்பட
அமைவில் தன்மைய அரித்துடன் களைந்து
விண்மேம் படூஉம் விழுத்தக வுடைத்தாய்
மண்மேம் படுத்து மணிநிழல் உறீஇ
வடக்குங் குணக்கும் வகையுளிப் பணித்துக்
குடக்குந் தெற்குங் கோணம் உயரி

நிரப்பங் கொளீஇ நின்ற நிலமிசை
விசும்புறை தேவர் வேள்விச் சேதான்
பசுஞ்சோற் றமலைப் பாசங் கொளீஇ
மறுவின் றமைந்த நறுவெண் சாந்திற்
பத்தியுங் கொடியும் பல்வழி எழுதி
முத்தமு மணியுஞ் சித்திரத் தியற்றிய
ஆடகப் பொன்னும் அகல்நில முதுபொழிற்
றன்பெயர் கொளீஇய மன்பெருஞ் சீர்த்தி
மரக்களி யன்ன திருத்தகு பொன்னும்
இரத்தினக் குப்பையும் இலங்கொளிப் பவழமும்
இன்னவை பிறவும் பன்முறை பண்ணித்
தொல்லோர் வகுத்தநூல் துறைமுறை போகிய
நல்லா சிரியர் நடுவுநிலை அமைத்துக்
கீழ்த்திசை முதலா வாழ்த்துபு வணங்கித்
தெய்வம் பேணிக் கைவினைக் கம்மத்துச்
சத்தி முகமே சக்கர வட்டம்
பத்தி வரிப்பே பாவை நடக்கம்
குஞ்சர முகமே நந்தி மலரவை
எஞ்சாத் திருவடி வெனப் பெயரிவற்றுள்
போரடு மன்னர்க்குப் புரையோர் புகழ்ந்த
பாசடைத் தாமரைத் தாதகத் துறையும்
மாசின் மடமகள் மருங்கின் வடிவாய்க்
குலாஅய்க் கிடந்த கோலக் கோணத்துக்
கலாஅய்க் கிடந்து கவ்விய கொழுந்தின்
வள்ளியு மலருங் கொள்வழிக் கொளீஇ
வலமுறை வகுத்த நலமுறை நன்னகர்
நாற்பெரு வாயின் முதல்தொறும் ஏற்பத்
தமனியப் பேரில் தலைநிலந் தழீஇய
கொழுங்களி உழுந்துஞ் செங்கதிர்ச் செந்நெலும்
உப்பும் அரிசியும் கப்புரப் பளிதமொ(டு)
ஐவகை வாசமுங் கைபுனைந் தியற்றிய
முக்கூட் டமிர்தும் அக்கூட் டமைத்துத்
தேனும் பாலுந் தயிருங் கட்டியும்
ஆனெயும் வெண்ணெயும் அனையவை பிறவும்

பதினறு மணியும் பைம்பொன் மாலையும்
நதியிற் பெய்து விதியுற இரீஇப்
பொதியிற் சந்தனம் பொழிந்துகொண் டியற்றிக்
கதிரொளி பயின்ற கம்மக் கைவினை
நாற்கால் அமைத்த பாற்பெரும் படமனைப்
பொங்குமயிர்த் தவிசொடு பூமலர் புனைஇ
நண்ணிய சிறப்பொடு நாற்பெருந் திசையும்
பண்ணிய உணவின் திண்ணிலைக் குப்பையுள்
முடிமுதற் குத்தி அடிநிலைக் கமைந்த
பைம்பொன் விளக்கிற் செஞ்சுடர் மாட்டிக்
குறைவின் றமைந்த கோல நட்பத்து
மறுவின் றமர்ந்த மங்கலப் பேரணி
மன்ன குமரன் தன்னோர் சூழ
உருத்த மன்னர் ஊர்ச்சி வேழத்து
மருப்புக்கை அமைத்து வாய்முதல் தோறும்
உருக்குறு தமனியத் தொழுகுகொடி யோட்டிப்
பவழக் கோட்டைப் பல்வினை நுனித்த
திகழணிச் செருப்பிற் சேவடி இழிந்து
கடவுட் டானம் வலமுறை வந்தபின்
அடர்பொன் திருநகர் அறியக் காட்டி
நிலத்துமிசை இழிந்த நிகரில் நெடுமுடி
நலத்தகை இந்திரன் எழிற்பொலி வொப்ப
இலக்கண இருக்கை திருத்திய பின்றை
நாணுக்கவின் கொண்ட நனிநா கரிகத்(து)
யாணர்ப் பூந்துகில் அணிந்த அல்குல்
இலைப்பூண் கவைஇ முலைப்புறம் புதைஇப்
பொற்கொடி இழையொடு நற்குடன் தாழ
ஏகவுத் தரியம் இடைச்சுவல் வருத்த
வட்டுடைப் பொலிந்த வண்ணக் கலாபமொடு
பட்டுச்சுமந் தசைந்த பரவை அல்குல்
இயைந்தணி பெற்ற ஏன்ற அவ்வயிற்(று)
அசைந்தணி கொண்ட அம்மென் சாயல்
தாமரை எள்ளிய காமரு திருமுகத்(து)
இன்பக் காமன் எய்கணை போலச்

சேங்கடை போழ்ந்த சிதரரி மழைக்கண்
வண்ணக் கோதை வாசவ தத்தையைச்
சேண்ணக் காஞ்சனை சேவ்விதின் தழீஇ
இகல்வரை மார்பற் கியைய இரீஇயபின்
அகன்மணை காவல் ஆற்றுளி நிறீஇ
எண்டிசை மருங்கினும் இவர்திரை ஏய்ப்பக்
கண்டப் பூந்திரை காழ்முதற் கோளீஇ
எழுதுவினைக் கம்மத்து முழுமுதற் கோத்த
முத்த மாலை முடிமுதல் வருட
ஒத்த ஓரை நோக்கி ஓங்கிய
கைத்தோழில் நுனித்த வித்தக வாளர்
போன்புனை நன்கலத் தின்பதம் ஆர்ந்தபின்
மணியறைந் தன்ன மாண்இருங் குஞ்சி
அணிவலஞ் சுரிந்த அமைதிக் கேற்ப
வளர்பிறை அன்ன மல்லிகைக் கத்திகை
கிளர்போன் போதோடு கலையறப் பிணித்த
வாக்கமை சிகைமுதற் பாற்பட அடைச்சி
மகரங் கவ்விய மணிக்குழைக் காதினர்
தகரங் கலந்த தண்ணறுஞ் சாந்தினர்
பானிற வேண்டுகில் ஆனத் தானையர்
இறைமகற் கியன்ற குறைவில் சேல்வமோ(டு)
அந்தணர் ஈண்டி அடித்துகள் ஆற்றி
மந்திர விதியின் வாய்ப்பூச் சியற்றித்
தந்தோழின் முடித்துத் தலைவனைக் குறுகி
வேண்ணிற மலருந் தண்ணறுஞ் சாலியும்
புண்ணியப் புல்லும் போன்னோடு முறைமையின்
மண்ணுர் மணிப்பூண் மன்னனோடு மாதரைச்
சேன்னியும் உச்சியும் சேடுபடத் தேளித்துக்
கூப்பிய கையர் காப்போடு போலிந்த
அமரரு முனிவரும் அமர்வன ராகி
ஆயுளுந் திருவும் போகமும் போலிவும்
மேயின தருகேன மிகப்பல வாழ்த்தி
மறையிற் கிரிகையின் முறையறிந் தோதி
மின்வாள் அழித்த மேதகு கைவினைப்

பொன்வாள் பற்றிப் பன்மாண் பொலிகென
வலப்பாற் சென்னி வகைபெறத் தீட்டி
இலக்கணம் பிழையா எஃகமை இருப்பின்
நீரளந் தூட்டிய நிறையமை வாளினைப்
பஞ்சிப் பட்டொடு துரூஉக்கிழி நீக்கிப்
பைங்கதிர் அவிர்மதிப் பாகத்தன்ன
அங்கேழ்க் கன்மிசை அறிந்துவாய் தீட்டி
வெங்கேழ்த் துகின்மிசை விதியுளி புரட்டிச்
செங்கேழ்க் கையிற் சிறந்துபா ராட்டி
ஆசறு நறுநீர் பூசனை கொளீஇ
வாட்டொழிற் கம்மம் வல்லிதிற் பிழையாது
சேட்டெழிற் பொலிந்த திருமுகக் கேற்ப
மூரிக் கொள்ளான் முனிதல் செல்லான்
ஆவிக் கொள்ளான் அயர்ந்தும் பிறர்நோக்கான்
சீர்கெழு நெடுந்தகை செவ்வியில் திரியான்
கண்ணினு மனத்தினுங் கையினு மமைத்த
மண்ணுவினை மயிர்த்தொழில் நன்னல நாவிதன்
எல்லை வகுப்ப ................ ....... ........ ................
எதிர்நோக் காற்றா இலங்கிழை முகத்தையும்
மதிமாசு கழீஇய வண்ணம் போலக்
கதிர்மேல் இலங்கக் கைவினை முடித்தபின்
அடிவினைக் கம்மியர் வெடிபட அடுக்கிய
உயர்நலக் கோலத் தோள்ளொளி திகழ
வகையமை கொல்லியின் வசையறத் துடைத்துச்
சேவடிக் கேற்பச் செழுமதிப் பாகென
வாருகிர் குறைத்து வனப்புவீற் றிரீஇய
ஒண்ணிறக் கல்லின் நன்னிறம் பெறீஇ
விரலிற் கொண்ட வெண்ணிற நுண்டாது
விரிகதிர் மதியின் விளங்கொளி அழிப்ப
நிறம்பெற உரிஞ்சி நேர்துகில் துடைத்தும்
தண்டா மரையின் அகவிதழ் போலப்
பண்டே சிவந்த படிய வாயினும்
கண்டோர் மருளக் கைவளங் காட்டி
அரத்தப் பஞ்சின் அணிநிறங் கொளீஇப்

பரப்பும் விதிர்ப்பும் பருப்பும் இன்றி
அணித்தலைச் சார்ங்கம்அணிபெற எழுதி
இருவகைக் கம்மம் உருவெளி திகழ
வல்லோர் முடித்த பின்றைப் பல்லோர்
அருங்கல வெறுக்கை ஆர வீசி
விருப்புறு மனத்தவர் விண்ணவர் காப்ப
மன்னுக வேந்தே மண்மிசை நீடென
அன்னவை கலந்த ஆர்வ நாப்பண்
எண்ணுவரம் பறியா இன்பச் செல்வமொடு
மண்ணுவினை முடிந்தன்றான் மயிர்வினை மகிழ்ந்தேன்

---

## ௬. ஆருந்திங்கள் உடன் மயிர் களைந்தது.

*அஃதாவது, உதயணனுக்குத் திருமணம் நிகழ்ந்தபின்னர் ஆருந் திங்களில் நிகழ்த்தற் பாலதாகிய மயிர்களைதல் என்னும் மங்கலச் செயலை நிகழ்த்தியதனைக் கூறும் பகுதி என்றவாறு.*

### உரை

௧ - ௪: கருநியது முடித்த............வத்தவர் இறைவன்.

(பொ-ரை.) வத்தவர் இறைவனாகிய உதயணகுமரன் திருமணக் கோலத்தானும் ஞாயிற்று மண்டிலத்தின் அழகிய ஒளி போன்ற தன் முகத்தினது இயற்கை ஒளியானும் திகழாநிற்ப அவ்வழகுத் தோற்றத்தைக் கண்ட ஆரவாரமுடைய அச் சயந்தி மக்கள் கைகுவித்து வணங்கா நிற்ப, என்க.

(வி-ம்.) வத்தவர் இறைவன் என்னும் எழுவாய் (௨௫ - ௨௬) கட்டிலேற்றம் கடந்தபின் என்று இயையும்.

௧. சயந்திமக்களாற் கருதிய கடிநாள், முடிக்கப்பட்ட பின்னர் என்க. ௨. பருதிஞாயிறு: இருபெயரொட்டு. வட்டவடி விற்றாகிய ஞாயிறு எனினுமாம்.

௩. கலி - ஆரவாரம். மூதூர், சயந்தி: ஆகுபெயர்.

௪. வலிகெழு நோன்றாள் என்புழி மிக்க வலிபொருந்திய தாள் என்க.

௫. வத்தவர் இறைவன், உதயணன்.

௫ - ௨௫: இனி இடைப்பிறவரலாகப் பிரச்சோதனன் மாண்பும் அவன் மனைவியர் மாண்பும் கூறப்படுகின்றன.

[பிரச்சோதனன் மாண்பு.]

இ - அ : முதுநீர்........பிரச்சோதனற்கு.

(பொ - ரை.) கடல்சூழ்ந்த இவ்வுலகத்தின்கண் உள்ள வேந்தருள் வைத்துத் தனக்கு நிகராகும் அரசர் பிறர் இல்லாத படி உயர்ந்து தனது புகழை உலகம் கூறுநிற்பப் பதினாறுயிரம் என்னும் எண்ணளவுடைய பதினாறு வகையினவாகிய செல்வப் பேற்றானும் குறைவு இன்றிப் பகைவரூரை முற்றிப் போர் செய்துழி அப்போரிடைப் பிறக்கிடாத தன்மையுடைய படையினையும் உடைய பிரச்சோதன மன்னனுக்கு என்க.

(வி - ம்.) இ. முதுநீர் - கடல். பொழில் - உலகம். உகந்து - உயர்ந்து. பொழிலின் கண் தனக்கெதிரின்று உகந்து எனமாறுக. எதிரின்று என்புழி இன்றி என்னும் வினையெச்சத்திறு உகரமாயிற்று.

சு. பதினாறுயிரம் பதினறு வகைய என்றது, பதினாறுயிரம் என்னும் எண்ணளவுடைய பதினாறு வகைச் செல்வங்கள்என்றவாறு. அவை பதினாறுயிரம் நாடும், பதினாறுயிரம் தேவியரும் முதலியன. வகைய: பலவறி சொல். வகைச் செல்வங்களானும் குறையின்றி என்க.

எ. சூழ்ந்து பகைவரூரை முற்றி. சூழ்ந்து உடன்று இரியாத் தானை எனக் கண்ணழித்துக் கூறுக. இனித் தன்னைச் சூழ்ந்து தன்னோடு திரியும் தானை எனினுமாம்.

அ. பிரச்சோதனனுக்கு என்பது தேவியர் என உ0-ஆம் அடிக்கட் சென்றியையும்.

[பிரச்சோதனன் மனைவியர் மாண்பு.]

கூ - உ0 : பெருநில மன்னர்............தேவி யாகி.

(பொ - ரை.) பெருநில மன்னர் குடியிற்பிறந்து தமது நாட்டின் புகழைத் தமதொழுக்கத்தானே நிறுத்தியவரும், நுதல் முதலியவற்றை உடையவரும் துறவிகளை வணங்கும் பொருட்டும் தலை வணங்காமல் நெருஞ்சிப்பூ ஞாயிற்றை விரும்பும் விருப்பம் போன்று தங்கணவனையே விரும்பும் விருப்பத்தையுடையவரும் உருவ அழகுடையவரும் ஆகிய மனைவியர் பதினாறுயிரவருள் வைத்து ஏனையோர்க்கெல்லாம் தலைவியாய் என்க.

(வி - ம்.) கூ. மன்னர் திருநகர் - அரண்மனை; எனவே மன்னர் குடியிற் பிறந்து என்பதாயிற்று.

க0. உரைசால் பத்தினியை உயர்ந்தோர் புகழ்வதுண்மையின், நாட்டுப் பெயர் பொறித்த என்றார். பெயர் - புகழ். பொறித்த - எழுதிய; நிலை நிறுத்திய என்றவாறு. சூட்டு - நுதலணிகலன்.

கக. கொடிப்பூண்-நீண்ட வடிவினவாகிய அணிகலன்கள். ஆகம்- உடல். கஉ. வடி - மாவடு. கங. குலமகளிர் கொழுநரையன்றித் தெய்வமும் தொழுதலிலர் ஆகலின், அருந்தவர்க்காயினும் இறைஞ்சாது.

என்றார். கஎ. செங்கதிர் - ஞாயிறு. நெருஞ்சிப்பூ எப்பொழுதும் ஞாயிற்று மண்டிலத்தையே நோக்குமியல்பிற்று. இதனை "நெருஞ்சிப் பசலை வான்பூ ஏர்தருசுடரின் எதிர்கொண்டாங்கு" எனவரும் புறப் பாட்டானும் உணர்க. (கஒ)

கஒ. புகற்சி - விருப்பம். நெருஞ்சி மலரினது விருப்பம் போன்ற விருப்பம் மிகுதலானே காதலற்கு அவாவும் காமத்தையுடைய நோக்கம் என்க.

கக. ஓவியர் - சைத்திரிகர். உட்கும் - அஞ்சும்.

உ0. தேவியர்க்கெல்லாம்தேவி - மனைவியர்க்கெல்லாம் தலைவி. என்றது வாசவதத்தையின் அன்னையாகிய கோப்பெருந்தேவியை.

[கோப்பெருந் தேவியின் மாண்பு.]

உக - உசு : கோவிற் றிருப்புழிப்............கடந்த பின்னர்.

(பொ - ரை.) திருமுடிசூட்டுதற் பொருட்டு பிரச்சோதன மன்னன் அரசு கட்டிலில் வீற்றிருந்த பொழுது அவனோடு திரு மகள் ஒன்றுபட்டு வீற்றிருந்தாற் போன்று தானும் ஒருசேர இருந்து திருமுடி சூட்டப்பட்டவளும் கற்பு மிக்கவளும் ஆகிய கோப்பெருந்தேவியின் வயிற்றிற் பிறந்த வாசவதத்தையோடே பள்ளிக் கட்டிலேறுதலாகிய சடங்கு நிகழ்ந்த பின்னர் என்க.

(வி - ம்.) (சு) வத்தவரிறைவன் வாசவதத்தையோடு க்ட்டி லேறுதல் நிகழ்ந்தபின்பு என இயைத்துக் கொள்க.

உக. கோ - பிரச்சோதனன். வீற்றிருப்புழி-என்றது முடிபுனை தற்பொருட்டு அரசுகட்டிலில் அமர்ந்திருந்த பொழுது என்றவாறு.

உஉ. அவனோடு திருமகள் வீற்றிருந்தாற்போலத் தானும் ஒன்றி வீற்றிருந்து முடிகவிக்கப் பெற்ற என்க.

உங. பெரும்பூண் - பேரணிகலன்.

[மயிர்கல்யாணப் பந்தரின் மாண்பு.]

உஎ - ஙஎ : உயர்ந்த ...........மொய்த்து.

(பொ - ரை.) உருமண்ணுவாவும் வயந்தககுமரனும் இவ் வண்ணமாக உதயணனுக்குச் செய்த.........கழிந்து சயந்தியின் கண் அவவுருமண்ணுவா விரும்பி அழைத்தலானே அரசவைச் சுற்றத்தாரும் அந்தணரும் பெரிய கணிவர் குழாமும் திணைமாந் தரும் கணக்கரும் இவர்போல்வார் பிறரும் வந்து கூடி என்க.

(வி - ம்.) உஎ. உதயணன் உயிர் நண்பர்கள் நால்வர்களுள் உருமண்ணுவாவும் வயந்தககுமரனும் இருவர் ஆதலின் "உயர்ந்த நண்பின்" என்றார். உக. மூதூர் - சயந்தி. தமது ஒழுக்கத்தானே தமது புகழை உலகில் நிலைக்கச் செய்த மன்பெருமாந்தர் என்க. அவர் அரசன் சுற்றத்தார் என்க. ஙஉ. உருமண்ணுவாவிற்குரிய பல

நகரங்களினும் வாழும் பெருங்கணிச் சங்கம் என்க. உருமண்ணுவா உதயணன் அமைச்சனுயினும் சயந்திமுதலிய நகரங்கட்கு அரசுரிமை பூண்டு நிற்றலான், 'மன்னவன்' என்றார். ௩௩. "முனிவர் வகுத்த தொன்னூல்" எனக் கூட்டுக. ௩௪. காழகம் - ஆடை. ௩௭ - ௯: நூல் கருதியவழி ஆராய்ந்து அந்நூலின் ஆழ்ந்த தன்மைக்கட் பட்டடங் காமல் மேலும் இடையருது ஆராய்கின்ற காட்சியாலே நூல் காட்டாத அரிய பொருள்களையும் உணரும் நுண்மாணுழைபுலமுடைய பெருங் கணிகள் என்க.

௩௫. ஆழமை - ஆழ்ந்த தன்மை. ௩௭. திணைகள் - அரசியலில் உத்தியோகம் வகிப்போர். மொய்த்து - நெருங்கி.

௩௮ - ௪௩ : நாற்கயிறு................மருங்குல்

(பொ - ரை.) நான்கு திசைகளிலும் கயிறுகட்டி இடம் வரைந்து கொண்டு பின்னர்க் கோலின்கண் கயிற்றைக் கொளுவி நாற்பத்தைந்து வகைத் தெய்வங்களும் நன்ருக நிலைபெற்று மடையுண்ணுமிடம் எட்டெட்டுக் கோலிடையிலே வரும்படியாக அக்கயிற்றை வளைத்து எண்பத்தேழு கோல் அளவிற்ருய்க் கணக்கர்கள் அளந்த மணக்கால்களையுடைய பந்தரின்கண் பூமகளின் இடையின் வடிவிற்ருகஎன்க.

(வி - ம்.) ௪௦. உண்பதம்-தெய்வங்கள் மடையுண்ணும் இடம். அவை ஒன்றற்கொன்று எட்டு எட்டுக் கோலிடையனவாக அமையும் படி என்க. வாங்கி - வளைத்து.

௪௧. 'தண் கயிற்' என்றும் பாடம். 'தண் கையிற்றழீஇ' என்று வரும் சொற்றொடர் சிதைந்த தொடர் என்று தோன்றுகின்றது, ஆராய்க.

௪௩. வடமென் மருங்குல்-மேகலை வடமணிந்த பூமகளின் இடை. இஃது ஆகுபெயராய் அப்பந்தருள் பூமகளின் இடையெனக் கருதப் படுவதோர் இடத்தைக் குறித்து நின்றது. இதனை,

"விரிந்து வான் பூத்தென விதானித்து ஆய்கதிர்
அருங்கலப் பொடியினல் ஆய்பொற் பூமகள்
மருங்குல்போற் குயிற்றிய நகரின் மங்கலப்
பெருந்தவி சடுத்தனர் பிணையன் மாலையார்" (உ௪0௧)

எனவரும் சீவகசிந்தாமணிச் செய்யுட்கு நச்சினர்க்கினியார் வகுத்த நல்லுரையானும் இந்நூலாசிரியர் இக்காதையின்கண், ௭௫ - முதல் ௮௨-ம் அடி ஈருகக் கூறும்பகுதியானும் உணர்க.

[௩௩ - ௧0௩. மயிர்வினைக்கல்யாணப் பந்தரின் மாண்பு.]

௪௪ - ௫0: குலத்தொடு...........சிற்பியர்.

(பொ - ரை.) நற்குடிப்பிறப்போடே யாவர் மாட்டும் நண்பு டைமையும், பொருமையின்மையும், நல்லொழுக்கத்தைக் கடைப்

பிடித்தொழுகலும், உடையராய்க் கையாலே செய்யப்படும் ஐந்து வகைச் சிற்பத் தொழிலையும் நன்குபயின்று உடல் முதலிய மூன்றானும் தூய்மையுடையராய்த் தமக்குரிய சிறப்பு நெறியாகிய சிற்பத் தொழிலையே மேற்கொண்டு மயிர்வினைக் கல்யாணத்திற் குரிய சிற்பத்தொழிலிலே துறைபோகிய சிற்பியர் என்க.

(வி - ம்.) ௪௬. குலம் - குடிப்பிறப்பு. நன்பு-யாவர்மாட்டும் அன்புடையராம் பண்பு. "அன்பீனும் ஆர்வமுடைமை அதுவீனு நண்பென்னும் நாடாச்சிறப்பு" என்றார் தெய்வப்புலவரும். (குறள்-௭௪)

௪௭. செயிர்வினை கடிந்து தம் மேதகு வனப்பின் சிறப்பு வழி என இயைக்க. சிற்பத்தொழிலைக் கற்ற தோடாமையாது அத்தொழிலை மேற்கொண்டு செய்வார் என்பார் 'கற்றகத்தடக்கி' என்றமையாது மேலும் 'தம் சிறப்பு வழித் தாங்கி' என்றார்.

௪௯. மயிர்வினை - மயிர்வினைக் கல்யாணம்.

௫௦ - ௫௫ : புலவர்............களைந்து.

(பொ - ரை.) நல்லிசைப் புலவர் செய்யுள் செய்யுங்கால் சொல்லுலகத்தின்கண் பதர்ச் சொல் பருப்பொருட் சொல் முதலியவற்றை ஆராய்ந்து நீக்கிப் பொருட் சொல்லான் மட்டும் அதனை நிரப்புமாறு போலக் கல் ஓடு புல் கரி உமி மயிர் என்பு முதலியனவும் இவை போல்வனவுமாகிய பொருந்தாப் பொருள் களை மண்ணினின்றும் அரித்தகற்றி என்க.

(வி - ம்.) சிற்பப்புலவர், நல்லிசைப்புலவர் பதர்ச்சொல் முதலிய வற்றை நீக்குமாறுபோலக் கல் முதலியவற்றை அரித்துக் களைந்து என்க.

௫௦. நற்கென - கண்டோர் நன்றென்று கூறிப் புகழாநிற்ப. நாட்டி-இடம் வரைந்து என்க. ௫௧. பதர்ச்சொல் - பொருளற்ற வறுஞ் சொல். பருப்பொருள் - நுண்பொருளன்றி எண்பொருள்.

௫௫. அமைவில் தன்மைய - பொருந்தாத தீய தன்மையுடைய பொருள்.

௫௬ - ௬௦ : விண்மேம் படுஉம்...........நிலமிசை

(பொ - ரை) வானம்போல மேம்படுகின்ற சிறப்புத்தன்மை யுடையதாகும்படி நிலத்தைத் தூய்மைசெய்து, அழகிய நிழல் உறும்படி பந்தரை வேய்ந்து, அந் நிலத்தின் வடதிசையினையும், கீழ்த்திசையினையும் முறைப்படி தாழ்த்து, மேற்றிசையினையும் தென்றிசையினையும் அவற்றிடைப்பட்ட கோணத்திசையினையும் உயர்த்துப் பின்னர் மேடும் பள்ளமுமின்றி நிரவி இங்ஙனம் பண்படுத்தப்பட்டு நின்ற நிலத்தின்மேல் என்க.

(வி - ம்.) ௫௬. விண்மேம்படும் - வானம்போல மேம்படுகின்ற, விழுத்தகவு - சிறந்த தன்மை. ௫௭. மேம்படுத்து - தூய்மைசெய்து.

உறீஇ - உறச்செய்து. ௰அ. குணக்கு - கிழக்கு. பணித்து - தாழ்த்து. ௰௯. குடக்கு - மேற்கு. கோணமும் எனற்பால உம்மை தொக்கது. கோணம் - ஈண்டுத் தென்மேற்றிசை. உயரி - உயர்த்து, ௨௰. நிரப்பம் - நிரவல். அஃதாவது, மேடுபள்ளமின்றிச் செய்தல்.

சுக - ஏ௦: விசும்புறை...........பண்ணி.

(பொ - ரை.) தேவர்கட்கும், வேள்விப் பசுவிற்கும், பசிய சோற்றுத்திரளையாகிய பலியினைக் கொடுத்துப் பின்னர், வெண் சாந்தினாலே பத்தியாகவும், கொடியுருவினவாகவும் பலவிடத்தும் கோலமிட்டு முத்தும் ஏனைமணியும் வைத்து ஓவியம்போல இயற்றப்பட்ட ஆடகப் பொன்னானும் சாம்பூநதப் பொன்னானும் பவழத்தானும் ஏனைமணிகளானும் இன்னோரன்ன பிறவற்றானும் பல்வேறு வகையினும் ஒப்பனைசெய்து என்க.

(வி - ம்.) சுக. விசும்புறை தேவர் - வானுலகத்தே வாழும் தேவர். பசு வழிபடுதற்குத் தன் சிறப்புவகையான் அமரரோடு ஒக்கும் என்பது மெய்ந்நூற் றுணிவு ஆதலின் பசுவிற்கும் மடைகொடுத்து வழிபட்டனர் என்க. இதனை,

"அமரர்கண் முடியும் அறுவகையானும்" என வரும் (தொல். புறத் - ௩௬.) நூற்பாவினானும் நச்சினார்க்கினியர் நல்லுரையானும் உணர்க. வேள்விச்சேதான் - வேள்விக்குரிய சிவப்புப் பசு.

சுஉ. அமலை - திரள்; கட்டி. அமலையாகிய பாசம் என்க. பாசகம் எனற்பாலது பாசம் என மருவிற்று. பாசகம் - உண்டி. சமைக்கப் பட்டது என்பது பொருள். ஈண்டுப் பலியுணவு. கொளீஇ என்பது கொடுத்தென்பதுபட நின்றது.

சுச. பத்தி - நிரலாக உருவங்களை எழுதுவதொரு கோலவகை. கொடி - பூங்கொடி யுருவினவாய் எழுதும் கோலம்.

சுரு. முத்தும் ஏனைமணிகளும் வைத்து ஆடகப் பொன்னினும் சாம்பூநதப் பொன்னினும் சித்திரம்போல இயற்றப்பட்ட ஒப்பனைப் பொருள்களானும் ஒப்பனை செய்தென்க.

சுசு. ஆடகம் - நால்வகைப் பொன்னில் ஒன்று. சுசு-எ. அகனிலை முதுபொழில் தன்பெயர் கொளீஇய மன்பெருஞ் சிர்த்தி மரக்களியன்ன திருத்தகுபொன் என்றது சாம்பூநதப்பொன் என்றவாறு. முது பொழில் - சம்புத்தீவு (நாவலந்தீவு) "நாவலொடு பெயரிய பொலம்" என்றார் முருகாற்றுப்படையினும் (௧அ) நால்வகைப் பொன்னையும்,

"சாதரூபம் கிளிச்சிறை ஆடகம்
சாம்பூநதம் எனஓங்கிய கொள்கையிற்
பொலம்" (சிலப். ௧௪ : ௨௦௧ - ௩.)

எனவரும் சிலப்பதிகாரத்தானும் உணர்க.

சுசு - சுஅ. "பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புநதம்" என்பவாகலின் (திருவள். மா. ௩௬) "மன்பெருஞ் சிர்த்தித் திருத்தகு பொன்" என்றார். இப் பொன் மேருமலைச் சாரலிலுள்ள நாவல்

மரத்தின் பழச்சாற்றுனே ஆயது என்பவாகலின், மரக்களி அன்ன பொன் என்றார்; மரக்களியாகிய அப் பொன் என்க. அன்ன என்பது உவமங் கருதாமல் சுட்டுமாத்திரையாய் நின்றது. மரம் ஈண்டு நாவல் மரத்தின் பழத்திற்கு ஆகுபெயர். களி - சாறு.

௭௦. பண்ணி - ஒப்பனை செய்து.

௭௧ - ௮௨ : தொல்லோர்............கோணத்து.

(பொ - ரை) பண்டைச் சான்றோர் வகுத்த நூல்களைப் பயின்று முதிர்ந்த நல்லாசிரியன்மாரானே நடுவிடம் வரையறை செய்வித்துக் கீழ்த்திசை முதலாகத் திசைத்தெய்வங்களை வாழ்த்தி வணங்கி, ஏனைத்தெய்வங்களையும் வழிபட்டுக் கலைத் தொழிற்றிறத்தாலே சத்திமுகம் முதலாகத் திருவடிவு ஈறுகக் கூறப்பட்ட வடிவங்களில் வைத்துத் திருவடிவு எனப்பட்ட திருமகள் இடைவடிவிற்றுய் இயற்றப்பட்டு வளைந்துகிடந்த கோணத்தின்மேல் என்க.

(வி - ம்.) ௭௩. கீழ்த்திசை முதலாகவுள்ள திசைத் தெய்வங்களை வாழ்த்தி வணங்கி என்க. அவராவார் இந்திரன் முதலியோர்.

௭௪. தெய்வம் - நாற்பத்தைந்துவகைத் தெய்வமும் பிறவும் என்க. கைவினைக்கம்மம் - சிறந்த கைத்தொழிலாகிய சிற்பத்தொழில் என்க.

௭௫. சத்திமுகம் முதலியன அம் மங்கலச் சடங்கு நிகழ்த்துதற்குரிய இடத்திலியற்றும் உருவ வேறுபாடுகள் என்க.

௭௬. திருவடிவு - திருமகளின் உருவம்.

௭௭. நந்திமலர் - நந்தியாவட்டமலர்.

௭௮. எனப் பெயர் கூறப்பட்ட இவற்றுள்ளே என்க.

௭௯ - ௮௧. புரையோர் - உயர்ந்தோர். மன்னர் மரபினர்க்குரிய வடிவம் இஃதென உயர்ந்தோரால் புகழப்பட்ட மருங்குல் வடிவு என்க என்றது திருவடிவு என்பதனை.

௮௦. பாசடை - பசிய இலையையுடைய.

௮௧. மாசின் மடமகள் - திருமகள்.

௮௨. குலாஅய் - வளைந்து. கோணம் - வளைந்த இடத்திற்கு ஆகுபெயர்.

௮௩ - ௮௫ : கலாஅய்............நன்னகர்.

(பொ - ரை.) ஒன்றனெடு ஒன்று பிணங்கிக் கிடந்து ஒன்றனை ஒன்று சுற்றிய கொழுந்தினையுடைய பூங்கொடியுருவங்களையும் மலர் உருவங்களையும் ஏற்புழி வலஞ்சுற்று முறையாக எழுதி இயற்றப்பட்டு அழகு குடியிராகின்ற நல்ல மணவறை யிடத்தே என்க.

(வி - ம்.) அங. கலாஅய் - பிணங்கி; பின்னி என்றவாறு.

அச. வள்ளி - பூங்கொடி.

அடு. நலம் - அழகு. நன்னகர் என்றது மணவறையை.

அசா - கூடு : நாற்பெரு வாயில்...........இரீஇ.

(பொ - ரை.) நான்கு பெருவாயிலிடந்தோறும் உள்ள பொன்னுலியன்ற பேரில்லின் நிலத்தைப் பொருந்தும்படி உழுந்து நெல் முதலியவற்றையும் ஐவகை மணப்பொருள்களையும் அழகுபடச் செய்த முக்கூட்டினையும் குவித்து அவற்றின் உச்சியிற் குழித்துத் தேன் முதலியவற்றையும் பெய்து முறைப்படி இருத்திய பின்னர் என்க.

(வி - ம்.) அசா. அந் நன்னகரின் பெருவாயில் நான்கனிடத்தும் ஏற்ப இயற்றப்பட்ட தமனியப்பேரில் என்க.

அஎ. தமனியப்பேரில் - பொன்னுலியற்றப்பட்ட பெரிய இல்லம். தமீஇய-செய்யிய என்னும் வாய்பாட்டெச்சம்; பொருந்தும்படி என்க.

அகூ. கப்புரப் பளிதம் - இருபெயரொட்டு. கருப்பூரமாகிய பளிதம்.

கூ0. ஐவகை வாசம். "தக்கோலம் ஏலம் இலவங்கம் கப்பூரம் சாதிக்காய்" என்னுமிவை.

கூக. முக்கூட்டமிர்து களிப்பாக்கு தேன் இளநீர் என்னும் மூன்றனும் இயற்றியதொரு உணவு. இதனை,

"அங்கருங் காலி சிவி ஊறவைத் தமைக்கப்பட்ட
செங்களி விராய காயுஞ் செம்பழுக் காயுந்தீந்தேன்
எங்கணுங் குளிர்த்த இன்னீர் இளம்பசுங் காயுமூன்றும்
தங்களி செய்யக் கூட்டித் தையலார் கைசெய்தாரே"

எனவரும் சீவகசிந்தாமணியானும் உணர்க (சீவ. உசஎங).

கூஉ. கட்டி - வெல்லம்.

கூங. ஆனெய் - என்றது உருக்கிய நெய்யினை.

கூச. பதினறுமணி என்றது பதினறு கோவையினையுடையதொரு அணிகலனை; பதினறுகோவை மணிமாலை பொன்மாலை ஆகிய அணிகலன்களையும் அவற்றின் உச்சியிலே பெய்து என்பது கருத்து.

கூடு. நுதி - உச்சி என்க. விதி - நூன்முறை. இரீஇ - இருத்தி; வைத்தென்க.

"உழுந்து பயறுப்பரிசி அப்பம் அருங்கலங்கள் கொழுந்துபடக் கூப்பி நனி ஆயிரமரக்கால், செழுந்துபடச் செந்நெல் நிறைத்து அந் நுண்கொடி அறுகின் கொழுந்து குறைத்து அணிந்து கொலைவேற் கணவரமைத்தார்" (சீவக. உசஅசா.) என்றார் திருத்தக்கதேவரும்.

௯௯ - ௧0௩ : பொதியில்...........மாட்டி.

(பொ - ரை.) பொதியிலின்கண் வளர்ந்த சந்தனமரத்தினை ஈர்ந்து செய்த ஒளிமிக்க சித்திரத் தொழிலமைந்த நான்கு கால்களமைக்கப்பட்ட பெரிய மணைப்பலகையினை மயிர்த்தவி சிட்டு அமைத்து மலரால் அணிசெய்து சிறப்போடே திகழாநின்ற நான்கு பெருந்திசைகளினும் குவிக்கப்பட்ட பண்ணிகாரக் குவியலின் உச்சியிடத்தே நடப்பட்ட பாதத்திற்குப் பொருந்திய பொன்விளக்கினைத் தீக்கொளுவி அமைத்தென்க.

(வி - ம்.) ௯௯. பொதியிலின் வளர்கின்ற சந்தனமரம் சிறப் புடையதென்ப. சந்தனம் - சந்தனமரம். போழ்ந்து - ஈர்ந்து. ௯எ. கம்மக் கைவினை - சித்திரவினை. ௯அ. பால்-கூறுபாடு. மணை - மங்கல விருக்கை. ௯௯. மயிர்த்தவிசு - மயிராற் செய்ததொரு இருக்கை. அதனை அம்மணைமேற்படுத்து என்றவாறு.

௧00. புனைஇ - புனைந்து. புனைந்தமையாலே நண்ணிய சிறப்பு என்க. பெருந்திசை - கிழக்குத் தெற்கு மேற்கு வடக்கு என்பன.

௧0௧. பண்ணியம் - பண்ணிகாரம். குப்பை - குவியல்.

௨௧0. பண்ணிகாரக் குவியலின் உச்சியில் தகளியை அழுத்தி அத் தகளிக்கேற்ற பொன்விளக்கினை ஏற்றிவைத்தென்பது கருத்து.

௧0௪ - ௧௧௬ : குறைவின்று............பின்றை.

(பொ - ரை.) இங்ஙனமாகச் செய்முறையானே சிறிதும் குறைவின்றி அமைந்த அழகு நுட்பமும் கடவுட்டன்மையும் உடைய மணவறையினை மங்கல அணிகலன்களையுடைய உதயணகுமரன் தன்னொடொத்த சிறப்பினையுடைய மன்னர் மக்களோடே பகைமன்னர் ஊர்ந்துவந்த களிற்றியானையின் மருப்பாலே பக்கங்களை அமைத்து இடந்தோறும் உருக்கிய பொன்னாலே பூங்கொடியுருவங்கள் அமைத்துப் பவழத்தாலே குமிழ் அமைக்கப்பட்ட செருப்பினின்றும் இழிந்து வலமாக வந்தபின்பு ஆண்டுள்ள சான்றோர் அந்த மணவில்லத்தின் அழ கெல்லாம அவன் உணருமபடி காட்டித் திருவோலக்கத்தில் அரசிருக்கும் இந்திரன்போற் பொலிந்து தோன்றும்படி அம் மங்கலமணையின்கண் திருத்தமுற இருத்தியபின்னர் என்க.

(வி - ம்.) ௧0௪. கோலநுட்பத்துக் (௧௧௨) கடவுட்டானம் என இயைக்க. இனி, குறைவின்றி அமைந்த கோலநுட்பத்தினையுடைய மங்கலப் பேரணி எனினுமாம். இங்ஙனம் கூறின் ௬0௩ செஞ்சுடர் மாட்டி அணிசெய்யப்பட்ட கடவுட்டானம் எனச் சில சொற்பெய்து முடித்துக்கொள்க. குறைவின்று என்புழி இன்றி என்னும் வினை யெச்சத்தீற்று இகரம் உகரமாய்த் திரிந்தது, செய்யுளாகலின். ௧0௫. மறுவின்று என்பதும் அது. மறு - குற்றம். மங்கலப் பேரணி - மங்கல நாட்களிலே அணியும் சிறப்பணிகலன்.

௧0௬. தன்னோர் - தன்னனையோர் என்பதுபட நின்றது; இனித் தமர் எனினுமாம்.

௧0௭. உருத்தமன்னர் - பகையரசர். ஊர்ச்சி - ஊர்தல். ஊர்தியுமாம்.

௧0௮. மருப்பினால் கை அமைத்து என்க- கை என்றது பக்கத்து விளிம்புகளை. வாய் - இடம். ௧0௯. ஒழுகுகொடி - ஓடாநின்ற பூங்கொடியுருவம். ௧௧0. கொட்டை - குமிழ். இங்ஙனமாகப் பல அணித்தொழில்களும் இயற்றப்பட்ட செருப்பென்க. ௧௧௧. செருப்பு-மிதியடி. சேவடி யிழிந்தென்பது முதல்வினை சினைமேனின்றது.

௧௧௩. அடர்பொன் - தகடாகிய பொன்.

௧௧௬. இலக்கணம் அமைந்த மணத்தவிசென்க. பின்றை-பின்பு.

[உதயணன் பக்கலிலே வாசவதத்தையை இருத்துதல்.]

௧௧௭ - ௧௩௧ : நாணுக்கவின்..........இரீஇயபின்.

(பொ-ரை.) நாணுடைமையானே எய்திய அழகினையுடைத்தாகிய சிறந்த நாகரிகத்தினையும், துகிலணியப்பட்ட இடையினையும், முலையினை அகத்திட்டு மறைத்துப் பொன்னாலியன்ற நெடிய அணிகலனகளோடே நன்றாகத் தூங்காநின்ற இலைத்தொழிலாற் சிறந்த அணிகலன்களையும், இடையினையும் பிடரினையும் வருத்தாநின்ற மேலாடையினையும் வட்டாடையின்மேலே அணியப்பட்டுப் பொலிவுறாநின்ற காஞ்சியோடே பட்டாடையினைச் சுமந்திளைத்த பரப்புடைய அல்குலினையும், தனக்குப் பொருந்திய அணிகலன் அணியப்பெற்ற அழகிய வயிற்றினையும் காண்போர்க்குக் கட்புலனாய்த் தவழாநின்ற அழகிய மென் சாயலினையும், தாமரையைப் பழித்த அழகுடைய விரும்புதற்குக் காரணமான முகத்தினையும், காமனுடைய அம்பு போன்று கடையிடத்தை ஈர்ந்த செவ்வரி கருவரி பரந்த குளிர்ந்த கண்களையும், நிறமிக்க மாலையினையும், உடைய வாசவதத்தையினைக் காஞ்சனை என்பாள் செவ்விதாகத் தழுவி அழைத்துவந்து, மலையுடன் மாறுபட்ட மார்பையுடைய உதயணகுமரனுக்குப் பொருந்தும்படி இருத்திய பின்னர் என்க.

(வி - ம்.) ௧௧௭. நாணுக்கவின் - நாணமுடைமையாலே மெய்ப்பாடாகத் தோன்றுவதொரு அழகு. இவ்வழகு நாகரிகமுடையார்க்கன்றி இல்லை ஆகலின் - நாணுக்கவின் கொண்ட நாகரிகம்.

௧௧௮. யாணர்ப் பூந்துகில் அணிந்த அல்குல் என்றது எப்பொழுதும் புதிது புதிதாக பூ வேலை செய்யப்பட்ட துகிலை அணிந்த அல்குல் என்க. அல்குல் - ஈண்டு இடையின் பின்புறம் என்க.

௧௧௯. இலைப்பூண் - இலைத்தொழிலாற் சிறப்புற்ற அணிகலன், முலை கவைஇ புறம்புதைஇ எனமாறுக. கவைஇ - அகத்திட்டு. புதைஇ - மறைத்து.

கஉ0. பொற்கொடி இழை - பொன்னாலியற்றிய நீண்ட அணி கலன். நற்கு - நன்கு. கஉக. ஏகவுத்தரியம் - ஒப்பற்ற மேலாடை

கஉக. இடையையும் சுவலையும் வருத்த என்க. சுவல் - பிடர்.

கஉஉ. வட்டுடை - முழந்தாளளவாக உடுப்பதொரு ஆடை. ஈண்டு உள்ளாடையைக் குறித்து நின்றது. கலாபம்-பதினாறுகோவை மணிவடம்.

கஉச. இயைந்தணி - இயைந்த அணி என்க. ஏன்ற-இயன்ற. அ - அழகு.

கஉஎ. இன்பத்திற்குக் காரணமான காமன் என்க.

கௗ0. சென்னம் - ஒப்பனை.

கௗக. வரை இகல் மார்பன் என்க. இரீஇய - இருத்திய.

[கௗஉ-கூ: மணமக்கள் பாற்சோறுண்ணல்.]

**கௗஉ - கௗகூ: அகல்மனை காவல்..........ஆர்ந்தபின்.**

(பொ-ரை.) அகன்ற அம்மங்கல மனைக்குப் பாதுகாவலாக மகளிரை நான்முறைப்படி வாளோடு நிறுத்தி எட்டுத் திசைகளிலும்கடல் அலைபோன்று வண்ணப்பூந்திரைகளை வளைத்துக் கழிகளிலே கட்டி எழுதிய சித்திரத்தின் முடியிலே கோத்து நாற்றிய முத்தமாலைகள் தம் முடியிடத்தை வருடா நிற்பப் பொருந்திய நல்ல முழுத்தத்திலே பொன்னாலியற்றிய அழகிய உண்கலங்களிலே இனிய பாற்சோற்றை உண்டபின்னர் என்க.

(வி - ம்.) கௗஉ. அகன்மனை என்றும் பாடம் - மனை என்ற பாடமே சிறந்ததாம். மங்கலமனைக்குக் காவலாக மகளிரை வாளோடு நிறுத்துதல் சீவக சிந்தாமணியினும் கண்டது அது.

"வெள்ளுருவ மாலை வடஞேம் இருவர் மின்போல் ஒள்ளுருவ வாள் உருவி நின்றார்" (சீவக. உச அஅ) எனவருதல் அறிக.

ஆற்றுளி - விதிப்படி. இவர்திரை - காற்றால் இயங்கும் கடலலை. இஃது காற்றான் அசையும் கண்டத்திரைச் சீலைக்குவமை.

கௗச. கண்டப்பூந்திரை - பலவண்ணத்திரைச்சீலை. காழ் - கழி. கௗரு. கம்மம் - ஆகுபெயர். ஓவிய உருவம். கம்மத்தின்கண் முழுதாகக் கோத்த முத்தமாலை தம்முடியை வருட என்க.

கௗஅ-கூ. தங் கைத்தொழிலைக் கூரிதாகக்கற்ற சதுரப்பாடுடைய கம்மியரானே பொன்னாலியற்றப்பட்ட நல்ல உண்கலத்திலே என்க.

கௗஎ. ஓரை - முழுத்தம். கௗகூ. இன்பதம் - இனிய பாற்சோறென்க.

[கசுO-கூO. அந்தணர் வாழ்த்துதல்]

கசுO - கசுகூ: மணியறைந் தன்ன...........அந்தணர் ஈண்டி.

(பொ-ரை.) நீலமணியைப்பதித்துவைத்தாற்போன்ற கரிய நிறமாட்சியோடே வலம் சுரிந்த குஞ்சியின் அமைதிக்குத் தகப் பொற்பூவோடே பிணைக்கப்பட்ட மல்லிகை மாலையினைச் செருகிய திருத்தமுடைய சிகையினையும், மணிக்குழையையுடைய காதினையும், நறுஞ்சாந்தினையும், தானையினையும், உடைய அந்தணர் பலர் மன்னன் மகனுக்குச் செய்யவேண்டிய பொருள்களானே குறைவிலராய் வந்து குழுமி என்க.

(வி-ம்.) கசுO. மணி - நீலமணி. மாண் - மாட்சிமையுடைய. கசுக. அணி - அழகாக. சுரிந்த-சுருண்ட. கசுஉ. பிறை-மல்லிகை மாலைக்குவமை. கத்திகை - மாலை. கசுங. பொற்போது - பொற்பூ. பொற்போதொடு பிணைத்த மல்லிகைக் கத்திகை என்க.

கசுச. வாக்கு - திருத்தம். சிகை - குடுமி. பாற்பட - கூறுபட. அடைச்சி - செருகி. செருகித்திருத்தமுற்ற சிகையினையுடைய என்க.

கசுரு. இருமகரமீன் ஒன்றனை ஒன்று கவ்விக் கொண்டிருத்தல் போன்று இயற்றப்பட்ட மணிக்குழை என்க.

கசுசு. தகரம் - மயிர்ச்சாந்தம்.

கசுஎ. ஆனத்தானை? ஆணத்தானை என்றும் பாடம். தானை - ஆடை.

கசுஅ. இறைமகன் - உதயணன். இறைமகனை வாழ்த்துதற் கேற்ற அறிவுச் செல்வமுடையர் எனினுமாம்.

கசுகூ - கஎO: அடித்துகள் ஆற்றி...........முறையறிந் தோதி.

(பொ-ரை.) அடிகளைக் கழுவி மந்திரங்கூறி வாய்பூசித் தந் தொழிலை முடித்தபின்னர் உதயணகுமரனை அணுகி வெள்ளிய மலர் முதலியவற்றை அவ்வுதயணனும் வாசவதத்தையுமாகிய இவர்தம் சென்னியிடத்தே உச்சியின்கண் பெருமையுண்டாகத் தெளித்துக் கைகுவித்து நின்று "காவற்றொழிலோடே பொலிவுடைய தேவர்களும் முனிவர்களும் நும்மைப் பெரிதும் விரும்பினராய் வந்து நுங்கட்கு ஆயுளும் செல்வமும் நுகர்ச்சியும் பொலிவும் அருள்க" என்று மிகவும் வாழ்த்தி மறையின்கண் ஓத வேண்டுவனவற்றை அச்சடங்கு முறையினை உணர்ந்து ஓதா நிற்ப என்க.

(வி-ம்.) கசுகூ. அடித்துகள் ஆற்றி என்றது கால்களைத் தூய்மைசெய்து என்றவாறு. கஎO. மந்திரவிதியின் வாய்ப்பூச்சியற்றி என்றது ஆசமனஞ்செய்து என்றவாறு.

கஎக. தந்தொழில் - தமக்குரிய நியமத்தொழில் என்க.

கஙஉ. தலைவன் - உதயணன். மங்கலச்சடங்காகலின் வெண்ணிற மலர் கூறிற்று. குளிர்ந்த நறிய நெல் என்க.

கஙக. புண்ணியப்புல் என்றது அறுகம்புல்லை.

கஙச. மண்ணுர் மணி - கழுவுதல் அமைந்த மணி. மாதர் - வாச வதத்தை.

கஙரு. சென்னியிடத்தே உச்சி என்க. சேடு - பெருமை; அழகு மாம்.

கஙஎ. அமர்வனர் - விருப்பமுடையோராய்.

கஙஅ. பொலிவு - அழகுடைமை; புகழுடைமையுமாம்.

கசo. வேதத்துட் கூறப்பட்ட செயல்முறை என்க. ஓதி என்ப தனைச் செயவெனெச்சமாக்குக.

[கசுக - கஅஉ: மயிர்வினைஞன் மாண்பு.]

கருக - களக: மின்வாள் அழித்த................பூசனை கொளீஇ.

(பொ - ரை.) (களஅ) மிக்க நலம் உடையனாகிய நாவிதன் மின்னலின் ஒளியை மழுங்கச்செய்யும் ஒளியுடைய மயிர்க்கத்தி யைக் கையிலெடுத்து "வேந்தன் பலகாலும் பொலிக!" என்று வாழ்த்தி உதயணகுமரனின் சென்னியின் வலப்பக்கத்தைத் தீண்டிப் பின்னர் எஃகும் இரும்பும் சம நீர்மையாக வைத்து இலக்கணம் பிழையாதபடி இயற்றப்பட்ட அம்மயிர்க்கத்தியைப் பட்டும் பருத்தியுங்கலந்து நெய்ததொரு துணியினாலே துருவை யும் கிழிப்பினையும் போக்கி எண்ணாள் திங்களை ஒத்த சாணைக் கல்லிலே விழிப்புடன் தீட்டி வெள்ளிய துகிலின்மேல் முறையாகப் புரட்டிப்பின் தனது செவ்விய கையினும் புரட்டி அதற்குப் புண்ணிய நீரானே பூசனை செய்து என்க.

(வி - ம்.) கசக. மேதகு கைவினைப் பொன்வாள்—மேன்மை தக்கிருக்கின்ற கைத்தொழிற்றிறமமைந்த பொன்வாள் என்க. பொன் வாள் என்றது மயிர்க்கத்தியை.

கசஉ. பன்மான் - பலகாலும். கசங. சென்னியின் வலப்பால் என்க. தீட்டி - தீண்டி.

கசரு-கி. எஃகும் இரும்பும் நிறைசமமாக அமையுந்தன்மையவாக அளந்து உருக்கிச் செய்யப்பட்ட இலக்கணம் பிழையாத அவ்வாளினை என்க. கசுசு. பஞ்சும் பட்டும் கலந்து நெய்த கிழியானே என்க.

கசுஎ. பசிய ஒளி வீசித்திகழும் அரைத்திங்களின் உருவிற்றாகிய கல் என்க. என்றது சாணைக்கல்லை. கசுஅ. அங்கேழ்க்கல் - அழகிய நிறமமைந்த கல். அறிந்து என்றது - விழிப்புடன் என்றவாறு. கசுகூ. வெங்கேழ்த்துகில்-விரும்புதற்குக் காரணமான நன்னிறமுடைய துகில். களo. சிறப்பப் பாராட்டி என்க. பாராட்டுதல் கூர்ந்து நோக்கி நன்றென மதித்தல். கையிற் புரட்டிப் பாராட்டி என்க.

கஎ0. நாவிதனுடைய கையின் நன்மை கூறுவார் செங்கேழ்க் கையில் என்றார். கஎக. ஆசறு நறுநீர் என்றது அந்தணராலே மந்திர மோதித் தூய்மைசெய்யப்பட்ட புண்ணியநீர் என்றவாறு. கொளீஇ - கொள்வித்து; கொடுத்து என்றபடியாம்.

கஎஉ - கஅ0: வாட்டொழில்........முடித்தபின்.

(பொ - ரை) கத்தியினலே செய்யாநின்ற மயிர்வினை யின்கண் பிழைப்பின்றி வன்மையோடே பேரழகாலே பொலி வுற்ற முகத்தியல்பினுக்குப் பொருந்தும்படியாக, மூரிகொள்ளா தவனாய், விரைதல் இலனாய்க் கொட்டாவி கொள்ளானாய், மறந்தும் அயலாரை நோக்காதவனாய், அழகுபொருந்திய நெடுந் தகையின் குறிப்பினின்றும் பிறழாதவனாய்க் கண்ணானும் மனத் தானும் கையானும் செய்தமைத்த தொழிலின் முடிவினை வகுத்த (பின்னர்)..........பிறரை எஞ்ஞான்றும் எதிர்த்து நோக்குதலை செய்யாத வாசவதத்தையின் முகத்தினையும் (புருவ மொதுக்குமாற்றானே) திங்கள் மண்டிலத்தின் களங்கத்தினை அகற்றினாற்போல இயற்கையினமைந்த ஒளி மேலும் நன்கு விளங்கும்படி தன் தொழிலைச் செய்து முடித்தபின்னர் என்க.

(வி - ம்.) கஎஉ. வாட்டொழிற் கம்மம் என்றது நாவிதன் தொழிலை. கஎரு. சேட்டெழில் - பேரழகு. திருமுகக்கு - திருமுகத் திற்கு; சாரியை பெறாது உருபு புணர்ந்தது. கஎச. மூரி - திமிர்ப்பு. ஆவி - கொட்டாவி. அயர்ந்தும் - மறந்தும். கஎகூ. சீர் - அழகு. நெடுந்தகை - உதயணன். செவ்வி - குறிப்பு. கஎஎ. கண் முதலிய மூன்று கருவிகளானும் செய்தமைத்த மயிர்த்தொழில் என்க. கஎஅ. மண்ணுவினை - பண்ணும் தொழில். கஎகூ. எல்லை - முடிவு. கஅ0. இலங்கிழை - வாசவதத்தை. இங்ஙனம் மணமகட்கு மயிர் வினைச் சடங்கியற்றும் வழக்கத்தை,

"அகிலின் ஆவி தேக்கிடுங் குழலினாளை நோக்கலன், நுனித்து நொய்தா இடக்கவுள் உறுத்தினானே" எனவரும் சீவகசிந்தாமணி யானும் (உசகரு) உணர்க.

கஅக - ககூகூ: அடிவினைக் கம்மியர்...........முடித்த பின்றை.

(பொ - ரை.) ஓசையுண்டாக அடிக்கும் தொழிலையுடைய கம்மியர் செய்த பலவாக அடுக்கப்பட்ட உயர்ந்த அழகுடைய தலைக்கோல முதலிய அணிகலன்கள் ஒள்ளிய ஒளியுடனே திகழும்படி கொல்லியினலே மாசறத் துடைத்தும், சிவந்த அடியின் அழகுக்கேற்பப் பாதித் திங்கள்போல நகத்தினைக் குறைத்தும், அழகும் நிறமுமுடைய கல்லினலே நல்ல நிறம் பெறும்படி தேய்த்தும் விரலிலே எடுத்துக்கொண்ட வெள்ளிய நுண்ணிய மணப்பொடியினை முகத்திற்றடவித் திங்கள் ஒளி யினும் மிக ஒளிபெறும்படி நிறமுண்டாகத் தேய்த்தும் பின்னர் நேரிய துகிலாலே துடைத்தும், இயல்பாகவே தாமரையின்

அகவிதழ் போன்று சிவந்துள்ளனவாயினும் மேலும் கண்டோர் வியக்கும்படி தமது ஒப்பனைத்திறத்தானே செம்பஞ்சியினலே அழகிய நிறமூட்டியும் பரப்பு முதலிய குற்றமில்லாதபடி வில் முதலிய வடிவினவாகிய தொய்யில் எழுதியும் இவ்வாறாக உறுப்புக்களைத் திருத்துதலும் கோலஞ்செய்தலுமாகிய இரு வகைத் தொழிலானும் அத் தொழில்வல்லோர் செய்து முடித்த பின்னர் என்க.

(வி - ம்.) கஅரு. வெடிபட அடிவினைக் கம்மியர் என மாறுக. கோலம் : ஆகுபெயர்; தலைக்கோல முதலிய அணிகலன் என்க. அவை அடுக்கிச் செய்யப்படுவன ஆதலால் அடுக்கிய கோலம் என்ருர்.

கஅரு. கொல்லி - துணி; அணிகலன்களை மாசுநீக்குமொரு கருவி. வசை - அழுக்கு.

கஅசு. மதிப்பாகு - பாதித்திங்கள், மதியின் கூறுகிய பிறைத் திங்களுமாம்.

கஅஎ. இரீஇய - இருந்த.

ககக. உரிஞ்சி - தேய்த்து.

ககஉ. அரத்தப் பஞ்சி - செம்பஞ்சி.

ககசு. பரப்பு முதலியன குற்றங்கள்.

ககஎ. சார்ங்கம் - வில்.

ககஅ. உறுப்புக்களைத் திருத்துதலும் புனைதலுமாகிய இருவகை ஒப்பனைத் தொழிலும் என்க.

ககசு - உ0ரு : பல்லோர்............மயிர்வினை மகிழ்ந்தென்.

(பொ - ரை.) பலரும் பேரணிகலன்களாகிய பொருள்களை நிரம்ப வழங்கி விருப்பமிக்க உள்ளத்தவராய் வேந்தே! "நீ நின் தேவியொடு இவ் வுலகத்தின்மேல் எண்ணுவரம்பறியாத இன்பமும் செல்வங்களும் பெற்று அன்பினூடே மகிழ்ந்து தேவர்கள் பாதுகாவாநிற்ப நெடுழி நிலைபெறுக!" என வாழ்த்தாநிற்ப உடன் மயிர்களைதல் என்னும் சடங்கு முடிந்தது என்க.

(வி - ம்.) உஉ0. அருங்கல வெறுக்கை: பண்புத்தொகை. அருங் கலம் - பேரணிகலம். வெறுக்கை - பொருள்.

உ0க. அன்னவை - எண்ணுவரம்பறியாச் செல்வங்கள். செய்யுளாகலின் சுட்டு முதலில் வந்தது. செல்வத்தூடேயும் அவை கலந்த அன்புடைமையின் ஊடேயும் மகிழ்ந்து நீடு மன்னுக என்க.

சு. ஆறந்திங்கள் உடன்மயிர் களைந்தது முற்றிற்று.

---

# ரு. மண்ணுநீராட்டியது

இதன்கண் - உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் மங்கல நீராட்டிற்குரிய நறுநீர் கொணரும்படி சான்றோர் பணித்தலும், நீர்கொணர்தற்குப் பொற்குடங்களைக் கொண்டுசெல்லும் சிறப்பும், பதினாறு வகை மங்கலப் பொருள்களையும் ஏந்திச் செல்லுதலும், மங்கலநீர்க்குளத்தின் மாண்பும், அதன்கண் நீர்முகந்து கொணருதலும், உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் சான்றோர் நெய்யணிதலும், இருவரையும் நீராட்டலும், மகளிரும் மைந்தரும் நீராடலும், உதயணனையும் வாசவதத்தையையும் ஒப்பனை செய்தலும் பிறவும் கூறப்படும்.

மயிர்வினைக் கம்ம மரபுளி முடித்தபின்
வயிரக் கோடுங்குழை வார்ந்த காதிற்
பெருமகன் ஆடும் பீடுகெழு சிறப்பின்
திருமண்ணு நறுநீர் விரைவதின் வருகென
உருமண் ணுவாவோடு வயந்தகற் குரைப்ப
ஐம்பெருங் குழுவும் எண்பேர் ஆயமும்
மன்பெருஞ் சுற்றமும் வம்ப மாந்தரும்
நிலையிடம் பெறாஅர் நெருங்குபு செற்றித்
தலையிட மருங்கின் தமனியத் தண்குடம்
ஆயிரத் தோரெட் டணிமலர் வாய
முத்துத் தாமமொடு பொற்புரி அணிந்து
வித்தகர் புனைந்த சித்திர நெடுங்குடை
எண்ணறுங் கோலமொடு கண்ணுறக் கவிப்பக்
காரிகை வனப்பிற் கன்னி மகளிர்
சீர்கெழு மெல்விரல் செறியப் பற்றி
இடுமணி யானை இரும்புறத் திருப்பப்
படுகண் முழவொடு பல்லியங் கறங்க
ஏம முரசம் இழுமெனச் சிலைப்பக்
காமர் சங்கம் வாய்வதின் முழங்க
வரித்த பூங்கொடி விரித்துவிசும் பிவரப்
பத்திரப் படாகை பலவயின் நுடங்கச்
சாதிங் குலிகமொடு சமரம் ஒழுகிய

மேதகு முளைக்காற் கோதை துயல்வரக்
குத்துமுளை செறித்த வித்தக விதானத்துத்
தண்ணெழில் நடுவண் நுண்எழில் நுனித்த
அயின்முனை வாளும் வயிரத் தோட்டியும்
கோற்றக் குடையும் போற்பூங் குடமும்
வலம்புரி வட்டமும் இலங்கொளிச் சங்கும்
வெண்கண் ணுடியும் செஞ்சுடர் விளக்கும்
கவரியுங் கயலுந் தவிசுந் திருவும்
முரசும் படாகையும் அரசியல் ஆழியும்
ஒண்வினைப் பொலிந்த ஓமா லிகையுமென்(று)
எண்ணிரண் டாகிய பண்ணமை வனப்பிற்
கடிமாண் மங்கலங் கதிர்வளை மகளிர்
முடிமிசை ஏந்தி முன்னர் நடப்ப
வேலும் வாளுங் கோலுங் கொண்ட
காவல் இளையர் காவல் கொள்ள
மருப்புநிலைக் கந்தின் இருப்பெழுப் போக்கி
வயவர் காக்கும் வாயிற் செல்வமொடு
கயவர் துன்னுக் கட்டிற் ருகிப்
படையமை இட்டிகைப் பாடமைப் படுகால்
இடமமைத் தியற்றிய ஏந்துநிலைக் கோணத்துக்
கழறுகால் அமைத்த கட்கின் வாவியுள்
நிழல்திகழ் தெண்ணீர் நீலஞ் சூழ
பறவைத் தொழுதிப் பக்கம் நீக்கி
நிறைய முகந்து முறைமையின் ஏந்தி
ஐஞ்ஞூற் றிரட்டி அணியிதழ்த் தாமரைச்
செந்நீர் போதொடு செறிய வீக்கிப்
பூஞ்சுமட் டிரீஇப் போற்றுவனர் தந்த
தேங்கமழ் நறுநீர் திறவதின் பற்றிப்
பணைமுர சியம்பும் படைப்பெரு முற்றத்துத்
துணைநலத் தோழர் துன்னினர் சூழா
மண்ணுநீர் ஆட்டின் மலைந்தனர் ஆகி
வண்ண மணியும் வயிரமு முத்தும்
இட்டன கொள்ளும் முட்டிலர் ஆதலின்
வான மீனின் வயின்வயின் இமைக்கும்

தானந் தோறுந் தகைபெறக் குழீஇ
வித்தகர் வரித்த சித்திர நகர்வயிற்
பொற்பெரும் படுமணை முத்தோடு விரவிச்
சாலியும் உழுந்துங் கால்வழிப் பரப்பிப்
பாஅய் அமைந்த பின்றைச் சேஎய்க்
செவ்வியிற் சேர்ந்து சிறப்பொடு வணங்கி
எவ்வழி யோரும் ஏத்தினர் எதிர்கொள
அவ்வழி இரீஇய பின்றை, மெய்பெறச்
சங்கினும் பாலினுஞ் சலமில் வாய்மை
விழுத்திணைப் பிறந்த ஒழுக்குடை மரபினர்
நெய்தலைப் பெய்தற் கெய்திய சிறப்பணி
ஏந்திய சென்னி மாந்தர் கூடி
அறுகைப் புல்லினும் வாகைத் தளிரினும்
நறுநெய் தோய்த்து முறைமுதல் நீவி
நின்னோ ரன்ன நீப்பருங் காதல்
பொன்னணி புலவரொடு செம்மலை யாகிக்
கொற்றங் கொண்டு கோலினி தோச்சென
வெற்ற வெள்வேல் வீரியற் புகழ்ந்து
மடவரன் மாதரை மணம்புரி காதலற்(கு)
இடவயின் இருத்தல் கடவ தாகலிற்
றங்கரச் செல்வந் தலைத்தலை தரூஉம்
மங்கல மணைமிசை வெண்டுகில் புதைஇ
இருக்கை திருத்திய பின்றைத் திருத்தகு
மறுவில் தோல்குடி மங்கல மடந்தையர்
நறுவெண் சாந்தின் நன்னலங் குயிலக்
கொடிபல எழுதிய கோலத் தோளினர்
முடிமிசை அணிந்த முல்லையங் கோதைக்
கொடுங்குழை திளைக்குங் காதினர் கடுங்கதிர்க்
கலாவம் புதைத்த நிலாவெண் துகிலினர்
நரைபுரை கலிங்கம் ஒருமுலை புதைப்பத்
திருக்கொடிச் சாலி செம்பொன் வாகையென்(று)
ஒருப்படுத் தூழ் முறைமையின் ஏந்தி
நானங் கலந்த நறுநெய் தோய்த்துத்
தானந் தோறுந் தலைமுதல் உறீஇக்

கோண்டோன் வேட்குங் குறிப்பினை யாகித்
தண்டாப் புலமோடு மகளிரைத் தழீஇத்
திருமனைக் கிழமையின் ஒருமீக் கூறிக்
கற்புமேம் படீஇயர் பொற்றொடி பொலிந்தென
நற்பல கிளவி பற்பல பயிற்றி
நெய்தலைப் பெய்த பின்றை மெய்வயின்
மென்மையு நேயமு நன்மையு நாற்றமும்
ஒருநாட் பூசினும் ஓரியாண்டு விடாஅத்
திருமாண் உறுப்பிற்குச் சீர்நிறை அமைத்துக்
கரும வித்தகர் கைபுனைந் தியற்றிய
வாச வெண்ணெய் பூசினர் போற்றி
நூல்வழி நுனித்த நுழைநுண் ணுணர்வினர்
நால்வகைக் கோலத்து நால்வகை மாக்கள்
தாமரை முகய தமனியக் குடநீர்
தாமுறை சொரிந்துதம் முறைமையின் ஆட்டிச்
செய்த கோலஞ் சிதைய மறலிப்
பெய்தல் நாடிப் பேதையர் பிணங்கி
அத்தின் எறிந்து முத்துப் பரிந்திட்டும்
சித்திர நுண்டுகில் சேர்ந்த அல்குற்
பத்திப் பல்காசு பரிந்தனர் உகுத்தும்
கோதை பரிந்துங் குடநீர் தூயும்
மானேர் நோக்கியர் ............ ...........
போதுவிரி பொய்கையுட் புக்கனர் புரிந்தும்
குளித்த மகளிரொடு திளைத்தல் ஆனார்
குடைந்த வெண்ணுரை குடங்கையின் வாரித்
தடங்கண் சிவப்ப எறிதலின் நடுங்கி
விம்முவனர் தளர்ந்து மென்மேல ஒதுங்கிக்
கூந்தல் சோரப் பூந்துகில் அசைஇ
வேந்தன் மகளோடு விளையாட்டு விரும்பி
வண்ண மகளிரு மைந்தரு மயங்கி
மண்ணுநீ ராட்டின் மரபுளிக் கழிந்தபின்
திருமணுத் தானம் பெருமண் உள்ளிட்டு
மண்ணுறு மணியு மாலையுந் தூசும்
கண்ணுற மொய்த்த கழிபேர் அவாவினின்(று)

ஏற்கு மாந்தர்க் காற்ற வீசிப்
பூவினுட் பொலிந்த தாமரை போலத்
தாவில் அணியின் தான்மீக் கூரிய
அறுவைக் கோதிய ஐவகை வண்ணத்துத்
துறைவிதி நுனித்த தூத்தொழி லாளர்
கண்துளங் கவிரொளிக் கழுஉநிறம் பெறீஇய
வெண்டுகில் இணைமடி விரித்தனர் உடீஇச்
செய்த கோலத்துச் சித்திரங் காண
வெய்யோன் கதிரொளி வீசுவளி நுழையா
இரும்பணி பெற்ற அரும்பணைப் படுகால்
மேற்புறம் அமைந்த விளங்குமணி வேயுள்
யாப்புறு மண்டபத் தாசனத் திரீஇக்
கோப்புறு விழுக்கலம் ஏத்துவனர் காட்டிக்
கனமணி முடியுங் கதிர்முத் தாரமும்
இனமணிப் பூணும் ஏக வட்டமும்
வயிரக் குழையும் வல்வினைப் பொலிந்த
நெடுந்தோள் வளையுங் கடுங்கதிர்க் கடகமும்
நாமர வளியுங் காமர் கைவினைச்
சித்திரப் பிணையலும் பத்திரச் சுரிகையும்
பத்திக் கச்சினொ டொத்தவை பிறவும்
ஆரணங் காகிய பேரணி கலங்களும்
உழைப்பெருஞ் சிலதியர் பிழைப்பிலர் நீட்ட
அருவரை பிளந்த அஞ்சுவரு நெடுவேல்
ஒருவலத் துயரிய பொருவில் புட்கொடித்
தளைஅவிழ் நறுந்தார்த் தனக்கிணை இல்லா
இளையவன் படிவம் ஏற்ப இயல்புறீஇச்
சித்திர இருநிதிச் செந்நெறி நுனித்த
வித்தக வினைஞர் தம்முடன் வந்து
வடிவு கண்டிடும் வத்தவர் பெருமகன்
ஒடிவில் வென்றி உதயண குமரன்
ஒருமெய் சேர்ந்திவை பெருமை பெறுகென
அருளின் அணியின் அல்லதை இவற்கிவை
உருவென அணியா உறுப்புமுதல் அணிதலிற்
புண்ணிய முடையவிப் பொன்னணி கலனென

எண்ணிய நெஞ்சமோடு நண்வினைப் பொலிந்த
கோல வித்தகர் வாலணி புனைய
ஆராக் காதல் அவந்திகை தன்னையும்
நீராட் டிடத்தின் நீக்கி நடுவிற்குப்
பாரம் ஆகிய பல்காசு புதைஇ
ஈர நுண்டுகில் அகற்றி ஏருடைக்
கோடிப் பூந்துகில் கொய்து விளிம்புரீஇச்
சேடார் அல்குல் சேடுபட உடீஇ
வல்லவர் வகுத்த மல்வினை நகர்வயின்
பொன்மணைப் பொலியப் பொற்றுவனர் இரீஇ
நன்மணக் கோலத்துக் கைந்நல நுனித்த
அங்கலுழ் பணைத்தோள் மங்கல மகடூஉக்
கட்டிய கச்சையள் கைவிரல் கூப்பி
நெட்டிருங் கூந்தல் நீரற வாரிப்
பன்னுமுறை விரித்துப் பின்னுபு தொகுத்துக்
கோட்டிடை வளாஇய குஞ்சரத் தடக்கையிற்
சூட்டொடு விரைஇச் சுற்றுபு முடித்துப்
பத்திப் பலகைப் பரிசரக் கைவினை
வித்தகப் பத்தி வேறுபட விரித்தவை
ஒழுக்குமுறை அறிந்து வழுக்கிலள் வைத்து
முடிக்கல முதலா முறைமுறை தோன்றும்
அடிக்கலம் ஈறு அணிந்தழகு பெறீஇ
வாச நறுஞ்சாந்து வகைபெறப் பூசி
மாசில் திருமகள் வண்ணம் பழிப்பதோர்
கோலஞ் செய்து கோண்டகம் புக்குக்
கடிநகர் வரைப்பிற் கல்லென் சும்மையோ(டு)
அடிசில் அயினி ஆர்பதம் அயின்று
மன்பெரும் போகத்து மகிழ்ந்துவிளையாடி
இன்புற் றனரால் இருவரும் இயைந்தென்.

---

## ரு. மண்ணு நீராட்டியது.

*அஃதாவது, மயிர்வினை மங்கலமுடிவுற்ற பின்னர், உதயண குமரனையும் வாசவதத்தையையும் மங்கல நீராட்டிய நிகழ்ச்சியினைக் கூறும் பகுதி என்றவாறு.*

## உரை

க - ரு : மயிர்வினைக்.....................வயந்தகற் குரைப்ப.

(பொ - ரை.) இங்ஙனமாக மயிர்வினைச்சடங்கு முறைப்படி நிகழ்ந்த பின்னர்க் குழைபொருந்திய செவியினையுடைய பெருமகன் மங்கல நீராடுதற்குரிய பெருமையினையுடைய மங்கல நறுநீர் இனி விரைவாக வருவதாக என்று சான்றோர் உருமண்ணுவாவிற்கும் வயந்தகனுக்கும் அறிவுறுத்தா நிற்ப என்க.

(வி - ம்.) க. மரபுளி - முறைப்படி. உ. வயிரமணியாலே இயற்றிய வளைந்த குழை என்க. வார்ந்த - நீண்ட. ங. பெருமகன்- உதயணகுமரன். பீடு - பெருமை. ச. திருமண்ணுநீர் - மங்கல முழுக்குக்குரிய நீர். விரைவதின் - விரைவாக. வருக என்று சான்றோர் அறிவுறுத்தா நிற்ப என வினைமுதல் வருவித்தோதுக.

[சு - உரு. நீர்க்குடம் செல்லும் சிறப்பு.]

சு - கசு : ஐம்பெருங் குழுவும்...................இருப்புறத் திருப்ப.

(பொ - ரை.) ஐம்பெருங்குழுவினர் முதலியோர் நிற்றற்கும் இடம்பெறாராய் மிகவும் நெருங்காநிற்பவும் பேரழகுவாய்ந்த கன்னி மகளிர் அழகிய அலர்ந்த தாமரை மலரின் வடிவுபடச் செய்த வாயினையுடையவாகிய ஆயிரத்தெட்டுத் தண்ணிய பொற்குடங்களைத் தமது அழகிய மெல்விரலானே தலையிடத்தே பற்றிக் கொண்டு யானையின் கரிய முதுகின்கண்ணே வீற்றிருப்பவும், வித்தகரானே முத்துமாலை முதலியன அணிந்து இயற்றப்பட்ட சித்திரத் தொழிலையுடைய நெடிய குடைகள் கருதுதற்கரிய ஒப்பனைகளோடே கண்ணுக்குப் பொருந்த நிழற்றுநிற்பவும், என்க.

(வி - ம்.) சு. ஐம்பெருங்குழு: அமைச்சர் புரோகிதர் சேனாபதியர் தூதுவர் ஒற்றர் எனுமிவர். என்னை,

"அமைச்சர் புரோகிதர் சேனாபதியர் தவாத்தொழில் தூதுவர் சாரணர் என்றிவர், பார்த்திபர்க்கு ஐம்பெருங் குழுவெனப்படுமே" (சிலப். ரு: கடுஎ - சு0. அடியார் - உரை மேற்.) என்பவாதலின். எண்பேராயம் : கரணத்தியலவர் கருமகாரர் கனகச்சுற்றம் கடைகாப்பாளர் நகரமாந்தர் நளிபடைத் தலைவர் யானைவீரர் இவுளி மறவர் என்னுமிவர்.

இனி, "சாந்துபூக் கச்சாடை பாக்கிலை கஞ்சுகநெய்
ஆய்ந்த இவர்எண்மர் ஆயத்தார் - வேந்தர்க்கு
மாசனம்பார்ப் பார்மருத்தர் வானிமித்த ரோடமைச்சர்
ஆசி லவைக்களத்தார் ஐந்து"

எனக் காட்டுவாரும் உளர்.

எ. மன்பெருஞ்சுற்றம் - அரசனுடைய உறவினர்-வம்பமாந்தர். புதியவராக வந்த மாந்தர். வம்பு - புதுமை.

அ. நெருங்குபுசெற்றி - மிகவும் நெருங்கி என்க: ஒருபொருட் பன்மொழி. செற்றி என்னும் எச்சத்தைச் செற்ற எனத் திரித்துக் கொள்க.

கூ. (கூ) மெல்விரலானே தலையிடமருங்கிற் செறியப்பற்றி என இயைத்துக்கொள்க. தலையிடமருங்கு - குடத்தின்றலையின்கண் என்ற வாறு. தமனியம் - பொன்.

கO. பூவிற்குத் தாமரையே என்பவாகலின் அணிமலர் என்பது தாமரைமலர் என்றாயிற்று. தாமரைமலர் போன்றியற்றப்பட்ட வாயை யுடையனவாகிய ஆயிரத்தெட்டுக் குடம் என்க.

கச. காரிகை வனப்பு: ஒருபொருட்பன்மொழி; பேரழகென்க.

கரு. இடுமணி - இட்ட (கட்டிய) மணி. இரும்புறம் - கரிய முதுகு.

கஎ - உச: படுகண்....................விதானத்து.

(பொ - ரை.) மத்தளமுதலிய இன்னிசைக் கருவிகள் முழங்காநிற்பவும், காவல் முரசம் இழுமென முழங்கவும், சங்கம் முழங்கவும், அழகிய கொடிகள் வானிடத்தே விரிந்து ஆடா நிற்பவும், மங்கலக் கொடிகள் ஆடாநிற்பவும், செவ்வரக்கானே நிறமூட்டப்பட்டுச் சாமரைபோன்று தூங்காநின்ற முளைகளை யுடைய கூலமாலைகள் அசையவும் குத்துக் காலிடத்தே செருகப் பட்ட சித்திரத் தொழினலமமைந்த குளிர்ந்த நடைப்பந்தரின் கீழே என்க.

(வி - ம்.) கஎ. படுதல் - தோன்றுதல். இசைதோன்றுதற் கிட மான கண்ணையுடைய முழவம் என்க. பல்லியம் - பலவாகிய இசைக் கருவிகள். கறங்க - முழங்க. கஅ. ஏமம் - காவல். இன்பமுமாம். இழும்: ஒலிக்குறிப்பு. சிலைத்தல் - முழங்குதல். கக. காமர்-அழகு. வாய்வதின் - வாய்ப்புடையதாக.

உO. வரித்த - சித்திரமெழுதப்பட்ட. இவர - அசைய. உக. பத் திரப்படாகை-மங்கலக்கொடி. பலவயின்-பலவிடத்தும். உஉ. சாதிங் குலிகம் - சாதிலிங்கம். சமரம், சாமரை: இது, நெல் முதலியவற்றின் கதிர்க்குஞ்சங்கட்கு உவமை. தூக்கிச் செல்ல வேண்டுதலானே குத்துக் காலிற் செருகப்பட்ட விதானம். இஃது இயங்கும் பந்தர்; இதனை நடைக் காவணம் என்றும் கூறுப. தண்ணெழில் விதானத்து நடுவண் என மாறுக.

[உரு - கஎ: மங்கலங்கள் பதினாறும் ஏந்திவரும் மகளிர்.]

உரு - கஎ: தண்ணெழில்....................கொள்ள.

(பொ-ரை.) வாள் முதலிய பதினாறுவகை மங்கலப் பொருள்களையும் ஒளியுடைய வளையலையணிந்த மகளிர் தம் முடிமேல் ஏந்தி முற்பட நடவாநிற்பவும், வேல் முதலிய படைக்கலன்களை ஏந்திய காவன்மறவர் தங்காவற் றொழிலை மேற்கொண்டு வரவும் என்க.

(வி - ம்.) மங்கலங்கள் பதினறுவன: வாள், தோட்டி, குடை, பொற்குடம், ஆலவட்டம், சங்கு, கண்ணாடி, விளக்கு, சாமரை, பொன் மீன், பொற்றவிசு, பொன், முரசு, கொடி, சக்கரம், ஓமாலிகைத்திரள் என்பன.

உகு. நுண்எழில் நுனித்தவாள், அயின்முனைவாள் எனத்தனித் தனிக் கூட்டுக. நுண்ணிய அழகுடையதாகச் செய்யப்பட்ட வாள், கூர்முனைவாள் என்க. உரு. தோட்டி - அங்குசம். உஎ. கொற்றம்- வெற்றி. பொன்னாலாகிய அழகிய குடம் என்க. உஅ. வலம்புரி வட்டம்-வலம்புரி வடிவம் பொறிக்கப்பட்டதொரு ஆலவட்டம் என்க. ௩0. கவரி - சாமரை. கயல் - பொன்னாலாகிய கெண்டை. ௩0. திரு என்றது பொன்மணி முதலியன பெய்யப்பட்ட பேழை என்றவாறு. ௩க. படாகை - கொடி. ௩உ. ஒள்ளிய தொழிற்றிறத்தாலே பொலிவுற்ற ஓமாலிகை என்க. அவையாவன:

இலவங்கம் பச்சிலை கச்சோலம் ஏலம் நாகணம் கோட்டம் நாகம் மதாவரிசி தக்கோலம் நன்னாரி வெண்கோட்டம் கத்தூரிவேரி இலாமிச்சம் கண்டில் வெண்ணெய் கடுநெல்லி தான்றி துத்தம் வண்ணக் கச்சோலம் அரேணுகம் மாஞ்சி சயிலேகம் புழுகு நறும்புன்னை நறுந்தாது புலியுகிர் சரளம் தமாலம் வகுளம் பதுமுகம் நுண்ணேலம் கொடுவேரி என்பனவாம். இவற்றின் தொகுதியை ஒருமங்கலம் என்றவாறு.

௩எ. காவலினையர் - காவற்றொழிலையுடையர்; மறவர்.

[மங்கல நீர்க் குளத்தின் மாண்பு.]

௩அ - சரு: மருப்புநிலைக்................வாவியுள்.

(பொ - ரை.) யானை மருப்பினாலே தூண் இயற்றி அத் தூணின்கண் இரும்பினாலே எழுமரங்களமைத்து மறவராலே காக்கப்படுகின்ற வாயிலையுடைத்தாய்க் கயவர்கள் எஞ்ஞான்றும அணுகவியலாத காவலையுடைத்தாய்ச் செங்கல் படுக்கப்பட்ட படித்துறைகள் இயற்றி உயர்ந்த நிலைகளையுடைய அவற்றின் கோணங்களிலே இடித்துரை பொறித்த கம்பங்களையுடைத்தாய்க் காண்போர் கண்ணுக்கினிய அழகிய குளத்தின்கண் என்க.

(வி - ம்.) ௩அ. மருப்பு - யானையின் எயிறு. கந்து - தூண். எழு - தடைமரம். அகத்தே நுழையுங்காலத்து மேலே எழுப்பப்படுதலால் எழு என்பது பெயராயிற்று. "சிப்புள்ளுறுத்துத் திண்ணெழுப் போக்கி" என்றார் (க-சரு: கரு௩.) உஞ்சைக்காண்டத்தும், "எழுவுஞ் சீப்பும் முழுவிறல் கணையமும்" என்றார் இளங்கோவடிகளாரும். (சிலப். கரு: உகரு.)

௩௯. வாயிற் செல்வம் - வாயிலாகிய செல்வம் என்க. அக்குளத்தின் நலத்திற் கேதுவாதல் பற்றிச் செல்வம் எனப்பட்டது.

௪௦. கயவர் - நன்மை தீமை வகுத்துணராது வேண்டியாங்கு வேண்டியாங் கொழுகும் கீழ்மக்கள். துன்னு - அணுகாத. கட்டிற்று- காவலையுடையது.

௪௧. படை - அடுக்கு. இட்டிகை-செங்கல். பாடு - தளம்படுத்தல். படுகாலிடம் - படித்துறையிடம். கோணம் - அப் படித்துறை மூலைகளில்.

௪௨. கழறு கால் - இக்குளத்தின் நீரை மாசுபடுத்துவோர் இத்தண்டனை எய்துவர் என்றுற்போன்ற இடித்துரைகளாலே அச்சுறுத்து மொழிகள் பொறித்து நிறுத்தப்பட்ட தூண்கள் என்க.

"காப்புற வகுத்த கன்னியங் கடிமனை யாப்புற வகுத்த போர்ப் பெருங்கோணத்துக் கழறுகால் அமைத்து" என்றார் உஞ்சைக் காண்டத்தும் (௧ - ௪௯. ௨௬௯-அ.)

௪௩. கட்கின் வாவி - கண்ணுக்கு இனிய குளம்.

[௪௪ - ௯௪. மங்கலநீர் எடுத்து வருதல்.]

௪௪ - ௫0 : நீரல்நிகழ்................நறுநீர்.

(பொ - ரை.) நில நிறம் மிகாநிற்ப நிழலிட்டு விளங்கும் தெளிந்த நீரினைப் பறவையினங்கள் மேலே பறவாமல் அகற்றிப் பாதுகாத்து மகளிர் அப் பொற்குடங்கள் நிறையும்படி முகந்து எந்தி ஆயிரமிதழமைந்த செந்தாமரை மலர்களானே மூடி அவற்றின் தண்டுகளானே இறுகக்கட்டிப் பூவாலாகிய சுமையடையின் மிசை இருத்திப் பாதுகாத்துக் கொணர்ந்து தந்த தேன்மணங் கமழாநின்ற அந்நறிய நீர்க்குடங்களை, (பற்றி என்க.)

(வி - ம்.) ௪௪. நீலஞ்சூழ நிழல்திகழ் தெண்ணீரை என மாறுக. நீர்நிலை ஆழ்ந்திருப்பின் நீர் நீலநிறமாகத் தோன்றுதல் இயல்பு. நீலஞ் சூழ என்றது நீலநிறம் மிக்குத் தோன்ற என்றவாறு. நிழல் - பொருள்களின் எதிருருவம்; (பிரதிபிம்பம்.) இது தெளிவுடைமைக்கு அடை. நிழலிட்டு விளங்கும்படி தெளிந்தநீர் என்க.

௪௫. தொழுதி - கூட்டம். பறவைகள் நீர்க்கு மேலாய்ப் பறந்து நீரினை மலமுதலியவற்றுல் மாசுபடுத்தாமைப் பொருட்டுப் பறவைக் கூட்டத்தை நீக்கி என்பது கருத்து.

௪௭. செந்நீர்ப்போது - சிவந்த நிறமுடைய மலர்.

௪௯. பூஞ்சுமடு - பூவாற்செய்த சுமையடை (சும்மாடு). போற்றுவனர் - பேணுபவராய் : முற்றெச்சம் - போற்றி என்க.

ருo - சுக : நிறவரின்...................பின்றை.

(பொ - ரை.) உதயணகுமரனுடைய தோழர் முரசமுழங்கா நின்ற பெருமுற்றத்திடத்தே இந் நீராட்டுவிழாவின்கண் வினை செய்தற்கண் ஒருவரின் ஒருவர் மாறுபட்டவராய் வந்து சூழுமி இடப்பட்ட மாணிக்கமணி முதலியன இரப்போரிலாமையானே இடந்தோறும் கிடந்து நாண்மீன் போன்று விளங்காநின்ற ஓவியம் பொறித்ததொரு மண்டபத்தின்கண் முத்து முதலிய வற்றைக் கீழே பரப்பி அவற்றின் மேலாய்ப் பொன்னடை யிட்டுப் பரப்பி முடித்தபின்னர் என்க.

(வி - ம்.) ருo. தேங்கமழ் நறுநீர்க் குடத்தைத் தோழர் படைப் பெருமுற்றத்தே தம்முள் மாறுபட்டுப் பற்றி வித்தகர் வரித்த மணி முதலியன இமைக்கும் சித்திரநகர்வயின் முத்து முதலியவற்றைப் பரப்பி அவற்றின்மேலே மணையிட்டுப் பரப்பிவைத்த பின்னர் என் றியைபு காண்க.

ருக. படைப்பெருமுற்றம் என்றது அரண்மனை வாயிலை.

ருஉ. துணைநலத் தோழர் - உற்றுழி, உடுக்கையிழந்தவன் கைபோன்று உதவும் நலமிக்க மெய்நட்பினர், என்க. பணிமாக்க ளிருப்பவும் தோழர்களே இத் தொழில்களை உதயணன் நீராட்டு விழாவின்கண் விருப்பமுடையராய்ச் செய்யாநிற்ப என்பது கருத்து.

ருரு. ஒருவர் செய்யத் தொடங்கியதனை அவரை விலக்கித் தாம் தாம் செய்ய முன்வருதலானே மலைந்தனராகி என்றார். மலைதல் - மாறு படுதல்.

ருச. வண்ணமணி என்றது நிறமிக்க மாணிக்கமணியை. ருரு. இட்டன கொள்ளும் முட்டு இலர் - அந் நாட்டுமக்கள் பிறர் போகட்ட பொருளை எடுத்துக்கொள்ளுதற்குக் காரணமான வறுமையிலர் (ஆகலின் மணி முதலியன இட்டவிடத்தேயே கிடந்து இமைத்தற் கிடமான சித்திரநகர் என்க).

ருஅ. வித்தகர் சூழ்ந்து தானந்தோறும் தகைபெற வரித்த சித்திரங்களையுடைய நகர் என்றியைபு காண்க.

சித்திரநகர் என்றது மங்கலநீராட்டு மண்டபத்தை.

சுo. கால்வழி - அடியின்கண். மணையிட்டு அவற்றின்மேல் முத்து முதலியவற்றைப் பரப்பி அவற்றின்மேல் குடங்களைப் பரப்பி வைத்த பின்னர் என்றவாறு. பாய் - பரப்பி.

சுக - சுச : சேஎய்ச் செவ்வியிற்...........இரீஇய பின்றை.

(பொ - ரை.) முருகனை ஒத்த உதயணகுமரன் ஆண்டுள்ள எத்திறத்தாரும் தன்னைக் கைகூப்பி வணங்கி எதிர்கொள்ளும் படியாக அச் சித்திரநகரின்கட் சென்று இருந்தபின்னர் என்க.

(வி - ம்.) ௬௪. சேஎய் : உவம ஆகுபெயர் ; உதயணகுமரன்.

௬௨. செவ்வி - ஆண்டுச் செல்லவேண்டிய அமயம்.

௬௩. எவ்வழியோரும் - எத்திறத்தோரும் ; என்றது ஐம்பெருங்குழு முதலிய பலவகைப்பட்ட மாந்தரும் என்றவாறு. ஏத்தினர் : முற்றெச்சம். வணங்கி ஏத்தி எதிர்கொள என்க.

௬௪. அவ்வழி - அவ்விடம் ; அச் சித்திரநகரின்கண்.

[௬௫ - ௯௬. உதயணனுக்குச் சான்றோர் நெய்யணிதல்.]

௬௫ - ௭௦ : சங்கினும் பாலினும்............முறைமுதல் நீவி.

(பொ - ரை.) சங்கும் பாலும்போல இன்னல் எய்துங் காலத்தும் தம் பண்பு குன்றாத வாய்மையுடைய உயர்குடிப் பிறந்த நல்லொழுக்கமுடையவரும், நெய்யேற்றுதற் சடங்கிற்குரிய சிறப்பணிகலன்களை அணிந்தவருமாகிய சான்றோர் பலரும் வந்து கூடி, அறுகம்புல்லையும் வாகைத்தளிரையும் நறிய நெய்யிடத்தே தோய்த்து முறைமைப்படி தலையின்மிசைத் தடவி என்க.

(வி - ம்.) "அட்டாலும் பால் சுவைகுன்றாமை போலவும் சுட்டாலும் சங்கு வெண்மை கெடாமை போலவும்," துன்பமுற்ற காலத்தும் தம் நற்பண்பாகிய வாய்மை கெடாத உயர்குடிப் பிறப்பினர் என்பார், 'சங்கினும் பாலினும் சலமில் வாய்மை' என்றார். இந் நலம் குடிப்பிறப்பாலே உண்டாதலின் அதனை உயர்குடிக்கேற்றிக் கூறினார்.

சலமில் வாய்மை என்றது எக்காரணத்தானும் திரிதலில்லாத நற்பண்பு என்றவாறு. பொய்ம்ம திரிபுடைமையில் திரிபின்மையை வாய்மை என்றார்.

"வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரிதல் இன்று" (குறள் - ௯௫௪.)

என்றார் பொய்யா மொழியாரும்.

௬௯. அறுகைப்புல் - அறுகம்புல்.

௭௧ - ௭௯ : நின்னோ ரன்ன............திருத்திய பின்றை.

(பொ - ரை.) வெற்றிவேலையுடைய மறவனாகிய உதயணனை நோக்கி, "நின்னையே அறிவான் ஒத்த நீத்தலில்லாத அன்புடைய புலவர்பெருமக்களோடே கூடித் தலைமைத்தன்மையுடையையாய் வெற்றிகொண்டு செங்கோன்மை நடத்துவாயாக!" எனப் புகழ்ந்து வாழ்த்தி மணமகளை மணமகனின் இடப்பக்கத்தே இருத்துவது முறைமையாகலின் மணமகள் அமர்தற்கு வேண்டிய மங்கலமணையினை அவனுக்கு இடப்பக்கத்தே

இட்டு வெண்டுகில் விரித்து இவ்வாறாக இருக்கை அமைத்து பின்னர் என்க.

(வி - ம்.) எ௦. நின்னையே ஒத்த நீப்பரும் காதலையுடைய புலவர் எனினுமாம்.

எக. அரசன் பெறற்குரிய பேறுகள் அனைத்தினும் தலைசிறந்தது பெரியார்கேண்மையே ஆகலானும், அப் பேறுபெற்றால் ஏனைப் பேறுகள் தாமே வந்து எய்துதல் ஒருதலையாகலானும் நீப்பருங் காதல் புலவரொடு செம்மலையாகி என்று வாழ்த்தினர் என்க.

எஉ. பொன்னாலாய சிறப்பணி அணியப்பெற்ற நல்லிசைப் புலவர், என்க. செம்மலை - தலைமைத்தன்மையுடையை.

எ௩. கொற்றம் - வெற்றி. கோல் - செங்கோன்மை.

எ௪. வெற்றம் - வெற்றி. வீரியன் - உதயணன்.

எ௫. மடவரன் மாதர் என்றது, மணமகள் என்பதுபட நின்றது.

எ௬. தங்கரச் செல்வம் - தீர்த்தங்கரர்க்குரிய செல்வம் என்னும் பொருளில் வந்து முதல் குறைந்த சொல்போலும்.

[எ௬ - க௦௫. மகளிர் வாசவதத்தைக்கு நெய்யேற்றுதல்]

எ௬ - ௬௦ : திருத்தகு மறுவில்..........தலைமுதல் உரீஇ.

(பொ - ரை.) குற்றமற்ற செல்வமிக்க பழைதாகிய உயர் குடிப் பிறப்பினராகிய மங்கலமகளிர் கோலத் தோளினராய்க் குழை திளைக்கும் செவியினராய்க் கலாவம் அணிந்தவராய் வெண் டுகில் உடையராய்க் கலிங்கம் ஒருபால் முலையை மறையாநிற்ப நெற்கதிரையும் வாகைத் தளிரையும் சீர்செய்து முறைமுறையாகக் கையின் ஏந்தி நறுமணங் கலந்த நெய்யின்கண் தோய்த்துத் தலைமுதலாக உறுப்புகள்தோறும் ஏற்றி என்க.

(வி - ம்.) எ௬. திரு - செல்வம். திருவாலே தகுதிபெற்ற தொல்குடி என்க.

அ௦. மறு - குற்றம் ; பழி. தொல்குடி - பழங்குடி ; தொன்று தொட்டு ஒழுக்கம் பேணிவருதலானே உயர்குடியைப் பழங்குடி என்றார். "வழங்குவதுள் வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி பண்பில் தலைப்பிரிதல் இன்று" என்புழி வள்ளுவனாரும் உயர்குடியைப் பழங்குடி என்றோதுதல் காண்க. மங்கல மடந்தையர் என்றது சுமங்கலியர் ஆகிய மகளிர் என்றவாறு.

அக. மங்கலச்செயல் செய்தற்பொருட்டு வெண்சாந்தாலே தொய்யில் எழுதப்பட்ட தோளினர் என்க. நன்னலம் - சிறந்த அழகு. குயில - பொருந்தும்படி.

அஉ. கொடி - கொடியுருவம்.

அ௩. முல்லையங்கோதை - முல்லைமலர் மாலை. இது கற்புடைமைக்கு அறிகுறியாக அணிந்தபடியாம்.

அ௫. கலாவம் - பதினறுமணிக்கோவையாகிய ஓரணிகலன். சரமணிக்கோவையுமாம். அவ் வணிகலனாலே மறைக்கப்பட்ட துகிலினர் என்க.

அ௬. நுரை, நுண்ணிய வெண்டுகிலுக் குவமை. கலிங்கம்-ஆடை.

அ௭. கொடிச்சாலி - ஒருவகை நெற்பயிர்- ஆகுபெயரால் அதன் கதிர்க்காயிற்று. செம்பொன்போன்ற நிறமுடைய வாகைத்தளிர் என்க.

அஅ. அம் மகளிருள்ளும் தத்தம் வரிசைக்கேற்ப ஒருவர்பின் ஒருவராய் முறைமையோடே வந்தென்பார், "ஊழும் முறைமையின்" என்றார். ஊழ் - முறைமை.

அ௯. நானம் - நீராடல்: அஃது ஆகுபெயராய் நீராடற்குரிய நறுமணச் சுண்ணத்தைக் குறித்து நின்றது. "நலத்தகு நானம் நின்றிடிக்கு நல்லவர் என்புழி அஃது சுண்ணமாதல் அறிக" (சிந்தாமணி. நாமக. ௯௩.)

௯0. தலைமுதல் தானந்தோறும் என மாறுக. உறீஇ - உறுவித்து; பெய்தென்றவாறு.

௯௧ - ௯௪ : கொண்டோன் வேட்கும்............பெய்த பின்றை.

(பொ - ரை.) பொற்றொடீ! நீ நின் கணவனை யாண்டும் விரும்புதற்குக் காரணமான குறிப்பினையுடையையாய்க் குறையாத அறிவினை உடையையாய்ப் பிற மகளிரை அன்பானே தழுவிக்கொண்டு மனைக்கிழத்திக்குரிய உரிமையின்கண் மிகவும் உயர்ந்து திகழ்ந்து கற்புடைமையானே மேம்படுக! என்றின்னோரன்ன நன்றாகிய பல வாழ்த்துரைகளைக் கூறி நெய்யேற்றுதலாகிய சடங்கினை நிகழ்த்திய பின்னர் என்க.

(வி - ம்.) ௯௧. கொண்டோன் - கணவன். குறிப்பு - கொள்கை. "பெற்றோற்பெட்கும் பெரும்பிணையாகென" என்றார் பிறரும். (அகநா. அ௬.) இனி, கொண்டோன் நின்னை எஞ்ஞான்றும் விரும்புதற்குக் காரணமான குறிப்புகளை உடையை ஆகென எனினுமாம்.

௯௨. தண்டாப்புலம் - குறையாத அறிவு; நிலம் என்பாருமுளர். மகளிர் - சுற்றத்தாரும் ஏதிலருமாகிய பிறமகளிர் என்க.

௯௩. மனைக்கிழமை - நன்மனைவிக்குரிய உரிமைகள்.

௯௪. மேம்படீஇயர் - மேம்படுக: வியங்கோள் வாழ்த்துதற்கண் வந்தது.

௯௫ - ௧0௫ : மெய்வயின்..........முறைமையின் ஆட்டி.

(பொ - ரை.) மணப்பொருள் கூட்டுந் தொழிலிற் றிறமுடைய வாதிகரானே செப்பஞ்செய்து உறுப்புக்களிலே பூசுதற்பொருட்டுச் சீர்செய்து நிறுத்துச் சரக்குகளை அமைத்து இயற்றப்பட்டதும் ஒருநாள் பூசியவிடத்தும் ஓரியாண்டு விடாது

கமழ்வதும் மென்மை முதலிய பண்புகளையுடையதுமாகிய வாச வெண்ணெயை மெய்யின்கண் பேணிப் பூசி, நூல்களை ஓதி நுணுகிய உணர்வினையுடையரும் நால்வேறு வகையாக ஒப்பனைசெய்து கொண்டோருமாகிய சான்றோர் நால்வர், தாமரை மலரானே மூடப்பட்டிருந்த பொற்குடத்தை எடுத்து அவற்றின்கண் உள்ள நீரைப்பெய்து நான்முறைப்படி ஆட்டா நிற்ப என்க.

(வி - ம்.) கள. நேயம் - நெய்ப்பு. நன்மை - ஈண்டுத் தன்மைப் பண்பின் மேற்று. நாற்றம் - மணம்.

கஅ. ஒருநாள் என்றது ஒருகால் என்பதுபட நின்றது. ஓரி யாண்டு என்றது நெடுங்காலம் என்பதுபட நின்றது. "ஒரு பகல்பூசின் ஓராண்டு ஒழிவின்றி விடாது நாறும் பெரியவர் கேண்மைபோலும் பெறற்கரும் வாசவெண்ணெய்" (சீவக. உஎக.எ) என்றார் தேவரும்.

கக. திருமாண் உறுப்பிற்கு-அழகுமாட்சிமைப்பட்ட உறுப்பின் கண் பூசுதற் பொருட்டென்க. சீர்-பொருளை ஆராய்ந்து கொள்ளுதல். நிறை - எடுத்தலளவை.

க00. கருமம்-மணங்கூட்டுந்தொழில். வித்தகர்-சதுரப் பாடுடையோர்.

க0உ. நூல்வழி நுனித்த நுழைநுண் உணர்வினர் என்றது சான்றோர் என்பதுபட நின்றது.

க0௩. நால்வர் செய்வது மரபு, "வாலிழைமகளிர் நால்வர் கூடி ..................நீரொடு சொரிந்த" என்றார், அகத்தினும் (அசு).

க0ச. மூய-மூடப்பட்ட. க0ரு. தாம்: அசை. ஆட்டி என்னும் செய்தெனெச்சத்தைச் செயவென் எச்சமாக்குக.

[க0சு - கஉக : மகளிரும் மைந்தரும் நீராட்டு விழவயர்தல்.]

க0சு-கஉக : செய்த கோலம்......................மரபுளிக் கழிந்தபின்.

(பொ - ரை.) இங்ஙனமாக நீராட்டுதல் நிகழ்ந்துழி மான் போன்ற விழியுடைய மகளிர் தம்முட் பிணங்கி எதிர்த்து ஒருவரை ஒருவர் துவர்நீர் முதலியவற்றான் எறிந்தும், முத்தமாலை முதலியவற்றை அறுத்து மணிகளைச் சிதறியும், மலர்மாலைகளை அறுத்தும் குடத்துக்கண் நீரை ஒருவர் மேல் ஒருவர் வீசியும், குளங்களிலே புகுந்து ஆடுதல் ஒழியாராய்த் தாம் ஆடுதலானே நீரின்கட்டோன்றிய வெள்ளிய நுரையினைக் கையான் முகந்து விழிசிவப்ப வீசியும் அது பொருது விம்மியும் தளர்ந்தும் கூந்தல் சோரவும் துகிலினை நழுவாது உடுத்தும் இவ்வாறு மகளிர் வாசவதத்தையோடே மங்கல நீராடுதலை விரும்பி ஆடாநிற்பவும் ஆடவர் உதயணனோடே ஆடுதலை விரும்பி ஆடாநிற்பவும், இங்ஙனம் மங்கல நீராட்டு முறைப்படி நிகழ்ந்து முடிந்தபின்னர் என்க.

(வி - ம்.) ௧௦௬. (௧௧௨) மான்னேர் நோக்கிய ராகிய பேதையர் செய்த கோலம் சிதையும்படி மறலிப்பிணங்கி என இயைத்துக்கொள்க.

௧௦௭. இங்ஙனமாக நீர்பெய்தலே நாடி என்க. அஃதாவது இங்ஙனம் நீராட்டிய வழி என்றவாறு. ௧௦௮. அத்து-துவர். பரிந்து-அறுத்து. ௧௦௯. சித்திரத் தொழில் அமைந்த நுண்ணிய ஆடை. ௧௧௦. பத்திப்பல்காசு - நிரல்படக்கோத்த பலவாகிய பொற்காசு மாலை. பரிந்தனர் : முற்றெச்சம். ௧௧௨. மான்நோக்கினை ஒத்த நோக்கத்தையுடைய மகளிர். ௧௧௩. புரிந்து புக்குக் குளித்த மகளிரோடு என்க. புரிதல்-விரும்புதல். ௧௧௪. திளைத்தல் - ஆடுதல். ஆறு - அமையாத. ௧௧௫. குடைந்தமையாலுண்டாய வெண்ணுரை என்க. குடைதல்-நீராடுதல். ௧௧௭. விம்முவனர் : முற்றெச்சம். விம்முதல் - தேம்புதல். ஒதுங்கி-நடந்து. ௧௧௮. அசைஇ-கட்டி. ௧௧௯. வேந்தன் மகள் - வாசவதத்தை. ௧௨௦. இவ்வண்ணமே மைந்தர் உதயணனேடு விளையாட்டு விரும்பி எனச் சிலசொற் பெய்து கொள்க. மயங்கி - கலந்து.

௧௨௨ - ௧௩௨ : திருமணுத் தானம்........................சித்திரங் கான.

(பொ - ரை.) மங்கலநீராடல் குறித்து வழங்கும் தானமாக நிலமுட்பட மணியும் மாலைகளும் ஆடைகளும் முதலிய பொருள்களைப் பேரவாவினாலே இரவாநின்ற மாந்தர்கட்கு அவரவா அடங்கும்படி நிரம்ப வழங்கிப் பின்னர் உதயணகுமரனுக்கு இரண்டாகிய வெள்ளாடைகளை விரித்து உடுத்தித் தம்மாற் செய்யப்பட்ட ஒப்பனைத் திறத்தின் மேலும் திறம்படச் செய்யும் ஒப்பனைகளைச் செய்தற் பொருட்டு என்க.

(வி - ம்.) ௧௨௨. திருமண்ணுத்தானம் எனற்பாலது, விகாரத்தால் திருமணுத்தானம் எனநின்றது. மங்கல நீராடற் பொருட்டு வழங்கும் தானம் என்க. பெருமண்-விரிந்த நிலம். என்றது பூதானத்தை.

௧௨௩. கழுவிய மணிமாலையும் பொன்மாலையும் என்க. தூசு-ஆடை. ௧௨௪. கண்ணுற - செறிய. மொய்த்த-குழுமிய. கழிபேரவா - மிகப் பெரிய அவா காரணமாக ஏற்கும் என்க. ௧௨௫. ஆற்ற-நிரம்ப. வீசி - வழங்கி. அவா அடங்கும்படி நிரம்ப வழங்கி என்க.

௧௨௬. மலர்களிலே தாமரை சிறந்தாற் போன்று அணிகளிலே தலைசிறந்ததாகிய அறுவை என்க. பிற அணிபோலாது இன்றியமையாச் சிறப்பிற்றுதல் கருதி அணியிற்றூன் மீக்கூரிய அறுவை என்ருர். மீக்கூர்தல் - பெரிதும் சிறத்தல்.

ஐவகை வண்ணம்: பொன்மை வெண்மை கருமை செம்மை பசுமை என்பன. ௧௨௯. தூத்தொழிலாளர் என்றது ஆடை நெய்வோரை.

௧௩௦. கண் துளங்கு அவிர் ஒளிக் கழூஉ நிறம் பெறீஇய - காண்போர் கண் கூசி நடுங்குதற்குக் காரணமான விளக்கமுடைய ஒளியாகிய தூய்மை செய்யப்பட்ட நிறமுடைத்தாகிய என்க. பெறீஇய-பெற்ற.

கருக. இணைமடி - இரண்டாகிய ஆடை. உடீஇ - உடுத்து; உடுத்துச் செய்த கோலத்தின்மேலும் சித்திரமான கோலஞ் செய்தற் பொருட்டென்க.

[ஒப்பனை செய்யுமிடம்]

கருரு - கருஎ : வெய்யோன் கதிரொளி........ஏத்துவனர் காட்டி.

(பொ - ரை.) ஞாயிற்றின் வெயிலும் காற்றும் உள்ளே புகுதற் கியலாதவாறு இரும்பாலே அழகுறச்செய்த மிகப்பெரிய படிக்கட்டுகளோடே மணிகள் பதித்த வேயுளையும் உடையதாய் இயற்றப்பட்டதொரு மண்டபத்தின்கண்ணே இடப்பட்டதொரு இருக்கையின்கண் அழைத்துவந்து இருத்திக் கோவை செய்யப் பட்ட சிறந்த அணிகலன்களைக் கொணர்ந்து அவ்வுதயணகுமர னுக்கு வணங்கிக் காட்டி என்க.

(வி - ம்.) கருரு. வெய்யோன்-ஞாயிறு. கதிரொளி: பண்புத் தொகை. வீசுவளி : வினைத்தொகை. இவ்வடியோடே,

"கறங்கு கால் புகா கதிரவன் ஒளிபுகா மறலி
மறம்புகாதினி வானவர் புகாரென்கை வம்பே"
............ ............ ............
அறம்புகாதிந்த அணிமதிட்கிடக்கைநின் றகத்தின்"
(கம்ப-ஊர்தேடு. உரு)

எனவரும், கம்பநாடர் செய்யுளை ஒப்புக் காண்க.

அணிகலன் இருக்கு மண்டப மாகலின் அதன் திண்மையை விதந்து கூறிற்று.

கருச. இரும்பாலே சுவரமைத்து அணிபெற்ற படுகாலையுடையது என்க. பணை - பருமை. படுகால் - படிக்கட்டு. கருரு. மேற்புறம் விளங்குமணி அமைந்த வேயுள் என மாறுக. வேயுள் - கூரை. கருசு. யாப்புறு - கட்டுதலுற்ற. கருஎ. கோப்பு - கோவை. விழுக் கலம் - சிறந்த அணிகலன். ஏத்துவனர் : முற்றெச்சம்.

[கருஅ - கசுo. உதயணகுமரனை ஒப்பனைசெய்தல்.]

கருஅ - கசுரு : கனமணி...............நீட்ட.

(பொ - ரை.) மணிமுடிமுதலாகப் பத்திக்கச்சு ஈறாக ஈண்டுக் கூறப்பட்டனவும், இன்னோரன்ன பிறவுமாகிய அணி கலன்களையும் பணிமகளிர் தப்பின்றி எடுத்தெடுத்துக் கொடா நிற்ப என்க.

(வி - ம்.) கருஅ. கனமணிமுடி - பொன்னானும் மணியானும் இயற்றப்பட்ட முடிக்கலன் (கிரீடம்). கருகூ. கதிர்முத்தாரம் - ஒளி யுடைய முத்துவடம். இனமணிப்பூண்-மாணிக்கவடம். ஏகவட்டம்-

ஓர் அணிகலன். கசா. வயிரமணியாலாகிய காதணி. தொழில் வன்மையாலே பொலிவுற்ற தோள்வளை என்க. ஒளிமிக்க கடகம் என்க. கடகம்-கங்கணம். கசஉ. நாமரவளி - ஓரணிகலன், நாமாவளி என்றிருத்தல் வேண்டும் போலும்; ஆராய்க. கைத்தொழிற்றிறனமைந்த அழகிய சித்திரப்பிணையல் என்க; சித்திரமாலை. பத்திச் சுரிகை, பத்திக்கச்சு என்பன நிரல்படக்கோத்த அணிகலன்கள் போலும். ஆரணங்காகிய, நிறைந்த அழகுடையனவாகிய என்க.

கசகூ. உழைப்பெருஞ் சிலதியர் - உடனிருந்து பணிசெய்யும் உரிமையுடைய மகளிர் என்க. நீட்ட - எடுத்துக் கொடுப்ப.

கசஎ - கசூ௮: அருவரை பிளந்த...............வாலணி புனைய.

(பொ - ரை) நுண்ணிய தொழிற்றிறனாலே பொலிவுற்ற ஒப்பனைத் தொழிலிலே சதுரப் பாடுடையோர் அத்தூய அணிகலன்களைக் கைக்கொண்டு, அணிகலத் தொழிலைக் கூரிதாகக் கற்ற பிற வித்தகரோடும் வந்து கோலஞ்செய்து கொள்ளாநின்ற உதயணகுமரனுடைய ஒப்பற்ற அழகிய உடம்பினைச் சேர்ந்து இவ்வணிகலன்கள் பெருமை பெறுவனவாக என்னும் அருளுடைமையாலே இவற்றை அணிவதன்றி இவை இவனுக்கு அழகு ஆகும் என்று கருதி அணியப்படாத இவற்றை அவனுடைய உறுப்பின்கண் அணிதலாலே இப்பொன் அணிகலன்கள் மிகவும் புண்ணியம் உடையனபோலே இருந்தன என்று கருதுகின்ற நெஞ்சத்தோடே அவற்றை அவ்வுதயணன் வடிவம் முருகக் கடவுளின் வடிவம் போலத் தோன்றும்படி அணியாநிற்ப என்க.

(வி - ம்.) கோல வித்தகர், பிற வித்தகரோடும் வந்து கோலங் காணும் உதயணன் வடிவம் இளையவன் வடிவம்போலத் தோன்றும்படி வாலணி புனைய என இயைத்துக்கொள்க.

கசஎ - கடு௦: நெடுவேல் இளையவன், புட்கொடியை ஒருவலத்து உயரிய இளையவன், இணையில்லா இளையவன் எனத் தனித்தனிக் கூட்டுக. அருவரை-கிரௌஞ்சமலை. அஞ்சு வருநெடுவேல்-பகைவர்க்கு அச்சம் வருதற்குக் காரணமான நெடிய வேல். ஒருவலம் - ஒப்பற்ற வெற்றி; வெற்றியுடைமையாலே என்க. உயரிய-உயர்த்த. பொருவில்-ஒப்பில்லாத. புட்கொடி - கோழிக்கொடி. கட்டவிழ்ந்த நறிய கடப்பமாலை என்க. கடவுள் என்பது தோன்றத் தனக்கு இணையில்லா இளையவன் என்றார். இளையவன் - முருகக்கடவுள். படிவம்-உருவம். இயல்புறீஇ - அழகுசெய்து.

கடுக. சித்திர இருநிதி என்றது - அணிகலன்களை. அணிகலத் தொழிலைக் கூர்ந்து கற்ற பிற வித்தகரோடு என்க. கடுஉ. வடிவு கண்டிடும் - கோலஞ்செய்து கொள்ளும். கடுங. வத்தவர் பெருமகனாகிய ஓடிவில் வென்றி உதயணகுமரன் என்க. ஓடிவில் - குன்றாத. கடுச. ஒருமெய் - ஒப்பற்ற அழகுடைய உடம்பு.

இவை பெருமைபெறுக என்று நினையும் அருளுடைமையாலே என்க. கஙஎ. உரு - அழகு. உறுப்புமுதல் - உறுப்பின்கண். அணிதலின் - அணியப்படுதலாலே. புண்ணியமுடைய இவ் வணிகலன் என்றது செய்யாமரபின செய்வனவாகக் கூறியபடி. வாலணி - சிறந்த அணிகலன்.

[கசுக - கஅரு. வாசவதத்தையை ஒப்பனைசெய்தல்.]

கசுக - கசுஅ: ஆராக் காதல்............இரீஇ.

(பொ - ரை.) இனி, தணியாத காதலையுடைய வாசவதத்தையினையும் கோலவித்தக மகளிர் மங்கலநீராடிய இடத்தினின்றும் அகற்றிப் பலவாகிய பொற்காசுகளானாய வடம் அணியப்பட்டு இடைக்குச் சுமையாக அமைந்த ஈர ஆடையினை அகற்றி அழகிய புத்தாடையினைக் கொய்து விளிம்பினை உருவி அழகு நிறைந்த அல்குல் மேலும் அழகெய்தும்படி உடுத்து அழைத்துக் கொணர்ந்து ஒப்பனைமண்டபத்தின்கண்ணே இடப்பட்டதொரு பொன் இருக்கையில் பேணிஇருக்கச் செய்த பின்னர் என்க.

(வி - ம்.) கசுக. ஆரா - தணியாத. அவந்திகை - அவந்தி மன்னன் மகள்; கிளிபோன்றவளுமாம். அவந்தி - கிளி (பிங்கலநி. உ0கசு. அவந்திகை தன்னையும் என்புழி உம்மை இறந்தது தழீஇயிற்று. கசுஉ. நீராட்டிடம் - நீராட்டுமண்டபம். கசுரு. பல்காசு புதைஇ நடுவிற்குப் பாரமாகிய ஈர நுண்டுகில் என மாறுக. பல்காசு கோத்த வடம் என்க. நடு - இடை. கசுச. நுண்டுகில் - நுண்ணிய ஆடை. புதைஇ - புதைக்கப்பட்டு. ஏர் - அழகு. கசுரு. கோடிப்பூந்துகில் - பூத்தொழிலமைந்த புத்தாடை. உரீஇ - உருவி. கசுசு. சேடு - அழகு; பெருமையுமாம்.

கசுஎ. வல்லவர்-தொழில்வன்மையுடைய சிற்பியர். மல்லல்வினை நகர் எனற்பாலது, மல்வினைநகர் என அல்லீறு குறைந்து நின்றது. மல்லல் - அழகு. வளப்பமுமாம். வளவிய தொழிற்றிறனமைந்த ஒப்பனை மன்றம் என்க. கசுஅ. பொன்மனை என்றும் பாடம். போற்றுவனர்: முற்றெச்சம். இரீஇ - இருத்தி.

கசுகூ - கஅ0: நன்மணக் கோலத்து............பெரீஇ.

(பொ - ரை.) அம்மகளிருள் நன்றாகிய மணக்கோலஞ் செய்தலிலே கை வன்மையுடையவளும் அத் துறையினைக் கூரிதாகக் கற்றவளும், அழகொழுகும் தோளினையுடையவளும், கச்சையணிந்தவளும் சுமங்கலமுடையவளும், ஆகிய ஒருத்தி கைகூப்பித் தொழுது, பின்னர் வாசவதத்தையின் கூந்தலை ஈரம்புலர வாரிப் பன்னுமுறையானே பன்னி விரித்துப் பின்னிச் சேர்த்து மருப்பின்மேல் வளைத்துப் போகட்ட யானையினது

பெரிய கையினைப் போலக் கொண்டைப்பூமாலையினை யிட்டு வளையச்சுற்றி முடித்து பத்தி முதலிய தலைக்கோலங்களை வேறுபட விரித்து ஒழுங்கு படத் தப்பின்றி அணிந்து மேலும் முடிக்கலன் முதல் அடிக்கலன் ஈறாக அணிந்து அழகுசெய்து என்க.

(வி - ம்.) கசுசு. கைந்நலம் - ஒப்பனை நன்மை.

கஎ0. அம் கலும் - அழகொழுகாநின்ற. பணைத்தோள் - மூங்கிலை ஒத்த தோள். மங்கல மகடூஉ - சுமங்கலி. மகடூஉ - மகள்.

கஎஉ. நெட்டிருங் கூந்தல் - நெடிய கரிய கூந்தல். வாசவதத்தையின் கூந்தல் என்க. கஎங. பன்னுமுறை - வகுக்கும் முறை. பின்னுபு - பின்னி. கஎச. யானைக்கை : பின்னலுக்குவமை. வளைஇய - வளைத்துப்போகட்ட. "முத்தார் மருப்பினிடை வளைத்த முரண்கொள் யானைத் தடக்கையின் ஒத்தேருடைய மல்லிகையின் ஒலியன் மாலை உறுப்படக்கி வைத்தார்" (சீவக. உசுகூ). என்றார் திருத்தக்கதேவரும். கஎரு. சூட்டு - கொண்டைப்பூமாலை. விரைஇ - கலந்து. சுற்றுபு - சுற்றி. கஎசு. பத்திப்பலகை, பத்தி என்பன தலைக்கோலவகைகள். பரிசாரகர்களாலே செய்யப்படுதலின் ஒப்பனைத்தொழில் பரிசாரக் கைவினை எனப்பட்டது. பரிசாரம் - பணித்தொழில்.

கஎஎ. வழுக்கு - தப்பு. வழுக்கிலள் : முற்றெச்சம்.

கஎகூ. முடிக்கலம் - தலையணிகலன் ; (மோலி)

கஅ0. அடிக்கலம் - சிலம்பு முதலியன.

கஅக - கஅஎ : வாச நறுஞ்சாந்து............இருவரும் இயைந்தென்

(பொ - ரை.) மணமுடைய நறிய சாந்தங்களையும் கூறுபாடுண்டாகப் பூசி இங்ஙனமாகத் திருமகள் அழகினையும் பழிக்கத் தகுந்ததோர் அழகினைச் செய்து அழைத்துக்கொண்டு இல்லத்திற் புக்கபின்னர் அத் திருமணவில்லத்தின்கண் கல்லென இசைக் கருவிகள் முழங்காநிற்ப மங்கலஉண்டியை உண்டு, உதயணகுமரனும் வாசவதத்தையுமாகிய மணமக்கள் இருவரும் உடலானும் உளத்தானும் ஒன்றுபட்டு மகிழ்ந்து விளையாடி நுகர்ச்சியின்கண் பெரிதும் இன்புறுகின்றனர் என்க.

(வி - ம்.) கஅஉ. மாசில் திருமகள் - குற்றமற்ற இலக்குமி. வண்ணம் - அழகு. கஅச. கடிநகர் - திருமண வில்லம். சும்மை - ஆரவாரம். கஅரு. அடிசிலும் அயினியாகிய ஆர்பதமும் அயின்றென்க. அடிசில் - நால்வகை உணவுப் பொதுப்பெயர். அயினி - சோறு, உண்டி ; பதம் - சோறு. மங்கலச்சோறென்பது தோன்ற விதந்தோதினர்.

ரு. மண்ணுநீராட்டியது முற்றிற்று.

---

## ௩. தெய்வச் சிறப்பு

இதன்கண், சான்றோர் உதயணன்பாற் சென்று இன்ப மாடம் புகுந்து திருக்கோயில் வழிபடுதலும், நகர்வலஞ் செய்த லும், மணம் புரிந்துகொண்ட மன்னர் மக்கட்கு இன்றியமையாக் கடமைகள் ஆகும் என்று அறிவுறுத்தலும், அவற்றிற்கு அவன் உடம்படுதலும், உதயணன் திருக்கோயிற்குச் செல்லுத லும், ஆண்டுப்படு நிகழ்ச்சிகளும், அருகன் கோயில் மாண்பும், அக்கடவுள் அரியணையின் மாண்பும், அக்கோயிலின்கண் உதய ணன் வாசவதத்தையோடும் சுற்றத்தாரோடும் ஒருங்கு புகுந்து இறைவன் திருமுன்னின்று நெஞ்சுருகி வாழ்த்திப் பரவுதலும் பிறவுங் கூறப்படும்.

இன்புற் றிருவரும் இயைந்துடன் போகிய
நன்பெருங் காலை நல்லோர் குழீஇக்
கண்கெழு பெருஞ்சிறப் பியற்றிப் பண்புளிப்
பூப்புரி மாடத்துப் போற்றெனப் புகாஅத்
தேவ குலத்தொடு திருநகர் வலஞ்செயல்
காவல குமரர் கடிநாட் கடனென
வென்றி முழக்கங் குன்றுது வழங்குநர்
முன்னர் நின்று முன்னியது முடிக்கென
மங்கல மரபினர் மரபிற் கூறக்
காவல குமரனுங் கடிநகர் வலஞ்செய
மேவினன் அருள மேவரப் புனைந்த
பசும்பொன் அலகிற் பவழத் திரள்கால்
விசும்பிவர் மதியுறழ் வெண்பொன் போர்வைத்
தாம நெடுங்குடை தகைபெறக் கவிப்பக்
காமர் கோலங் காண்மின் நீரென
ஏமச் செங்கோல் ஏயர் பெருமகன்
செம்பொன் செருப்பிற் சேவடி இழிந்து
வெண்பூ நிரந்த வீதியுள் இயங்கி
நகர்வலங் கொள்ளும் நாள்மற் றின்றெனப்
பகலங் காடியிற் பல்லவர் எடுத்த
பல்வேறு கொடியும் படாகையு நிரைஇ
ஆறுபுகு கடலின் மாறுதிரை மானக்

கண்ணுற்று நடங்கிக் காரிருள் கழுமி
விண்ணுற் றியங்கும் வெய்யோன் அழுங்க
மரீஇய மாந்தரும் மனைகெடுத் துழன்றிது
பொரீஇக் காணிற் போக பூமிக்(கு)
இருமடங் கினிதெனப் பெருநகர் உற்ற
செல்வக் கம்பலை பல்லூழ் நிறைந்து
மாண்பதி உறையுநர் காண்பது விரும்பித்
தன்னின் அன்றியும் தமக்கு வழிவந்த
குலப்பெருந் தெய்வம் கூப்புத லானும்
அரிமலர்க் கண்ணியொ டகநாட்டுப் பெயரும்
கருமக் காலை பெருவரம் பெறுகென
உள்ளகத் துணர்ந்ததை உண்மை யானும்
சுருக்கம் இன்றிச் சுடர்ப்பிறை போலப்
பெருக்கம் வேண்டிப் பெருநில மன்னவன்
ஆரணங் காகிய அறிவர் தானத்துப்
பூரணப் படிமை காண்ட லானும்
இன்னவை பிறவுந் தன்னிய லாதலின்
ஆணப் பைம்பொன் அடித்தொடைப் பலகை
கோணங் கொண்ட கோளுஉத்திரள் சந்துமிசை
உறுப்புப் பலதெரிந்த சிறப்பிற் றாகிச்
செம்பொன் இட்டிகைத் திண்சுவர் அமைத்துக்
குடமுந் தாமமும் கொழுங்கொடிப் பிணையலும்
அடர்பூம் பாலிகை அடிமுதற் குளீஇப்
புடைதிரண் டமைந்த பொதிகைப் பொற்றூண்
வேண்டக மருங்கிற் காண்தக நிறீஇ
வரிமான் மகர மகன்றில் யானை
அரிமான் அன்ன மணிநிற எண்கினம்
குழவிப் பாவையொ டழகுபெறப் புனைந்து
பொருவில் பூதத் துருவுபட வரீஇ
மரகத மாலை நிரலமைத் திரீஇ
எரிமலர்த் தாமரை இலங்கொளி எள்ளிய
திருமணிக் கபோதஞ் செறியச் சேர்த்திப்
பத்திப் பல்வினைச் சித்திரக் குலாவின்
ஒத்தமைத் தியன்ற சத்திக்கொடி உச்சி

வித்தக நாசி வேண்டிடத் திரீஇத்
தூண்மிசைக் கேற்ப எண்முள் அழுத்திய
போதிக் கோத்த சாதிப் பவழக்
கொடுங்காழ்க் கோவைக் கடுங்கதிர்ப் பிணித்திரள்
அவ்வயிற் கேற்றுக் கவ்விதிற் பொலிந்து
நீல வுண்மணிக் கோலக் குழிசி
புடைத்துளைக் கேற்ற இடைத்துளை யாப்பின்
அமைத்துருக் கியற்றிய ஆடகப் பொன்னின்
விசித்திரத் தியற்றிய வித்தக வேயுள்
தீஞ்சுவை நெல்லித் திரள்காய்த் தாரையுள்
கூப்புபு பிணித்த கூடப் பரப்பிற்
கட்டளை அமைத்துக் கட்கினி தாகி
எட்டுவகைப் பெருஞ்சிறப் பேற்ப எழுதி
ஒட்டிய வனப்பினோர் ஓடவுத்தரத் (து)
ஒண்மணிப் புதவிற் திண்ணிதிற் கோத்த
பொறிநிலை அமைந்த செறிநிலைப் பலகை
வள்ளியும் பத்தியும் உள்விரித் தெழுதி
ஒள்ளொளி திகழும் வெள்ளிக் கதவின்
பக்கம் வளைஇய நித்திலத் தாமம்
சித்திர மாலையோடு சிறந்தொளி திகழ
வளவிற் கமைந்த வாயிற் றாகி
நிலவிற் கமைந்த நிரப்பம் எய்தி
மண்ணினு மரத்தினு மருப்பினும் அன்றிப்
பொன்னினு மணியினுந் துன்னெழில் எய்தி
அடியிற் கேற்ற முடியிற் றாகி
அங்கண் மாதிரத் தணியழ குமிழும்
பைங்கதிர்ச் செல்வனோடு செங்கதிர்க் கியன்ற
வாலொளி மழுங்க மேலொளி திகழப்
பரூஉப்பணைப் பளிங்கிற் பட்டிகை கொளீஇ
வேற்றேழில் பொலிந்த மாற்றமருங் கமைத்துக்
காம்புங் கதிருங் கூம்புமணிக் குமுதமும்
பாங்குற நிரைத்த பயிற்சித் தாகிப்
பத்திச் சித்திரப் பன்மணிக் கண்டம்
வித்தக வண்ணமொடு வேண்டிடத் தழுத்தி

அரும்பும் போதுந் திருந்துசினைத் தளிரும்
பெருந்தண் அலரோடு பிணங்குபு குலாஅய்
உருக்குறு பசும்போன் உள்விரித் தோட்டிக்
கருத்தின் அமைந்த காம வள்ளி
கோணச் சந்தித் தோரணங் கோளீஇ
மாலை அணிநகை மேலுற வளைஇ
நீலத் திரண்மணிக் கோலக் கருநிரை
இடையிற் கேற்றுப் புடையிற் பொலிந்து
விழைதகு விழுச்சீர் மந்த மாமலை
முழையிற் போதரு முயற்சி போல
முதனிலைப் பலகைச் சுவன்முத லோச்சி
மூரி நிமிர்வன போலவுர் பெற்று
வைந்நுதி யமைந்த வயிர வாயிற்
கண்ணிழல் இலங்கும் ஒளியிற் றூகிப்
பவழ நாவின் திகழ்மணிப் பகுவாய்ப்
பசுமணிப் பரூஉச்செவிப் பன்மணிக் கண்டத்(து)
உளைமயிர் அணிந்த உச்சிக் கேற்ப
வாய்புகு வன்ன வந்தோசி கோடிபோல்
சென்று செறிந்திடுகிய நன்றுதிரள் நடுவின்
தகைமணிக் கோவை தன்கைக் கேற்பப்
பரூஉத்திரள் குறங்கின் பளிக்குமணி வள்ளுகிர்த்
திருத்தஞ் செறிந்து திகழ்ந்துநிழல் காட்டும்
உருக்குறு தமனியத் தோண்போன் கட்டில்
அணிப்பொலிந் தியன்ற அழல்உமிழ் அரிமான்
உச்சியிற் சுமந்துகோண் டோங்குவிசும் பிவர்தற்கு
நச்சி யன்ன உட்குவர் உருவின்
தருமான் ஆசனத் திருநடு இலங்க
இருந்த வேந்தைப் பொருந்து மருங்குல்
தலைவாய் உற்றுத் தலைஎழில் பொழிந்த
சிலைகவிழ்த் தன்ன கிம்புரி கவ்வி
நிழல்காட் டாடி நிழன்மணி அடுத்துக்
கோலங் குயின்ற நீலச் சார்வயல்
வாடாத் தாரினர் சேடார் கச்சையர்
வட்டுடைப் பொலிந்த கட்டுடை அல்குலர்

மலர்ந்தேந் தகலத் திலங்குமணி ஆரத்(து)
உடன்கிடந் திமைக்கும் ஒருகாழ் முத்தினர்
முழவுறழ் மொய்ம்பினர் முடியணி சென்னியர்
கழுமணிக் கடிப்பினர் கடகக் கையினர்
புடைதிரண் டமைந்த பொங்குசின நாகம்
இடைநிரைத் தன்ன எழில்வளை கவ்விய
எழுவுறழ் திணிதோள் எடுத்தனர் ஏந்திப்
புடையிரு பக்கமும் போதிகை பொருந்தித்
தொடையமை கோவை துளங்குமணிப் பன்னகை
முகிழ்முடிச் சிறுநுதன் முதிரா இளமை
மகிழ்நகை மங்கையர் மருங்கணி யாக
புடைதிரண் டியங்கும் பொங்குமணிக் கவரி
அடைவண் டோப்பும் அவாவினர் போல
எழின்மணி இயக்கத் தொழில்கொண் டுய
மணிவிளக் குமிழும் அணிநிலாச் சுவர்மிசை
வலத்தாள் நீட்டி இடத்தாள் முடக்கிப்
பொன்பொலிந் தியலும் பொங்குபூந் தானைப்
பசும்பொற் கச்சை பத்தியிற் குயின்ற
விசும்பக நந்தும் வேட்கையர் போலத்
தாமரைத் தடக்கையில் தாமம் ஏந்தி
விச்சா தரர்நகர் எச்சாரு மயங்கி
நீனிற முகிலிடைக் காமுறத் தோன்றத்
திருமுடி இந்திரர் இருநிலக் கிழவர்
உரிமை மகளிரொ டுருபுபடப் புனைந்த
பொத்தகக் கைவினைச் சித்திரச் செய்கைத்
தத்தந் தானத் தத்தக நிறீஇ
அழகுபடப் புனைந்த அலங்குமணித் தவிசின்மிசை
நிறைகதிர் வெண்மதி நிலாவொளி விரிந்து
முறையின் மூன்றுடன் அடுக்கின போலத்
தாம முக்குடை தாமுறை கவிப்ப
உலக வெள்ளத் தாழும் பல்லுயிர்க்(கு)
அலகை ஆகிய அருந்தவக் கிழவனை
இருக்கை இயற்றிய திருத்தகு செல்வத்(து)
ஆரணங் காகிய அணிகிளர் வனப்பிற்

பூரணம் போலிமை புகழ்ந்து மீக்கூறித்
திருமணி அடக்கிய செம்பொற் செப்பின்
அருமணி சுடரும் அராஅந் தாணம்
உரிமைச் சுற்றமொ டொருங்குடன் றுன்றிக்
கதிவிளக் குறாஉங் கருத்தினன் போல
விதியிற் சேர்ந்து துதியிற் றுதித்துப்
பெறற்கரும் பேதையைப் பெறுகெனப் பரவிச்
சிறப்பெதிர் கொள்கைச் சித்திக் கிழவன்
பேரறம் பேணிய சீர்நெறிச் சிறப்பின்
தெய்வதை அமர்ந்தெனக் கைம்முதல் கூப்பி
விரவுமலர்ப் போதொடு வேண்டுவ வீசிப்
பரவுக்கடன் கழித்தனன் பைந்தா ரோனென்

---

## சூ. தெய்வச் சிறப்பு

*அஃதாவது - மணவிழா நிகழ்ந்தபின்னர் உதயணகுமரனும் வாசவதத்தையும் திருக்கோயிற்குச் சிறப்பியற்றி இறைவழி பாடியற்றுதலைக் கூறும் பகுதி என்றவாறு.*

### உரை

**[க - கக: சான்றோர் திருக்கோயில்வழிபாடும் நகர்வலஞ் செயலும் மணமகிகட்கு இன்றியமையாக் கடன் என உணர்த்தலும், வள்ளுவர் அச் செய்தியைப் பறையறைந்து நகரத்தார்க்கு அறிவுறுத்துதலும், மங்கலப் பரிசாரகர் அதனை உதயணகுமரனுக்கு ஓதுதலும், அவன் உடன்படுதலும்.]**

க - கக: இன்புற்று.................மேவினன் அருள

(பொ - ரை.) இவ்வண்ணம் வாசவதத்தையும் உதயணனும் உடலானும் உளத்தானும் பொருந்தி இன்புறு நிற்பக் கழியா நின்ற காலத்தே ஒருநாள் சான்றோர் ஒருங்கு கூடிக் கண்ணுக்கு அழகாகப் பொருந்திய திருவிழா எடுத்து அழகோடு மலர்களானே ஒப்பனை செய்யப்பட்ட அராந்தாணத்துப் பூசனை மாடத்து 'எம்மைப் போற்றுவாயாக!' என்று புகுந்து இறைவனை வழிபடலும் அத்திருக்கோயிலோடு நகரத்தை வலம் வருதலும் மன்னர் மக்கட்குத் திருமணக் காலத்தே ஆற்றுதற்குரிய கடமையாகும் என்று அறிவிப்ப, அது கேட்ட வெற்றி ஆரவாரத்தை மக்கட்குக் குறைவின்றி வழங்குஞ்

சிறப்பையுடைய வள்ளுவர் இக்காரியத்தை நீயிர் தலைநின்று செய்து முடிப்பீராக என்று நகரத்தார்க்கு முரசறைந்து தெரிவிப்ப; அதுகேட்ட மங்கல மரபினர் அச்செய்தியை உதயணனுக்குக் கூற அவனும் அதனை உடன்பட்டருளா நிற்ப என்க,

(வி - ம்.) நல்லோர் குழீஇ வலஞ் செயல் காவலகுமரர் கடன் என (அதனை) வழங்குநர் நகரத்தார்க்கு நீயிர் முன்னின்று முடிக்கென (அதுகேட்ட) மங்கல மரபினர் காவல குமரனுக்குக் கூற அவனும் (உடன்பட்டு) அருள என இயைக்க.

ச. இருவரும் உடன் இயைந்து இன்புற்றுப் போகிய காலை என மாறுக. இருவரும்-வாசவதத்தையும் உதயணகுமரனும்.

இன்புறு நிற்ப எனச் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக.

உ. எல்லையற்ற இன்ப நுகர்ச்சிக் கிடனுதல் பற்றி நன்பெருங் காலை என்ருர். நல்லோர் - சான்ருேர். குழீஇ - கூடி.

ந. பெருஞ்சிறப்பு-திருவிழா. பண்புளி - பண்போடே. பண்பு-ஈண்டு அன்பு என்க.

ச. பூப்புரி மாடத்து - பூவால் அருச்சனை புரிதற்குரிய பூசை மண்டபத்தின்கண். எம்மைப் போற்றுக என்று இறைவனை வணங்கி என்க. புகாஅ - புகுந்து.

ரு. தேவகுலம் - திருக்கோயில்.

சு. கடிநாள் - திருமணக்காலத்தே. கடிநாளில் காவல குமரர்க்குக் கடனும் என்று அறிவிப்ப என்க.

எ. அரசனது வெற்றிச் செய்தியைக் குறையாமல் நகரத்தார்க்கு அறிவுறுத்தும் சிறப்புடைய வள்ளுவர் என்க.

அ. அச்சான்ருேர் கருதிய இச்செயலை நீயிர் முன்னர் நின்று முடிப்பீராக என்று முரசறைந்து கூற என்க.

கூ. மங்கல மரபினர் - மங்கலச் செயல்களை நிகழ்த்தும் முறைமையினையுடைய உத்தியம் உடையோர் என்க.

க0. காவலகுமரன் - உதயணகுமரன்.

கக. மேவினன் அருள - உடன்பட்டருள.

[உதயணன் திருக்கோயிலுக்குச் செல்லுதல்]

கக - உ0; மேவரப்புனைந்த..................எடுத்த

(பொ - ரை) மேன்மையுண்டாக ஒப்பனை செய்யப்பட்ட பொற்கம்பிகளையும் பவழத்தாலாய திரண்ட காம்பினையும் வானிடத்தே இயங்காநின்ற திங்கள் மண்டிலம்போற் ருேன்றும் வெள்ளிப் போர்வையினையும் மாலைகளையும் உடைய நெடிய

குடை அழகுபெற நிழற்று நிற்ப, உயிர்கட்குப் பாதுகாவலான செங்கோலையுடைய ஏயர்குலத் தோன்றலாகிய நம் உதயண வேந்தன் தனது பொற் செருப்பினின்றும் நீங்கி "எமது அழகிய திருமணக் கோலத்தை எல்லீரும் கண்டு களிமின்" என்று அருள்செய்து வெள்ளிய மலர் பரப்பிய வீதியின்கண் நடந்து நகர்வலஞ் செய்தருளும் நன்னாள் இஃதென்று பலரும் மகிழ்ந்து பகலங்காடியின்கண் உயர்த்திய என்க.

(வி - ம்.) ௧௧. மே - மேன்மை.

௧௨. பசும்பொன் அலகு - பசிய பொன்னாற் செய்த கம்பி (சலாகை) பலவற்றால் இயற்றப்பட்ட திரண்ட (குடைக்) காம்பு என்க.

௧௩. விசும்பு இவர் மதி உறழ் - வானத்தில் இயங்கா நின்ற திங்களைப்போற் றோன்றும். வெண்பொன் - வெள்ளி. போர்வை - குடையின்மேற் போர்க்கப்பட்ட ஆடை.

௧௪. தாமம் - மாலை. தகை - அழகு. கவிப்ப - நிழற்ற.

௧௫. காமர் - அழகு. கோலம் - திருமணக் கோலம்.

௧௬. ஏமம் - பாதுகாவல். இன்பஞ்செய்யும் செங்கோலுமாம்.

௧௭. இழிந்து - இறங்கி; நீங்கி.

௧௮. நிரந்த - பரப்பப்பட்ட என்க.

௧௯. நாள் - நன்னாள். என்று மகிழ்ந்து என்க.

௨0. பகலங்காடி - பகற் காலத்தே விற்கும் கடைத்தெரு. அல் லங்காடியும் உண்மையின் பகலங்காடியின் என்றார்.

உயர்த்திய, (௨௧) பல்வேறு கொடியும் எனத் தொடரும்.

௨௧ - ௨௯ : பல்வேறு................விரும்பி

(பொ - ரை.) பல வேறுவகைப்பட்ட கொடியும் பெருங் கொடியும் நிரம்பி ஆறுசென்று புகாநின்ற கடலின்கண் அவ் வாற்று நீரோடு மாறுபட்டுப் பொருது மடங்கும் அலைகளை ஒப்பச் செறிந்து மடங்கவும் அதனாலே கரியஇருள் நிறைந்து வானத்தே இயங்காநின்ற ஞாயிற்று மண்டிலம் வருந்தா நிற்ப வும், பலகாற் பயின்றறிப்பட்ட மனிதரும் தத்தம் வீட்டினைக் காணமாட்டாராய் உழலா நிற்பவும் காண்போர் இதனோடு ஒப் பிட்டுக் காணுமிடத்து இந்நகரம் துறக்க நாட்டினுங் காட்டில் இருமடங்கு இனிமையுடைத்தாகும் என்று கூறுநிற்பவும் இவற்றாலுண்டாய இன்ப ஆரவாரம் பல்லாற்றானும் நிறையா நிற்பவும் அச்சயந்தி நகரத்தே வாழும் மாந்தரெல்லாம் உதயண குமரனின் திருமணக்கோலத்தைக் கண்டு மகிழ்வதனைப் பெரி தும் விரும்பா நிற்பவும் என்க.

(வி - ம்.) உக. நிறத்தானும் வடிவானும் வேறுவேறான பல வகைக் கொடிகளும் என்க. படாகை - பெருங்கொடி - அடையாளக் கொடியுமாம். நிரைஇ - நிரம்பி. நிரல்பட்டெனினுமாம்.

உஉ. ஆறு புகுமிடத்தே அவ்வாற்று நீரோடு மாறுபட்டு மோதி நுடங்கும் கடல் அலைகள்போல என்க. மான : உவமவுருபு.

உங. கன்னூற்று - செறிந்து. நுடங்கி - மடங்கி. கழுமி - நிறைந்து. நுடங்கி என்னும் எச்சத்தை நுடங்க எனச் செயவெனெச்சமாக்கி ஏதுப்பொருட்டாக்குக.

உச. வெய்யோன் - ஞாயிறு. அழுங்க - வருந்த.

உரு. மரீஇய - மருவிய - பலகாலும் பயின்றடிப்பட்ட என்க. மனைகெடுத்து - புதுமையானே தத்தம் வீடுகளைத் தாமே அடையாளம் காணமாட்டாராய் என்க.

உசு. பொரீஇக் காணில் - ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து. போகபூமி - துறக்கம்.

உஅ. செல்வம் - ஈண்டு இன்பம்; ஆகுபெயர்.

நிறைந்து (உக.) விரும்பி என்னும் எச்சங்களைச் செயவெனெச்சமாக்குக.

ங0 - ஙசு : தன்னின்................இன்னியலாதலின்

(பொ - ரை.) (கஎ0) பசியமாலையினை அணிந்த உதயணகுமரன் தனக்கே அன்றியும் தனது வழிவழியாகத் தொடர்ந்து வந்த குல முதல்வர்க்கும் தெய்வமாகிய இறைவன் வணங்கப்படுதலானும், தான் வாசவதத்தையோடு உஞ்சை நகரத்தினின்றும் தன்னாட்டகத்தே வந்தபொழுது இனி இறைவனை வழிபட்டுச் சிறந்த வரங்களைப் பெறுதல் வேண்டும் எனத் தன்னெஞ்சகத்தே கருதியதுண்டாகலானும், அரசனாவான் வளர்பிறைபோல வழிவழிப் பெருகவேண்டித் திருக்கோயில் புகுந்து இறைவன் திருவுருவ வழிபாடு செய்தல் மரபாகலானும் இவை போல்வன பிற காரணங்களும் உளவாக, மேலும் இறை வழிபாடு செய்தலின்கண் இன்புறுதல் தன் சிறப்புப் பண்பாகலானும் என்க.

(வி - ம்.) ங0. தன்னின் - தனக்கு. தமக்கு என்புழி பன்மை அக்குலத்தோர் பிறரையும் உளப்படுத்துரைத்தவாறு. யான் எம்மூர் புகுவேன் என்றாற்போன்று.

ஙக. கூப்புதலானும் - கூப்பப்படுதலானும்.

ஙஉ. அரிமலர்க்கண்ணி - செவ்வரி கருவரி படர்ந்த தாமரை மலர்போன்ற கண்ணையுடைய வாசவதத்தை.
அகநாடு - தன்னாடு என்க.

ஙங. கருதிய காரியம் நிகழா நின்ற காலம் என்பார், கருமக் காலை என்றார்.

இறைவனை வழிபட்டுப் பெரிய வரங்களைப் பெறக்கடவேன் என்று என்க.

ங.ச. உள்ளகம் - நெஞ்சத்தே.

ங.ரு. சுடர்ப்பிறை என்றது - வளர்பிறையை.

ங.சு. பெருநில மன்னவன் - முடிவேந்தன்.

ங.எ. ஆரணங்கு ஆகிய - தெய்வத் தன்மையுடையதாகிய. அறிவர்தானம் - திருக்கோயில்.

ங.அ. பூரணப்படிமை - தெய்வப் பண்பு முழுமை பெற்ற இறைவன் திருவுருவம்.

ங.கூ. தன்னியல் - தனது சிறப்புப் பண்பு. இறைவழிபாடு செய்தலின் இன்புறுதல் தன் சிறப்புப் பண்பாகலானும் என்க.

[சுo - ககூக : அருகக்கடவுள் திருக்கோயில் வருணனை.]

சுo - சஎ : ஆணம்...................................நிறீஇ.

(பொ - ரை.) பசிய பொற் குழம்பானே வார்க்கப்பட்ட அடிப்படைப் பலகையினையும் மூலைகளைக் கொண்டுள்ள கொளுவிய திரண்ட பொருத்துவாய் தோறும் பல்வேறு உறுப்புக்களும் இயற்றிய சிறப்பினையும் உடைத்தாய்ச் செம்பொன்னாலியன்ற இட்டிகைகளானே திண்ணிய சுவரை இயற்றி, குடவுருவமும் மாலையுருவமும் கொடிப்பிணைக்க உருவங்களும் செதுக்கப்பட்டனவும் பக்கங்கள் திரண்டு அமைந்த குறுந்தறிகளையுடையனவும் ஆகிய பொற்றூண்களைப் பொன் தகட்டாலாகிய பாலிகைகளைப் புதைத்து அவற்றின் மேலாக வேண்டுமிடமெங்கும் காட்சி இன்பந்தக நிறுத்தி என்க.

(வி - ம்). சுo. ஆணம் - குழம்பு. குழம்பாக உருக்கப்படும் இயல்புடைய பசும்பொன் என்க. அடித்தொடை-சுவரடிப்பகுதியில் தொடுத்துப் படுக்கப்படும் பலகை. எனவே அடிப்படைப் பலகை என்பதாயிற்று.

சுக. கோணங்களைக் கொளுவுதலையுடைய பொருத்துவாய் மிசை என்க. சுங. செம்பொன்னால் வார்க்கப்பட்ட இட்டிகை என்க. இட்டிகை - செங்கல்.

சுச. குடம், தாமம், கொடிப்பிணையல் என்பன தூண்களிற் செதுக்கிய உருவங்கள் என்க.

சுரு. பாலிகை - வட்டவடிவமான தகடு. பூம்பாலிகை அடர் அடிமுதல் குளீஇ என்க. குளீஇ-புதைத்து. தூண்கடோறும் அடியில் பொன்னாலாகிய வட்டத் தகடுகளைப் புதைத்து என்பது கருத்து.

சுசு. போதிகை - ஒருதூணுறுப்பு: குறுந்தறி.

சுஎ. வேண்டக மருங்கில் - தூண்கள் நிறுத்தவேண்டுமிடத்திலெல்லாம். காந்தக - காட்சி இன்பமுண்டாக. நிறீஇ-நிறுத்தி.

சஅ - ருக: வரிமான்..............................வரீஇ.

(பொ - ரை.) புலிமுதலியவற்றின் உருவங்களோடு குழவிப் பாவை உருவங்களையும் ஒப்பற்ற பூதவுருவங்களையும் எழுதி என்க.

(வி - ம்.) சஅ. வரிமான் - புலி. மகரம்-ஒருமீன். மகன்றில்-ஒருபறவை.

சகூ. அரிமான் - சிங்கம். மணி நிற என்கு இனம் - நீலமணி போன்ற நிறமுடைய கரடியினம்.

ருo. சிறுமகவு வடிவமுடைய பாவை என்க.

ருக. பொருவுஇல் - ஒப்பில்லாத. வரீஇ - எழுதி.

ருஉ - ருச: மரகதமாலை......................சேர்த்தி.

(பொ - ரை.) மரகத மணிகளாற் செய்த மாலைகளை நிரலாகக் கட்டி வைத்துப் பொற்றாமரை மலரின்து ஒளியைப் பழித்த ஒளியையுடைய அழகிய மணிகளாலியன்ற கபோதங்களை நெருங்கச் சேர்த்து வைத்தென்க.

(வி - ம்.) ருஉ- இரீஇ - இருத்தி.

ருங. எரி - தீ. தீயிலிட்டு உருக்கிச் செய்த பொற்றாமரை மலர் என்க. இனி எரி போன்ற தாமரைமலர் எனினுமாம். எள்ளிய - இகழ்ந்த.

ருச. மணிக் கபோதம் . மணிகளாற் செய்த கபோதம் என்னும் உறுப்பு. இதனைச் சுவர்த்தலங்களின் வைக்கும் சித்திரக் கம்பி என்பர் சூடாமணி நிகண்டாசிரியர் (ங - கூக)

ருரு - கூரு: பத்தி............................வேயுள்.

(பொ - ரை.) பத்தியாக அமைக்கப்பட்ட சித்திரவளைவுகளையும் ஒன்றற்கொன்று ஒத்ததாக அமைக்கப்பட்ட கொடிக்குழிகளையும் உடைத்தாய் நாசி என்னும் உறுப்புக்களை வேண்டுமிடமெல்லாம் இருத்தித் தூணின் உச்சிக் கேற்ப வலிய இருப்பு முட்கள் பதிக்கப்பட்ட போதியினையும் அப் போதிக்குத் தகுந்த வளைந்த பவழத்தாற் செய்த மாலைகளாலாய மிக்க ஒளியையுடைய மணிக்கோவைத் திரள்களை அவ்வவ்விடத்தில் ஏற்பித்துப் பொருத்தமாகப் பொலியாநின்ற நீலமணிகளாற் செய்த அழகிய குட உருவங்களையும் (கலசங்களையும்) பக்கத்துளைகளையும் அவற்றிற் கேற்ற இடைத்துளைகளையும் இட்டு யாத்தலமைந்த பொற்றகடுகளாலே விசித்திரமாக வேயப்பட்ட மேற்பரப்பினையும் என்க.

(வி - ம்.) ௩௫. பத்தி-வரிசை, வரிசைவரிசையாக அமைக்கப் பட்ட பல்வேறு வேலைப்பாடமைந்த சித்திரங்களையுடைய வளைவு களையும் என்க.

௩௬. சந்தி - கொடி நடுங்குழி. ௩௭. நாசி - ஓர் உறுப்பு. மூக்குப் போறலால் அப்பெயர் பெற்றது.

௩௮. ஏன்மூள் - வலிய இருப்பு மூள்.

௩௯. போதி - ஓர் உறுப்பு. சாதிப் பவழம் - உயர்ந்த பவழம். இதனை நற்பவழம் என்ப.

௩௯ - ௪௧. நற்பவழத்தால் இயற்றிய வளைந்த கோவை வடங்க ளாற் கட்டப்பட்ட கடிய ஒளியையுடைய மணிக்குஞ்சங்களை அவ்வவ் விடத்தே ஏற்பித்துப் பொலிந்த குமிசி என்க.

௪௧. பொலிந்து - பொலிந்த என்க.

௪௨. நீலநிறமுடைய கண்டோர் நெஞ்சையுண்ணும் மணி என்க. குமிசி - குடம் (கலசம்)

௪௩. ஆடகப் பொன் - நால்வகைப் பொன்னில் ஒன்று.

௪௫. விசித்திரத்து - அதிசயத்தோடு. வித்தகம் - தொழிற் சதுரப்பாடமைந்த. வேயுள் - மேற்பரப்பு.

௪௬ - ௭௭ : நீஞ்சுவை.............................வாயிற்கு

(பொ - ரை.) நெல்லியினது திரண்ட காயாலியற்றிய மாலை களை உள்ளே குவித்துவைத்துக் கட்டிய கூடப்பரப்பினையும் வகுப்பறைகளியற்றி அவ்வறைகளினுள் எண்வகைப்பட்ட மங்க லப் பொருள்களையும் பொருந்த எழுதிப் பொருந்திய அழகினை யும் ஓடவுத்தரத்தினையும் மணிகளிழைத்த நிலையினையும், அந் நிலையின்கண் திண்ணிதாகக் கோக்கப்பட்ட இயந்திரமமைந்த செறிந்த நிலைமையினையுடைய பலகையினிடத்தே கொடியும் சித்திரப் பத்தியும் விரித்து எழுதப்பட்ட ஒளிதிகழா நின்ற வெள்ளிக் கதவினையும் பக்கங்களிலே வளைத்த முத்துமாலைகளை யும் சித்திரமாலைகளையும் உடையதாய் அளவிற்குத் தகுந்த வாயிலையும் உடைத்தாய் என்க.

(வி - ம்.) ௪௬ - ௭. நெல்லிக்காய் மாலைகளை அகத்தே குவித்து வைத்து இணைக்கப்பட்ட கூடப்பரப்பென்க. கூடமியற்றுங்கால் அவற்றின் உள்ளீடாக் நெல்லிக்காய் மாலைகளைக் குவித்து வைத்து இயற்றுவது வழக்கம் போலும். கூடம் - ஓர் இல்லுறுப்பு.

௪௮. கட்டளை - வகுப்பறை.

௪௯. எட்டுவகைப் பெருஞ்சிறப்புக்களாவன:—

"சாமரை, நிறைகுடம், கண்ணடி, தோட்டி, முரசு, விளக்கு, பதாகை, இணைக்கயல்" என்பன. இவை சீவகசிந்தாமணி கோவிந்தை யாரிலம்பகத்தின் ௬௪-ஆம் செய்யுள் உரை மேற்கோளிற் காணப் படுவன.

இனி, "சுடர் மண்டலஞ் சுரதுந்துபி தெய்வத் துவனி சிங்கப், பிடர் மண்டலவணை பிண்டிவெண் சாமரை பெய்மலரின், அடர்மண்டல மழை அம்பொற்குடை மும்மையா மடியோம், இடர்மண்டலங் கெடுப் பாற் கிமையோர் செயும் என் சிறப்பே" எனவரும் திருநூற்றந்தாதிச் செய்யுளுங் காண்க (அ0)

எ0. ஓர் - அசைச் சொல். ஓடவுத்தரம் - ஒருறுப்பு.

எக. மணிப்புதவு - மணிகள் பதித்த வாயில். ஈண்டு நிலை என்க.

எஉ. பொறி - கதவு தாமே திறக்கவும் மூடவும் அமைந்த இயந்திரம் என்க.

எங. வள்ளி - கொடி. பத்தி - நிரல்பட எழுதிய சித்திரம்.

எச. வளைஇய - வளைத்துக் கட்டிய என்க. நித்திலத் தாமம் - முத்துமாலை.

எரு. சித்திரமாலை - வேறுபட்ட வண்ணமலர்களை விரவிப் புனைந்த மலர் மாலை. அங்ஙனமே புனைந்த மணிமாலைகளுமாம்.

எஎ. அளவிற்கு - அத்திருக்கோயிலின் அளவுக்கு (ஏற்ற அளவினையுடைய வாயில் என்க) வாயிற்று - வாயிலையுடையது.

எஅ - அச : நிலவில்..............................திகழ.

(பொ - ரை.) நில இல்லிற்குப் பொருந்திய சமநிலை எய்தப் பெற்று மண் மரம் யானைக்கொம்பு முதலியவற்றாலியற்றாமல் முழுதும் பொன்னானும் மணியானுமே இயற்றப்பட்டுச் செறிந்த அழகினை உடைத்தாய் அடிப் பகுதிக் கேற்ற உச்சியினையுடைய தாய் வானத்திலே அழகிய ஒளியழகினை விசாநின்ற திங்கள் மண்டிலத்தோடு ஞாயிற்று மண்டிலத்திற்கும் இயற்கையி னமைந்த தூய ஒளிகள் மழுங்கும்படி அவற்றினும் உயர்ந்த பேரொளி வீசி விளங்காநிற்ப, என்க.

(வி - ம்.) எஅ. நிலஇல் - நிலத்தின்கண் அமைக்கப்பட்ட இல்லம். கீழ்வீடு என்பது கருத்து. நிரப்பம் - சமம்.

எகூ. மருப்பு - யானைத்தந்தம் முதலியன.

அ0. துன்னெழில் - செறிந்த அழகு.

அக. அடி - கீழ்ப்பகுதி. முடி - மேற்பகுதி. முடியிற்று - முடியினை உடையது.

அஉ. அங்கண் மாதிரம் - அழகிய இடமமைந்த வானம். அணி அழகு - மிக்க அழகு; ஒருபொருட் பன்மொழி. ஈண்டு அழகு ஆகு பெயரான் ஒளியைக் குறித்து நின்றது.

அங. பைங்கதிர்ச் செல்வன் - திங்கள். செங்கதிர் - ஞாயிறு.

அச. வாலொளி-தூய ஒளி; மேலொளி - மேம்பட்ட ஒளி.

அரு - அஅ : பஞ்உப்பளை..........................பயிற்சித்தாகி

(பொ - ரை.) மிகப் பருத்த பளிங்காலே பட்டங்கள் அமைத்து வேல் வடிவமமைக்கப்பட்டுப் பொலிந்த ஒன்றனோடு ஒன்று மாறுபட்ட பக்கங்களை அமைத்து, தண்டும் சலாகையும் குமுத மொட்டுக்களும் அப் பக்கங்களிலே வரிசையாக நட்டு வைத்த தொழிலையுடையதாய் என்க.

(வி - ம்.) அரு. பரூஉ - பருத்து. பணை - பருமை. மிகப் பருத்த என்க. பட்டிகை-பட்டம் : விளிம்பிற் கட்டும் பட்டம் என்க.

அஎ. காம்பு - தண்டு ; தடி. கதிர் - சலாகை. குவிந்த குமுத மொட்டு வடிவமாக மணிகளிழைத்த நுனியையுடைய தண்டுகள் என்க. இவையெல்லாம் மதில் உச்சியில் நடப்படுவன என்க.

அஅ. பயிற்சித்து - வேலைப்பாட்டினையுடையது.

அகூ - கூஅ : பந்தி..........................பொலிந்து

(பொ - ரை.) நிரல்பட்ட சித்திரத்தொழிலமைந்த பலநிற மணித் துணுக்குகளை வேண்டுமிடமெல்லாம் பதித்து, அரும்பும் மலரும் தளிரும் ஆகிய இவற்றோடு கூடியதாய்ப் பின்னி வளைந்த பொன்னாலியற்றிய காமவல்லி என்னும் கொடி வடிவத்தின் அமைந்த கோணங்களையும் சந்திகளையும் உடைய தோரணங்களை வேண்டு மிடமெல்லாம் கட்டி, அவற்றின் மேற் பொருந்த முத்து மாலைகளை வளைத்துக் கட்டி மேலும் நீலமாகிய திரண்ட மணி களாலியற்றிய அழகிய கரிய மாலைகளை இடையிடையே ஏற் பிக்கப்பட்டுப் பொலியா நிற்ப என்க.

(வி - ம்.) அகூ. பன்மணிக் கண்டம் - பல மணிகளையும் பதித்த துண்டங்கள்.

கூக. போது - மலர். பிணங்குபு-பிணங்கி ; பின்னி. குலாஅய் - வளைந்து.

கூஉ. உருக்குதலுற்ற பசிய பொற்குழம்பைக் கருவினுள்ளே விரியச் செலுத்தித் தாம் நினைத்தபடி வார்த்து அமைந்த காமவல்லி என்க. காமவல்லி-கற்பகத் தருவின் மிசைப்படர்வதொரு பூங்கொடி. அப் பூங்கொடி வடிவிலே அரும்பு முதலியவற்றோடு பொன்னாலியற்றப் பட்ட. கோணமும் சந்தியும் உடைய தோரணம் என்க.

கூசு. மாலை அணி நகை - முத்து முதலியவற்றாலாய மாலையாகிய அழகிய அணிகலன்கள்.

கூஎ. கோலக் கருநிரை - அழகிய கரிய மாலை; நிரல்படக் கோத்த தனை நிரை என்றார்.

கூஅ. இடையிடையே ஏற்பிக்கப்பட்டு. பொலிந்து - பொலியா நிற்ப.

[சுசு - ககசு : அராஅந்தானத்திலுள்ள அரியணை மாண்பு.]

சுசு - கoசு : விழைதகு........................நடுவின்

(பொ - ரை.) கண்டோர் விரும்பத்தகுந்த பேரழகுடைய பெரிய மலையினது முழையினூடே புகமுயலும் மெல்லிய முயற்சி உடையன போலத் தோன்றும்படி அடிப்பீடமாகிய பொற் பலகையினைப் பிடரின் மேற் போகட்டுச் சிறிது சோம்பல் திர நிமிர்வன போலவும் அழகு பெற்று, கூரிய எயிறுகள் அமைந்தன வாக வயிரமணியாலே இயற்றப்பட்ட வாயினையும், சுடர்வீசி விளங்கும் கண்களையும் பவழத்தாற் செய்த நாவினையும் விளங்கு கின்ற மணியாலியற்றிய பிளந்த வாயினையும் பச்சைமணியாலே இயற்றப்பட்ட பரிய செவியினையும் பல மணிகளானும் இயற்றப் பட்ட உச்சியின் அழகுக் கேற்பப் பிடரிமயிரானே அழகு செய்யப்பட்டனவும் தம் வாயினுள்ளே புகுமளவின போன்று இடுகியனவும் கொடிபோன்று நீண்டு நன்றாகத் திரண்டனவு மாகிய இடையினையும், (உடையவும்) என்க.

(வி - ம்.) சுசு. விழைதகு - விழைதற்குத் தகுந்த. விழுச்சீர் - சிறந்த அழகு. மந்த முயற்சி என ஒட்டுக. மாமலை - பெரியமலை.

கOO-உ. முழை - குகை. முயற்சியை உடையன போலத் தோன்றும்படி பலகையைப் பிடரின் மிசை அமைத்து என்பது கருத்து

அரியணை தாங்கும் நான்கு அரிமான்களில் பின்பகுதியைத்தாங்கும் இரண்டு அரிமான்களின் தோற்றம் இஃது; இனி முன்பகுதியைத் தாங்கு வன மூரிநிமிர்வன போன்ற தோற்றமுடையன என்று நினைக.

முதனிலைப் பலகை - அடிப்பீடமாகிய பலகை. சுவல் - பிடரி. மூரி - சோம்பல். ஏர் - அழகு.

கoங. வைந்நுதி : அன்மொழித்தொகை. கூர்ந்த நுனியை யுடைய எயிறு என்க.

நிழல் இலங்கும் கண்ணுடைமையானும் ஒளியிற்றாகி என்க. ஒளி யிற்று: ஒருமைப் பன்மை மயக்கம். நிழல் - ஒளி.

கoகூ. பகுவாய்-பிளந்தவாய். பசுமணி-பச்சைமணி. அஃதாவது- மரகதமணி என்க. பரூஉச்செவி - பரிய செவி.

கoஎ. உளைமயிர் -பிடரிமயிர். உச்சியின் அழகுக்கேற்ப உளை மயிர் அணிந்த என மாறுக. அணிந்த - அணியப்பட்ட.

கoஅ. வாய்புகுவன்ன - தத்தம் வாயிலே தாமே புகுந்துவிடுவன போன்று இடுகிய என்க. இடுகிய-சிறுத்த. சிங்கத்தின் இடை மிகச் சிறிதும் வாய் மிகப் பெரிதுமாதல் ஒருங்கேதோன்ற "வாய் புகுவன்ன," என்றார். கொடி-பூங்கொடி. சென்று என்பது நீண்டென்றபடியாம். நடு - இடை.

கக0 - ககசு : தகைமணி..............உருவின்

(பொ - ரை.) அழகிய மணிக்கோவைகளானே இயற்றப் பட்ட தங்கால்களுக்கேற்ப மிகத்திரண்ட துடையினையும் உடையனவுமாகப் பளிங்காகிய மணிகளால் இயற்றப் பட்ட பெரிய நகங்களும் திருத்தமாய் நெருங்கப்பட்டு விளங்கிக் காண்போர் நிழலுருவத்தைத் தன்பாற் காட்டாநின்ற உருக்கு தலுற்ற பொன்னாலியற்றப்பட்ட ஒள்ளிய பொற்கட்டில் அழ கானும் பொலிவுற்று இயன்ற சினத்திக்காலும் அரிமான்கள் தம் உச்சியிலே சுமந்து கொண்டு உயர்ந்த வானிடத்தே செல்லு தற்கு விரும்பி யிருந்தாற் போன்று காண்போர்க்கு அச்சம் வருதற்குக் காரணமான வடிவத்தையுடைய வாய்த் (தருமானு சனம்) என்க.

(வி - ம்.) கக0. தகை-அழகு. தகைந்த மணிக்கோவையுமாம். தன்கை: என்புழித் தன் ஒருமைப்பன்மை மயக்கம். கை என்றது - முன்கால்களை.

ககக. பருஉத்திரள்-பருத்துத் திரண்ட என்க. குறங்கு-துடை. பளிக்குமணி - பளிங்காகியமணி. மென்றொடர் அல்வழியில் வன் றொடராயிற்று: எற்புடம்பு அற்புத்தளை குரக்குமனம் என்பன போல.

வள் உகிர் - பெரிய நகம்.

ககச. அரிமான் - சிங்கம்.

ககரு. விசும்பிவர்தற்கு - வானின்கட் செல்வதற்கு.

ககசு. நச்சியன்ன - விரும்பி யிருந்தாற் போன்ற. உட்குவரும் - உட்குவர் என ஈறுகெட்டு நின்றது. அச்சம் வருதற்குக் காரணமான என்க.

[ககஎ - கஉக: இறைவன் திருவுருவமும் அதனைச்சார எழுதிய ஓவியங்களும்.]

ககஎ - கஉஉ: தருமாஅசன..........சார்வுஅயல்

(பொ - ரை ) கம்மியரானே இயற்றித் தரப்பட்ட அரியணை யினது அழகிய நடுவிடம் பொலிவுறும்படி எழுந்தருளியிருந்த இறைவனைப் பொருந்துகின்ற பக்கத்தே பொருந்தி பேரழகானே விளங்கி வில்லை வளைத்துவைத்தாற் போன்ற கிம்புரியாற் கவ்வப்பட்டு நிழல் காட்டாநின்ற கண்ணுடியினையும் ஒளிமணி களையும் பதித்து ஒப்பனை செய்யப்பட்ட நீலநிறமுடைய சார் மணையின் அயலிலே என்க

(வி - ம்.) ககஎ. தரும் மான் ஆசனம் என்றும் பாடம் இதற்கு - சிற்பியராற்றரப்பட்ட மாட்சிமையுடைய இருக்கை என்க. மானுசனம் என்றும் பாடம். இதற்கு அரியணை என்க.

ககஅ. வேந்தை - இறைவனை ; (கடவுளை)

ககக. தலைஎழில் - உயர்ந்த அழகு.

கஉ0. சிலை - வில். கவிழ்த்தன்ன - வளைத்துவைத்தாற்போன்ற. கிம்புரி - பூண். கவ்வி, கவ்வப்பட்டெனக.

கஉக. ஆடி-கண்ணாடி. ஆடியையும் மணியையும் பதித்து என்க.

கஉஉ. கோலங்குயின்ற - ஒப்பனை செய்யப்பட்ட. சார்வு - சார்மனை.

[தேவருள் ஆண்பாலார் ஓவியங்கள்.]

கஉங - கஙஉ : வாடாத்தாரினர்........போதிகை பொருந்தி

(பொ - ரை.) வாடாத மாலையினையுடையோரும் அழகு பொருந்திய கச்சையினையுடையோரும், வட்டுடையாகப் பொலியா நின்ற கட்டுடையினையுடையோரும், விரிந்துயர்ந்த மார்பின்கண் விளங்காநின்ற மணியாரத்தோடே கிடந்து ஒளிர்கின்ற ஒற்றை முத்துவடமுடையோரும், மத்தளத்தை ஒத்த தோளையுடையோரும் முடியணிகலன் அணிந்த தலையினையுடையோரும் மணிக்கடிப்பினையுடையோரும் கடகமணிந்த கையினையுடையோரும் பக்கங்கள் திரண்டமைந்தனவும் மிக்க சினத்தையுடைய அரவங்கள் இடையே நிரல்படச் சுற்றினாற் போன்று அழகிய வளையங்களாற் கவ்வப்பட்டனவும் தூண்போன்றனவுமாகிய திணிந்த தம் தோள்களை உயர்த்துப் பக்கங்களிலே இருபாலும் அமைந்த போதிகைகளை ஏந்தி நிற்போருமாய்ப் பொருந்தா நிற்பவும் என்க.

(வி - ம்.) கஉங. தேவர் ஆகலின் வாடாத்தாரினர் என்றார். சேடு - அழகு. பெருமையுமாம். கச்சை - ஒருவகை ஆடை.

கஉச. வட்டுடையும் பொலிந்த கட்டுடையும் உடைய அல்குலருமாய் எனினுமாம். வட்டுடை-முழந்தாளளவிற் கட்டுவதோர் ஆடை.

கட்டுடை - கொய்சகமுதலிய வைத்து அழகுபடக் கட்டும் உடை என்க. அல்குல் - இடை.

கஉரு. அகலம் - மார்பு. மணியாரம் - மணிமாலை.

கஉசு. இமைக்கும் - சுடரும். ஒருகாழ்முத்து - ஒற்றைமுத்து வடம்.

கஉஎ. முழவுறழ் - மத்தளத்தை ஒத்த. மொய்ம்பு - தோள். சென்னி ; தலை.

கஉஅ. கழுமணி - கழுவியமணி ; அராவப்பட்டமணி. கடிப்பு - ஒருவகை அணிகலன். கடகம் - ஓரணிகலன்.

கஉக. புடை - பக்கம். நாகம் - பாம்பு. இஃது தோள் வலயத்திற்கு உவமை.

கக௦. கையினிடையே நிரல்படச் சுற்றிக்கொண்டாற் போல் என்க.

ககக. எழு - தூண் - உழலை மரமுமாம்.

கக௨. பொருந்தி - பொருந்த என்க.

[தேவமகளிர் ஓவியங்கள்]

ககங - ககஅ: தொடை..........தொழில்கொண்டிய

(பொ - ரை) தொடுத்தலமைந்த மாலையினையும், விளங்கா நின்ற பலவாகிய மணியணிகலன்களையும் கூம்பிய முடிக்கலனை யும் சிறிய நுதலினையும் மூவாத இளமையினையும் மகிழ்ச்சியா லுண்டான முறுவலையும் உடைய தேவமகளிர் பக்கங்களிலே வரிசையாக நின்று அங்கு மொய்த்துள்ள வண்டுகளை ஓப்பு தற்கு அவாவுற்றார் போன்று பக்கங்கள் திரண்டு இயங்கா நின்ற மணிப்பிடியமைந்த சாமரைகளையும் அழகிய (ஒலி) மணி களையும் கைப்பற்றி இயக்கும் அத்தொழிலை மேற்கொண்டிரா நிற்பவும் என்க.

(வி - ம்.) ககங. தொடை-தொடுத்தல். துளங்கும்-அசையா நின்ற. மணிப்பன்னகை - மணியாலியற்றப்பட்ட பலவாகிய அணி கலன்.

கக௪. முகிழ்முடி - வினைத்தொகை. முதிராவிளமை - மூவாத இளமைத்தன்மை. அமரர் மகளிராதலின் மூவாமை கூறினர்.

கக௫. மகிழ்நகை - மகிழ்ச்சியாலுண்டான புன்முறுவல்.

கக௬. பக்கங்கள் திரண்டமைந்த இயங்கா நின்ற மிக்க மணிகளை யுடைய சாமரையினையும் என்க.

ககஎ. ஓப்பும் - ஓச்சும். அவாவினர் - விருப்பமுடையோர்.

ககஅ. எழில்மணி - அழகிய ஒலிமணி. இயக்கு அத்தொழில் கொண்டிய எனக் கண்ணழித்து இயக்கா நின்ற அத்தொழிலை மேற் கொள்ளாநிற்ப என்க.

[கந்தருவமகளிர் ஓவியங்கள்]

ககக - க௨௪: மணிவிளக்கு..............தோன்ற

(பொ - ரை.) மணிவிளக்கங்கள் சுடர்வீசா நின்ற அழகிய ஒளியையுடைய சுவரின்மேல் விச்சாதரர் மகளிர் எல்லாவிடங் களினும் பொருந்தித் தம் வலக்காலை நீட்டி இடக்காலை முடக்கிக் கூத்திடுவாராகப் பொன்னிறத்தானே பொலிவுற்று விளங்கா நின்ற மிக்க பூத்தொழிலையுடைய ஆடையினையும் பொற்கச்சை யினையும் உடையராய் விண்ணுலகம் கலைத்தொழிலானே பெருகு தற் காரணமான வேட்கையினை உடையர்போலத் தாமரைமலர்

போன்ற தமது பெரிய கையில் மாலையை ஏந்திக்கொண்டு நீல நிறமுடைய முகில்களினூடே காணப்படுபவராய் வரிசை வரிசையாக வரையப்பட்ட ஓவியங்கள் காண்போர் விரும்பும்படி தோன்றுநிற்ப, என்க.

(வி - ம்.) கருக. அணிநிலா - அழகிய ஒளி.

கசo. வலத்தாள் - வலக்கால். இடத்தாள் - இடக்கால்.

கசக. பூந்தானை - பூத்தொழிலமைந்த ஆடை.

கசஉ. பத்தியிற்குயின்ற - நிரலாக எழுதப்பட்ட.

கசரு. விசும்பகம் - வானம். நந்தும் - பெருகும்.

கசும. விச்சாதரர் - கந்தருவர் - (ஈண்டு மகளிர்.) எச்சாரும் - எல்லாப்பக்கங்களிலும். மயங்கி - பொருந்தி.

கசசு. காமுற - கண்டோர் விரும்பும்படி. காமுற (கசஉ) பத்தியிற் குயின்ற என ஒட்டுக.

[இந்திரரும் இருநிலக் கிழவரும் முதலியோர் ஓவியங்கள்.]

கசஎ - கருo : திருமுடி................நிறீஇ.

(பொ - ரை.) அழகிய முடிக்கலன் அணிந்த இந்திரருடைய ஓவியங்களும் பெரிய நிலத்தைக் காத்தருளிய பேரரசர் ஓவியங்களும் இவருடைய கோப்பெருந்தேவியருடைய ஓவியங்களுமாக வடிவமுண்டாக வரையப்பட்ட நூன்முறையானே இயற்றப்பட்ட சித்திரப்படங்களை அவ்வவற்றிற்குத் தகுந்த இடங்களிலே அழகுதக்கிருப்ப நிறுத்தி என்க.

(வி - ம்.) கசஎ. இந்திரரும் பலராகலின் பன்மை கூறினர். இருநிலக்கிழவர் என்றது, இக்குவாகு குலம், அரிகுலம், குருகுலம், நாதகுலம், உக்கிரகுலம் (இவை அருக சமயத்தினர் கூறுவன) என்னும் ஐம்பெருங் குலத்தும் பிறந்து சிறந்த முடிமன்னர் உருவந்தீட்டிய ஓவியங்களை. உரிமை மகளிர் என்றது, இந்திரரும் இருநிலக் கிழவருமாகிய இவருடைய கோப்பெருந்தேவியர் உருவங்களை.

கசஅ. உருபு - வடிவம்.

கசகூ. பொத்தகம் - ஓவியநூல். சித்திரச் செய்கை என்றது, உருவப்படங்களை.

கருo. அத்தக - அழகுண்டாக.

[அரா அந்தாணம்.]

கருக - கருசு : அழகு..............அரா அந்தாணம்.

(பொ - ரை.) இங்ஙனம் அழகுண்டாக ஒப்பனை செய்யப்பட்ட அசையாநின்ற மணிகளாலே இயற்றப்பட்ட இருக்கை

யின் மேல் நிலாவொளி விரிந்த நிறை கதிரையுடைய மூன்று முழுவெண்டிங்கள் மண்டிலங்களை ஒருங்கே ஒன்றன்மேலொன்றாய் அடுக்கிவைத்தாற்போன்ற மாலையையுடைய முக்குடைகள் முறையாக நிழற்ற நிற்பப் பிறவிப் பெருங்கடலிலே ஆழாநின்ற பலவாகிய உயிர்களும் அக் கடலினின்றும் உய்ந்து கரையேறுதற்கோர் எல்லையாகிய இறைவன் இருத்தற் பொருட்டு இயற்றப்பட்ட தெய்விகமான ஒப்பனை கிளராநின்ற அழகினையுடையதும் இறைவனது முழுப்பண்பினையும் புகழ்ந்து பாராட்டுதற்குக் காரணமானதும் அழகிய மாணிக்க மணியைத் தன்னகத்தே கொண்டுள்ள பொற்செப்புப்போன்று பெறற்கரிய மணிபோன்ற இறையுருவத்தைத் தன்பாற் கொண்டதுமாகிய அராஅந்தாணத்தின்கண் என்க.

(வி - ம்.) கஙச. தாம்: அசைச்சொல்.

கஙரு. உலகம்: ஆகுபெயர். பிறவிப் பெருங்கடல் என்க. அலகை - எல்லை, முடிவிடம்.

கஙகு. பொறி வாயிலைந்தவித்தான் என்றாற்போன்று இறைவனை அருந்தவக் கிழவன் என்றார். ஐ : சாரியை.

கஙஎ. இருக்கைக்கு இயற்றிய என்க. இயற்றிய (கசுக) அருமணி என்று இயையும்.

கஙக. பூரணம் பொலிமை - முழுப்பொலிவு. மீக்கூறி என்னும் எச்சத்தைக் கூற என்று செயவெனெச்சமாக்கிக் காரணப் பொருட்டாகக் கொள்க.

கசுo. திருமணி - அழகிய மணி. இஃது இறைவன் திருவுருவத்திற்கும், செப்பு - அராஅந்தாணத்திற்கும் உவமை.

கசுக. அருமணி - அன்மொழித்தொகையாய் இறைவன் திருவுருவத்தைக் குறித்து நின்றது.

[உதயணன் இறைவழிபாடு செய்தல்]

கசுஉ - கஎo : உரிமை...............பைந்தாரோன் என்.

(பொ - ரை.) வாசவதத்தை முதலிய சுற்றத்தாரோடு புகுந்து செல்கதி விளக்கமுற்ற கருத்தையுடையோன் போன்று நான்முறைப்படி இறைவன் திருமுன் சென்று வாழ்த்துப் பாடல்களைப் பாடி வாழ்த்தி "இறைவனே! எளியேன் பிறவிப் பெருங்கடனீந்தி முத்திநிலையை எய்துவேனாகத் திருவருள்புரிக" என்று வேண்டி, அருகனறத்தைப் பேணிய சிறந்த சமயச் சிறப்பினையுடைய தேவர்கள் இறைவனை விரும்பிக் கைகுவித்து வணங்குவதுபோலக் கைகூப்பி வணங்கிப் பூப்பலி முதலிய பலிகளைக் கொடுத்துத் தெய்வம் பராவுதலாகிய கடனைக் கழித்தனன், என்க.

(வி - ம்.) கசுஉ. கதி - வீடு.

கசுங. விதி - நூல்விதி. துதி - வாழ்த்துப்பாடல்.

கசுரு. பெறற்கரும்பேதை - கேவலமடந்தை ; (முத்தி.) பெறுகென - பெறுவேனாக என்று.

கசுசு - அ. பிறசமயத்தார்க் கில்லாச் சிறப்புக் கொள்கையாகிய அருக சமயங்கூறும் சிறப்புமுறையானே தேவர்கள் விரும்பிக் கைகுவித்து வணங்குமாறுபோலக் கைகுவித்து வணங்கி என்க.

கசுகூ. மலர்ப்போது : இருபெயரொட்டு. பூப்பலி முதலிய பலிகளைக் கொடுத்து என்க.

கஎ0. பைந்தாரோன், ஙக. தன்னியலாதலின் (கசுக) அராந்தாணம் துன்றித் துதித்துப் பெறுகெனப் பரவிக் கூப்பி வீசிக் கடன் கழித்தனன் என இயைபு காண்க.

சூ. தெய்வச் சிறப்பு முற்றிற்று.

---

# எ. நகர் வலங் கொண்டது

இதன்கண்—உதயணன் சயந்தி நகரத்தை வலஞ்செய்தலும், மகளிரும் மைந்தரும், உதயணனைக் காண விரும்பிக் குழாங்கொள்ளலும், அவர்கள் மலர்மழை பொழிதலும், புகழ்தலும், உதயணனும் வாசவதத்தையும் நீராடுதலும், பிறவும் கூறப்படும்.

பரவுக்கடன் கழிந்து விரவுப்பகை தணிந்த
தாமந் துயல்வருங் காமர் கைவினைக்
கோயின் முற்றத்து வாயில் போந்து
குன்றுகண் கூடிய குழாஅம் ஏய்ப்ப
ஒன்றுகண் டன்ன ஓங்குநிலை வனப்பின்
மாடம் ஓங்கிய மகிழ்மலி மூதூர்
யாறுகண் டன்ன அகன்கனை வீதியுள்
காற்றுறழ் செலவிற் கோற்றொழில் இளையர்
மங்கல மரபினர் அல்லது மற்றையர்
கோங்கலர் நறுந்தார்க் குமரன் முன்னர்
நில்லன்மி னீரென நீக்குவனர் கடிய
மல்லல் ஆவணத் திருபுடை மருங்கினும்
நண்ணு மாந்த ராயினுங் கண்ணுறின்
இமைத்தல் உறாஅ அமைப்பின் மேலும்
புதுமணக் கோலத்துப் பொலிவொடு புணர்ந்த
கதிர்முடி மன்னனைக் காண்பது விரும்பி
மணிஅறைந் தன்ன மாவீழ் ஓதி
அணிபெறக் கிடந்த அம்பொற் சூட்டினர்
சூடுறு பொன்வினைச் சுவணர் புனைந்த
தோடுங் கடிப்புந் துளங்கு காதினர்
வெம்மை பொதிந்த பொம்மென் இளமுலை
இடைப்படீஇப் பிறழும் ஏக வல்லி
அணிக்கலை புனைந்த அரசிலைப் பொன்அடர்
புனற்சுழி புரையும் பொலிவிற் றாகி
வனப்பமை அவ்வயிற் றணித்தகக் கிடந்த

உந்தி யுள்ளுற வந்துடல் நடுங்கி
அளைக்கிவர் அரவின் தளர்ச்சி ஏய்ப்ப
முளைத்தெழு முலைக்கச் சசைத்தலின் அசைந்த
மருங்குல் நோவ விரும்புபு விரைந்து
மைவரை மீமிசை மகளிர் போலச்
செய்வினை மகளிர் செய்குன் றேறினர்
உணர்ந்தோர் கொண்ட உறுநன் றேய்ப்ப
வணர்ந்தேந்து வளர்பிறை வண்ணங் கடுப்பத்
திருநுதற் கேற்ற பரிசரக் கைவினை
நீடிய பின்றைக் கூடாது தாங்கும்
கொற்றவற் காண்மென வெற்றவேற் றடக்கையர்
கோல வித்தகங் குயின்ற நுட்பத்துத்
தோடுங் கடிப்புந் துயல்வருங் காதினர்
வாலிழை மகளிர் வழிவழி விலக்கவும்
ஒன்பது விருத்தி நன்பத நுனித்த
ஓவவினை யாளர் பாவனை நிறீஇ
வட்டிகை வாக்கின் வண்ணக் கைவினைக்
கட்டளைப் பாவை கடுப்பத் தோன்றிக்
குறைவினைக் கோலங் கூடினர்க் கணங்காய்
நிறைமனை வரைப்பிற் சிறையெனச் செய்த
சுவர்சார் வாகத் துன்னுபு நிரைத்த
நகர்காண் ஏணி விரைவனர் ஏறினர்
ஒருபுடை அல்ல துட்குவரு செங்கோல்
இருபுடை பெயரா ஏயர் பெருமகன்
சிதைபொருள் வலியாச் செறிவுடைச் செய்தொழில்
உதயண குமரன் வதுவைக் கணிந்த
கோலங் கொண்ட கோல்வளை மகளிருள்
ஞாலந் திரியா நன்னிறைத் திண்கோள்
உத்தம மகளிர் ஒழிய மற்றைக்
கன்னியர் எல்லாங் காமன் துரந்த
கணையுளங் கழியக் கவினழி வெய்தி
இறைவளை நில்லார் நிறைவரை நெகிழ
நாண்மீ தூர்ந்து நன்னெஞ்சு நடப்பத்
தோண்மீ தூர்ந்து தொலைவிட நோக்கி

அற்றம் பார்க்குஞ் செற்றச் செய்தொழிற்
பற்று மாந்தரிற் பசலை பாய்ந்த
கருங்கண் புலம்ப வருந்தினர் அதனால்
காட்சி விரும்பன்மின் மாட்சி யின்றென
ஈனாத் தாயர் ஆனாது விலக்கும்
ஆணை மறுத்தியாம் ஆண முடைமையின்
இந்நகர் காண்களம் அன்னை மாரெனக்
கண்ணின வேட்கை பின்னின்று துரப்ப
வாயின் மாடத்து மருங்குஅணி பெற்ற
வரிச்சா லேகம் விரித்தனர் அகற்றி
ததும்புங் கிண்கிணித் தகைமலர்ச் சேவடிப்
பெதும்பை மகளிர் விதும்பி நோக்கினர்
நேரியற் சாயல் நிகர்தமக் கில்லாக்
காரிகை கடுநனைத் தூண்டி லாக
உட்கு நாணும் ஊராண் ஒழுக்கும்
கட்கின் கோலமுங் கட்டிரை யாக
இருங்கண் ஞாலத் திளையோர் ஈட்டிய
அருங்கல வெறுக்கை யவைமீன் ஆக
வாங்குபு கொள்ளும் வழக்கியல் வழாஅப்
பூங்குழை மகளிர் புனைமணிப் பைம்பூண்
ஒளிபெற் றிலங்கும் உதயண குமரன்
அளிபெற் றமர்ந்த அம்பூஞ் சேக்கையுள்
உவக்கும் வாயிற் றூடி மற்றவன்
நயக்கும் வாயுள் நகைச்சுவைப் புலவியுள்
நோக்கமை கடவுட் கூப்பினுங் கதுமெனப்
பூம்போ தன்ன தேங்குவளைத் தடக்கை
வள்ளுகிர் வருட்டின் உள்குளிர்ப் புறீஇப்
பஞ்சி அணிந்த அஞ்செஞ் சீறடிப்
பொன்னணி கிண்கிணிப் போழ்வாய் நிறையச்
சென்னித் தாமத்துப் பன்மலர்த் தாதுக
இரந்துபின் எய்தும் இன்சுவை அமிர்தம்
புணரக் கூடின் போகமும் இனிதென
மீட்டல் செல்லா வேட்ட விருப்பொடு
கோடுகோள் மயிலின் குழாஅம் எய்ப்ப

மாடந் தோறு மலிந்திறை கொண்டனர்
சுவல்பொதி கூழையர் சுடர்பொன் தோட்டினர்
பெயலிடைப் பிறழு மின்னேர் சாயலர்
பாப்பெயிற் றன்ன பன்னிரைத் தாலி
கோப்புமுறை கொண்ட கோலக் கழுத்தினர்
மணிநில மருங்கின் முனிவிலர் ஆடும்
பந்துங் கழங்கும் பட்டுழிக் கிடப்ப
அந்தண் மஞ்ஞை ஆடிடம் எய்ப்பக்
கோதையுங் குழலுந் துள்ளுபு விரியப்
பேதை மகளிர் வீதி முன்னினர்
வெண்முகில் நடுவண் மீன்முகத் தெழுதரும்
திருமதி என்னத் திலக வாண்முகம்
அருமணி மாடத் தகவயிற் சுடர
வாட்கெழு மழைக்கண் வாசவ தத்தை
தோட்குத் தக்க தொடுகழற் குருசிலைக்
கண்டீர் நீங்கிக் காணிடந் தம்மென
விண்தீர் மகளிரின் வியப்பத் தோன்றி
அரிமதர் நெடுங்கண் அளவிகந் தகல
இருமுலைப் பொற்பூண் இடவயின் திருத்தாத்
தெரிவை மகளிர் தேமொழிக் கிளவிக்
குழித்தலைப் புதல்வர் எழிற்புறம் வரித்த
அஞ்சாந் தழிய ஆகத் தடக்கி
நண்சா லேகத் தெம்பரு நோக்கினர்
அறம்புரி செங்கோல் அவந்தியர் பெருமகன்
மறம்புரி தானை மறமாச் சேனன்
பாவைய ருள்ளும் ஓவா வாழ்க்கை
ஏசுவ தில்லா வாசவ தத்தையும்
காமன் அன்ன கண்வாங் குருவின்
தாமந் தாழ்ந்த ஏம வெண்குடை
வத்தவர் இறைவனு முற்பால் முயன்ற
அத்தவம் அறியின் எத்திறத் தாயினும்
நோற்றும் என்னும் கூற்றினர் ஆகி
மணிநிற மஞ்ஞையுஞ் சிங்கமு மயங்கி
அணிமலை இருந்த தோற்றம் போல

மகளிரு மைந்தருந் தோகைகோண் டீண்டி
மாடந் தோறு மலர்மழை பொழிய
ஆடம் பலமும் ஆவண மறுகும்
கீத சாலையுங் கேள்விப் பந்தரும்
ஓது சாலையுஞ் சூதாடு கழகமும்
ஐவே றமைந்த அடிசிற் பள்ளியும்
தங்கோள் ஒழிந்த தன்மையர் ஆகி
மண்கா முறூஉம் வத்தவர் மன்னனைக்
கண்கா முற்ற கருத்தினர் ஆகி
விண்மேல் உறையுநர் விழையுங் கோலமோடு
மேன்மேல நெருங்கி வேண்டிடம் பெறுஅர்
அரும்பதி உறைநர் விரும்புபு புகழ
அருந்தவங் கொடுக்குஞ் சுருங்காச் செல்வத்(து)
உத்தர குருவம் ஒத்த சும்மை
முத்துமணல் வீதி முற்றுவலம் போகித்
தெய்வ மாடமுந் தேர்நிலைக் கொட்டிலும்
ஐயர் தானமும் அன்னவை பிறவும்
புண்ணியப் பெயரிடங் கண்ணின் நோக்கி
நாட்டகம் புகழ்ந்த நன்னகர் புகல
மீட்டகம் புக்கு மேவரு செல்வமொடு
மங்கல மண்ணுநீர் மரபின் ஆடக்
கொங்கலர் கோதையைப் பண்டுமுன் பயின்ற
தோழி தானே தாழாது விரும்பிக்
கைந்நவில் கம்மத்துக் கம்மியன் புனைந்த
செய்கலத் துள்ளுஞ் சிறந்தவை நோக்கி
ஏற்குந் தானத்துப் பாற்பட அணிந்து
பானீர் நெடுங்கடற் பனிநாள் எழுந்த
மேனீர் ஆவியின் மெல்லி தாகிய
கழுமடிக் கலிங்கம் வழுவில வாங்கி
ஒண்மணிக் காசிற் பன்மணிப் பாவை
கண்ணிய காதல் உண்ணெகிழ்ந்து விரும்பி
ஆடற் கவாவும் அமிழ்தஞ் சோர
ஊடுபோழ்ந் துறழ ஒலிபெற உடீஇ
மாலையுஞ் சாந்து மங்கல மரபின்

நூலிற் றிரியாது நண்ணெழில் புரியப்
புதுவது புனைந்த பூங்கொடி புரையும்
வதுவைக் கோலத்து வாசவ தத்தை
புதுமைக் காரிகை புதுநாண் திளைப்பக்
கதிர்விளங் காரத்துக் காமங் கழுமி
அன்னத் தன்ன அன்புகொள் காதலொடு
பொன்னகர்க் கியன்ற புகரில் புகழ்நகர்
வரைவில் வண்மை வத்தவர் மன்னற்குப்
பொருவில் போகம் புணர்ந்தன்றால் இனிதென்.

---

## எ. நகர் வலங் கொண்டது

அஃதாவது, வாசவதத்தையோடு இறை வழிபாடு செய்த உதயண குமரன் பின்னர் நகர்வலஞ் செய்தலைக் கூறும் பகுதி என்றவாறு.

### உரை

[க - ௩௬ : உதயணகுமரன் நகர்வலஞ் செய்யத் தொடங்குதல்.]

க - ௩ : பரவுக்கடல்...................போந்த.

(பொ - ரை.) இவ்வாறு உதயணகுமரன் கடவுட் பராவுங் கடன் கழித்தபின்னர், தன் உயிரோடு கலந்த காமவெகுளி மயக்கங்களாகிய பகைப் பண்புகள் தணிதற்குக் காரணமான தும், மலர்மாலை அசையாநின்ற அழகிய ஒப்பனையை உடையதும் ஆகிய அத்திருக்கோயிலின் முற்றமாகிய வாயிலிடத்தே வாரா நிற்ப, என்க.

(வி - ம்.) க. விரவுப்பகை - விரவுதலையுடைய பகைப்பண்புகள் என்க. அவை காம வெகுளி மயக்கங்கள். இனி உயிர்ப்பண்பு களைக் கொல்லுவனவாகிய ஞானாவரணீயம், தரிசனாவரணீயம், மோக னீயம், வேதனீயம் என்னும் காதிவினைகள் எனினுமாம்.

விரவுப் பகை தணிந்தமைக்குக் காரணமான கோயில், தாமந் துயல் வருங் கோயில் எனத் தனித் தனிக் கூட்டுக.

உ. தாமந்துயல்வரும்-மாலைகள் அசையாநின்ற. காமர் கைவினை- ஒப்பனைத் தொழில்.

௩. கோயில் - அராஅந்தாணம். முற்றத்துவாயில் - முற்றமாகிய வாயில் என்க. அத்துச் சாரியை அல்வழிக்கண் வந்தது.

போந்து என்னும் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக.

௪ - ௧௧ : குன்று.........................கடிய.

(பொ - ரை) மலைக்கூட்டத்தைக் கண்டாற்போல்வனவும் தம்முள் ஒன்றை ஒன்று ஒத்த உயரமுடையனவும் உயர்ந்து நிற்றலான் உண்டான அழகினையுடையனவுமாகிய மாடவீடுகள் மிக்கதும் மகிழ்ச்சி மிகுதற்குக் காரணமானதும் பழைதுமாகிய அந் நகரத்தின்கண்ணுள்ள பேரியாறுகளை ஒத்த அகலமும் ஆரவாரமுமுடைய தெருக்களிலே புகுந்து காற்றை ஒத்த செலவினையும் காவற்றொழிலையும் உடைய வீரர் ஆண்டுக் குழுமியுள்ள மங்கலமரபினர் அல்லாத ஏனையோரை நோக்கி "மணங் கமழும் நறிய மாலையினையுடைய உதயணகுமரன் முன்னர் நீயிர் நில்லாதே கொண்மின்" என்றுகூறி நீக்கிக் கடியாநிற்ப என்க.

(வி - ம்.) ௪. குழாம் - கூட்டம். ஏய்ப்ப - ஒப்ப.

௫. ஒன்றுபோல அனைத்தும் உயர்ந்த நிலைமையினையுடைய அழகினையுடைய மாடம் என்க.

குன்றுகள் கூடிய குழாம் ஏய்ப்ப ஓங்குநிலை மாடம், ஒன்று கண்டன்ன ஓங்குநிலை மாடம் எனத் தனித்தனிக் கூட்டுக.

௬. மகிழ் - மகிழ்ச்சி. மூதூர் - பழைதாகிய ஊர்.

௭. யாறுகள் போன்ற அகலமும் ஆரவாரமும் உடைய வீதி என்க. கனை - ஆரவாரம்.

௮. காற்றுறழ் - காற்றை ஒத்த. செலவு - செல்லுதல். கோல் ஏந்திக் காக்குந் தொழில் என்க. இளையர் என்றது மறவர் என்பது படநின்றது.

௯. மங்கலமரபினர் சான்றோர் சுமங்கலியர் முதலியோர். மற்றையர் - கயவர் அமங்கலியர் உறுப்பறை முதலியோர்.

௧0. கொங்கு - மணம்; தேனுமாம் குமரன் - உதயணகுமரன் (மற்றையரை) நோக்கி என்க. நீர் நில்லன்மின் என மாறிக் கூட்டுக.

௧௧. நீக்குவனர் : முற்றெச்சம்.

[௧௨ - ௧௧௯. மகளிர் செயல்]

௧௨ - ௧௯ : மல்லல்.................விரும்பி.

(பொ - ரை.) காண்போர் பகைவரே ஆயினும் காணுங்கால் கண்ணிமைத்துக் காண்டல் இயலாத இயற்கை அழகின் மேலும் புதுமணக் கோலத்துப் பொலிவோடே பொருந்திய ஒளிமுடியையுடைய அவ்வுதயண மன்னனைக் காணவிழைந்து வளமிக்க அங்காடித் தெருவின் இருபக்கத்தும் என்க.

(வி - ம்.) ௧௨. மல்லல் - வளம். ஆவணம் - அங்காடித்தெரு; (கடைத்தெரு.)

கரு. நண்ணுமாந்தர் - பகைவர். அவர் காணல் அரிதாகலின் கன்னூறின் என்றார்.

கசு. இமைத்தல் உறாஅ - இமைத்துக் காண வியலாத. காண்போர் கட்பொறியைத் தன் வயமாக்கிக் கோடலின் இமைத்தல் இயலாதென்பது கருத்து. கண்டுகண்டமையாத பேரழகு என்பதாம். அமைப்பு - இயற்கை அழகு.

ககூ. கதிர்முடி மன்னன் - உதயணகுமரன்.

கஎ - உ0 : மணி........................விரைந்து.

(பொ - ரை.) நீலமணியை இழையாக்கிப் பதித்து வைத்தாற் போன்ற வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலினையும் அக்கூந்தல் அழகு பெறும்படி அதனயலே கிடந்த அழகிய பொற்பட்டத்தினையும் உடையரும், சுவணமென்னும் பொன்னாலியற்றிய அணிகலன்களையுடையோரும் தோடுங் கடிப்பும் அசையாநின்ற செவியினையுடையோரும் என்க.

(வி - ம்.) கஎ. மணி - நீலமணி. அறைந்தன்ன - பதித்து வைத்தாற் போன்ற. நீலமணியை இழையாக்கி அறைந்து வைத்தாற் போன்ற என்றவாறு. மா - வண்டு. ஓதி - கூந்தல்.

கஅ. அக்கூந்தல் அழகுறும்படி என்க. பொற்சூட்டு-நெற்றிப் பட்டம்.

ககூ. சுடுதலுற்ற பொற்றொழிலாற் செய்த சுவணப்பொன் அணிகலன்களையுடையோரும் என்க.

உ0. தோடு, கடிப்பு என்பன செவியணிகலன்கள்.

உக - ருக : வெம்மை..........................ஏறினர்.

(பொ - ரை.) (ருக) வளையலையுடையோரும் ஆகிய மகளிர் தமது இளமுலையினிடையே பட்டுப் பிறழாநின்ற ஏகவல்லி என்னும் அணிகலன், அழகிய அரசிலை வடிவிற் செய்த பொற்றகட்டினையுடைத்தாய் நீர்ச்சுழி போன்ற அழகினையுடைத்தாய் இயற்கையிலேயே பேரழகுபடைத்த வயிற்றின்கண் அவ்வழகிற்கு மேலும் அழகு தருவதாய்க் கிடந்த கொப்பூழின்கண் வந்து அச்சத்தாலே உடல் நடுங்கி வளையினுட் புகுதற்குமுயலும் பாம்பின் தளர்ச்சி போலத் தளரா நிற்ப முனைத்தெழுந்த முலையும் அதன்கண் அணிந்த கச்சுமுதலியனவும் பாரமாகி முன்னரே வருத்துதலானே வருந்தா நின்ற தம்மிடைகள் மேலும் வருந்தும்படி,உயர நின்று காண்டலை விரும்பி மலையின்மேல் ஏறுகின்ற வரையரமகளிர் போலச் செய்குன்றுகளிலே விரைந்து ஏறுநின்றனர் என்க.

(வி--ம்.) ஓதிமுதலியவற்றையுடைய (ருக) மகளிர் விரும்பி மலையின்மேல் ஏறும் வரையர மகளிர் போல விரைந்து செய்குன்றுகள் மிசை ஏறுநின்றனர் என்க.

உக. வெம்மை - விருப்பம்.

உஉ. இடைப்படீஇ - இடையிற்பட்டு. ஏகவல்லி-ஓரணிகலன்; ஒற்றை வடம்.

உ௩. அணிக்கலை - அழகிய ஆடை. அணிகலனாகிய மேகலையுமாம். அரசிலைப் பொன்னடர் - அரசிலைவடிவிற்றாய்ச் செய்ததொரு பொற்றகடு.

உ௪. புனற் சுழி-நீரினுண்டாகும் சுழி. இது கொப்பூழுக்குவமை.

உ௫. அணித்தகக் கிடந்த - அழகிற்கு ஏற்பக்கிடந்த.

உ௬. உந்தி - கொப்பூழ்.

உ௭. அளை - வளை. இவரரவு - ஊர்கின்ற பாம்பு. இஃது ஏகவல்லிக்கு உவமை, வளை கொப்பூழுக்குவமை.

உ௮. முலையுங் கச்சும் அசைத்தலின் என்க.

உ௯. மருங்குல் - இடை. விரும்புபு - விரும்பி.

௩0. மைவரை மீமிசை மகளிர் - வரையரமகளிர்.

௩க. செய்வளை: வினைத்தொகை. செய்குன்று-செயற்கைமலை.

[௩உ - ௪௭. ஒருதொடர்.]

௩உ - ௩௮: உணர்ந்தோர்......................விலக்கவும்.

(பொ - ரை.) வேறு சிலமகளிர் அறிவுடையோர் தம் மனத்துட் கொண்ட மிக்க நன்றியறிவு போன்று நாளுக்குநாள் வளராநின்ற வளர்பிறையின் மேல் வண்ணந்திட்டினாற் போலத் தமது அழகிய நெற்றிக்கேற்ற ஒப்பனைத் தொழில் செய்தலினாலே காலம் நீடுமாயின் அங்ஙனம் நீடிய பின்னர்க் கொற்றவனைக் காண்டல் இயலாதாம்; ஆதலின் (இத்தொழில் குறை கிடப்பிற் கிடக்க) யாம் இன்னே சென்று காண்பேம் என்று கருதி, வெற்றிவேல் ஏந்திய கையினையுடையோரும் ஒப்பனைச் சிறப்புப் பொருந்திய நுண்மையுடைய தோடும் கடிப்பும் அசையாநின்ற செவியினையும் தூய பிற அணிகலன்களையும் உடைய காவன் மகளிர் தம்மை வழிகள் தோறும் விலக்காநிற்பவும் தவிராராய் என்க.

(வி - ம்.) ௩உ-௩. உணர்ந்தோர் - நன்மை தீமைகளை ஆராய்ந்தறிந்த சான்றோர். உறு - மிக்க. நன்று - செய்ந்நன்றி.

௩௪. நன்றி போல வளரும் பிறை என்க. பிறைக்கு வண்ணமூட்டுதல் போன்று திரு நுதலுக்குச் செய்யும் பரிசரக்கைவினையினால் காலம் நீடியபின் என்க. பரிசரக்கைவினை - ஒப்பனைத் தொழில்.

௩௫. கூடாது - (கொற்றவனைக்) காண்டல் இயலாது.

௩௬. கொற்றவன்-உதயணகுமரன். 'காண்ம்' என்புழி, ஈற்றய லகரமும் ககரப் புள்ளியும் கெட்டன; செய்யுள் விகாரம். காண்கம் என்றவாறு. வெற்றம் - வெற்றி.

௩௭. ஒப்பனைத் தொழிற்றிற மியன்ற நுட்பத்தினையுடைய தோடுங் கடிப்பும் என்க. தடக்கையரும் காதினருமாகிய வாலிழையை யுடைய காவல் மகளிர் விலக்கவும் (தவிராராய்) என்க.

இதனால், மகளிரை விலக்குதற்குப் பெண்ணினக் காவலர் உண்மை உணர்க.

## ௪௦ - ௪௬ : ஒன்பது....................ஏறினர்.

(பொ - ரை.) ஒன்பது வகைப்பட்ட நன்றாகிய இருப்புக் களைக் கூரிதாகக் கற்ற ஓவியப்புலவர் அவிநயம் நிறுத்திச் சித் திரப் பலகையின்கண் வரைந்த எழுதுகோலின் திருத்தமும் தொழிற்றிறனும் அமைந்த பாவைபோலத் தோன்றி ஒப்பனைத் தொழிற் குறையையுடைய ஏனைய மகளிர்க்குத் துன்பமுண் டாகும்படி இல்லங்களின் பக்கத்தே காவலாக எடுத்த மதில் சார்வாக நெருக்கி நிரல்படச் சார்த்தப்பட்ட நகர்காண் ஏணி யில் விரைந்து ஏறுநின்றனர் என்க.

(வி - ம்.) (சில மகளிர்) காவன் மகளிர் விலக்கவும் (தவிராராய்) பாவைபோலத் தோன்றிக் குறைவினைக் கோலங் கூடிய ஏனை மகளிர்க்கு அணங்காய் நகர்காண் ஏணியில் ஏறினர் என்று இயைபு காண்க.

௪௦. ஒன்பது விருத்தி - ஒன்பது வகைப்பட்ட கூத்திருப்பு: அவையாவன, "பதுமுகம், உட்கட்டிதம், ஒப்படியிருக்கை, சம்புடம், அயமுகம், சுவத்திகம், தனிப்புடம், மண்டிலம், ஏகபாதம், என விவை;" (சிலப். அ - உ௫. அடியார்க்கு நல்லார். உரை.)

நன்பதம் - நன்றாகிய இருக்கை. நுனித்த - கூரிதாகக் கற்ற.

௪௧. பாவனை - அவிநயம். அவிநயம் தோன்ற நிறுத்தி என்க.

௪௨. வட்டிகை - எழுதுகோல். வண்ணமும் கைவினையையும் உடைய என்க.

௪௩. கட்டளைப்பாவை - உவமங்காட்டி எழுதிய ஓவியப்பாவை. கட்டளை - உவமம். கடுப்ப - ஒப்ப.

௪௪. குறைவினைக்கோலம்-முற்றுப்பெறாத ஒப்பனைத் தொழில். ஒப்பனை முற்றுப்பெறாத மகளிர் ஏறற்கு இடம் பெறாமையில் அவர்க்கு அணங்காய் என்றார். அணங்கு - துன்பம்.

௪௫. சிறை - காவல்.

௪௬. சுவர் - மதில். துன்னுபு - துன்னி; நெருங்கி. விரை வனர் : முற்றெச்சம்.

## ௪௮ - ௫௫ : ஒருபுடை................கன்னியர் எல்லாம்.

(பொ - ரை) அறத்தின் பக்கமாகிய ஒருபக்கத்திலே பெயர்வதன்றிப் பிறழ்ந்து அறமறமாகிய இருபக்கத்தினும்

பெயர்தலில்லாத செங்கோன்மையையுடைய ஏயர் கால்வழித் தோன்றலும், தொடங்கிய பின்னர்க் கெட்டொழியும் ஆள் வினையை மேற்கொள்ளாதவனுமாகிய உதயணகுமரன் மண விழாவின் பொருட்டு ஒப்பனை செய்துகொண்ட மகளிருள் பிறழாத நிறையினையும் கற்புடைமையையும் உடைய குலமகளி ரல்லாத ஏனைக் கன்னியர் எல்லாம் என்க.

(வி - ம்.) சஅ. ஒருபுடை - அறத்தினது பக்கம்.

சகூ. இருபுடை - அறமறமாகிய இரண்டு பக்கத்தினும். ஏயர் மரபிற்றோன்றியவனுகிய என்க.

ருo. சிதை பொருள் - இடையிலே முறிந்துகெடும் ஆள்வினை.

"தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது" (திருக் - சகக.)

எனவும்,

"உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்" (திருக் - சஎங.)

எனவும், இன்னோரன்ன பிறவும் அரசியலறமாகலின் அவ்வறத்திற் றவிராதான் என்பார், "சிதைபொருள் வலியாச் செறிவுடைச் செய் தொழில் உதயண குமரன்" என்றார்.

ருங. ஞாலந்திரியா - உலகின்கட் பிறழ்தலில்லாத. இனி ஞாலந் திரியினும் திரியாத நிறை என ஒருசொற் பெய்துரைப்பினும் ஆம்.

"நிலம்புடை பெயரினும் விசும்புவந் திழியினும், கலங்காக் கடவுட் கற்பு" என்றிவ்வாசிரியரே (இலா - கஎ. கஙகூ-சo) கூறுதல் உணர்க.

இனி வள்ளுவனார்,

"ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்(கு)
ஆழி எனப்படு வார்" (திருக் - கஅகூ)

என்றோதுதலும் உணர்க.

திண்கோள் - திண்ணிய கொள்கை. அஃதாவது கற்புடைமை. "கற்பென்னும் திண்மை" என்பது வள்ளுவர் மெய்ம்மொழி; (திருக் - ருச.)

ருச. உத்தம மகளிர் என்றது குலமகளிராகிய கன்னியரை.

ருரு - கூக : காமன்..............வருந்தினரதனால்.

(பொ - ரை.) காமன் எய்த மலர்க்கணைகள் தம் நெஞ்சத் தைத் துளைத்துக் கழியா நிற்றலானே அழகு கெட்டுத் தம் கைவளை கழன்று விழவும் நிறை என்னும் வரம்பு நெகிழவும் நாணத்தைக் கீழ்ப்படுத்தி நன்றாகிய தம் நெஞ்சம் செல்லா நிற்பவும் தமது தோள்வலி மிக்கதென்று கருதி தோற்குமிட

மறிந்து செவ்வி பார்க்கும் உதயணனுடைய போர்த்தொழிலை யுடைய பகைவேந்தர்போல முன்னரே பசலைபாயப்பட்ட தம் கரிய கண்கள் புலம்பா நிற்பப் பெரிதும் வருத்தமெய்தினர் ஆதலானே என்க.

(வி - ம்.) ருஉ. துரந்த - செலுத்திய.

ருசு. கணை - ஐந்து மலரம்பு ; அவை-தாமரை ; சூதம், அசோகு, முல்லை, நீலம் என்பன.

ருஎ. வளை இறைநில்லார் எனமாறுக. இறை - முன்கை. உடைமையின் தொழில் உடையார் மேனின்றது.

ருஅ. நாணத்தினும் மேம்பட்டு நெஞ்சு நடப்ப என்க.

ருகூ. சூஉ. தோள்வலி மிக்கதாகக் கருதிப் பகைவன் தோற்கு மிட முணர்ந்து காலத்தை ஆராயா நின்ற போர்த்தொழிலையுடைய பகையரசர் போல என்க. ஐண்டுப் பகையரசர் உதயணனுடைய பகைமன்னர் என்க. பற்றுமாந்தர்போல வருந்தினர் என இயைக்க.

சுங - சுரு : காட்சி..............அன்னைமாரென.

(பொ - ரை.) உதயண குமரனைக் காண்டல் விரும்பாதே கொண்மின் ; அங்ஙனம் விரும்புதல் மாட்சிமையுடையதாகாது, என்று செவிலித் தாயர் இடையறாது தடுக்கவும், அவர்தம் கட்டளையை மறுத்து "எம்மன்னையீர்! யாம் உதயணனைக் காண விரும்பினேமல்லேம்: ஒப்பனை செய்யப்பட்ட இச்சயந்தி யின் அழகினை மட்டுமே காண்பேம்! எமக்கு அவ்விருப்ப மிருத்தலானே" என்று கூறி என்க.

(வி - ம்.) செவிலியர், உதயணனைக் கண்டமகளிர் எல்லாம் வருந்தினர் ஆதலான் நீயிர் விரும்பன்மின் மாட்சியின்று என விலக்கு கின்ற ஆணையை மறுத்து யாம் ஆணமுடைமையின் நகர் காண்கம் என்று கூறி என இயைக்க.

சுங. விரும்பன்மின் - விரும்பாதே கொண்மின்.

சுச. ஈனுத்தாயர்-செவிலித்தாயர். ஆனுது - அமையாது; இடை யருமல்.

சுரு. ஆணம் - விருப்பம்.

சுசு. காண்கம் - காண்பேம். அன்னைமார் : விளி.

சுஎ - எக : கன்னின.............. ....நோக்கினர்.

(பொ - ரை.) தங் கண்ணின் விருப்பம் பெரிதும் தூண்டிச் செலுத்துதலானே வாயின் மாடத்தின்கண் அமைந்த சாளரங் களை அகலவிரித்துக் கதவுகளை அகற்றி விதுப்புற்று நோக்கா நின்றனர் என்க.

(வி - ம்.) கூஎ. கண்ணின வேட்கை - கண்களுக்குரிய அவா; காட்சி விருப்பம். துரப்ப-செலுத்த.

கூகூ. வரிச்சாலேகம்-வரிகளையுடைய சாளரங்கள். விரித்தனர்: முற்றெச்சம். இதனால் விரிக்கவும் சுருக்கவுமியன்ற சாளரங்களிருந்தமை விளங்கும்.

எக. பெதும்பை-மகளிர்க்குரிய இரண்டாம் பருவம். விதும்புதல்-காண்டற்கு விரைந்து விரும்புதல்.

எஉ - எகூ : நேரியல்.....................மகளிர்.

(பொ - ரை.) இயல்முதலியவற்றில் நிகரில்லாத தமது பேரழகே தூண்டிலாகவும், அச்சமும் நாணமும் ஊராண் ஒழுக்கமும் ஒப்பனையும் அத்தூண்டிலிற் கட்டும் இரையாகவும், உலகத்தில் இளைஞர் திரட்டிய அருங்கலன்களும் பொன்னும் மீனாகவும் அம்மீன்களைப் பிடிக்கும் தமது தொழிலிடத்தே தப்பாத மகளிர் என்க.

(வி - ம்.) எஉ. இயல் - அழகு. சாயல் - மென்மை. நிகர் - ஒப்பு. இல்லார் தமது காரிகை என்க.

எங. கடுநுனை - மிகக் கூர்த்த நுனி.

எச. உட்கு - அச்சம்; ஊராண் ஒழுக்கு - ஒப்புரவொழுகும் ஒழுக்கம்.

"கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவாள்
உட்குஉடையாள் ஊராண் இயல்பினாள்—உட்கி
இடனறிந்து ஊடி இனிதின் உணரும்
மடமொழி மாதராள் பெண்"

என நாலடியினும் வருதல் உணர்க. இதனை ஆசிரியர் நச்சினார்க்கினியர் (தொல் - கற்பு-கஉ.) எடுத்துக்காட்டி 'ஊராண்மை', இது சுற்றம் ஓம்பல் என்று விளக்கினர்.

இனி, இவ்வாசிரியர் உஞ்சைக் காண்டத்து (ங்கூ - உஅ0-க) "வழுக்கிக் கூறினும் வடுவென நாணி, ஒழுக்க நுனித்த ஊராண் மகளிர்" என்றோதுதலும் காண்க.

எரு. கட்கின் - கண்ணுக்கு இனிய. கட்டிரை - அத்தூண்டிலிற் கட்டப்படும் இரை.

எகூ. இருங்கண் ஞாலம் - பெரிய இடத்தையுடைய உலகம்.

எஎ. அருங்கலம் - பேரணிகலன். வெறுக்கை -பொருள்.

எஅ. வழாஅ - வழுவாத.

எகூ - கூக : புனைமணி.....................இனிதென.

(பொ - ரை.) உதயணகுமரனது தண்ணளியைப் பெற்று அமர்ந்த பூம்படுக்கையின்கண், அவனோடே இடனறிந்தூடி

அவன் பெரிதும் பணிமொழி கூறி நயந்தவிடத்தே இனிதின் உணர்ந்து, மகிழும் நகைச்சுவைக் கிடனான புலவியின்கண் காம நோக்கம் பொருந்திய அவனது வணக்கத்தானும், செந்தாமரை மலர்போன்ற அவனது கையின்நகம் வருடுதலானும் நெஞ்சம் குளிர்ந்து அலத்தகமணிந்த அழகிய சிவந்த சிற்றடியிலே அணியப்பட்ட பொன்னாலாகிய அழகிய கிண்கிணியினது பிளவுபட்ட வாய் நிரம்பும்படி அவனது தலைக்கண்ணியின்கண் உள்ள பலவாகிய மலர்த்தாது உதிராநிற்ப அவன் இரப்பப் பின்னர் எய்துவதாகிய இனிய காமச்சுவையின்பமாகிய அமிழ்தம் பொருந்தும்படி கூடப்பெறின் இவ்வுலகத்தே நுகரப்படும் காமவின்பமும் ஆற்றவும் இனிதேயாம் என்று என்க.

(வி-ம்.) இஃது அம்மகளிர் உதயணனோடு தாம் கூடப் பெற்றால் உண்டாகும் பேரின்பத்தைத் தம்முள்ளே கற்பனை செய்து கொண்டு ஏங்குதலைக் கூறிற்று.

எகூ.-அ0. புனைமணிப் பைம்பூண் ஒளி பெற்று இலங்கும் உதயணகுமரன் - அணியப்பட்ட மணியானியன்ற பசிய அணிகலன்களாலே ஒளிபெற்றுத் திகழாநின்ற உதயணகுமரன் என்க.

அக. அளி-அருள். அம்பூஞ்சேக்கை-அழகிய மலர்ப்படுக்கை.

அஉ. வாயறிந்தூடி மற்றவன் நயக்கும் வாய்உள் உவக்கும் புலவி எனமாறிக் கூட்டுக. காமவின்பத்தைப் புலவி பெருக்குதலின் புலந்து பெறுமின்பத்தையே கருதினர்.

அஉ. வாயறிந்தூடி - இடனறிந்து ஊடி. அங. நயக்கும் வாய் ஊடலுணர்த்தும் பொருட்டுப் பணிமொழி கூறிப் புணர்ச்சியை விரும்புமிடத்தே. தலைவன் பணிமொழி கூறி இரக்குங்கால் நகைச்சுவை தோன்றுதலும் இயல்பாகலின் நகைச்சுவைப் புலவி என்றாள். அச. நோக்கு-காமநோக்கம். கடவுட் கூப்பு-கடவுளைக் கைகுவித்துத் தொழுமாறு கைகுவித்துத் தொழும் வணக்கம் என்க. கதுமென : விரைவுக் குறிப்பு. அடு. தேங்கு வளை : வினைத்தொகை. நிறைந்த தோள்வளையலை அணிந்த தடக்கை என்க. அசு. வருட்டுதல்-தடவுதல். உள் - நெஞ்சம். குளிர்ப்புறீஇ - குளிர்ந்து. அஎ. பஞ்சி - செம்பஞ்சுக்குழம்பு ; அலத்தகம். அஅ. கிண்கிணி-சதங்கை. போழ்வாய் - பிளவுபட்ட வாய். அகூ. அடியில் முடி பொருந்த வீழ்ந்து வணங்க என்பாள் சென்னித்தாமத்து மலர்த்தாதுக இரந்து என்றாள். இரந்தென்னும் எச்சத்தை இரப்ப எனத் திரித்துக் கொள்க.

கூக. போகமும் என்புழி உம்மை, சிறப்பு.

கூஉ - கூச : மீட்டல்..................கொண்டனர்.

(பொ - ரை.) மீட்பதற்கியலாத வேணவாவோடு மலைச்சிகரங்களிலே ஏறிய மயிற் கூட்டம்போல மாடமாளிகை தோறும் மிக்குக் கூடித் தங்காநின்றனர் என்க.

(வி - ம்.) பூங்குழை மகளிர் உதயணகுமரன் இரப்ப எய்தும் இன்சுவை அமிர்தம் புணரும்படி கூடப் பெறின் போகமும் இனிதே என்று கூறி வேணவாவோடு மாடங்களின் மிசை மயிற்குழாம் போலக் கூடியிருந்தனர் என்க.

௯௨. மீட்டல் செல்லா - அவன்பால் செல்லும் மனத்தை மீட்க மாட்டாமைக்குக் காரணமான (விருப்பம்) என்க.

௯௩. கோடு - மலைச்சிகரம். ஏய்ப்ப - ஒப்ப.

௯௪. மலிந்து . மிக்கு. இறைகொண்டனர் - தங்கினர்.

௯௫ - ௧௦௪ : சுவல்பொதி..................முன்னினர்.

(பொ - ரை.) இனிப் பிடரை மறைக்கும் கூந்தலினையும், பொன் தோட்டினையும், மின்னலை ஒத்த அழகினையும் சாயலினையும், கழுத்தினையும், உடைய பேதைப்பருவத்து மகளிர் மணி நிலத்தின்மேலே தாம் எப்பொழுதும் வெறுதே ஆடுகின்ற பந்தும் கழங்கும் ஆடியவிடத்தே கிடக்கவிட்டு வீதி மயில்கள் ஆடும் இடம்போலத் தோன்றும்படி தமது கோதையும் கூந்தலும் துள்ளி விரியும்படி ஆடி வந்து எய்தாநின்றனர் என்க.

(வி - ம்.) பேதைமகளிர் பந்தும் கழங்கும் களத்தே கிடப்ப மயில்போல ஆடிவந்து வீதியில் எய்தினர் என்க.

௯௫. சுவல்-பிடரி. கூழை-கூந்தல். தோட்டினர்-தோடணிந்தவர். ௯௬. பெயலிடைப் பிறழும் மின் ஏர் சாயலர்-முகிலினூடே தவழாநின்ற மின்னலை ஒத்த அழகும் சாயலும் உடையர். சாயல் மென்மை. ௯௭. பாப்பெயிறு - பாம்பின்பல். பாம்பின்பல்போன்று பொன்னாற் செய்த பற்களை நிரலாகக் கோத்தமுறைமையினையுடைய பன்னிரைத்தாலி என்னும் அணிகலனால் ஒப்பனை செய்யப்பட்ட கழுத்தினையுடையு மகளிர் என்க. ௯௯. மணிநிலம்-மணிகள் பதிக்கப்பட்ட பந்தாடுகளம். முனிவிலர் - வெறுப்பிலராய். ௧௦௦. கழங்கு - கழற்காய். பட்டுழி-கிடந்த விடத்தே. ௧௦௧. அந்தண் மஞ்ஞை-அழகிய குளிர்ப்புடைய மயில். வீதி மஞ்ஞை ஆடிடம் போலத்தோன்றும்படி ஆடி வந்து எய்தினர் என்க.

பேதை - மகளிரின் ஏழுவகைப் பருவத்தொன்று. அஃதாவது - காமஞ்சாலா இளமைப் பருவம்.

௧௦௪ - ௧௧௬ : வெண்முகில்...............நோக்கினர்.

(பொ - ரை.) இனித் தெரிவைப் பருவத்து மகளிர் திங்களை ஒத்த தமது ஒளிமுகம் மாடத்தினூடே ஒளிரும்படி வானுலகை விட்டு மண்ணுலகத்தே வந்து கூடிய தேவமகளிரோ எனக் கண்டோர் மருளும்படி வந்து தோன்றி, வாசவதத்தையின் தோளுக்கேற்ற குருசிலைக் கண்டீரே! நீயிர் கண்டதமையும் இனி யாங் காணும்பொருட்டு விலகி இடந்தாருமின் என்று கூறித் தமது அகன்ற விழிகள் அளவின்மேலும் விரியும்படி

விழித்துத் தம் மக்களை மார்போடணைத்து நின்று எவ்விடத் தும் உள்ள சாளரந்தோறும் நோக்காநின்றனர் என்க.

(வி - ம்.) தெரிவைமகளிர் முகம் சுடரத் தோன்றிக் காணிடந் தம்மெனக் கூறிப் புதல்வரை ஆகத் தடக்கிச் சாலேகத்து எவ்விடத்தும் நோக்கினர் என்க.

க0ச. வெண்ணிற மாளிகையின் ஊடே தம்மக்களோடே தோன்றித்திகழும் மாதர் முகத்திற்கு, வெண்முகில் ஊடே மீன் களோடே தோன்றும் திங்கள் மண்டிலம் உவமை என்க.

மீன் - விண்மீன். இது புதல்வர் முகத்திற்கு உவமை என்க. மீன் முகம் என்புழி முகம் என்னும் ஏழாவதன் உருபு மூன்றுவதன் பொரு ளில் மயங்கிற்று. மீனேடு எழுதரும் என்க. க0ரு. திருமதி-அழகிய திங்கள் மண்டிலம். இனித் திலகத்திற்கு மீன் உவமை எனினுமாம். க0சு. அரிய மணிகளாலியன்ற மாடத்தினுள்ளே என்க.

க0கூ. வாளை ஒத்த கண், குளிர்ந்த கண் எனத் தனித் தனிக் கூட்டுக.

க0அ. தொடுகழல் குருசில்-கட்டிய வீரக்கழலையுடைய தலைவனு கிய உதயணன் என்க.

க0கூ. கண்டீர் : விளி. காண் இடம் - நின்று காண்டற்குரிய இடம் தம் - தாருங்கள். கக0. விண்ணீர் மகளிரின் - தமக்குரிய வானுலகத்தை விடுத்து வந்த தேவ மகளிர்போல என்க. கண்டோர் மருள என்க.

கக௧. அரிமதர் நெடுங்கண் - செவ்வரி கருவரி படர்ந்த களிப் புடைய நீண்ட விழிகள். அளவின் இகந்து அகல - அவை இயல்பாய் விரியும் அளவினைக் கடந்து மிக விரியும்படி என்றவாறு; ஆசையாலே கண்ணை அகலவிரித்து என்றபடி.

ககஉ. இருமுலைகளிடத்தும் பூணப்பட்ட பொற்பூணை அஃதி ருக்குமிடத்தே கிடக்கும்படியாக விட்டுச் சீர்திருத்துதல் செய்யாத மகளிர் என்றவாறு. அஃதாவது: குழவி அடிக்கடி பாலுண்ணுமாகலின் அதனைத் திருத்தியிடுதல் இலர் என்றவாறு.

ககரு. தெரிவை-மகளிர்க்குரிய பருவம் ஏழனுள் ஒன்று; தாய் மைப் பருவம் என்க. இனிய மழலைச் சொல்லையும் தலையிடத்தே குழி யினையும் உடைய புதல்வர் என்க. ககச. புறம் - முதுகு. வரித்த - எழுதிய. ககரு. அஞ் சாந்து - அழகிய சந்தனம். ஆகம் - மார்பு ககசு. நுண்சாலேகம் - நுணுக்கமான வேலைப்பாடமைந்த சாளரம். எம்பரும் - எவ்விடத்தும்.

[மகளிர் மைந்தர் ஆகிய இருபாலாரும் மலர்மழை பொழிதல்.]

ககஎ - கஉகூ: அறம்புரி......................பொழிய.

(பொ - ரை.) அவந்தி நாட்டினர் மன்னனுகிய பிரச்சோ தனன் புதல்வியருள்ளும் தலைசிறந்தவளாகிய ஒழிவில்லாத வாழ்க்கையின்கட் பழிபடாத வாசவதத்தையும் காண்போர்

கண்ணைக் கவரும் காமவேளை ஒத்த அழகினையும், மாலைதாழும் கொற்ற வெண்குடையினையும் உடைய உதயணனும் இத்தகைய இன்பவாழ்க்கையினை எய்தும் பொருட்டு முற்பிறப்பிலே செய்த அத்தவம் எத்தகையது என அறிவேமாயின் எத்திறத்தேனும் அத்தவத்தினை யாமும் இயற்றுவேம் என்று கூறும் கூற்றினை யுடையராய் மகளிரும் ஆடவரும் மேனிலை மாடங்கள் தோறும் மலையின்மேல் மயிலும் அரிமாவும் திரண்டு கலந்து இருந்த காட்சிபோலக் குழாங்கொண்டு நெருங்கி மகிழ்ச்சியாலே மலர் மாரி பொழியா நின்றனர் என்க.

(வி - ம்.) கசஎ. அறத்தையே செய்யும் செங்கோன்மையையும் விரச்செயலையே விரும்பும் படையினையும் உடைய அவந்தியர் மன்னனுகிய மறமாச்சேனன் என்க. மறமாச்சேனன் - பிரச்சோதனன். கசகூ. பாவையர் என்றது புதல்வியர் என்னும் பொருட்டு. கஉ0. ஓவா- ஒழியாத. வாழ்க்கையின்கண் ஏசுவது இல்லா என்க. ஏசுவது - பழிச்செயல். கஉக. காண்போர் கண்ணைக் கவரும் அழகென்க. கஉஉ. தாமம் - மாலை. ஏமம் - பாதுகாவல்.

கஉங. வத்தவர் இறைவன் - உதயணகுமரன். முற்பால் - முற்பிறப்பு. கஉச. எத்திறத்தாயினும் - அத்தவம் எப்படிப்பட்டதாயினும் என்க. எவ்வாற்ருலேனும் எனினுமாம்.

கஉரு. நோற்றும் - தன்மைப்பன்மை வினைமுற்று. கூற்றினர் - சொல்லையுடையோராய். கஉஎ. மணி - நீலமணி. மயங்கி - கலந்து.

கஉஎ. அணிமலை - அழகியமலை. கஉஅ. தொகை - திரள். ஈண்டி - நெருங்கி. கஉகூ. மலரை மழைபோன்று சிதருநிற்ப என்க.

[நகரமாந்தர் செயல்.]

கங0 - கஙகூ : ஆடம் பலமும்...................புகழ.

(பொ - ரை.) அரிய அச்சயந்தி நகரத்தே உறையும் மாந்தர் கூத்தாட்டம்பலத்தினும், கடைத்தெருக்களினும், இசைமன்றங்களினும், சொற்பொழிவுப் பந்தரிடத்தும், கல்லூரிகளிடத்தும், சூது மன்றங்களிடத்தும், மடைப்பள்ளிகளிடத்தும், தமது தொழிலை விடுத்தவராய் உலகத்தாரெல்லாம் விரும்பும் உதயணகுமரனைக் காண்டற்கு விரும்பும் நெஞ்சத்தோடே, அமரரும் விரும்புதற்குக் காரணமான ஒப்பனை அழகோடே, மெல்லமெல்ல வந்து இடம் பெருமையானே நெருங்கி நின்று விரும்பிப் புகழா நிற்ப என்க.

(வி - ம்.) கங0- ஆடம்பலம் - கூத்தாட்டு மன்றம். ஆவண மறுகு - கடைத்தெரு. கஙக. கீதசாலை - இசைமன்றம். கேள்விப் பந்தர் - அறிஞர் சொற்பொழிவினை மக்கள் கேட்டற்குரிய பந்தர். "தண்மணற் பந்தரும் தாழ்தரு பொதியிலும், புண்ணிய நல்லுரை அறிவீர் பொருந்துமின்" என்ருர் மணிமேகலையினும் (க. இஅ - கூ)

கஙங. ஐவேறமைந்த அடிசிற்பள்ளி - மடைப்பள்ளி. ஐவேறு அமைந்த அடிசிலாவன - கடிப்பன, பருகுவன, விழுங்குவன, நக்கு வன, சுவைப்பன, என்பனவாம்.

கஙச. தங்கோள்-தாந்தாமேற்கொண்ட தொழில். கஙரு. மண்: ஆகுபெயர்; உலகத்துச் சான்றோர். காமுறூஉம் - விரும்பும். கஙசு. கண் - ஆகுபெயர்; காட்சியின்பம். விண்மேலுறையுநர் - தேவர். கஙக. விரும்புபு - விரும்பி.

[உதயணன் செயல்.]

கசO - கசஎ : அருந்தவம்......................மீட்டகம் புக்கு.

(பொ - ரை) செயற்கரிய தவந்தருகின்ற சுருங்காத இன்ப நுகர்ச்சியினையுடைய மேனிலையுலகத்தை ஒத்த ஆரவாரமுடையதும், ஏனை நாட்டு மக்களாலே புகழப்பட்டதுமாகிய சயந்தி நகரத்தினது முத்தையே மணலாகப் பரப்பப்பட்ட வீதி முழுதும் வலமாகச் சென்று தெய்வத்தன்மையுடைய மாடமாளிகைகளையும, தேர்கள் நிற்கும் கொட்டில்களையும், சான்றோர் இருக்கைகளையும், அவை போல்வன பிற அற நிலையங்களையும், கண்ணாலே பார்த்து அந் நகரமாந்தர் தம்மை விரும்பாநிற்ப மீண்டு அரண்மனையிலே புகுந்து என்க.

(வி - ம்.) கசO. இவ்வுலகத்தே செய்யும் அறப்பயன்களை அம் மேனிலையுலகத்தே நுகர்தலின் அருந்தவம் கொடுக்கும் சுருங்காச் செல்வத்து உத்தரகுருவம் என்றார் "ஈண்டுச் செய்வினை ஆண்டு நுகர்ந் திருத்தல் அல்லது...........இல்லா நன்னாட்டு இறைவன்" என்றார் மணிமேகலையினும். உத்தரகுருவம் - வானிலை உலகம்; போகபூமி. அஃது அறுவகைப்படும்; என்னை? "ஆதியரி வஞ்சம் நல்லரி வஞ்சம் ஏமத வஞ்சம் இரண வஞ்சம்தேவகுருவமெனப்போகபூமி அறுவகைப் படுமே" (திவா) என்றாராகலின் (சிலப். உ - கO. அடியார்க். உரை மேற்கோள்).

கசங. தெய்வமாடம் - தேவர் கோட்டம். கசச. ஐயர் - அறவோர்; தலைவர். ஐயர் தானம் - துறவியரிடம்; அறவோர் மன்றம் முதலியன என்க. கசரு. புண்ணியப் பெயரையுடைய இடங்கள் என்க. அவை அருகன் கோயில் அந்தணர் உறையுள் அறவோர் மன்றம் என்பன போல்வன. அவையிற்றைக் காண்டலும் புண்ணியம் ஆகலின் கண்ணின் நோக்கி என்று விதந்தார். கசசு. நாட்டகம் - நாட்டிலுள்ள ஏனைநகரத்தார் எல்லாம் என்க. நன்னகர் - சயந்தி; ஆகுபெயர். புகல - விரும்ப. அகம் - ஈண்டு அரண்மனை.

[உதயணனும் வாசவதத்தையும் மங்கல நீராடி இன்புறல்.]

கசஎ - கருங : மேவரு.........................அணிந்து.

(பொ - ரை.) விருப்பம் வருதற்குக் காரணமான செல்வத் தோடே, மங்கலநீர் முறைப்படி ஆடிய பின்னர் வாசவதத்தை

யைக் காஞ்சனமாலை என்னும் தோழியே காலந் தாழ்த்திராமல் விரும்பித் தொழிற்றிறமமைந்த கம்மியன் இயற்றிய அணிகலன் களினும் சிறந்தவற்றை ஆராய்ந்தெடுத்து அவற்றை ஏற்கும் உறுப்புக்களிடத்தே அணிந்து என்க.

(வி - ம்.) ௧௪௭. நகர்வலஞ் செய்து முடித்தபின் நீராடும் முறைமை உண்டாகலின் அம்முறைக்கேற்ப ஆட என்க. மே - விருப் பம்; மேன்மையுமாம். கொங்கு - மணம், தேனுமாம். கோதை - (ஆகு பெயர்) வாசவதத்தை. வாசவதத்தைக்கு அடிநாட்டொட்டு தோழி யாயிருக்கும் காஞ்சனமாலை என்க. ௧௫0. தாழாது - காலந் தாழ்த் தாமல். ௧௫௧. கைத்தொழிற்றிறமிக்க கம்மத் தொழிலையுடைய கம் மியன் என்க. ௧௫௨. செய்கலம்: வினைத்தொகை; அணிகலம்.

௧௫௩. ஏற்குந்தானம் - அவற்றை ஏற்றற்குரிய உறுப்பு.

௧௫௪ - ௧௬௪ : பாலீர்...............வாசவதத்தை.

(பொ-ரை.) பாற்கடலின்கட் பனிப்பருவத்தே மேலெழுந்த நிராவிபோன்று மெல்லிதாகிய கழுவிய மடியையுடைய ஆடை யுட் குற்றமற்றவைகளைத் தேர்ந்தெடுத்து, ஒள்ளிய மணியும், காசும் கலந்த பன்மணிமாலையினையுடைய பாவை போல்வாளா கிய வாசவதத்தை தன் நெஞ்சம் நெகிழ்ந்து புணர்தற்கு விரும் பிய விருப்பமாகிய காதலமிழ்தம் மெய்ப்பாடாக அவ்வாடையின் ஊடே வெளிவந்து அதன் ஒளியோடே மாறுபட்டு ஒளிர்வது போன்று ஒளிரா நிற்ப உடுத்தி, மங்கல மரபினவாகிய வெண் சாந்தும், வெண்மலர் மாலைகளும் ஒப்பனை நூல் விதியிற் பிறழா மல் அணிதலாலே நுண்ணிய அழகு மிகும்படி புதுவதாக அணிசெய்யப்பட்ட பூங்கொடியை ஒத்த புதுமணக் கோலங் கொண்ட அவ்வாசவதத்தை என்க.

(வி - ம்.) ௧௫௪. பாலாகிய நீர்மையினையுடைய நெடியகடல் என்க. பனிநாள் - பனிக்காலம். ௧௫௫. கழுமடிக்கலிங்கம்-கழுவித் தூய்தாக்கப்பட்ட ஆடை. ௧௫௮. பாவை: உவம ஆகுபெயர்; வாச வதத்தை. பாவை விரும்பி உண்ணெகிழ்ந்து கண்ணிய காதலமிழ்தம் ஆடையின் ஊடுவந்து மெய்ப்பாடாக அவ்வாடையின் ஒளியோடே மாறுபட்டொளிர என்க, என்றது, காதல் வாழ்விலுண்டாகும் புத் தொளி பொலிய என்றவாறு. ௧௬0. உடீஇ - உடுத்து.

௧௬௧. மங்கலமரபின் மாலையும் சாந்தும் - வெண்ணிற மலரானுய மாலையும் வெண்சாந்தும் என்க.

௧௬௨. நூல் - ஒப்பனை நூல்விதி: ஆகுபெயர்.

௧௬௩. புரிய - மிகும்படி. "புரிந்ததகையினன் என்புழிப் பரி பாடற்கண் (எ - ௯.) பரிமேலழகர் மிக்க தகையினன்" என்று உரை கூறுமாற்றானும் அஃதப்பொருட்டாதல் உணர்க.

கசுரு - கஎO: புதுமைக் காரிகை................இனிதென்.

(பொ - ரை.) தனது புத்தழகானே புதிய நாணமேற் கொள்ள, ஒளிதிகழும் மெய்யிடத்தே காமத்தினது மெய்ப்பாடு நிரம்பி அன்னத்தின் அன்புக்காதலை ஒத்த காதலோடே சயந்தி நகரத்தின்கண் உதயண குமரனுக்கு ஒப்பற்ற போகம் இனிதே பொருந்துவதாயிற்று.

(வி - ம்.) கசுகூ. புதுமைக் காரிகை - புத்தழகு. புதுநாண் - புதுவதாக மணப்பதனாலே உண்டான நாணம் என்க. கசுசு. ஆகம்- உடல்; மார்புமாம். கழுமி - நிறைந்து. கசுஎ. காதலன்பின்கண் அன்னப்பறவை சிறப்புடையன வாதல்பற்றி அன்னத்தன்ன அன்பு கொள் காதல் என்றார். "ஆதரம் பெருகுகின்ற அன்பினால் அன்னம் ஒத்தும்" என்றார் சீவக சிந்தாமணியினும். (கஅகூ)

கசுஅ. ஈவாரும் ஏற்பாரும் இல்லாமையாகிய குற்றம் வானுலகிற்கு உளதாக இச்சயந்தி நகரம் அக்குற்றமின்றி ஏனை நலங்களில் அவ்வானுலகை ஒக்கும் என்பார் "பொன்னகர்க்கு இயன்ற புகரில் புகழ் நகர்" என்றார். புகர் - குற்றம். புகழ் - ஈதலால் உண்டான புகழ்.

கசுகூ. வரையாது வழங்கும் கொடை.

கஎO. பொருவில் - ஒப்பற்ற. புணர்ந்தது - பொருந்திற்று.

எ. நகர்வலங்கோண்டது முற்றிற்று.

---

# அ. யூகி போதரவு

இதன்கண், உதயணன் அமைச்சனும், உயிர்த்தோழனுமாகிய யூகி என்பவனுடைய உயரிய பண்புகளும் அவ்வமைச்சன் உதயணன் பிரச்சோதனன் சிறையினின்றும் தப்பி வாசவதத்தையோடு வெளிப்படற்குப் புரிந்த வியத்தகு செயல்களும், அவன் தன் படைமறவர்க்குக் கூறியவையும், உதயணனிடத்துப் பேரன்புடைய ஒரு குயவன் மாண்பும், பொறித்தேரும், யூகி புறப்படுதலும், பிறவும் கூறப்படும்.

போகம் புணர்ந்த பொன்னகர் அவ்வயின்
வேகத் தானை வேந்தன் மகளோ(டு)
ஏகச் செங்கோல் ஏயர் பெருமகன்
போகங் கழுமிப் புணர்ந்து விளையாட
யூகிக் கிப்பால் உற்றது கூறுவேன்
கண்ணகன் கிடக்கைக் கலிகெழும் ஊழியுள்
மண்ணகந் தழீஇ மன்னிய ஊழிதோறும்
புண்ணிய உலகிற்கும் பொலிவிற் றாமெனத்
தோன்றுறேங் காளர் துணியப் பட்ட
பொன்றா வியற்கைப் புகழது பெருமையும்
ஆன்முலைப் பிறந்த வானிற அமிர்தம்
மலைப்பெய் நெய்யொடு தலைப்பெய் தாங்கு
வேறுபட் டேகினும் கூறுபட் டியலா
அன்பினின் அளைஇய நண்பின் அமைதியும்
அசைவில் தானை விசைய வெண்குடைப்
பெருநில மன்னர் கருமங் காழ்த்த
அருமதி நுனித்த அமைச்சின் ஆற்றலும்
இன்னவை பிறவுந் தன்வயின் தாங்கி
மன்றணி வீதி மதில்உஞ் சேனையுள்
வென்ற கோற்றமொடு விசயம் எய்தி
இறைவற் பிரிக்கும் அறிவிற் சூழ்ந்த
படிவ உருவம் பட்டாங் கெய்தி
இடியுறழ் முரசின் ஏயர் இறைவன்
கண்ணியது முடித்துக் காரிகை பொலிந்த
வண்ணக் கோதை வாசவ தத்தையொடு

வழிமுதற் கொண்ட கழிமுதற் கங்குலின்
மல்குகடல் தானை மன்னரை வணக்கிப்
பில்குகளி யானைப் பிரச்சோ தனனெனும்
ஐந்தலை நாகம் அழல வெகுட்டிப்
பைந்தளிர்க் கோதையைப் பற்றுபு தழீஇச்
சிறைகொளப் பட்டுச் செல்வ நீத்த
குறைமகன் என்பது கோடல் செல்லாது
திருமன நெகிழ்ந்த அருண்மலி அன்பொடு
தந்தனன் கோமான் என்றுதலை வணங்கி
ஒண்தார் மார்பன் உதயணன் பணிமொழி
மந்திர மாக மகண்மாட் டியைந்தவை
அன்றவன் உள்ளத் தகமுண வராகன்
உரைத்த வண்ணமு மிகப்பல வாகத்
தொல்லோர் முன்னர்த் தோன்றக் காட்டி
ஒல்கா வென்றி உதயணற் றடைஇய
வெல்போர்ப் பெரும்படை வேந்தன் விடுத்ததும்
விடுத்த பெரும்படை விளியத் தாக்கி
உடைத்த தோழர் ஊக்க வென்றியும்
வென்றி வியனகர் வெந்துயர் உற்றதும்
பட்டாங் குணர்ந்து முட்டாங் கியற்றி
உணரா தான்போல் ஒருமீக் கொற்றவன்
புணரா தார்முற் பொச்சாப் பஞ்சி
வணங்குகொடி மருங்குல் வாசவ தத்தையைப்
பயந்தினி தெடுத்த பத்தினித் தெருட்டி
உயர்ந்த கோயிலுள் ஒடுங்கிய ஒடுக்கமும்
நளிவரை அன்ன நளகிரி ஏறி
ஒளிமணிக் கொடும்பூண் உதயண குமரனைப்
பற்றுபு தம்மின் செற்றெனப் பகைகொண்டு
வெற்ற வேந்தன் வெகுண்டெழல் இன்மையும்
இனையவை பிறவும் புனைநகர் வரைப்பினும்
கோயின் முற்றத்தும் வாயின் மருங்கினும்
வம்பலர் மொய்த்த அம்பலத் தகத்தும்
யானைத் தானத்தும் அருந்தவப் பள்ளியும்
தானைச் சேரியும் தானெடுத் துரைக்கும்

பாடை அறியாத் தேசிகச் சேரியும்
ஓதுநர் சாலை யகத்தும் ஓவாச்
சூதுபொரு கழகத் தருகவுந் தோமில்
நல்லதுந் தீயதும் அறிந்தகத் தடக்கா
மட்டுமகிழ் மகளிர் துட்டச் சேரியும்
காரிகை பகருங் கருங்கடை மழைக்கண்
வார்கொடி மகளிர் வளநகர் வரைப்பினும்
குதிரைப் பந்தியுங் கொடிகர் வரைப்பினும்
மதிமயக் குறூஉ மறுகணி கடையினும்
நீர்த்துறைக் கரையினுங் கூத்துறை சேரியும்
மன்றுஞ் சந்தியும் ஒன்றுகண் டன்ன
ஊர்முழு துள்வழிக் கார்முழு துலாஅம்
கடுவளி வரவின் ஒடியாக் கற்பின்
நறுநுதற் பணைத்தோள் நங்கையை நம்மிறை
உறுவரை மார்பின் உதயணற் குள்ளத்(து)
அருளொடும் போக்கிப் பொருளொடும் புணர்த்தமை
யாவிரும் அறைவிர் அன்றெனின் மற்றிவன்
காவல் அவ்வழிக் காணலெம் யாமென
மங்கையர் நாப்பண் மறவோர் எடுத்த
கம்பலைப் புறமொழி நன்பல கேட்டும்
கூற்ற வேழம் அடக்கிய குமரற்குக்
காற்றும் எரியும் கலந்துகை கொடுப்ப
மயக்கம் எய்தி மாணகர் மாந்தர்
தயக்கம் இன்றிக் கடையிடை தெரியார்
தம்முள் தாக்கிய விம்ம வெகுட்சியுள்
பொருமுரண் அண்ணல் பூந்தார் அகலத்துத்
திருமகள் தன்னில் தீரா தியைந்தனள்
இன்னும் அவனே கல்நிரை கானத்துக்
காதலிற் காப்பத் தீதிலள் ஆகிப்
புக்கனள் அவனொடு பூணபிடி ஊர்ந்தெனத்
தொக்க மாந்தர் நற்பொருள் பொதிந்த
வாய்ப்புள் கொண்ட வலிப்பினன் ஆகி
யாப்புள் உறுத்த அமைதிச் சூழ்ச்சியன்
செறிந்த செய்கை அறிந்துமனத் தடக்கிச்

சேறுநன் போலச் செல்வ வேந்தனும்
உறுநர் வேண்டும் உள்பொருட் குடன்றேரு
மறுமொழி கொடுப்பின் அல்லது மனத்தில்
துன்பாற் பட்டமை நன்பால் நனித்து
நூலியல் நெறியினு மதியினுந் தெளிந்து
சொல்வேறு குறியொடு சுழன்றகத் தொடுங்கிய
பல்வே றுருவிற்றம் படைநகரைப் பயிர்ந்து
பூவளங் கவினிய பொழில்உஞ் சேனை
மாகள வனத்து மன்னுயிர் நடுக்கும்
பணைப்பெருந் திரள்தோள் பகுவாய்க் கூரெயிற்(று)
இணைப்பெருங் காதின் இலங்குகுழை அணிந்த
சேடேந்து வனப்பிற் செழுமலர்த் தடங்கண்
மோடேந் தரிவை முற்றத்து முனாது
பனஞ்செறும் பன்ன பன்மயிர் முன்கை
நிணம்பசை கொண்ட நீளி நெடும்பல்
சாஅய் நீங்கிச் சார்ந்தோர் துட்கெனும்
பேஎய் உருவம் பெறவகுத் தெழுதிய
அழிசுவர் மண்டபத் தகவயின் ஆரிருள்
வழிபடர் வலித்த மந்திரக் கோட்டியுள்
வென்வேல் வேந்தனை விடுத்தனிர் சிறையென
இன்னுரை அமிர்தம் இயைந்தவர்க் கீத்துத்
தான்செயப் படுபொருள் ஆங்கவர்க் குணர்த்தி
ஊன்சேர் கடுவேல் உதயணன் நீங்கிய
கான்சேர் பெருவழிக் கடத்தல் செல்லீர்
நாடு மலையுங் காடும் பொருந்திக்
கனிவளங் கவர்ந்து பதிவயிற் பெயரும்
பனியிறை வாவற் படர்ச்சி எய்ப்பப்
படையினுந் தொழிலினு நடைவே றியன்ற
உருவினும் இயல்பினும் ஒருவிரும் பலரும்
கலிகெழு பண்டங் கனைகலம் போல
வலிகெழு சிறப்பின் மதில்உஞ் சேனை
உள்ளகம் வறுமை எய்திப் புல்லெனப்
பெருந்தவம் உள்வழி விரும்பு செல்லும்
பொருளும் போகமும் புகழும் போல

மறுவில் மணிப்பூண் மன்னவன் உள்வழிக்
குறுகுதல் குணனென உறுநரை ஒருப்படுத்(து)
ஏகச் செய்தபின் ஆகுபொருள் நாடிக்
கடவுட் பள்ளியுட் கள்ள ஒழுக்கொடு
நெடுநகர் மாந்தர் நெஞ்சுணத் திரிதரும்
ஒட்டிய தோழரொடு கட்டுரை விரும்பி
மூன்றிடம் பிழையா ஆன்ற நுண்ணெறிப்
பண்ணவர் முனிவர் பட்டதும் படுவதும்
எண்ணுவ ராயின் ஏதந் தருமென
நினைத்தோன் பெயர்ந்து நெறியில் தீர்ந்தவர்
வினைத்துகள் அறுக்கும் வேட்கை யல்லது
வேண்டுவ உரையா மூங்கைகள் ஆமெனும்
நீதியது நேர்மை உளனாய் ஓதிய
சமைய விகற்பஞ் சாலக் காட்டி
அசைவி லாளர் அருநெறி வலித்தது
மருண்டுந் தெளிந்தும் வந்தவை பிதற்றிப்
பெயரு மியற்கைப் பெற்றியின் திரியான்
பூசுபு புலரா யாக்கையொடு பெயரிய
தோழ ரோடு மிகப்பல கழறி
வேற்றோன் போல மாற்றம் பெருக்கிப்
படிவப் பள்ளியுள் பகலிடங் கழித்துக்
குடிகெழு வளமனை குழீஇய செல்வத்துக்
கன்னி நன்மதிற் கடிக்கோ சம்பி
மன்முதல் தோறுந் தொன்முதல் பிழையாது
பெருங்கலக் கைவினைப் பேறது பெற்றுத்
தானகந் தாங்கிய ஊனமில் செலவின்
இட்டிடர்ப் பொழுதின் இன்ப நீக்கிக்
கட்டழற் புகூஉஞ் சுட்டுறு கோல்போல்
நட்டை யிட்டு நாட்டகந் துறந்துதம்
பெருமகற் கொள்ளும் வேட்கையிற் போந்த
துயமகன் இல்லங் குறுகினன் ஆகி
ஆங்கினி திருந்த அருந்தவ ஒழுக்கின்
சாங்கிய மகளைப் பாங்கினில் தரீஇ
நிகழ்ந்ததை எல்லா நெறியிற் கூறிப்

புகழ்ந்த வண்ணம் போகுதல் பொருளெனப்
பசியும் அழலும் பரிவற எறியும்
மிசைமருந் தியன்ற இசைவுகோள் இன்பத்துத்
தருப்பணக் கிழியுந் தண்ணீர்க் கரகமும்
ஒருப்படுத் தமைத்துப் புறப்படப் போக்கி
அமரிய நண்பின் தமருளுந் தமராம்
யவனப் பாடி ஆடவர் தலைமகன்
தமனியப் பைம்பூண் தம்மிறைக் கியன்ற
கண்மணி அன்ன திண்நட் பாளன்
கையிற் புனைந்த கழிநுண் சிறப்போடு
வையகத் தியங்கும் வெய்யவன் ஊரும்
தேரின் அன்ன செலவிற் றாகி
யாவரும் அறியா அரும்பொறி ஆணியின்
இருப்புப் பத்திரம் இசையக் கவ்வி
மருப்புப் பலகை மருங்கணி பெற்றுப்
பூணி இன்றியும் பொறியின் இயங்கும்
மாண்வினை வைய மனத்தின் ஒப்பக்
கடுப்புந் தவிர்ப்புங் கண்டனன் ஆகிப்
படைத்துப் பெயர்த்தற்குப் பாடமை வித்தகர்க்
கண்ணினுங் கையினுந் திண்ணிதின் அடக்கி
எண்ணிய கருமத் தன்றியும் யூகி
சிறைவினை நீக்கி இறைவினை இரீஇக்
கோடிக்கோ சம்பி புகுத்துதற் கிருந்து
கோடித் தன்ன கோடுசால் வையத்து
மூவகை யோகமுஞ் சீரமைத் திரீஇ
எந்திர ஊர்தியோ டெனவை இயற்றி
மந்திர மாகத் தந்தமர் உளரெனிற்
போத்தந் தல்லது போதாய் நீயென
ஆத்த வாரமோ டவன்அவண் ஒழியத்
தெய்வப் படைக்கலங் கையகத் தடக்கி
வத்தவன் நன்னா டத்திசை முன்னி
வித்தக ஆணி வேண்டுவயின் முருக்கி
விண்ணகத் திழிந்து விமானம் ஏறி
மண்ணகத் தியங்கன் மனத்தின் வேண்டிய

பூந்தார் மார்பிற் புரந்தர குமரனிற்
போந்தனன் மாதோ புறநகர் கடந்தேன்.

---

## அ. யூகி போதரவு

அஃதாவது-யூகி என்னும் அமைச்சன் உஞ்சையில் தான் கருதிய செயலை முடித்தபின்னர், அதனினின்றும் புட்பக நகரத்திற்கு வந்த தனைக் கூறும் பகுதி என்றவாறு.

### உரை

[க - ரு : புலவர் கூற்று.]

க - ரு : போகர்..............................கூறுவென்

(பொ - ரை.) இவ்வாறு இன்பநுகர்ச்சி பொருந்துதற்கு இடமான அழகிய அச் சயந்திநகரத்தின்கண் சினமிக்க படையினையுடைய அப்பிரச்சோதன மன்னன் மகளாகிய வாசவதத்தையோடு தனிச் செங்கோலையுடைய ஏயர்குலத் தோன்றலாகிய உதயணகுமரன் இன்பம் நிறையப் பெற்றுக்கூடி விளையாடா நிற்ப, இனி யூகி என்னும் அமைச்சனுக்கு நிகழ்ந்த தனைக் கூறுவேன் கேண்மின் (என்று கொங்குவேளிர் கூறுகின்றார்) என்க.

(வி - ம்.) க. போகம் - நுகர்ச்சி. புணர்தற்கு இடனாயிருந்த அப் பொன்னகர் வயின் என்க. நகர் - சயந்தி.

உ. வேகத்தானை-சினமுடைய படை. வேந்தன்-பிரச்சோதனன். மகள் - வாசவதத்தை.

ரு. ஏகச் செங்கோல் - தனிச் செங்கோல்; என்றது, உலகினைப் பொதுக் கடிந்து செலுத்தும் ஒற்றைச் செங்கோல் என்றவாறு.

ச. கழுமி - நிறைந்து.

ரு. யூகி - உதயணகுமரனுடைய முதலமைச்சன்.

[யூகியின் மாண்பு.]

சு - கஅ : கன்னகன்..............................தாங்கி

(பொ - ரை.) அவ் யூகி என்னும் அமைச்சன், வானவூழி முதலிய ஐவகை யூழியினுள் நிலத்தை உள்ளீடாகத் தழுவப் பட்ட நிலவூழிகளாகிய கற்பந்தோறும் இடமகன்ற கிடக்கையினையுடைய இவ்வுலக வாழ்க்கையும் மேனிலை உலகத்திற் சென்று வாழும் வாழ்க்கையும் ஆகிய இருவேறு வாழ்க்கை

களுக்கும் பொலிவினைத் தருவதாம் என்று பண்டைக்காலத்துச் சான்றோர்களானே தெளிந்து கூறப்பட்ட புகழாலுண்டாய பெருமையினையும், ஆன்பால் மலைத்தேனோடு கூடிஞாற்போன்று கலந்து வேறுவேறிடத்துச் சென்றிருப்பினும் மாறுபட்டு இயங்குதல் இல்லாத அன்புகலந்த நட்புப் பண்பினையும், பின்னிடுதல் இல்லாத படையினையும், வெற்றிக் குடையினையும், பெரிய நிலப்பரப்பினையும் உடைய மன்னர்க்குரிய அரசியற் செயல்களிலே பயின்று முதிர்ந்த பெறற்கரிய நுண்மாணுழை புலனாலே ஆராய்ந்து தெளிந்த அமைச்சுத் தொழில் வன்மையினையும் இன்னோரன்ன பிற நற்பண்புகளையும் தன்பாற் கொண்டு—என்க.

(வி - ம்,) சு. கண்ணகன் கிடக்கை - உலகம்; அஃது ஆகு பெயராய் வாழ்க்கைக்கு ஆயிற்று. கண்ணகன் கிடக்கைக்கும் எனற் பால உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

எ. கலி - ஓசை. ஓசை பொருந்திய வானவூழி முதலிய ஐவகை ஊழியினுள் என்க. அவற்றைக்,

"கருவளர் வானத் திசையிற் றோன்றி
உருவறி வாரா ஒன்றன் ஊழியும்
உந்துவளி கிளர்ந்த ஊழூழ் ஊழியும்
செந்தீச் சுடரிய ஊழியும் பனியொடு
தண்பெயல் தலைஇய ஊழியும் அவையிற்(று)
உண்முறை வெள்ள மூழ்கியார் தருபு
மீண்டும் பீடுயர் பீண்டி அவற்றிற்கும்
உள்ளீ டாகிய இருநிலத் தூழியும்" (பரிபா. உ. இ - கஉ)

எனவரும் பரிபாடலான் உணர்க.

எ. நிலத்தை உள்ளீடாகத் தழுவி நிலைபெற்ற நில ஊழிதோறும் என்க. மன்னிய நிலைபெற்ற.

அ. கண்ணகன் கிடக்கைக்கும் புண்ணிய உலகிற்கும் எனக் கூட்டுக. என்றது இவ்வுலக வாழ்விற்கும் மேனிலை உலகத்தே சென்று வாழும் வாழ்விற்கும் என்றவாறு.

புண்ணிய உலகம் - புண்ணியத்தால் எய்தும் மேனிலை யுலகம். பொலிவு தருவதனைப் பொலிவிற்று என்றார்.

கூ. தொன்று - பண்டைக்காலத்து. ஓங்காளர் - உயர்ந்தோர்.

இனி, புகழ் இவ்வுலகிற்கும் மேனிலையுலகிற்கும் பொலிவிற் றென்றதனோடு,

"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல
தூதிய மில்லை உயிர்க்கு" (திருக் - உஙக)

எனவும்,

" ஒன்ரு உலகத் துயர்ந்த புகழல்லால்
பொன்ருது நிற்பதொன்றில் " (திருக் - உ௩௩)

எனவும்,

" நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்ருது புத்தே ளுலகு " (திருக் - உ௩ச)

எனவும்,

" இவன் இசையுடையோர்க் கல்ல(து)
அவண துயர்நிலை உலகத் துறையுள் இன்மை
விளங்கக் கேட்ட மாறுகொல் " (புறநா - ரு0)

எனவும், வரும் சான்ருேர் மெய்ம்மொழிகளையும் ஒப்பு நோக்கியுணர்க.

கஉ. க௩. வால்நிற அமிர்தம் - பால். மலைப்பெய்நெய்-தேன். இவை வெவ்வேறிடத்துப் பிறந்தனவாயினும் தம்முட் கலப்புற்றுழி பண்பினுலே ஒன்றுபடுதல் போன்று, உதயணனும் தானும் வேறு வேறிடத்தினராயிருப்பினும் நண்புடைமையாலே ஒன்றுபட்ட அமைதியினையும் என்க.

கச. அளைஇய - கலந்த.

கரு. விசையம் - வெற்றி.

கசு. பெருநில மன்னர் - முடிவேந்தர். காழ்த்த - (பயின்று) முதிர்ந்த.

கஎ. அருமதி - பெறற்கரிய நுண்மாணுழைபுலன்.

கஅ. இன்னவை - இவைபோல்வன.

[ககூ - கசஅ : யூகி உஞ்சை நகரத்தே செய்த அருஞ்செயல்கள் ]

ககூ - உகூ : மன்றணி................கங்குலின்

(பொ - ரை.) மன்றுகளை அணிந்த வீதியினையும் மதிலையுமுடைய உஞ்சை நகரத்தில் பிரச்சோதனனுல் வென்று கொள்ளப்பட்ட அரசவுரிமையோடே வெற்றியும் உடையனுக் உதயணவேந்தனைச் சிறைவீடு கொள்ளும்பொருட்டு ஆராய்ந்து மேற்கொண்ட வேற்றுவடிவமாகிய பேய்வடிவம் உள்ளபடியே எய்தி இடி போன்று முழங்கும் முரசினையுடைய ஏயர்குலத் தோன்றலாகிய அவ்வுதயணகுமரன் தான் கருதிய காரியத்தை முடித்துக் கொண்டு அழகானே பொலிவுற்ற நிறமிக்க மலர் மாலையையுடைய வாசவதத்தையோடு புறப்பட்ட முதலிரவின் கண் என்க.

(வி - ம்.) ககூ. மன்று - அறவோர் மன்றம் கூத்தாடுமன்றம் ஊரம்பலம் முதலியன. உஞ்சேனை - உஞ்சை நகரம்.

உ0. வென்ற-வெல்லப்பட்ட. கொற்றம்: ஆகுபெயர் ; உரிமை.

உக. இறைவன் - உதயணகுமரன். அறிவினாலே ஆராய்ந்து துணிந்த (உருவம்) என்க.

உஉ. படிவஉருவம் - வேடமாக மேற்கொண்ட வடிவமாகிய பேய்வடிவம் என்க. பட்டாங்கு - உள்ளபடியே.

உச. கன்னியது - தான் நினைத்த செயலை. காரிகை - அழகு.

உரு. வழிமுதற்கொண்ட - வழிமேற் புறப்பட்ட. கழிமுதற் கங்குலின் - கழிதற்குக் காரணமான முதலிரவில்.

உள - ௩௦: மல்கு..............தழீஇ.

(பொ - ரை) அவ்வுதயணகுமரன் பெருகிய கடல்போன்ற படையுடனே தன்னை எதிர்த்த அரசர்களை வென்று தன்னை வணங்கும்படி செய்து, மதஞ்சொரியும் களிப்பினையுடைய யானையையுடைய பிரச்சோதன மன்னன் என்னும் ஐந்தலை அரவினை வெகுள்வித்துப் பசிய தளிர் விரவிய மலர்மாலையினை யுடைய வாசவதத்தையையும் கைப்பற்றித் தழீஇக் கொண்டு, என்க

(வி - ம்.) உள. மல்கு - பெருகிய. கடலை ஒத்த பெரும்படையுடனே வந்து எதிர்த்த என விரிக்க. மன்னர் - வாசவதத்தையை மீட்டற்கு வந்த அரசர்.

உஅ. பில்கு களி யானை - மதம் சொரியா நின்ற களிப்பினையுடைய களிற்றியானை.

உகூ. சினமிகுதி கூறுவார் ஐந்தலை நாகம் என்று உருவகித்தார், "ஐவாய் அரவின் அவிரழல் போன்று சீறி" (சீவக - உ௩௪௫) என்றார் திருத்தக்கதேவரும். அழல - நெஞ்சழலும்படி. வெகுட்டி; பிறவினை: வெகுளச்செய்து.

௩௦. கோதை - வாசவதத்தை. பற்றுபு - கைப்பற்றி. தழீஇ- தழுவிக்கொண்டு.

௩க - ௩அ: சிறைகொள............உரைத்தவன்னாரும்.

(பொ - ரை.) தன்னைப்பின்தொடர்ந்த வராகனை நோக்கி, "நின் கோமான் என்னை நம்மால் சிறைபிடிக்கப்பட்டுத் தன் அரசப்பேற்றினை இழந்த சிறுமையுடையோன் என்று இகழாமல் நெஞ்சம் நெகிழ்ந்த அருள்மிகுதற்குக் காரணமான அன்புடனே இச்செல்வியை எனக்கு வழங்கினன்," என்று கூறி அம்மன்னன் இருந்ததிசை நோக்கி வணங்கி "இம்மொழிகளை அப்பிரச்சோதன வேந்தனுக்குக் கூறுவாயாக," என்று பணித்த மொழிகளையும், மேலும் சூழ்ச்சியாக வாசவதத்தையின்பால் நிகழ்த்தப்பட்ட செயல்களையும் அவ்வராகன் அன்றே அப்பிரச்சோதன மன்னன் நெஞ்சத்தைத் தின்னும்படி அவனுக்குக் கூறியதனையும் என்க.

(வி - ம்.) ௩க. சிறைகொள என்பது தொடங்கி (௩௪) தந்தனன் கோமான் என்பது முடிய உதயணன் வராகனுக்குக் கூறியவை. உதயணன் வாசவதத்தையைக் கைப்பற்றிக்கொண்டு புறப்பட்ட பொழுது பிடியின் பின்தொடர்ந்து வந்த வராகனை நோக்கி உதயணன் இங்ஙனம் கூறினன் என்பதனை உஞ்சைக் காண்டத்தில் ௪௬-ஆம் காதையில்,

"அவந்தியர் பெருமகன் அடிமுதல் குறுகிப்
பயந்துதான் வளர்த்த பைந்தொடிப் பாவையைச்
சிறையிவன் என்னுஞ் சிந்தையி னீக்கிக்
குறையுடை உள்ளமொடு கொள்கெனத் தந்துதன்
காதலின் விடுப்பப் போகுதல் வலித்தனென்
வணக்கம் இன்றியான் செய்தனன் தனக்கு"

எனவரும் உதயணன் கூற்றானுணர்க. (க-௪௬ : கச௩-அ)

௩௨. குறைமகன் - சிறுமையுடையோன். கோடல் செல்லாது - மனத்திற் கொள்ளாமல்.

௩௩. அன்பும் அருளும் உடைய மனம் என்பான் திருமனம் என்றான்.

௩௪. "அருள் என்னும் அன்பின் குழவி" என்பதுபற்றி அருள் மலி அன்பொடு என்றார். அருள்மலிதற்குக் காரணமான அன்புடனே என்க. அச்செய்ந் நன்றி தோன்றத் தலைவணங்கினான் என்பது கருத்து.

௩௫. ஒன்டார் மார்பன் உதயணன் என்னும் எழுவாய் (உஎ) முன்னரே கூட்டப்பட்டது. பணிமொழி : வினைத்தொகை.

௩௬. மந்திரமாக - மறைவாக; இரகசியமாக. மகள் - வாசவதத்தை.

௩எ. அன்று - அது நிகழ்ந்த அற்றை நாளிலே. அவன் - அப் பிரச்சோதன மன்னன். அகமுண - நெஞ்சத்தைத் தின்னும்படி; மிகவும் வருந்தும்படி என்பது கருத்து.

௩அ - ௪௩ : மிகப்பல................ஊக்க வென்றியும்.

(பொ - ரை.) அவையத்துச் சான்றோர் முன்னர்த் தன் வெகுளிதோன்றப் பலபடப் பேசிப் பிரச்சோதன வேந்தன் உதயணனைத் தடுத்துப் பற்றிவருதற் பொருட்டுத் தனது போர்ப்படையை ஏவியதும், அப்படை கெடும்படி தாக்கி அதனைத் தோற்கச் செய்த தந்தோழருடைய ஊக்கமிக்க வெற்றியினையும் என்க.

(வி - ம்.) ௩௯. தொல்லோர்-பழையோர் ஆகிய அவையத்தார்.

௪0. ஒல்கா வென்றி - தளராத வெற்றி. தடைஇய-தடுத்தற்கு.

௪க. வேந்தன் படை விடுத்ததும் என மாறுக. வேந்தன் - பிரச்சோதனன்.

சஉ. விளிய - அழிய. உடைத்த - உடைந்தோடச் செய்த. தோழர் - ஆண்டுக் கரந்துரைந்த நண்பர்.

சங. ஊக்கத்தாலுண்டான வெற்றியையும் என்க.

சச - ருo : வென்றி.......................ஒடுக்கமும்.

(பொ - ரை.) பிரச்சோதனன் வெற்றியையுடைய தன் உச்சயினி நகரத்துள்ளோர் வெவ்விய துயர் யெய்தியதனையும் ஆண்டு நிகழ்ந்த பிறவற்றையும் நிகழ்ந்தபடியே உணர்ந்தும், அவற்றை உள்ளத்தே அடக்கி அறியாதான் போன்று தன் பொச்சாப்பினைப் பகைவர் உணர்தலை அஞ்சி அரண்மனை யகத்தே சென்று தன் பெருந்தேவியைத் தேற்றி உயர்ந்த அவ்வரண்மனையினுள்ளேயே ஒடுங்கியிருந்தமையையும் என்க.

(வி - ம்.) சகு. உள்தாங்கு இயற்றி - உள்ளத்திலே தாங்குதலைச் செய்து ; அடக்கி என்றவாறு.

சஎ. புணராதார் - பகைவர் ; அவர் முன்னர்த் தன் பொச்சாப்பு வெளிப்படுதற்கு அஞ்சி என்க. பொச்சாப்பு - உவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

சஅ. வணங்குகொடி - வளைகின்ற பூங்கொடியை ஒத்த.

சகூ. பயந்து - ஈன்று. பத்தினி - ஈண்டு மணவி என்னும் பொருட்டாய் நின்றது. தெருட்டி - தேற்றி.

ருo. (சஎ) பொச்சாப்பு அஞ்சி ஒடுங்கிய ஒடுக்கமும் என்க. கோயில் - அரண்மனை.

ருக - ருச : நளிவரை...........எழுலின்மையும்.

(பொ - ரை.) வெற்றியையுடைய அப்பிரச்சோதன மன்னன் அந்நிகழ்ச்சியை உணர்ந்தவுடன் உதயணன்பாற் பகைமை கொண்டு தன் நளகிரி என்னும் களிற்றியானையில் ஏறித் தன் படைஞரை நோக்கி "ஒளிமிக்க மணிகளையுடைய வளைந்த அணிகலனை அணிந்த அவ்வுதயணகுமரனை நெருங்கிப் பற்றிக் கொண்டு வம்மின்" என்று கட்டளையிட்டவனாய்ச் சினந்து எழுதல் இல்லாமையும் என்க.

(வி - ம்.) நளிவரை - பெரியமலை. இது நளகிரி என்னும் களிற்றியானைக்குவமை.

பிரச்சோதனன் இந்நிகழ்ச்சியினை உணர்ந்தவுடனே இங்ஙனம் வெகுண்டு எழுதல் வேண்டும் ; அங்ஙனம் எழுதல் இல்லாமையும் என்க. எனவே, பிரச்சோதனனுக்கு உதயணன்பால் உட்பகை சிறிதும் இல்லை என்பதனையும் இதனால் அறிந்தும் என்பது கருத்து.

ரு - கச: இனையவை..................துட்டச் சேரியும்.

(பொ - ரை) இன்னோரன்ன பிற நிகழ்ச்சிகளையும் ஒற்றியறிந்து மேலும், அந் நகரின்கண் ஏனைப்பகுதிகளினும், அரண்மனை முற்றத்தினும், வாயிலிடங்களினும், புதியோர்வந்து நிரம்பிய அம்பலங்களினும், யானைக் கொட்டில்களினும், தவப்பள்ளிகளினும், மறவர் சேரிகளினும், தான் எடுத்து மொழியும் மொழியை அறியமாட்டாத பிறநாட்டு வணிகர் உறையும் சேரியினும், கல்லூரிகளிடத்தும், சூதாடுமன்றங்களின் பக்கத்தும், குற்றமில்லாத நன்மையினையும் தீமையினையும் பகுத்துணர்ந்து பிறர் மறையை அகத்தின்கண் அடக்கமாட்டாதவரும் கள்ளுண்போருமாகிய மகளிர் உறையும் கயமையுடைய சேரியினும், தம் அழகை விற்றுண்ணும் கரிய கடையினையுடைய குளிர்ந்த கண்ணிணையுடைய பூங்கொடியை ஒத்த பரத்தையர் உறையும் வளப்பமுடைய இல்லங்களினும், குதிரைக் கொட்டில்களினும், ஆடை நெய்வோர் சேரியினும், அறிவை மயக்கும் கள்ளுக் கடைகளையுடைய தெருவினும், நீராடு துறைகளிடத்தும், குளக் கரைகளினும், கூத்தர் உறைகின்ற சேரிகளினும் என்க.

(வி - ம்.) ரு. புனை நகர் - ஒப்பனை செய்யப்பட்ட நகரம். வரைப்பு - இடம். சு. கோயில் - அரண்மனை; திருக்கோயிலுமாம். வாயில் - நகரப் பெருவாயில்கள்.

எ. வம்பலர் - புதிதாக வந்தவர். அம்பலம் - பொதுமன்றம். அ. யானைத்தானம் - யானைகள் கட்டுங் கொட்டில். தவப்பள்ளி - துறவோர் இருக்கை.

கூ. தானைச்சேரி - படைமறவர் சேரி. (தான் - ஈண்டுயூகி)

க0. பாடை - மொழி. தேசிகர் - பிறநாட்டினின்றும் வந்தோர்.

கக. ஓதுநர்சாலை - கல்லூரி. ஓவா - ஒழியாமல்.

கஉ. சூதுபொரு கழகம் - சூதாடுகளம்.

"பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின்." (திருக் - கஉஎ)

என, வள்ளுவனாரும் சூதாடுகளத்தைக் கழகம் என்றோதுதல் உணர்க. அருகல் - பக்கம்.

கங - ச. நன்மை தீமைகளை அறிந்து மறைச் செய்தியை மனத் தடக்காதவரும், கள்ளுண்டு களிப்போருமாகிய இழிகுல மகளிர் வாழும் சேரி என்க. இவர்பால் மறைபெறல் எளிதாகலின் அச்சேரியினும் சென்றெனப்பது கருத்து.

கரு. காரிகை பகரும் - அழகை விற்கும்.

கசு. வார்கொடி போன்ற பரத்தையர் என்க.

௬எ. கோடிகர் - ஆடை நெய்வோர்.

௬அ. மதிமயக்குறூஉம் கடையணி மறுகினும் எனமாறுக; என்றது கள்ளுக்கடையினையுடைய தெருவினும் என்றவாறு. ஈண்டும் ஒற்றுணர்தல் எளிதாதலறிக.

௬௯. கூத்து : ஆகுபெயர் ; கூத்தர் என்க.

**எ0 - எ௬ : மன்றுப்.....................நன்பல கேட்டும்.**

(பொ - ரை) (௭அ) மறவர்கள் மகளிர் கூட்டத்திடையே நின்று "ஒன்றனைப் பார்த்தாற்போன்ற பற்பல மன்றமும் சந்திகளும் உள்ள நீராட்டுவிழாப் பாடியின்கண், ஊர்மக்கள் அனைவரும் இருந்த செவ்வியிலே, முகில்களனைத்தும் கூடி உலாவா நிற்றற்குக் காரணமான கடிய சூறைக்காற்று வீசியபொழுது கெடாத கற்பினையும் நறிய நெற்றியினையும் மூங்கில்போன்ற தோளினையும் உடைய வாசவதத்தையை நம் மன்னவன் பெரிய மலைபோன்ற மார்பினையுடைய உதயணகுமரனுக்கு மனைவியாதல் வேண்டுமென்னும் கருத்தினாலே அருளோடும் போக்கி அவனை உறுதிப் பொருளோடு கூட்டிய செயலை எல்லீரும் அறிந்து எல்லோருக்கும் உணர்த்துங்கள். அஃதப்படியன்று என்பீராயின், மற்று இவ்வரசனுடைய பாதுகாவலை அவ்விடத்தே யாம் கண்டிருப்பேம் அல்லமோ! அங்ஙனம் காணாமையினாலே யாங்கள் கூறுவதே உண்மை" என்று கூறித் தூற்றா நின்ற ஆரவாரமுடைய புறங் கூற்றினை நன்றாகப் பலவிடத்தும் கேட்டும் என்க.

(வி - ம்.) உதயணன் வாசவதத்தையைக் கைப்பற்றிச் சென்ற பின்னர் இங்ஙனம் ஒரு செய்தியை ஊர்முழுதும் பரப்புங்கள் என்று யூகி தன் மறவர்க்குக் கூறியிருந்தான்; அம்மறவரும் மகளிரிடையே இம்மொழியைப் பரப்பி விட்டனர். அஃதியாண்டும் பரவிப் பேராரவாரமாயிற்று. அச்சூழ்ச்சி பலித்ததனைத் தானே நேரிற் கேட்டான் என்பது இப்பகுதியின் கருத்தாகும்.

இங்ஙனம் பரப்பியது அந் நகரமாந்தர்க்கும் பிரச்சோதன மன்னனுக்கும் இடையே பிளவுண்டாக்குதற் பயத்ததென்று நுண்ணிதின் உணர்க.

எக - உ. கார் முழுதும் கூடி உலாவுதற்குக் காரணமான கடுவளி வரவு என்க. கார் முழுதும் எனற்பாலதாகிய முற்றும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது. உலாவும் - உலாவாநின்ற. கடுவளி - கடிய சூறைக்காற்று. ஒடியா - கெடாத.

எ௩. நங்கையை - வாசவதத்தையை. நம்மிறை என்றது பிரச்சோதனமன்னனை.

எ௪. உறுவரை - பெரியமலைபோன்ற.

எ௫. பொருள் - தன்மகட்கு உறுதியாம் பொருள். அஃதாவது—கற்புக்கடம் பூண்டுயர்தல்.

எக. யாவிரும் அறைவிர் என்றது அங்ஙனம் கூருவிடின் அப்பழி நம்மேலதாம் ; ஆதலால் இதனை வெளிப்படுத்தி அப்பழியினைப் போக்கிக் கொள்வேம் என்று மறவர் கூறினர் என்னும் கருத்துடைய தென்க.

அன்றெனின் - அங்ஙனமன்று என்பீராயின்.

இனித் தமது கூற்று மெய்யென்றற்கு ஏதுக்காட்டுவார், "யாம் மற்றிவன் காவல் அவ்வழிக் கண்டிலம் அல்லமோ" என்ருர் என்க. மன்னவன் அக்கருத்துடையன் அல்லன் எனின், அவன் தன்மகளை நன்கு பாதுகாத்திருத்தல் வேண்டும். அங்ஙனம் காவாமல் அவளை உதயணன்பால் ஒப்புவித்தமை கண்டு தெளிமின் என்பது கருத்து.

எகூ. கம்பலைப்புறமொழி - ஆரவாரமுடைய புறங்கூற்று.

அ௦ - கூக : கூற்ற வேழம்....................வலிப்பினனுகி.

**(பொ-ரை.)** - இப் புறங்கூற்றினைக் கேட்டுக்குழுமிய நகர மாந்தர் "கூற்றுவனை ஒத்த நளகிரியினை அடக்கிய உதயண குமரனுக்கு நம் மன்னன் கைகொடுத்ததோடன்றிக் காற்றும் நெருப்புங் கூடித் துணைபுரியாநிற்ப, அவ்வமயத்தில் நந்நகரமக்கள் மயங்கி இந்நிகழ்ச்சிக்கு முதலும் நடுவும் முடிவும் அறியமாட்டாதாராய்த் தம்முள் தாமே கலாஅய்த்துக்கொண்ட விம்முதற்குக் காரணமான போரினூடே, போர் வலிமைமிக்க உதயணகுமரனுடைய மலர்மாலை அணிந்த மார்பின்கட் சென்று திருமகள் போன்று வாசவதத்தை பொருந்தா நின்றனள். பின்னரும் அவ்வுதயண குமரனே காதலோடு தன்னைப் பாதுகாவாநிற்பத் தீங்கொன்றும் இலளாய் அவனேடு பிடியானையை ஊர்ந்து சென்றனள்" என்று கூறுகின்ற நல்லபொருள் பொதிந்தவாய்ச் சொல்லையும் கேட்ட வலிமையினையுடையனுய் என்க.

**(வி-ம்.)** அ௦. கூற்றவேழம்-கூற்றுவனை ஒத்த நளகிரி என்னும் களிற்றியானை.

அக. கைகொடுப்ப - துணைபுரிய.

அ௩. கடையிடை கயக்கமின்றித் தெரியார் என மாறுக. கயக்கம்-கலக்கம். கடையிடை என்றதனுல் முதலும் நடுவும் கடையும் என விரிக்க.

அ௪. விம்மம் - விம்முதல். வெகுட்சி: ஆகுபெயராய்க் கலாம் என்பதுபட நின்றது.

அ௫. அண்ணல் - உதயணகுமரன்; உதயணகுமரன் மார்பில் முன்னரே பொருந்தியிருக்கும் திருமகளைப்போன்று என்க. வாசவதத்தை என்னும் எழுவாய் வருவித்தோதுக.

அ௬. கல்நிரை கானம் - மலைகள் நிரம்பிய காடு. கல்-பருக்கைக் கல்லுமாம்.

அ௭. பிடியூர்ந்து அவனேடு புக்கனள் என மாறுக.

சு0. மாந்தர் என்னும் எழுவாய் முன் கூட்டப்பட்டது.

கக. யூகி கருதிய காரியம் நிறைவுற்றமையும், வாசவதத்தை உதயணனைப் பெரிதும் விரும்புகின்றாள் என்பதும், இவர் கூற்றாற் புலப் படுதலான் நற்பொருள் பொதிந்த வாய்ப்புள் என்றார்.

கஉ. வாய்ப்புள்-வாய்ச்சொல். வலிப்பினன்-வலிமையுடையன். இவ்வாய்ப்புள் அவன் வலிமையை மிகுவித்தல் தோன்ற வலிப்பினனாகி என்றார்.

கூஉ - ௪00: யாப்பு......................பயிர்ந்து.

(பொ - ரை.) கட்டுப்பாட்டினை அகத்தேயுடைய அமைப் பினையுடைய சூழ்ச்சியையுடையனும் மேலும், செறிவுடைய செயல் களை ஒற்றியுணர்ந்து அவை, புறத்தார்க்குப் புலப்படாமல் மனத் துள்ளே அடக்கிக்கொண்டு தஞ்செல்வம் போன்ற வேந்தனாகிய உதயணகுமரனையும் தம் பகைவன் போலக் காட்டித் தமர் விரும்பாநின்ற உள் பொருள்களை ஒற்றி உணர்தற் பொருட்டு அந்நகரத்துள்ளே திரிந்து, ஆண்டுள்ளோர் தாம் வினவிய வினுவிற்கு மறுமொழி கொடுத்தவிடத்தும், அல்லாதூஉம் அப் பிறர் நெஞ்சத்தினுள்ள துன்பத்தால் மெய்ப்பாடாக வெளிப் பட்டவற்றையும் நல்ல ஒற்றியற் பகுதியாலே ஒற்றிக் கூரிதாக உணர்ந்தும், நூலியலறிவானும், தம்மியற்கை மதிநுட்பத்தா னும் ஆராய்ந்து உண்மை தெளிந்து வேறுபட்ட சொல்லோடும் வேடத்தோடும் அந்நகரத்தூடே சுழன்று மறைந்திராநின்ற பல வேறு வேடமுடைய தம் படைமறவரை சங்கேத ஒலியானே ஓரிடத்தே வரவழைத்து என்க.

(வி - ம்.) யூகி சூழ்ச்சியனும் அகத்தொடுங்கிய படைஞரைப் பயிர்ந்து என இயைக்க.

கூஉ. யாப்பு - கட்டுப்பாடு.

கூச. செல்வ வேந்தனும் செறுநன்போலக்காட்டி என்க. ஆண் டுள்ளார் உதயணனைப் பகைவனாகக் கருதுதற்கேற்பத் தஞ்சொற் செயல்களானே உதயணனைப் பகைவன் போலக்காட்டி என்பது கருத்து. இங்ஙனம் காட்டுதல் தம்மறை வெளிப்படாமைப் பொருட் டென்க.

உறுநர் - உறவினர், தமர்.

கூகூ. மறுமொழி கொடுப்பினும் அல்லது நுனித்தும் என இயைக்க.

கூஅ. நூல் - ஒற்றுநூல். மதி - இயற்கை நுண்மதி.

கூகூ. வேறு சொல் குறிகளையுடையராய்த்திரிந்தென்க.

௪00. படைநர் - மறவர். பயிர்ந்து - அழைத்து.

[கoக - கஉசு. யூகி அப்படைமறவர்க்குக் கூறியவை.]

[கoக கககூ. ஒருகாளி கோயில் வருணனை.]

கoக - கசஉ: பூவளம்...............கோட்டியுள்.

(பொ - ரை.) மலர் வளத்தானே அழகுற்ற பொழில்களையுடைய உஞ்சை நகரத்தின் பக்கத்தே உள்ள மகாகாள வனம் என்னும் பெயரையுடையதொரு காட்டின்கண், உயிர்களை அச்சத்தால் நடுங்கச்செய்யும் பணைத்த பெருந்தோளினையும், பிளந்த வாயினையுங் கூர்த்த பற்களையும், இரண்டாகிய பெரிய செவியினையும், அச் செவியின்கண் விளங்காநின்ற குழையணியப்பட்ட பெரிய வனப்பினையும், செழித்த தாமரைமலர் போன்ற பெரிய விழிகளையும், பெரிய உடலினையும் உடைய காடுகிழாளின் முன்றிலின் முன்னர் உளதாகிய, பனையினது செறும்பை ஒத்த பலவாகிய மயிரையுடைய முன்கையினையும், நிணப்பசை கொள் நெடிய பற்களையும் உடையதும் வழிநடையானே இளைத்து வழியினின்றும் நீங்கித்தன்பால் வந்து சேர்ந்தவர் துட்கென்று அஞ்சுதற்குக் காரணமானது மாகிய பேயுருவம் எழுதப்பட்டதும் இடிந்த சுவரையுடைய துமாகியதொரு மண்டபத்தினுள் இரவின்கண்வந்து கூடிய தம்மூர்க்குச் செல்லுதலைக் குறித்த ஆராய்ச்சியையுடைய அந் நண்பர் கூட்டத்திலே சென்றமர்ந்து என்க.

(வி - ம்.) கoச. கவினிய - அழகுற்ற. பொழில் - சோலை. உஞ்சேனை - உச்சயினி நகரம்.

கoஉ. மாகளவனம் : மகாகாளவனம் என்பதன் மரூஉ.

கoங. பகுவாய் - பிளந்த வாய்.

கoகு. சேடு - பெருமை. மலர் - ஈண்டுத் தாமரை. தடங்கண் - பெரிய கண்.

கoசு. மோடு - பேருருவம். அரிவை - காடுகிழாள். முனது - முன்னிடத்ததாகிய.

கoஎ. செறும்பு - சிலாம்பு.

கoஅ. நீளி - நீட்சி.

கoகூ. சாஅய் - (வழிநடையாலே) இளைத்து. நீங்கி - தம்வழியினின்றும் விலகி. துட்கு: குறிப்புச் சொல் - நெஞ்சம் துட்கென்று அஞ்சுதற்குக் காரணமான என்க.

ககo. பேஎய் - பேய்.

ககக. அழிசுவர் - இடிந்த சுவர். அகவயின் - உள்ளே.

ககஉ. வழிபடர்-ஊர்க்குவழிக்கொள்ளுதலை. மந்திரக்கோட்டி- ஆராய்ச்சிக் குழு. அக்குழுவிலமர்ந்தென்க.

௧௧௩ - ௧௪௫ : வென்வேல்.............................உணர்ந்தி.

(பொ-ரை.) அந் நண்பரை நோக்கி "நண்பரீர்! நீயிரெல்லாம் நன்கு முயன்று வெற்றிவேலையுடைய நம் வேந்தனைச் சிறைவீடு செய்தீர்" என்று அமிழ்தம் போன்ற இனிய முகமன் மொழிகூறிப் பின்னர்த் தான் செய்யக் கருதியுள்ள செயல்களையும் அவர்க்கு அறிவுறுத்தி "இனி நீயிர் நம் உதயண வேந்தன் சென்ற காட்டகப் பெருவழிமேற் செல்லாமல், நாட்டினும் மலைகளினும் காடுகளினும் புகுந்து ஆண்டுள்ள கனிச்செல்வங்களைக் கவர்ந்துண்டு மீண்டும் பலவழிகளானும் தம்மிருக்கை நோக்கி வருகின்ற பனிபடர்ந்த சிறகினையுடைய வௌவால்கள் போன்று படைக்கலங்களானும், தொழில்களானும், ஒழுக்கம் வேறுபட்ட வடிவத்தானும், தன்மையானும், வேறு வேறாகித் தனித்தாதல், சிலரும் பலருமாய்ச் சேர்ந்தாதல், வலிமை பொருந்திய சிறப்பினையுடைய மதில் சூழ்ந்த இவ்வுஞ்சை நகரம் கடலின்கட் பொருந்தியதும் பண்டங்களை இறக்கிவிட்டதுமான மரக்கலம் போல உள்ளிடம் வறிதாகிப் பொலிவிழக்கும்படி இதனினின்றும் புறப்பட்டுப் பெரிய தவம் உள்ள இடத்திற்குத் தாமே விரும்பி அதர்வினுய்ச் செல்லாநின்ற பொருளும், நுகர்ச்சியும், புகழும் போலக் குற்றமற்ற மணியணிகலன் அணிந்த நம் மன்னவன் இருக்குமிடத்திற்குச் செல்லுதல் நன்றாகும்" என்று கூறி உடம்படச் செய்து அந்நண்பரை அவ்வாறே போக்கிய பின்னர் என்க.

(வி - ம்.) ௧௧௩. வென்வேல் - வெற்றியையுடைய வேல். வேந்தன் - உதயணன். சிறை விடுத்தனிர் எனமாறுக.

௧௧௪. ஈத்து - ஈந்து.

௧௧௫. தான் இனிச் செய்யக் கருதியுள்ள செயலை என்க.

௧௧௬. பகைவர் ஊன் சேர்ந்துள்ள கடிய வேலையுடைய என்க.

௧௧௭. கடத்தல் செல்லீர் : ஒருசொல் ; கடவாதீர்.

௧௨௦. பனியிறை - பனிபடிந்த சிறகு. இரவிற் பறப்பன ஆதலின் பனியிறை வாவல் என்றார். வாவல் - வௌவால். படர்ச்சி - செலவு. ஏய்ப்ப : உவமவுருபு.

௧௨௪. கலி - கடல். களைகலம் : வினைத்தொகை. கலம் - மரக்கலம்.

௧௨௮. மன்னவன் - உதயணகுமரன்.

௧௨௯. குணன் - குணம், ஈண்டு. நன்மைப்பண்பு குறித்து நின்றது. ஒருப்படுத்து - உடம்படச்செய்து.

இப்பகுதியில் வாவல், மறவர்க்கும், பண்டம் களைகலம், உச்சயினி நகரத்திற்கும், பெருந்தவமுள்ள இடம் உதயணனிருக்குமிடத்திற்கும், பொருள் முதலிய மூன்றும் மறவர்க்கும் உவமைகள்; இவ்வுவமைகளின் அழகை நுண்ணிதின் உணர்ந்தின்புறுக.

கருo - கஉள : ஆருபொருள்..................பெயர்ந்து.

(பொ - ரை) தமக்கு ஆக்கமான பொருளை விரும்பித் துறவியர் பள்ளிகளிடத்தே இருந்து வஞ்ச வொழுக்கத்தோடே நெடிய அவ்வுச்சயினி நகரத்துள்ள மாந்தரின் உள்ளத்தே கிடக்கும் பொருளைக் கவர்ந்துகொள்ளற் பொருட்டுத் திரிதரா நின்ற நெருங்கிய தோழர்களைக் கண்டு அவர் மொழிகளையும் கேட்டற்கு விரும்பி மனமொழி மெய்களாகிய மூன்று கருவிகளானும் பிழைசெய்தலில்லாத நிரப்பிய நுண்ணிய தவநெறியினை யுடைய பண்ணவராகிய துறவோர் முக்கால நிகழ்ச்சிகளையும் அறிந்து கொள்ளுமியல்பினராவர்; ஆகவே அவர் நந்திறத் தினும் அவற்றை எண்ணுவாராயின் அவ்வெண்ணம் நமக்குத் தீங்குதருவதாகுமே என்று ஒருகால் நினைத்தவன் மீண்டும் என்க.

(வி - ம்.) கருo. ஆருபொருள் - தமக்கு ஆக்கந்தரும் பொருள்.

கருக. கடவுள்பள்ளி - துறவோரிருக்கை. கள்ளவொழுக்கம் - துறவாதே வைத்தும் துறந்தோர்போல் ஒழுகும் வஞ்சவொழுக்கம்.

கருஉ. நெஞ்சுண - நெஞ்சிலுள்ளவற்றைக் கவர்தற்கு.

கருங. ஒட்டிய தோழர் - நெருங்கிய நண்பர்.

கருச. மூன்றிடம்-மனமொழி மெய்கள். நுண்ணெறி என்றது- தவநெறியை.

கருரு. பண்ணவர் - துறவியர்; மனம் பண்பட்டவர் என்பது பொருள். முனிவர் - உலகத்தை முனிந்தவர். பண்ணவராகிய துற வோர் என்க. பட்டது - இறந்தகாலத்தே நிகழ்ந்தது. படுவது - எதிர்காலத்தே நிகழ்வது. நிகழ்காலத்தே நிகழா நின்றதனை ஏனை யோரும் அறிதலுண்மையின் அதனை விலக்கினர்.

கருசு. ஏதம் - துன்பம். அஃதாவது தம்மறை வெளிப்படின் அதனால் காரியக் கேடுண்டாம் என்பது கருத்து. பெயர்ந்தும்-மீண்டும்.

கருஎ - கசச : நெறியின்..................உளனய்.

(பொ - ரை.) உலகியல் நெறியினின்றும் விலகி மெய்ந் நெறிச் செலவினையுடைய துறவோர் இருவினை என்னும் அழுக் கறுக்கும் ஒரே விருப்பத்தினை யுடையராதலன்றி ஏனையவற்றில் தாம் விரும்பியவற்றைக் கூறுதல் இல்லாத ஊமைகளையே ஒப்பர் என்னும் நீதியது நேர்மையினைக் கருதிய கருத்துடைய னய்த் துணிந்து, அத்துறவோர் பள்ளியிற் சென்று அவ்வசை யில்லாத கொள்கையுடைய துறவியர் முன்னேரான் ஓதப்பட்ட சமய வேற்றுமைகளை நிரம்பக்காட்டி அவற்றுள்ளும் அரிய சமயம் இஃதாம் எனத்துணிந்ததனை மருள்வான் போன்றும்,

தெளிவான்போலவும், முகத்தாற்காட்டி ஒரோவழி தனக்குத் தெரிந்தவற்றையும் கூறி அவரோடு அளவளாவி ஊர்க்கு மீளும் கருத்திற் றனது இயல்பினின்றும் பிறழாதவனாய் இருந்து என்க.

(வி - ம்.) கங எ. நெறி - உலகியனெறி என்க.

கஙஅ. வினைத்துகள் - இருவினையாகிய மாசு. அறுக்கும் அவ் வொரே வேட்கையுளராதலன்றி என்க.

கஙகூ. தாம் விரும்பியவற்றைக் கூறமாட்டாத மூங்கைகள் போல்வர் என்க. மூங்கை - ஊமை. போல்வர் என்னும் உவமச்சொல் வருவித்தோதுக. ஆமெனும் என்புழி - ஆம் சாரியைச்சொல் என்க.

கச0. நீதியின் நேர்மையைக் கருதிய கருத்துடையனாய் என்க. உளன் - உள்ளத்தையுடையன். துறவியர் உலகிய லொழுக்கத்தில் ஈடுபடமாட்டார் ஆதலின், யாம் அவர் பாலிருத்தலால் ஏதம் வாராது என்று நினைத்து அவர்பாற் சென்றான் என்பது கருத்து. ஓதிய-முன் னோரான் ஓதப்பட்ட (சமயங்களின் விகற்பம் என்க).

கசக. சால - நிரம்ப.

கசஉ. அசைவிலாளர் என்றது. துறவியரை.

கசங. மருள்வான் போன்றும் தெருள்வான் போன்றும் முகத் தாற் காட்டி என்க. இஃதவர் அயிராமைப் பொருட்டென்க. பிதற்றி-மொழிந்து.

கசரு - கசஅ : பூசுபு.......................கழித்து.

(பொ - ரை.) அவ்விடத்தே வேற்றுவண்ணங்களைப் பூசிக் கொண்டு அவை உலர்ந்து கெடாத உடலோடே வந்த தன் தோழரோடு அயலான்போல மிகப் பலவாகப் பேசுமாற்றானே மொழிகளைப் பெருக்கி அத்தவப்பள்ளியிலேயே அற்றைப் பகற் பொழுதைப் போக்கி என்க.

(வி - ம்.) கசரு. பூசுபு - பூசி. யாக்கை - உடல். பெயரிய - வந்த.

கசஎ. வேற்றோன் - ஏதிலன். மாற்றம் - மொழி.

[யூகி ஒரு தயவன் இல்லத்தை அடைதல்.]

கசகூ - கருஅ : குடிகெழு................குறுகினனாகி.

(பொ - ரை ) நற் குடிமக்கள் பொருந்திய வளப்பமுடைய இல்லங்கள் நெருங்கிய செல்வத்தினையும், அழிவில்லாத நல்ல மதிலினது காவலையும் உடைய கோசம்பி நகரத்தே உதயண மன்னன் முதல்வர் காலந்தொடங்கிப் பழைமையிற் பிறழாது அரண்மனைக்கு மட்கலம் வனையும் பேற்றினைப்பெற்று அதனால்

ஓரிடத்தை மேற்கொண்ட குற்றமற்ற ஒழுக்கமுடைமையோடே துன்பம் உற்றபொழுது தன் இன்பத்தையும் துறந்து, தீயினுட் புகுதும் சுட்டுக்கோல் போன்று நட்பின் பொருட்டுத் தன் நாட்டினைத் துறந்து தம் வேந்தனைச் சிறைவீடுகொள்ளும் அவாவினாலே அவ்வுச்சயினி நகரத்தே வந்திருந்த ஒரு குயவனுடைய இல்லத்தை எய்தி என்க.

(வி - ம்.) கசுகூ. குடி, ஈண்டு நற்குடி என்பதுபட நின்றது.

கருo. கன்னித்தன்மையுடைய மதில் என்க - பிறரால் அழிக்கப் படாத மதில் என்றவாறு. கடி - காவல். கோசம்பி - உதயணகுமரன் தலைநகரம்.

கருக. மன்முதல் - மன்னனுடைய முன்னோர். தொன்முதல் - தொன்மையில். கருஉ. அரண்மனை அட்டிற்கலமாகலின் பெருங்கலம் என்றார். பேறது என்புழி, அது : பகுதிப்பொருளது.

கருக. தானகம் - தானம்; பதவி. செல்வு - செலவு; ஒழுக்கம்.

கருச. இட்டிடர் - சிறுமையுடைய துன்பம். நண்பனாகிய உதயணனுக்குத் துன்பம் வந்தபொழுது தன் இன்பத்தையும் துறந்து சுட்டுக்கோல் போன்று அந் நண்பனோடு தானும் அத்துன்பத்தை ஏற்றுக்கொண்டு கோசம்பியைவிட்டு உச்சயினியில் வந்திருந்த குயவன் என்க.

"கட்டழற் புகூஉஞ் சுட்டுறு கோல்போல்"

என்பதனோடு,

"சுட்டுக்கோல் போல எரியும் புகுவரே
நட்டார் எனப்படு வார்"

எனவரும் நாலடி. (உoஅ) யையும் நினைக.

கருரு. நட்டு - நட்பு : அஃதிரண்டாம் வேற்றுமையுருபேற்று 'நட்டை' என நின்றது. நட்டையிட்டு என்றது நட்பை முன்னிட்டு என்றவாறு.

கருகூ - கசுo : ஆங்கினிது.....................போக்கி.

(பொ - ரை.) அக்குயவன் இல்லத்தே முன்னரே சென்று இனிதாக இருந்த சாங்கியத்தாயைத் தன் பக்கலிலே அழைத்து ஆண்டு நிகழ்ந்தவற்றை எல்லாம் முறைமையோடே கூறி அவளைப் புகழ்ந்து முன்னர் மறவர்கள் போயினாற்போல நீவிரும் உதயணன் பாற்போதல் நன்று என்று கூறி மருந்து கலந்த அவல் முடிப்பும் தண்ணீர்க் கரகமும் கூட்டி அமைத்து அவற்றோடு அவளும் புறப்படும்படி செய்து பின்னர் என்க.

(வி - ம்.) கருகூ - கசுo. அரிய தவவொழுக்கத்தினை மேற்கொண்ட சாங்கியத்தாயை என்க.

ககஉ. புகழ்ந்து அவண்ணம் எனக் கண்ணழித்துப் புகழ்ந்து பாராட்டி அம்மறவர் போயினாற்போல நீயிரும் உதயணன்பாற் போதல் நன்று எனப் பொருள் கூறுக.

புகழ்ந்து என்றது, முன்னர் மறவர்க்குக் கூறினாற்போல (கஙகூ) "வென்வேல் வேந்தனை விடுத்தனிர் சிறை" என்ன இன்னோரன்ன முகமன் கூறிப் பாராட்டி என்றவாறு.

கசுங-டு. உட்கொண்டோருடைய பசித் துன்பத்தையும் வெப்பத்தால் உற்ற துன்பத்தையும் துவரப் போக்குமியல்புடைய திரியோகம் என்னும் உண்ணும் மருந்து கலக்கப்பட்ட பொருந்திய இன்பத்தினையுடைய அவல் முடிப்பும் தண்ணீர்க்கரகமும் என்க. திருப்பணக்கிழி - அவல் முடிப்பு. பசியை எறியும் தருப்பணக்கிழியும் அழலை எறியும் தண்ணீர்க் கரகமும் என நிரனிறையாகக் கொள்க. பரிவு - துன்பம். அற - துவர.

கசுஎ - கஎக: அமரிய..................நட்பாளன்.

(பொ-ரை.) விரும்பிய உறவினருள்ளும் சிறந்த உறவினராகிய யவனச்சேரி மறவர் தலைவனும், பொன்னணிகலன் அணிந்த தம்மரசனுக்குக் கண்ணுள் மணிபோன்ற திண்ணிய நட்பினையுடையவனும் ஆகிய ஒரு யவனவீரன், தன் கையினாலேயே இயற்றப்பட்ட மிகவும் நுண்ணிய தொழிற் சிறப்போடு ஞாயிற்றின் தேர்வானத்தில் இயங்குமளவு வேகத்தோடு நிலத்தின்மேல் இயங்கவல்லதும், எத்திறத்தோரானும் உணர்ந்து கொள்ள வியலாத அரிய விசையாணியினையும், இருப்பிறகுகளையும் உடையதும் யானைமருப்பாலாய பலகைகளானே பக்கங்கள் அழகு செய்யப்பட்டதும் குதிரை முதலியன பூட்டப்படாமலே இயந்திரத்தாலே இயங்குவதும் மாட்சிமையுடைய தொழிற்றிறனமைந்ததுமாகியதோர் இயந்திரத் தேரினை என்க.

(வி - ம்.) கசுஎ. அமரிய-விரும்பிய. தம்மை விரும்பிய என்க. தமர் - சுற்றத்தார்.

கசுஅ. யவனப்பாடி - யவனர்கள் உறையும் தெரு. யவனம்-ஒரு நாடு. ஆடவர் - வீரர் என்பதுபட நின்றது. தலைமகன் - தலைவன்.

கசுக. பொன்னாலியற்றிய பசிய அணிகலன் அணிந்த தம்மரசனாகிய உதயணகுமரனுக்கு.

கண்மணி - கண்ணினகத்துள்ளதோர் உறுப்பு. "கருமணியிற் பாவாய்" என வள்ளுவனார் கூறலும் காண்க. உறுப்பினுள் எல்லாம் சிறந்த கண்மணி நண்பருட்சிறந்த திண்ணட்பாளனாகிய யவனர் தலைவனுக்கு உவமை.

கஎச. கழி : மிகுதிப்பொருளது.

கஎஉ. வையகம் - நிலம். வெய்யவன் - ஞாயிறு.

கஎக. தேரின் அன்ன - தேரைஒத்த. செலவிற்று-செலவினை யுடைத்து.

கஎச. யாவரும் என்பது எத்தகையோரும் என்பதுபட நின்றது.

கஎரு. இருப்புப் பத்திரம் - இரும்பாலாய இறகு.

கஎஎ. பூணி - பூண்டிழுக்கும் எருது குதிரை முதலியன. பொறியின் - இயந்திரத்தால்.

கஎஅ. வையம் - தேர்.

கஎகூ - கஅரு : மனத்தின்................வையத்து.

(பொ - ரை.) தன் மனம்போலச் செலுத்துதற்கு அதன் விரைந்த செலவினையும், அதனை நிறுத்தற்கும், தானே பயின்ற றிந்தவனாய் அதனைப் பூட்டிப் பிரித்தற் பொருட்டுப் பெருமை பொருந்திய திறமையுடையாரை அதனகத்தும் புறத்தும் மறைத்துவைத்து இவ்யூகி என்னும் அமைச்சன் கருதிய செயலான் முடிவுறாத விடத்தும் உதயணகுமரனைச் சிறையிருப்பினின்றும் விடு செய்து அவனது கோத்தெழிலை அவன்பால் வைத்து அவன் தலைநகரமாகிய கோசம்பி நகரத்தே செலுத்தக் கருதி நெடுநாள் இருந்து சிந்தித்து இயற்றினாற்போன்ற அக் குவட்டினையுடைய தேரின்கண் என்க.

(வி - ம்.) (கஎ0) நட்பாளன் தன் கையாலே புனைந்த சிறப்போடு, சிறப்பிற்றாகி, ஆணிமுதலியவற்றையுடையதும் பொறியினியங்குவது மாகியதொரு இயந்திரத்தேரை அதன் கடுப்புந் தவிர்ப்புங் கண்டவனாய், அதனைப் படைத்தற்கும் பெயர்த்தற்கும் வித்தகரை அதன் அகத்தும் பக்கத்தும் மறைவாக வைத்து உதயணனைச் சிறை விடு செய்து இரீஇகோசம்பியிற் புகுத்துதற்கென்று இருந்து கோடித்தாற் போன்ற அத்தேரின்கண் என இயைபு காண்க.

கஎஅ. ஒய்ப்ப - செலுத்த.

கஎகூ. கடுப்பு - விரையச் செலுத்துதல். தவிர்ப்பு-நிறுத்துதல்.

கஅ0. படைத்தல் - இயந்திரத்தைக் கோத்தல். பெயர்த்தல் - பிரித்தல். படைத்துப் பெயர்த்தற் பொருட்டு அத்தொழிற்றிறமுடையாரை அடக்கி என்க. அடக்கி - மறைத்துவைத்து.

கஅக. கண் - இடம்; உள்ளிடம் என்க. கை - பக்கம்.

கஅஉ. யூகி எண்ணிய கருமத் தன்றியும் என மாறுக.

கஅச. இருந்து - நெடுநாள் இருந்து சிந்தித்தென்க.

கஅரு. கோடித்தல் - இயற்றுதல். கோடு - குவடு.

கஅசு - ககூ0 : மூவகை.........................ஒழிய.

(பொ - ரை.) மூன்றுவகைப் பொருள்களாற் கூட்டப் பட்ட திரியோக மருந்தினையும் சீர்செய்து வைத்துப் பின்னர்

அவ் யவனர் தலைவனை நோக்கி நண்ப! நீ இவ்விடத்தில் எந்திரத் தேர் முதலிய கருவிகளை இயற்றிக் கொண்டிருந்து இன்னும் இந்நகரத்தே நந்தோழர்கள் மறைவாக இருப்போர் உளராயின், அவர்களையும் நந்நகர்க்குப் போக்கியபின்னன்றிப் போகாதே கொள்! என்று கூறிப் பிணைத்த அன்பினோடே அவ் யவனர் தலைவனை அவ்விடத்தே விட்டுப் பின்னர், என்க.

(வி - ம்.) கஅசு. மூவகையோகம்-மூன்று பொருளைக் கூட்டிச் செய்த மருந்து சீர் அமைத்து-அவ்வவற்றிற்குரிய அளவில் அமைத்து.

கஅஎ. ஏனவை - இன்னோரன்ன பிற நுண்ணியற் கருவிகளையும் என்க.

கஅஅ. மந்திரமாக - மறைவாக.

கஅகூ. போத்தந்து-போகச்செய்து. போந்தந்தல்லது போதாய் என்றது, அவரைப் போக்கிய பின்னர் நீயும் வருவாயாக என்றவாறு.

ககூ0. ஆத்த - பிணைத்த. அவன் - அத்தலைவன். அவண்-அவ் விடத்தில்.

[யூகி உச்சயினியினின்றும் புறப்படுதல்.]

ககூக - ககூஎ : தெய்வ............... கடந்தென்.

(பொ - ரை.) கடவுட்டன்மையுடைய படைக்கலன்களைக் கைக்கொண்டு உதயணகுமரனுடைய நாடிருக்கின்ற அத்திசை நோக்கி இயந்திரத் தேரின் விசையாணியை வேண்டுமிடமெல்லாம் முறுக்கி மண்ணுலகத்திலே தன் வானவூர்தியைச் செலுத்துதலை மனத்தின்கண் விரும்பிய இந்திரன் மகனாகிய சயந்தனைப்போன்று அவ்வுச்சயினி நகர்ப்புறத்தைக் கடந்து சென்றனன், என்க.

(வி - ம்.) ககூஉ. வத்தவன் - உதயணன். நன்னாடிருக்கின்ற அத்திசையை என்க.

ககூங. வித்தகஆணி - வித்தகத்தொழிலானியற்றிய விசையாணி. வேண்டுவயின் - முறுக்க வேண்டுமிடமெல்லாம்.

ககூச. தனக்குரிய வானுலகத்தினை விட்டுக் கீழிறங்கி வான வூர்தியில் ஏறி என்க.

ககூடு. மண்ணகத்து - நிலவுலகத்தின்கண்.

ககூசு. புரந்தரகுமரன் - இந்திரன் மகன்; அவன் சயந்தன் எனப் படுவான்.

ககூஎ. புறநகர்-நகர்ப்புறம் என்னும் ஆரும்வேற்றுமைத்தொகை நிலைத் தொடர் முன்பின்னாக மாறி நின்றது. புறநகர்க் கடந்து போந்தனன் என மாறுக. மாது, ஓ இரண்டும் அசைச்சொல்.

அ. யூகி போதரவு முற்றிற்று.

---

# ௯. யூகி சாக்காடு

இதன்கண், யூகி புட்பக நகர் செல்லும் வழியின் தன்மையும், அவன் புட்பக நகரை அடைதலும், இடபகனைக் காணலும், அவன்பால் உதயணன் செய்தியை வினுதலும், யூகி இடபகனுக்கு முன்பு நிகழ்ந்தவற்றை ஓதுதலும், இடபகன் யூகியைப் புகழ்ந்து பாராட்டுதலும், உதயணன் செய்தியை இடபகன் யூகிக்கு ஓதுதலும், யூகி மூர்ச்சித்து வீழ்ந்து தெளிதலும், சாங்கியத் தாயைக் கண்டு யூகி பின் நிகழ்த்த வேண்டியவற்றை உணர்த்துதலும், நண்பர் கடமை இன்ன என்பதும், யூகி தான் இறந்துவிட்டதாக நடித்து அயலாரை நம்பச் செய்தலும், சாங்கிய மகள் சயந்தி நகரம் புகுதலும் பிறவும் கூறப்படும்.

புறநகர் போந்த பின்றைச் சேறுநீர்
அள்ளற் படப்பை அகல்நிலந் தழீஇப்
புள்ளொலிப் பொய்கையொடு பூந்துறை மல்கி
வான்கண் டன்ன வனப்பின வாகி
மீன்கண் டன்ன வெண்மணல் விரிந்த
கானும் யாறுந் தலைமணந்து கழீஇ
அரும்பணி புன்னையுஞ் சுரும்பிமிர் செருந்தியும்
இலையணி இகணையும் இன்னவை பிறவும்
குலையணி கமுகொடு கோள்தெங் கோங்கு
பழனம் அடுத்த கழனிக் கைப்புடைப்
போர்மா றட்ட பூங்கழன் மறவர்
தேர்மா றோட்டித் திண்ணிதின் அமைத்த
கோட்டம் இல்லா நாட்டு வழிவயின்
ஆணி வையம் ஆரிருள் மறையப்
பூணி இன்றிப் பொறிவிசைக் கொளீஇ
உள்ளிய எல்லை ஓட்டிக் கள்ளமோ(டு)
ஒடுங்குந் தானமுங் கடும்பகற் கரக்கும்
ஆளவி காடும் அருஞ்சுரக் கவலையும்
கோள்அவிந் தொடுங்கிய குழூஉக்குடிப் பதியும்
வயவர் நாடுங் கயவர் கானமும்
குறும்புங் குன்றமும் அறிந்துமதி கலங்காது
பகலும் இரவும் அகலப் போக்கி

இருநூற் றிருப திரட்டி எல்லையுள்
அருநூல் அமைச்சன் அயற்புற நிறீஇ
நட்புடைத் தோழன் நன்கமைந் திருந்த
புட்பகந் தன்னைப் பொழுதுமறைப் புக்குப்
புறத்தோர் அறியா மறைப்பமை மாயமோ(டு)
ஆணி வையம் அரும்பொறி கலக்கி
மாண வைத்து மகிழ்ந்தனன் கூடி
மாண்முடி மன்னன் தோள்முதல் வினவிச்
சிரம மெல்லாஞ் செல்லிருள் தீர்ந்து
கருமம் அறியுங் கட்டுரை வலித்துத்
தோழனுந் தானுஞ் சூழ்வது துணியா
வெந்திறன் மிலேச்சர் விலக்குவனர் காக்கும்
மந்திர மாடத்து மறைந்தனன் இருந்து
தன்தொழில் துணியாது தானத்தின் வழீஇக்
குஞ்சர வேட்டத்துக் கோள்இழுக் குற்ற
வெஞ்சின வேந்தனை விடுத்தல் வேண்டி
வஞ்ச இறுதி நெஞ்சுணத் தேற்றி
உஞ்சையம் பெரும்பதி ஒளிக்களம் புக்கு
மெய்ப்பேய்ப் படிவமொடு பொய்ப்பேய் ஆகிப்
பல்லுயிர் மடிந்த நள்ளென் யாமத்துக்
கூற்றுறழ் வேழங் குணஞ்சிதைந் தழியச்
சீற்ற வெம்புகை செருக்க வூட்டிக்
கலக்கிய காலை விலக்குநர்க் காணாது
நாவாய் கவிழ்த்த நாய்கன் போல
ஓவா அவலமொடு காவலன் கலங்கிப்
பண்ணமை நல்லியாழ் இன்னிசைக் கோளீஇஅதன்
கண்ணயற் கடாத்துக் களிப்பியல் தெருட்டின்
ஆழித் தடக்கை அற்றம் இல்லென
வருமொழிக் கட்டுரை முகமன் கூறிநம்
பெருமகன் தன்னுழைப் பிரச்சோ தனனிம்
மன்னுயிர் உற்ற நடுக்க நீக்குதல்
இன்இயல் மான்தேர் ஏயற் கியல்பென
உதையண குமரனும் உள்ளம் பிறழ்ந்ததன்
சிதைவுகோள் சீலந் தெளிந்தனன் கேட்டு

வீணை எழீஇ வீதியின் நடப்ப
ஆணை ஆசாற் கடியுறை செய்யும்
மாணி போல மதக்களிறு படியத்
திருத்தகு மார்வன் எருத்தத் திவர
அண்ணன் மூதூர் ஆர்ப்பொடு கெழுமி
மன்னவன் வாழ்க வத்தவன் வாழ்க
ஒலிகெழு நகரத் துறுபிணி நீக்கிய
வலிகெழு தடக்கை வயவன் வாழ்கெனப்
பூத்தூய் வீதிதோ றேத்தினர் எதிர்கொள
அவந்தி அரசன் உவந்தனன் விரும்பிப்
பொலிவுடை உரிமையொடு பரிசனஞ் சூழப்
புலிமுக மாட மலிர ஏறி
மையல் வேழ மடக்கிய மன்னனை
ஆணை கூறு தருண்மொழி விரவாது
காண லுற்றனன் காதல் இதுவெனச்
சேனை வேந்தன் தானத்து விளிப்ப
அறியாப் பாழியும் அறியக் காட்டிக்
குறியாக் கூற்றத்தைக் கோள்விடுங் கோல்லென
சிறியோர் அஞ்சப் பெரியோர் புகல
ஆணை யேற்றம் அறியக் காட்டி
இருள்தெறு சுடரின் அன்ன இறைவன்முன்
வருட்டுபு நிறுத்த மன்னனை நோக்கித்
தெருட்டுதற் காயவித் தீக்குறி வேழம்
யாதிற் சிதைந்ததஃ தறிய உரைக்கென
ஏதில் வேந்தன் காதலின் வினவ
வேத முதல்வன் விளம்பிய நூல்வழி
மாதங்க மென்று மதித்தலிற் பெற்ற
பெயரது மற்றதன் இயல்பறிந் தோம்பி
வெருட்டலுந் தெருட்டலும் விடுத்தலும் விலக்கலும்
பணித்தலும் உயர்த்தலுந் தணித்தலுந் தாங்கலும்
தமர்பிறர் என்ப தறியுந் திறனும்
நீலம் உண்ட நூலிழை வண்ணம்
கோண்டது விடாமைக் குறிப்போடு கோளுத்தல்
பண்டியல் தோன்றாற் பாகியல் பாதலின்

முதற்கட் பிணித்தோர் சிதைப்பில் விடாது
கொண்டதை இதுவெனச் சண்ட வேந்தற்(கு)
எதிர்மொழி கொடீஇக் கதிர்முகம் எடுத்தோன்
தகைமலர்ப் படலைத் தந்தை தலைத்தாள்
முகைமலர்க் கோதை முறுவற் செவ்வாய்க்
கன்னி ஆயத்துப் பொன்னணி சுடர
வீசுவளிக் கொடியின் விளங்குபு நின்ற
வாசவ தத்தை மதிமுகத் தேற்றிச்
சிதரரி மழைக்கண் மதர்வை நோக்கம்
உள்ளகத் தீர அள்ளற் பட்ட
போதகம் போலப் போதல் ஆற்றாக்
காதற் குமரனைக் கருமக் காமத்துக்
கணிகை திறவயிற் பிணிபிறர்க் குணர்த்தி
இடீஇ ழ்வொடு பட்ட புகழ்காண் அவையத்து
மல்லன் மூதூர் மலிபுனல் விழவினுள்
சில்லரிக் கண்ணியொடு சிறுபிடி ஏற்றிச்
செயற்படு கருமத் தியற்கை இற்றென
இப்பால் இறைமகற் போத்தந் தப்பால்
நிகழ்ந்ததை அறிதந் தொளித்தனன் ஆகி
வேறல் செய்கை வேந்தற் குண்மை
தேறன் மாக்களைத் திறவிதிற் காட்டிப்
பழந்தீர் மரவயிற் பறவை போலச்
செழும்பல் யாணர்ச் சேனைபின் ஒழிய
நம்பதிப் புகுதரக் கங்குற் போத்தந்
தியான்பின் போந்தனன் இதுவென அவன்வயின்
ஓங்கிய பெரும்புகழ் யூகி மேனாள்
பட்ட எல்லாம் பெட்டாங் குரைப்பக்
கேட்ட காலை விட்டனர் என்னாது
நட்டோர் என்பது நாட்டினை நன்றென
உறுதுணைத் தோழன் மறுமொழி கொடுத்தபின்
தன்னுரை ஒழித்து நண்வினை அமைச்சனைப்
பெயர்ந்த காலைப் பெருமகற் கிப்பால்
உயர்ந்த கானத் துற்றதுண் டெனினதூஉஞ்
சின்மொழி மாதரைச் சேர்ந்ததற் கொண்டு

நிலையது நீர்மையுந் தலையது தன்மையும்
உள்விரித் துரையென ஊகி கேட்ப
அடலரும் பல்படை இடபகன் உரைக்கும்
அழகமை மடப்பிடி ஐந்நூ றேறி
அழனிலை அத்தத் தசைந்துயிர் வைப்பத்
தடம்பெருங் கண்ணியொடு நடந்தனர் போந்து
கடும்பகல் கழிதுணைக் காட்டகத் தொடுங்கி
வெங்கதிர் வீழ்ந்த தண்கதிர் மாலை
வயந்தகன் என்பால் வரீஇய போதரத்
தயங்குமலர்த் தாரோன் தனியன் ஆகி
மாலை யாமங் கழிந்த காலை
வெஞ்சொல் வேட்டத் தஞ்சுவரு சீற்றத்துச்
சலம்புரி நெஞ்சிற் சவரர் புளிஞர்
கலந்தனர் எழுந்து கானந் தெரிவோர்
ஊன்என மலர்ந்த வேனில் இலவத்துக்
கானத் தகவயிற் கரந்தனன் இருந்த
அரச குமரனை அகப்படுத் தார்ப்ப
வெருவுறு பிணையின் விம்முவனள் நடுங்கும்
அஞ்சில் ஓதியை அஞ்சல் ஓம்பென
நெஞ்சுவலிப் புறுத்து நீக்குவனன் நிறீஇ
இலக்கவண்ஜ கோளீஇ வில்லின் வாங்கி
ஓரோர் கணையின் உராஅய் வந்தவர்
ஏழேழ் மறவரை வீழ நூறலின்
ஆழ நெஞ்சமோ டச்சம் எய்திப்
பட்டவர் தந்தமர் பகையின் நெருங்கிக்
கட்டெரி கோளீஇக் கரந்தனர் எனவும்
ஒட்டிய தோழற் குற்றதை அறியான்
பகையடு தறுகண் இமையகன்று பிறழ
உரைபெயர்த்துக் கோடாஅன் யூகி மாழ்க
வரைபுரை மார்பனை வாங்குபு தழீஇக்
கதுமென உரைத்தது கவன்றனன் ஆகி
எதிர்மலர்க் குவளை இடுநீர் சோரிந்து
சீதச் சந்தனந் தாதோ டப்ப
ஏஎல் பெற்றெழுந் திருந்தனன் உரைக்கென

மாஅல் அன்ன மன்னுயிர் காவலன்
ஆட்டிடைப் பாயும் அரிமாப் போல
வேட்டிடைப் பாய்தலை வேரீஇ யோடாப்
பஞ்சி மெல்லடிப் பரல்வடுப் பொறிப்ப
வஞ்சி மருங்குல் வாடுபு நுடங்க
அஞ்சுபு நின்ற பைந்தொடி மாதரைச்
சிறுவரை நடாஅய்ச் செல்லல் நீங்கக்
கறவுகோ ளாளர் மறுவுவந் தோடி
உறவுகொள் உரோணியோ டுடனிலை புரிந்த
மறுவுடை மண்டிலக் கடவுளை வளைத்த
கரந்துறை ஊர்கோள் கடுப்பத் தோன்றி
நிரந்தவர் நின்ற பொழுதிற் பெயர்ந்து
குறிவயிற் குறித்தியாஞ் செல்லு மாத்திரை
அறிவின் நாடி அரும்பொருள் உண்டென
விரைமுதல் கட்டிய விரும்பின் இமிழ்ப்பின்
உரைமுதல் காட்டி உளமை கூறி
நின்ற பொழுதிற் சென்றியாந் தலைப்பெய
எந்திறம் அறியா ஏதிலன் போல
வெந்திறல் வேந்தனும் அவரொடு விராஅய்
ஓடல் ஆற்றான் ஆகி ஒருசிறை
ஆடமைத் தோளியோ டகன்றனன் நிற்ப
வேட்டுவர் அகலக் கூட்டம் எய்திக்
கரும நுனித்த கடுங்கண் ஆண்மை
உருமண் ணுவாவின் ஊரகம் புகீஇப்
போகப் பெருநுகம் பூட்டிய காலை
மாக விசும்பின் மதியமு ஞாயிறும்
எழுதலும் படுதலும் அறியா இன்பமொ(டு)
ஒழுகுபுனல் அகழினை உடையெனக் கிடந்த
முழுமதில் நெடுங்கடை முதற்பெரு நகரம்
தாரணி யானை பரப்பித் தலைநின்(று)
ஆருணி அரசன் ஆள்வதும் அறியான்
தன்னுயிர் அன்ன தம்பியர் நினையான்
இன்னுயிர் இடுக்கண் இன்னதென் றறியான்
அவையுங் கரணமும் அவைவகுத் திருவான்

அந்தி மந்திரத் தருநெறி ஒரீஇத்
தந்தையொ டொறுக்கப் படாஅன் சிந்தை
அகனுணர் வில்லா மகனே போலத்
தன்மனம் பிறந்த ஒழுக்கின னாகிப்
பொன்னகர் தழீஇய புதுக்கோப் போலச்
செவ்வியுங் கோடாஅன் இவ்வியல் புரிந்தனன்
அண்ணல் ஆதலின் அசைவிலன் என்னத்
தன்னமர் தோழன் பன்னினன் உரைப்ப
வேகந் தணியா வெஞ்சின நெடுவேல்
யூகந் தராயணன் ஒழிவிலன் கேட்டு
முறுவல் கொண்ட முகத்தினன் ஆகிப்
பெறுக போகம் பெருமகன் இனிதென
அறுவகைச் சமயத் துறுபொருள் ஒழியாது
பன்னுபு தெரிந்த பழியறு வாய்மொழித்
தொன்மு தாட்டியைத் துன்னத் தரீஇத்
தருமத் தியற்கையுங் கருமக் கிடக்கையும்
தலைமையது தன்மையு நிலைமையது நீர்மையும்
வேறுவே றாகக் கூறுகூ றுணர்த்தி
இதுவென் வலிப்பென அதுஅவட் குணரக்
கூறுதல் புரிந்த குறிப்பினன் ஆகி
அகலா தோரையும் அகல்கென நீக்கி
உம்மைப் பிறப்பிற் கொண்டுஞ் செம்மற்குத்
தாயோ ரன்ன தகையினிர் ஆதலின்
மேயோர்க் கல்லது மெய்ப்பொருள் உணர்த்தல்
எதில் பெரும்பொருள் நீதியுள் இன்மையின்
தெரியக் கேட்கென விரியக் காட்டி
அற்றங் காத்தலின் ஆண்மை போலவும்
குற்றங் காத்தலிற் குரவர் போலவும்
ஒன்றி ஒழுகலின் உயிரே போலவும்
நன்றி யன்றிக் கன்றியது கடிதற்குத்
தகவில செய்தலிற் பகைவர் போலவும்
இனையன பிறவும் இனியோர்க் கியன்ற
படுகடன் ஆதியிற் பட்டது நினையான்
தொடுகழற் குருசில் வடுவுரை நிற்ப

இன்ப அளற்றுள் இறங்கினன் ஆதலின்
துன்பந் துடைத்த தொழிலே போல
அவலம் ஒழிப்பி அவன்வயிற் றிசையா
இகலடு பேரரண் இலாவா ணத்தவன்
உகந்துண் டாடி மகிழ்ந்தபின் ஒருநாள்
வாலிழை மாதரை மன்னவன் அகல்விடைக்
கோலக் கோயில் கூரேரிக் கொளீஇப்
பொய்ந் நிலமருங்கிற் போத்தந் தென்வயின்
கண்ணெனத் தருதல் கடனெனக் கூறி
இன்பந் துடைத்தவற் கிறைக்கடம் பூட்டுதல்
நிங்கடன் ஆமென நினைந்துநெறி திரியா(து)
உருப்ப நீளதர்க் கமைத்துமுன் வைத்த
தருப்பணஞ் செருமித் தன்னுயிர் வைத்தனன்
யூகி என்ப துணரக் கூறி
நிலங்குறை பட்ட மன்னனை நிறுவுதல்
புலந்துறை போகிய பொய்யில் வாய்மொழி
நம்மின் ஆதல் எம்மிற் சூழ்ந்த(து)
அறியக் கூறினேன் யானென அவளொடும்
செறியச் செய்த தெளிவினன் ஆகி
உருமண் ணுவாவொடு வயந்தக குமரனைக்
கருமக் கிடக்கை காண்வரக் காட்டி
இன்னுழி வருகென அன்னவை பிறவும்
ஒருபொருள் ஒழியா தவளொடுஞ் சூழ்ந்து
மறைப்பிடன் அமைத்துப் புறத்தோர் முன்னர்
ஆத்திரைத் தருப்பண மாத்திரை கூட்டி
உண்புழி விக்கிக் கண்புகச் செருமி
உயிர்ப்பு நீங்கிய உடம்பினன் ஆகிச்
செயற்கைச் சாக்காடு தெளியக் காட்டத்
தோழனுந் தமருஞ் சூழ்வனர் குழீஇ
வாழலம் இனியென வஞ்ச இரக்கம்
பல்லோர் முன்னர்க் கொள்ளக் காட்டிச்
சுடுதற் கொவ்வாச் சூழ்ச்சி அண்ணலைக்
கடுவினை கழூஉங் கங்கா தீரத்(து)
இடுதும் உய்த்தென இசைத்தனர் மறைத்துத்

தவமுது மகளைத் தலைமகற் குறுகி
முகனமர்ந் துரைத்து முன்னையிர் ஆமினென்(று)
அகனமர் காதலோ டாற்றுளி விடுப்பக்
காட்டகங் கடந்து காவலன் இருந்த
நாட்டக நணுகி நகரம் புக்கனள்
தேரிமதி அமைச்சனொடு திறவதிற் சூழ்ந்த
அருமதித் திண்கோள் அறம்புரி மகளென்.

---

## ௪௰ யூகி சாக்காடு

அஃதாவது - யூகி புட்பக நகரம் எய்தியபின்னர், உதயணன் கழி பெருங் காமமுடையனாய்த் தனக்குரிய கடமையிற் கருத்தின்றி யிருத்தலைக் கேள்வியுற்று, அவனைத் திருத்துதற் பொருட்டுத் தான் இறந்து விட்டதாக உலகினர் உணரும்படி செய்து மறைந்திருத்தலைக் கூறும் பகுதி என்றவாறு.

### உரை

[யூகி புட்பக நகருக்குச் செல்லும் வழியின் மாண்பு ]

௧ - ௧௫ : புறநகர்..........................வழிவயின்.

(பொ - ரை.) இவ்வாறு யூகி உச்சயினி நகர்ப்புறத்தைக் கடந்தபின்னர்ப் படப்பையையுடைய அகன்ற நிலத்தைத் தழுவிப் பொய்கைகளும், பூந்துறைகளும், மிக்கு வானத்தை ஒத்த அழகுடைத்தாக விண்மீன்களை ஒத்த வெள்ளிய மணல் பரந்த யாறும், கானமும், கூடி மிகுந்த அரும்புகளானே அழகு செய்யப்பட்ட புன்னை செருந்தி இகணை கமுகு தெங்கு முதலிய மரங்களையுடைய மருதநிலத்தின் பக்கத்தே மறவர்களானே திண்ணிதாக அமைக்கப்பட்ட வளைவில்லாத நாட்டு வழியின்மேல் என்க.

(வி - ம்.) ௧. செறுநீர் - சிறைசெய்து தேக்கப்பட்ட நீர். செறுதல் - அடக்குதல். ௨. அள்ளல்-சேறு. படப்பை-தோட்டம். அள்ளலையும் படப்பையையுமுடைய நிலமென்க. தழீஇ - சார்ந்த.

௩. புள்ளொலியையுடைய பொய்கை என்க. புள் - பறவை. மருதநிலமாகலின் புள்ளொலி கூறினர்.

"பழனத் தாமரைப் பைம்பூங் கானத்துக்
கம்புட் கோழியும் கனைகுரல் நாரையும்
செங்கால் அன்னமும் பைங்காற் கொக்கும்
கானக் கோழியும் நீர்நிறக் காக்கையும்

உள்ளும் ஊரலும் புள்ளும் புதாவும்
வெல்போர் வேந்தர் முனையிடம் போல''
(சிலப்: க0 - ககரு - கஅ)

என்றார் இளங்கோவடிகளாரும்.

பொய்கை - இயற்கை நீர்நிலை. பூந்துறை - பூக்கள் மலிந்த நீராடு துறை. மல்கி - மிக்கு.

ச. பரப்புடைமையானும் நிறத்தானும் நீர்நிலைக்கு வானம் உவமையாயிற்று.

ரு. மீன் - விண்மீன். இஃது ஆற்றுமணல்கட்கு உவமை; ஆற்றின்கண் மணல் மின்னுதலைக் கண்டுணர்க. வனப்பு - அழகு.

சு. கான் - முல்லைநிலம். தலைமணந்து - கூடி. கழி அரும்பு-மிக்க அரும்பு. கழி என்னும் உரிச்சொல்லீற்றுக் குறில் நெடிலாகி அளபெடுத்து நின்றது.

எ. அரும்பால் அழகுசெய்யப்பட்ட புன்னை என்க. சுரும்பு - வண்டு. இமிர் - முரலாநின்ற. செருந்தி - ஒருவகை மரம்.

அ. இலைகளாலே அணியப்பட்ட இகணை என்க. இகணை - ஒரு மரம். இன்னவை - இவை போல்வன. கூ. கமுகு - பாக்குமரம். கோள்தெங்கு - குலைகளையுடைய தென்னை.

க0. பழனம்-மருதநிலம். கழனி-வயல். கைப்புடை-பக்கத்தே.

கக - கஉ. போரின்கண் பகைவரைக் கொன்ற மறவர் தம் தேரினை ஒன்றனை ஒன்று மாறும்படி ஓட்டிப் பார்த்துத் திண்ணிதாக அமைத்த வழி, கோட்டம் இல்லா வழி, நாட்டிற் செல்லும் வழி, எனத் தனித் தனிக் கூட்டுக. கங. கோட்டம் - வளைவு. வழிவயின்-வழியின்மேல்.

மன்னர் அரண் பெரும்பாலும் மருதநிலத்தின் கண்ணதாகலான் மறவர் அமைத்த வழி என்றார். என்னை?

"பிணங்கு கதிர்க் கழனி நாப்பண் ஏமுற்று
உணங்கு கலனாழியில் தோன்றும் ஓரெயில் மன்னன்''

எனப் பிறசான்றோரும் கூறுதல் உணர்க. (புறநா. ருஅ)

[யூகி இடபகனிருந்த புட்பக நகரத்தை அடைதல்.]

கச - உச: ஆனி..........................நிமீஇ.

(பொ - ரை.) அப் பொறித்தேர் புறத்தார்க்குப் புலனாகாமைப் பொருட்டு இருளிலே மறையும்படி இரவிலேயே அதன் பொறியினது விசையைக் கொளுவித் தான் கருதிய எல்லையளவும் நடத்திப் பின்னர்ப் பகற்பொழுதிலே ஒடுங்கியிருத்தற்குரிய இடங்களும், ஒளிதற்கேற்றதும் ஆள்வழக்கற்றதுமாகிய காடும், அரிய பாலையின்கண் உள்ள கவர் வழிகளும், கொள்ளையிடுதல் தவிர்ந்து ஒடுங்கிய எயினர் ஊர்களும், மறவர்நாடும், கயவரு

டைய காடும், குறும்புகளும், குன்றங்களும் ஆகிய இவற்றின் இயல்பெலாம் உணர்ந்து, அறிவு கலங்காமல் பகலும் இரவுமாகிய இருபொழுதினும் இவை பின்னிடக்கடந்து உஞ்சையினின்றும் நானூற்று நாற்பது காவதத்திலே அமைந்த அதன் எல்லையிலே வந்து அத்தேரினை அவ்வெல்லைப்புறத்தே நிறுத்தி என்க.

(வி - ம்.) கச. ஆணி - விசையாணி. வையம் - தேர். ஆர் இருள் - நிறைந்த இருள்; செல்லற்கரிய இருளுமாம். இருளிலே தேர்மறையும் பொருட்டு இரவிலே ஓட்டி என்க.

கரு. பொறிவிசை - பொறியினது விசை. பொறியாகிய விசை எனினுமாம். கொளீஇ - கொளுவி; பூட்டி என்றவாறு.

கசு. உள்ளிய-தான் கருதிய. பகைவர் வஞ்சகத்தோடே பதுங்கியிருக்கும் இடம் என்க. தானம் - இடம். கடும்பகல் - நண்பகல். நண்பகற்பொழுதிலே-அவ்விரவு புலர்ந்த பகற்பொழுதில் என்றவாறு.

கஎ. கரத்தற்கேற்ற ஆளவிந்த காடு என்க; அடர்ந்த பெருங்காடென்றவாறு. ஆளவிகாடு - மனிதர் வழங்குதலில்லாத காடு. அருஞ்சுரக் கவலை - பாலைநிலத்தின்கட் கவர்த்த வழி. கோள் - கொள்ளைத்தொழில். எனவே ஆறலைகள்வர் அத்தொழிலை விடுத்து அறக்குடி போல ஒடுங்கிவாழ்கின்ற ஊர்கள் என்றுராயிற்று.

> "கல்லென் பேரூர் கணநிரை சிறந்தன
> வல்வி லெயினர் மன்றுபாழ் பட்டன
> மறக்குடித் தாயத்து வழிவளஞ் சுரவா
> தறக்குடி போலவிங் தடங்கினர் எயினரும்"
>
> (சிலப் : கஉ : கஉ - கரு)

என்றார் இளங்கோவடிகளாரும்.

உ0. வயவர் - மறவர். கயவர் - கயமாக்கள்.

உக. குறும்பு - சிற்றரண். குன்றம் - மலை. இவற்றின் இயல்பெல்லாம் அறிந்து என்க. மதி - அறிவு.

உங. நானூற்று நாற்பது காவதத்தில் உள்ள அவ்வவந்தி நாட்டெல்லை என்க.

உச. உணர்தற்கரிய நூல்களை ஓதியுணர்ந்த அமைச்சனாகிய அந்த யூகி என்க. எல்லையின் அயற்புறம் என்க. நிறீஇ - தேரை நிறுத்தி.

## உரு - ருரு: புறத்தோர்......................இருந்து.

(பொ - ரை.) தன் நண்பனாகிய இடபகன் என்பான் இருந்த புட்பகமென்னும் நகரத்தின்கண் ஞாயிறு மறையச் சென்று, பிறர் அறியமாட்டாத மறைவிடத்தின்கண் அப்பொறித் தேரினைப் பொறி கலக்கி மறைத்துவைத்து அவ்விடபகனை மகிழ்ந்து கண்டு, உதயணனுடைய தோள் நலத்தை உசாவியறிந்து, வழிவந்த இளைப்பெல்லாம் அவ்விரவிலே தீர

இளைப்பாறி இருந்து மேல் ஆற்றவேண்டிய செயல்களை நினைத்து அவற்றைத் தானும் அத்தோழனுமாக ஆராய்தலைக் கருதி வருவோரைத் தடுக்கும் திறலுடைய மிலேச்சரானே பாதுகாக்கப்படும் சூழ்ச்சி மன்றத்திலே மறைந்திருந்து என்க.

(வி - ம்.) உ௫. தோழன் - இடபகன். உ௬. புட்பகம் - ஒரு நகரம்; இஃது உதயணனுடைய சிறந்த நகரங்களுள் ஒன்று: இதனை அவன் இடபகனுக்கு முற்றூட்டாக வழங்கினன். ஆதலின் அதன்கண் அவன் நன்கு அமைந்து வாழ்ந்திருந்தான்.

பொழுது - ஞாயிறு. பொழுதுமறை - மாலைப்பொழுது

உஎ. அயலார் அறிந்துகொள்ள மாட்டாததொரு மாயமுடைய மறைப்பிடத்திலே என்க.

உஅ. கலக்கி - பிரித்து. உ௯. மாண - மாட்சிமைப்பட; கெடாதபடி என்பது கருத்து. மகிழ்ந்தனன்: முற்றெச்சம். அத்தோழனைக் கூடி என்க.

௩0. மன்னன் - உதயணன். அரசரை நலமுசாவும் பொழுது தோள் நலம் உசாவுதல் மரபு. இதனை, "வேந்தர் வேந்தன்றன் வரைத் தடந்தோளினை வலியவோ என்றான்" எனவரும் கம்பராமாயணத்தானும் (சடாயுகா-கஅ) உணர்க. தோளாகியமுதலை என்க. ௩க. சிரமம்-வருத்தம். ௩உ. வலித்து - நினைத்து. ௩௩. துணியா - துணிந்து. ௩௪- வெவ்விய ஆற்றலுடைய மிலேச்சர் என்க. மிலேச்சர்-சோனகர். விலக்குவனர்: முற்றெச்சம்.

௩௫. மந்திரமாடம்-ஆராய்ச்சி மன்றம். மறைந்தனன்-மறைந்து: முற்றெச்சம்.

[மேலே யூகி இடபகனுக்குமுன் நிகழ்ந்தவற்றைக் கூறுகின்றான்.]

௩௬ - ௪௫ : தன்றொழில்...............கலக்கிய காலை.

(பொ - ரை.) தனக்குரிய தொழிலை இயற்றாமல் தனதிடத்தினின்றும் வழுவி யானைவேட்ட மாடியதனாலே சிறைப்பட்ட நம் வேந்தனைச் சிறைவீடு செய்தலை விரும்பிப் பொய்யான சாச்செய்தியைப் பிறர் நெஞ்சங்கொள்ளும்படி தெளியச்செய்து, உச்சயினி நகரத்தின்கண் மறைவிடத்திலே புகுந்திருந்து பேய் வடிவங்கொண்டு நள்ளிரவிலே நளகிரி என்னும் களிற்றியானை குணங்கெட்டழியும்படி சினமுண்டாக்கும் வெவ்வியதொரு மருந்துப்புகையை அது மயங்கும்படி ஊட்டி யான் அதனைக் கலக்கியபொழுது என்க.

(வி - ம்.) ௩௬. தன்தொழில்-வேந்தனுகிய தனக்குரிய காவற்றொழில். தானம் - தனக்குரிய பதவி. வழீஇ - வழுவி ; தவறி.

௩எ. குஞ்சரம் - யானை. வேட்டத்து - வேட்டமாடுதலின்கண். கோள் - தன்கொள்கை; சிறைகொள்ளப் படுதலாகிய இழுக்கினை உற்ற எனினுமாம். இழுக்குற்ற - பிழைத்துச் சிறைப்பட்ட.

௩அ. வேந்தன்-உதயணகுமரன். விடுத்தல்-சிறைவீடு செய்தல்.

௩௯. வஞ்ச இறுதி - பொய்ச்சாக்காடு. நெஞ்சுண - நெஞ்சங் கொள்ளும்படி.

௪0. ஒளிக்களம்-மறைவிடம்; என்றது, உச்சயினியின் புறத்தே ஓர் ஊரின்கண் தான் மறைந்து வதிந்த பாழ்வீட்டினை.

௪க. மெய்ப்பேயின் வடிவம்போலத் தோன்றுவதாகிய பொய்ப் பேய்வடிவம் கொண்டென்க. ௪௨. மடிந்த - உறங்கிய. நள்ளென் யாமம் - நள்ளிரவு; இடையாமம். நள்ளென் : ஒலிக்குறிப்பு.

௪௩. கூற்றுறழ்வேழம் - மறலியை ஒத்த யானை. அஃதாவது, நளகிரி என்னும் களிறு. குணம் - நற்பண்பு. ௪௪. சீற்றத்தை உண்டாக்கும் வெவ்விய மருத்துப்புகை என்க. செருக்க - மயங்க.

௪௫ - ௫௪ : விலக்குநர்....................இயல்பென.

(பொ - ரை.) அந்நகரத்துக் காவலனாகிய பிரச்சோதனன் அவ்வியானையைத் தடுத்துத் தம்மை உய்யக் கொள்ளுவாரைக் காணப் பெறாமையாலே தன் மரக்கலத்தைக் கடலிலே கவிழ்த்துவிட்ட நாய்கன்போலப் பெரிதும் கலங்கி ஆழிப்படையுடைய உதயணன் யாழிசையை எழுப்பி அக்களிற்றின் மதமயக்கத்தைத் தெளிவிப்பின் ஏதமில்லை என்று கருதி நம் வேந்தனாகிய உதயணனுக்கு அம் மன்னவன் அரிய மொழியாலான இனிய பொருள் பொதிந்த முகமனுரையோடு இந்நகர மாந்தர் எய்திய நடுக்கத்தைப் போக்குதல் ஏயர் மகனுக்கே கடமையாகும் என்றும் கூறிவிடுப்ப என்க.

(வி - ம்.) ௪௫. விலக்குநர் - அதனைத் தடுப்போர். ௪௬. நாவாய் - மரக்கலம். கலங்கவிழப்பெற்ற நாய்கன் கலங்குமாறு பெரிதும் கலங்க என்க. ௪எ. ஓவாஅவலம் - ஒழியாத துன்பம். காவலன் - பிரச்சோதனன்.

௪அ - ௫0. ஆழித்தடக்கை தெருட்டின் அற்றம் இல்லெனக் கருதி என்க.

௪அ. பண்ணமைந்த நல்ல யாழிடத்தே இனிய இசையை எழுப்பி என்க.

௪௯. கன்அயல் கடாத்துக் களிப்பு - கபோல மதத்தால் உண்டான வெறி என்க. கன்அயல்-கபோலம் (கன்னம்). கடாஅம்-மதம். தெருட்டின் - தெளியச்செய்தால்.

௫0. அற்றம் - சோர்வு.

௫க. அருமொழிக் கட்டுரை-அரிய சொற்றொடரராலாய பொருள் பொதிந்த முகமன் மொழியோடு என்க.

௫௨. நம் பெருமகன் என்றது, உதயணகுமரனை.

௫௩. நடுக்கம் - ஈண்டுத் துன்பம்.

௫௪. ஏயற்கு - ஏயர்குலத் தோன்றலாகிய நினக்கு.

௫௫ - ௬௦ : உதையணகுமரனும்.......................இவர.

(பொ - ரை.) தூதர் வாயிலாய் அம்மொழி கேட்ட உத யணகுமரனும் நெஞ்சம் வேறுபட்டு அக்களிற்றினது சிதைந்த செயலை நன்கு கேட்டுத் தெளிந்து, வீணையின்கண் இசை எழுப் பிக்கொண்டு அவ்வியானை வந்த தெருவின்மீது அதனெதிர் செல்லாநிற்ப அவ்விசையினைக்கேட்டமாத்திரையில் அக்களிறு நல்லாசிரியனுக்கு மெய்யடிமைத் தொழில் செய்யும் நன்மாணாக் கனைப் போன்று அவன் அடியின்கண் வணங்காநிற்ப அத்திரு மகள் தக்கிருக்கின்ற மார்பையுடைய உதயணகுமரனும் அதன் எருத்தத்திலே ஏறியிருந்து இனிது ஊராநிற்ப என்க.

(வி - ம்.) ௫௫. உள்ளம் பிறழ்ந்து - நெஞ்சம் வேறுபட்டு. என் றது பகைமை நீங்கிக் கேண்மை கொண்டு என்றவாறு.

௫௬. சீலம் - ஒழுக்கம். தெளிந்தனன்: முற்றெச்சம். கேட்டுத் தெளிந்தென்க.

௫௭. எழீஇ - இசை எழுப்பி. ௫௮. ஆணைஆசான் - கட்டளை யிடுதற்குரிய ஆசிரியன். அடியுறை - அடிமைத்தொழில்.

௫௮. மாணி - மாணாக்கன்.

௬௦. மார்வன் - உதயணன். இவர - ஊர்ந்துவர.

௬௧ - ௭௨ : அண்ணல்.......................விளிப்ப

(பொ - ரை.) தலைநகரமாகிய அவ்வுச்சயினி மாந்தர் ஆரவாரத்தோடு கூடி மன்னவன் வாழ்க ! வத்தவன் வாழ்க ! ஆரவாரமுடைய இந்நகரத்துள்ளோருடைய பெருந்துன்பத் தைப் போக்கிய வீரன் வாழ்க ! என்று பாராட்டி வீதிதோறும் அவன்மீது மலர்மாரி பொழிந்து எதிர்கொள்ளாநிற்பப் பிரச் சோதனனும் பெரிதும் உதயணகுமரனை விரும்பித் தன் உரிமை மகளிரும் பரிசனங்களும் தன்னைச் சூழாநிற்பப் புலிமுக மாடம் நிரம்பும்படி ஏறி நின்று, கட்டளையிடாமலும், அருண்மொழி கூறாமலும் யான் நின்னைக் காணவந்தேன் என் காதல் அத் தகையது ! என்று கூறித் தனதிடத்தே வரும்படியாக அழையாநிற்ப என்க.

(வி - ம்.) ௬௬. அவந்திநாட்டு அரசனாகிய அப் பிரச்சோதனன் என்க. ௬௭. உவந்தனன்: முற்றெச்சம் ; உவந்து.

௬௮. உரிமை - தேவியர். பரிசனம்-ஐம்பெருங்குழுவினர் முதலி யோர். புலிமுகமாடம் - புலியுருவமமைத்த வாயின் மாடம். ௬௯. மையல் - மயக்கம். மன்னனை - உதயணனை. ௭௦ - ௧. அரசர் ஒரு வனைக் காண விரும்பினால், கட்டளையிட்டழைதத்ல் மரபாகலின் அம் மரபுமின்றி, ஒரு நன்றி செய்தார்க்கு அருள்மொழி கூறி நன்றி செலுத்

துதல் மரபு; அதுவுமின்றி இங்ஙனம் நின்னைக் காணவந்தேன் அங்ஙனம் வருதற்குக் காரணம் என் காதன் மிகுதியே என்பது கருத்து.

எஉ. சேனை வேந்தன் - படையையுடைய பிரச்சோதனன். தன் தானத்திற்குத் தானே அமையா நிற்ப என்க. தானம் - இடம்.

எங - எஅ : அறியா..................நோக்கி.

(பொ - ரை.) எங-எஅ : அதுகண்ட சிற்றின மாந்தர் நம் வேந்தன் பிறர் அறியவொண்ணாத இடத்தையும் உதயணன் அறிந்துகொள்ளும்படிக் காட்டிக் கூற்றுவனை ஒத்த அவ் உதயணனை இங்ஙனம் சிறைவீடு செய்தலுந் தகுமோ! என்று அஞ்சா நிற்பவும், சான்றோர் மன்னன் தக்கதே செய்தான் எனக் கருதி அவனை விரும்பாநிற்பவும் ஞாயிற்றை ஒத்த அப் பிரச்சோதன மன்னனுக்குத் தான் நளகிரியை அடக்கி அதன் மேல் ஏறியதனைக் கண்கூடாகக்காட்டி அவனைத் தன்வயமாக்கி அவன் கண்முன்னே அக்களிற்றை நிறுத்திய உதயணகுமரனை அப் பிரச்சோதனன் நோக்கி என்க.

(வி - ம்.) எங. அறியாப்பாழி - பிறர் அறியக்கூடாத உரிமை மகளிர் இருக்கை முதலியன. எச. "குறியாக் கூற்றம் - தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வர் ஈற்றிளம் பெண்டிர் ஆற்றுப்பாலகர் முதியோர்" என்று குறியாமல் கொல்லும் கூற்றுவன். கூற்றுவன் : உதயணனுக்கு உவமை என்க.

எஎ. இருள் தெறுசுடர் - ஞாயிறு ; இது பிரச்சோதனனுக்கு உவமை. பிரச்சோதனனுடைய செயல் நன்றியறிதலாலே நிகழ்த லான் அச்செயல்கண்டு சான்றோர் விரும்பினர் என்றவாறு. புகல - விரும்பா நிற்ப. எஅ. வருட்டுபு-வயமாக்கி. மன்னனை-உதயணனை.

எகூ - கூங : தெருட்டுதற்கு..................எடுத்தோன்.

(பொ - ரை.) எகூ. இங்ஙனம் நின்றாலே தெளிவித்தற்கு ஆன இவ்வியானை எதனால் இவ்வாறு சிதைந்தது? அதனை யான் அறியும்படி விளக்கிக் கூறுக என்று முன்னர் ஏதிலனாயிருந்த அம்மன்னவன் காதலோடே வினவாநிற்ப, உதயணகுமரன் அம்மன்னனை நோக்கி "வேந்தே! யானைப் பிறப்பினை வேதமுதல்வன் ஓதிய நூலினை ஆராய்ந்து சான்றோர் அதனை உயர்ந்த பிறப்பினையுடையதென்று மதித்தலாலே அது மாதங்கம் என்பதோர் உயரிய பெயரை உடைத்தாயிற்று. அத் தகைய யானையை அதன் இயல்பறிந்து பாதுகாத்து வெருட்டல் முதலியவற்றின் இயல்புகளை அவ்வியானை நிலநிறங்கொண்ட நூலிழைபோலக் கொண்டது விடாதபடி அவற்றின் குறிப்பு மொழிகளோடே அறிவித்தல் யானைநூல் உணர்ந்த பாகர் இயல்பாகும். இந்நளகிரியை முதன் முதலாகக் கட்டிப் பழக்கிய

பாகர் அதனைச் சிதையச்செய்து பிணித்த காரணத்தானே அச்சிதைவினை அது விடாது மேற்கொண்டது,'' என்று அப் பிரச்சோதனனுக்கு விடையிறுத்துத் தன் தலையை உயர்த்து நோக்கிய உதயணகுமரன் என்க.

(வி - ம்.) அஉ. வேதமுதல்வன் - அருகக் கடவுள். ஆகம மூன்றிற்கும் முதலாயுள்ளவன் என்றவாறு. ஆகமம் மூன்றுவன: அங்காகமம்; பூர்வாகமம்; பகூசுருதி யாகமம் என்பன.

> "விண்ணவன் வேதமுதல்வன் விளங்கொளி
> ஓதிய வேதத் தொளி '' (சிலப். க0. கஅகூ - கூ0)

என்றார் இளங்கோவடிகளாரும்.

வேதமுதல்வன் ஓதிய நூலினை ஆராய்ந்து அதனை மதித்தலில் மாதங்கம் என்று பெற்ற பெயரது என்க. மதித்தலாவது - விலங்குப் பிறப்பேயாயினும் மக்கள் போன்று ஆறறிவுடையது என மதித்தல் என்க.

> "மக்கள் தாமே ஆறறிவுயிரே
> பிறவுமுளவே அக்கிளைப் பிறப்பே'' (தொல். மரபு. கூகூ)

என்புழிப் பிறவும் என்றது, குரங்கு யானை முதலியன ஆதலின் யானைப் பிறப்பு மக்கட்பிறப்போடொத்த தென்க.

அரு. வெருட்டல் - அச்சுறுத்தல். தெருட்டல் - உணர்த்தல்; விடுத்தல்; செலுத்தல். விலக்கல் - தடுத்தல்.

அகூ. பணித்தல் - பணிவித்தல்: ஏவுதலுமாம். தாங்கல் - சுமத்தல்.

அஅ - கூ0. நீல நிறமேற்ற நூலிழை பிறநிறமேலாது அந்நிறத்தை விடாதிருத்தல்போல் மேற்கூறிய செயல்களை அவற்றிற்குரிய குறிப்பு மொழியைக் கூறுமிடத்துப் பிறசெயலைச் 'செய்யாமல் அவ்வச் செயலையே செய்யும்படிப் பழக்குதல், யானைப்பாகு நூல் உணர்ந்தோர் தன்மை என்க. பாகு - பாகர்.

கூக. முதன்முதற் பிணித்துப் பழக்கியவர் சிதைத்தலானே அக் குணத்தைவிடாது இது சிதைகின்றது என்பது கருத்து.

கூஉ. கொண்டதை - கொண்டது. இது - இந்நளகிரி.

கூரு. கொடீஇ-கொடுத்து.

கூஉ - க0உ: தகைமலர்........... ........குமரனை.

(பொ - ரை.) ஆயமகளிராகிய கன்னியரோடு தன் தந்தையின் முன்னர்க் கோதையையும் முறுவலையும் செவ் வாயையும் உடையளாய்ப் பொன்னாலியன்ற அணிகலன்கள் ஒளிவீசக் காற்றால் அலைப்புண்ட பூங்கொடிபோல ஒல்கி விளங்கி நின்ற வாசவதத்தையின் திங்கள் போன்ற முகத்தின் கண்ணே தன் நோக்கத்தை ஏற்றி அவள் வரிபரந்த குளிர்ந்த மதர்ப்

புடைய பார்வை தனது நெஞ்சத்தை ஈர்த்தலானே சேற்றிலழுந்திய யானைபோன்று அவ்விடத்தினின்றும் நீங்கவியலாத காதலையுடையவனாகிய அவ்வுதயணகுமரன் என்க.

(வி - ம்.) ௬௪. தகை - அழகு. தகைமலர் : வினைத்தொகையுமாம். படலை - தளிர்விரவித் தொடுத்த மாலை. தந்தை - பிரச்சோதனன். தலைத்தாள் - (தாள்தலை) முன்னர் என்றவாறு.

௬௫. முகை - அரும்பு. செவ்வாய் - சிவந்த வாய்.

௬௬. கன்னிஆயம் - கன்னியராகிய தோழியர் கூட்டம்.

௬௭. வளிவீசு கொடி என்க. இஃது உதயணனைக் கண்டு நாணி அசைந்து நிற்கும் வாசவதத்தைக்கு உவமை. விளங்குபு - விளங்கி.

௬௮. மதிமுகம் : உவமத்தொகை. தன் பார்வையைச் செலுத்தி என்க. ௬௯. சிதர்அரி - படர்ந்த வரிகள். மழைக்கண் - குளிர்ந்த கண். மதர்வை - மதர்ப்பு ; களிப்பு.

௧௦௦. ஈர - அறுக்க. அள்ளல் - சேறு.

௧௦௧. போதகம்-யானை. ௧௦௨. காதலையுடையனை அக்குமரனை என்க.

௧௦௨ - ௧௦௬: கரும............................ஒளித்தனனாகி.

(பொ - ரை.) அக்காமத்தால் உற்ற பிணியை ஒரு கணிகையின்பாற் கொண்ட காமத்தால் உற்றதெனப் பிறர் கருதும்படி செய்து இவ்விகழ்ச்சியோடே விரவிய புகழை ஆராயும் அவையினையுடைய உச்சயினி நகரத்தில் நிகழ்ந்த நீர் விழவின்கண் அவனை வாசவதத்தையோடே பிடியானையிலேறச் செய்து இங்ஙனம் நிகழும் செயலின் உட்கிடை இஃதென அவ்வுதயணனுக்குக் கூறி அந்நகரினின்றும் போகவிடுத்துப் பின்னர் அந்நகரத்தே நிகழ்ந்தவற்றையும் அறிந்துகொண்டு மறைவாக இருந்து என்க.

(வி - ம்) ௧௦௨. கருமக்காமம் - பொய்க்காமம்.

௧௦௩. கணிகைதிறவயின் - கணிகைதிறத்தில் அக்காமத்தால் உண்டாய பிணி கணிகை கருமக் காமத்துத் திறத்தில் உண்டாயதாகப் பிறர் உணரும்படி செய்தென்க. ௧௦௪. இந்த இகழ்ச்சியோடே உதயணனது புகழை ஆராய்ந்து காண்கின்ற அவையினையுடைய மூதூர் என்க.

௧௦௫. மல்லல் - வளம். மூதூர் - பழையதாகிய உச்சயினி. புனல் விழவு - நீராட்டுவிழா.

௧௦௬. சிலவாகிய வரிபரந்த கண்ணையுடைய வாசவதத்தையோடு என்க. ௧௦௭. செயலுக்கு வந்துள்ள கருமத் தன்மையை அவ்வுதயணன் அறியச் செய்தென்க.

கoஅ. இறைமகன் - உதயணன். கoகூ. அறிதந்து - அறிந்து கொண்டு. ஒளித்தனன் - ஒளித்தேன் : தன்மை ஒருமை.

ககo - ககஎ : வேறல்..................................உரைப்ப.

(பொ - ரை.) இன்னும் வெற்றி செய்தற் றொழில் உதயண குமரனுக்கு இருத்தலை நமர்களுக்கு உணர்த்தி அவர்களைப் பழந்தீர்ந்துபோன மரத்தினின்றும் தஞ்சேக்கைக்குப் போகும் வௌவால்களைப் போல இரவின்கண் நம்மூர்க்குப் போக்கி அவர் சென்ற பின்னர் யானும் வந்தேன் என்று முன்னுளில் நிகழ்ந்தவற்றை எல்லாம் யூகி இடபகனுக்கு விரும்பிக் கூற என்க.

(வி - ம்.) ககo. இனிநம் வேந்தன் ஆருணி முதலிய அரசரொடு போர் செய்து அவரை வெல்லுங் கடமை உளனுயிருத்தலை நம் படைஞர்க்குக்கூறி என்பது கருத்து.

ககக. தேறல் மாக்கள் - தன்னுற் றெளியப்பட்ட தமது படை வீரர். திறவிதில் - செவ்விதாக. காட்டி - உணர்த்தி.

ககஉ. வினைமுற்றித் தம்மூர்க்கு மீளும் படைஞர்க்குப் பழந் தீர்ந்தபின் அம்மரத்தை விட்டுத் தஞ்சேக்கைக்குப் போகும் வௌவால் உவமை.

> "கனிவளங் கவர்ந்து பதிவயிற் பெயரும்
> பனியிறை வாவற் படர்ச்சி ஏய்ப்ப." (உ: உ - ககூ: உo)

என்றார் முன்னும்.

ககங. செழிப்புடைய பலவாகிய புதுவருவாயினையுடைய சேனை என்க.

ககச. போத்தந்து - போக்கி.

ககரு. இதுவென - இந்நிகழ்ச்சி முன்னிகழ்ந்தது என்று. அவன் வயின் - அவ்விடபகன்பால்.

[இடபகன் யூகியைப் பாராட்டுதல்]

ககஅ - கஉo: கேட்டகாலை...............மறுமொழிகொடுத்தபின்.

(பொ - ரை.) அவற்றைக் கேட்ட இடபகன் யூகியை நோக்கி, "உற்றுழி உதவாது கைவிட்டனர்" என்று உலகம் பழி கூறுதபடி "யூகிமுதலிய உதயணன் நண்பர் மெய்ந் நண்பர்களே" என்று உலகம் புகழும் புகழை நிறுத்தினை நண்பனே! தக்கதே செய்தனை! என்று பாராட்டுரை வழங்கிய பின்னர் என்க.

(வி - ம்.) "அற்ற குளத்தில் அறுநீர்ப்பறவைபோல் உற்றுழித்" தீரும் தீய நண்பரை உலகம் பழித்தலும், "அக்குளத்தில் கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போல" ஒட்டியுறும் நன்னண்பரைப் புகழ்தலும்

உண்மையின் கெட்டகாலை விட்டனர் என்று உலகம் பழிகூறுமல், மெய்ந்நண்பரே என்று புகழும்படி செய்ததனை நன்று என்று பாராட்டினான் என்க.

கஉ0. தோழன் - இடபகன்.

[யூகி உதயணனைப்பற்றி இடபகனை வினாதல்]

கஉக - கஉசு: நன்னுரை...............................கேட்ப.

(பொ - ரை.) முற்கூறியபடி நிகழ்ந்தவற்றையெல்லாம் இடபகனுக்குக் கூறி முடித்த பின்னர், யூகி இடபகனை நோக்கி நம் மன்னன் உச்சைனியினின்றும் புறப்பட்ட பின்னர் அவன் சென்ற நெடிய காட்டு வழியிலே நிகழ்ந்த சிறப்பு நிகழ்ச்சி ஏதேனும் உண்டாயின் அதனையும், அவன் வாசவதத்தையை எய்திய நாள் தொடங்கி அவன் எய்திய நிலைமையினையும், அவனது தலைமைத் தன்மையினையும், விரிவாக எனக்குக் கூறுக என்று வேண்ட என்க.

(வி - ம்.) க0க. யூகி தான் கூறுதலை விடுத்து என்க. நுண்வினை அமைச்சன் என்றது இடபகனை. நுண்ணிதாக ஆராய்தற்குரிய தொழிலுடையனாதலின் நுண்வினை அமைச்சன் என்றார்.

கஉஉ. பெருமகனுக்குப் பெயர்ந்தகாலைக்கு இப்பால் என மாறுக.
கஉ௩. காட்டு வழியிடத்தே நிகழ்ந்த சிறப்பு நிகழ்ச்சி ஏதேனும் உண்டெனின் அதனையும் என்க.

கஉச. சின்மொழி மாதர் : வாசவதத்தை; சிலமொழிகளே பேசுமியல்புடையாள் என்பதாம். மாதர் - அழகுடையாள்.

கஉ௫. தலையது தன்மை - தலைமைத் தன்மை; தனது இறைத் தொழிலிலே அவன் இருக்கும் நிலைமை என்க.

கஉசு. உள்விரித்துரை - விளக்கமாக விரித்துக் கூறுக.

[இடபகன் அங்ஙனமே கூறுதல்]

கஉஎ - க௩டு: அடலரும்..............................கழிந்தகாலை.

(பொ - ரை.) இடபகன் பின்வருமாறு கூறுகின்றான்: நம் மன்னன் ஏறி நடத்திய அப் பத்திராவதி என்னும் பிடியானை ஐந்நூறு காவதம் ஓடிப்பின்னர் வெப்பம் நிலைகொண்ட பாலை நில வழியிலே இளைத்து விழ்ந்து மடிந்ததாக; அதன் பின்னர் அவ் உதயணன் வாசவதத்தையோடு நடந்து சென்று கடிய அப் பகற் பொழுது கழியுமளவும் காட்டினூடே மரநிழலிற்றங்கியிருப்ப ஞாயிறுபட்டுத் திங்கள் மண்டிலம் தோன்றிய மாலைப் பொழுதிலே அவரோடிருந்த வயந்தகன் என்னிடம் வருதற் பொருட்டு அவரைவிடுத்து வந்தானாக, இங்ஙனம் உதயணன் தனியனாக அம்மாலைப் பொழுது கழிந்த பின்னர் என்க.

(வி - ம்.) ௧௨௭. பகைவரானே வெல்லுதற்கரிய பலவாகிய படைகளை உடைய அவ்விடபகன் என்க.

௧௨௮. அழகும் இளமையுமுடைய அப்பத்திராபதி என்னும் பிடி என்க. ௧௨௯. ஐந்நூறு-ஐந்நூறு காவதம். ஐந்நூறு என்றது காவதங் களின் மிகுதிக்கோர் எல்லை கூறியவாறு. "ஆயிரத்தொன்றும் புலவர்" என்றாற்போன்று.

௧௨௯. வெப்பம் நிலைபெற்ற பாலைநிலவழி என்க. அசைந்து - இளைத்து. உயிர்வைப்ப - உயிர்விட ; இறப்ப.

௧௩௦. கன்னி - வாசவதத்தை. (௧௩௪) தாரோனும் கன்னியும் ஏனையோரும் நடந்து போந்து என்க. வாசவதத்தை நடத்தலருமை தோன்ற அவளையே விதந்து கூறினர். நடந்தனர் : முற்றெச்சம். ௧௩௧. கடும்பகல் - வெப்பத்தாலே கடிதாகிய பகற்பொழுதென்க. கழிதுணை - நீங்குமளவும். ௧௩௨. வெங்கதிர் - ஞாயிறு. தண்கதிர் - திங்கள். திங்கள் தோன்றிய மாலை என்க.

௧. தனியனுகை என்று செயவெனெச்சமாக்குக.

௧௩௬ - ௧௪௧ : **வெஞ்சொல்............................ஆர்ப்ப.**

(பொ - ரை.) சொல் முதலியவற்றையுடைய சவரரும் புளிஞருமாகிய வேட்டுவர் தம்முட்கூடி எழுந்து அக்காட்டினை ஆராய்ந்து வந்தனராக ; அங்ஙனம் வரும் பொழுது அதனூடே ஓரிலவின் கீழே மறைந்திருந்த நம் அரசகுமரனை அவ்வேடர் கண்டு சூழ்ந்து கொண்டு ஆரவாரியா நிற்ப, என்க.

(வி - ம்.) ௧௩௬ - ௭ : கேள்விக்கின்னாத வெவ்விய சொல்லினை யும், வேட்டத்தினையும், பிறர்க்கு அச்சம் வருதற்குக் காரணமான வெகுளியையும் வஞ்சனையே செய்யும் நெஞ்சினையும் உடைய சவரரும் புளிஞரும் ஆகிய வேடர் என்க. சீற்றம் - வெகுளி. சலம்-வஞ்சனை. சவரர் புளிஞர் என்பன வேட்டுவர் வகை. ௧௩௮. கலந்தனர் : முற்றெச்சம். தெரிவோர் - ஆராய்வோர். ஆறுசெல்வோருளரோ என்றும், தமக்கிரையாகும் விலங்குகள் உளவோ என்றும் ஆராய்வோர் என்க.

௧௩௯. வேனிற் காலத்தே ஊன் போலச் சிவப்பாக மலரும் இலவம் என்க.

௧௪௦. அக்கானத் தகவயின் இலவத்துக்கீழ்கரந்து இருந்த நம்மரச குமரனை என்க. கரந்தனன் : முற்றெச்சம்.

௧௪௧. தாம் சூழ்ந்து கொள்ளுமாற்றால் தம்முட்படுத்தி மகிழ்ச்சி யாலே ஆராவரிப்ப என்க.

௧௪௨ - ௧௫௦ : **வெருவுறு.....................கரந்தனரேனலும்.**

(பொ-ரை.) அங்ஙனம் ஆர்த்த அளவிலே நம் மன்னவன் அச்சத்தாலே நடுங்கும் வாசவத்தைதயை "யான் இவரைக் கொன்றொழிப்பேன்! நீ அஞ்சற்க!" என்று தேற்றி ஆங்கொரு

சார் அம்மகளிரைச் சிறிது அகல நிற்கச் செய்து அவ்விடத்தே அவ்வேடரை இலக்காகக் கொண்டு தனது வில்லின்கண் வைத்து வளைத்தேவிய ஓர் ஓர் அம்பினாலே ஏழேழு வேடர் மடிந்து வீழும்படி கொல்லுதலாலே துன்பத்திலே அழுந்தும் நெஞ்சத்தோடே அச்சமும் அடைந்து இறந்தவர் ஒழிய எஞ்சிய வேடர் பகைமையான் நெருக்கி அக்காட்டின்கண் அவரைச் சூழத் தீக் கொளுவி ஓடி மறைந்தனர் என்று (இடபகன்) கூறி வருமளவிலே என்க.

(வி - ம்.) ௧௪௨ - ௩: புலி முதலியவற்றைக் கண்டு அச்சமுறு கின்ற பிணை மான்போல நெஞ்சம் விம்மி நடுங்காநின்ற அழகிய சிலவாகிய கூந்தலையுடைய வாசவத்தையை என்க.

அஞ்சல் ஓம்பு - அஞ்சுதலைப் பரிகரி; அஞ்சற்க.

௧௪௫. நீக்கி நிறுத்தி என்க. தலைமைபற்றி ஓதியை மட்டும் கூறினர். ஓதியையும் இனம்பற்றி ஏனைக் காஞ்சன மாலையையும் என்க. நீக்குவன் : முற்றெச்சம். நீறீஇ - நிறுத்தி.

௧௪௬. இலக்கவனை - ஐ அவன் இலக்குக் கொளீஇ - எனக் கண்ணழித்து மாறிக் கூட்டுக. ஐ-தலைவன்; உதயணன். 'விலக்கவன்' என்றும் பாடம். ஒருகணைக்கு ஏழுவேடர் விழும்படி கொன்றென்க. ஏழென்றது பல என்னும் பொருட்டு. நூறுதல் - கொல்லுதல். ௧௪அ. துன்பத்திலே அழுந்தும் நெஞ்சத்தோடென்க. பட்டவர் ஒழிய எஞ்சிய அவர் தமர் என்க. பகைமையாலே அணுகி என்க. ௧௫௦. கட்டெரி - வளைக்கும் நெருப்பு. எனவே நான்குதிசையினும் என்பதாம்.

என்று இடபகன் கூறிய அளவிலே என்க.

[யூகி மூர்ச்சித்தலும் தெளிதலும் மீண்டும் கேட்டலும்.]

௧௫௧ - ௧௫அ : ஒட்டிய............... உரைக்கென.

(பொ - ரை.) கேட்டிருந்த யூகி மேலே தன் நண்பனுக்கு எய்தியது அறியாதவனாய்த் தன் இமைகள் அகன்று கண் கள் பிறழா நிற்பச் சொல்லவிந்து மயங்கி வீழ்ந்தானாக, அங்ஙனம் விழ்ந்தவனை இடபகன் தன் மார்போடணைத்துத் தழுவிக் கொண்டு அச் செய்தியை ஆற்றிக் கூறாமல் ஒரே லெனக் கூறிவிட்ட தனது பிழைப்பிற்குத் தானே வருந்திக் குவளைமலர் இட்டு வைத்த குளிர்ந்த நீரை அவன் மெய்யிற் றெளித்துக் குளிர்ந்த சந்தனம் மலர்த்தாது முதலியவற்றைப் பூசுதலானே அவன் மூர்ச்சை தெளிந்து எழுந்திருந்து நண்ப! மேலே உதயணனுக் கெய்தியதியாது கூறுக! என்று வேண்ட என்க.

(வி - ம்.) ௧௫௧. ஒட்டிய - நெருங்கிய. தோழன் - உதயணன். உற்றது - பின்னர் நேர்ந்தது.

கடுஉ. பகைவரைக் கொல்லுதற்குக் காரணமான தறுகண்மை யையுடைய தன் கண்ணிமைகள் என்க.

கடுரு. மீண்டும் பேசமாட்டாதவனாய் மயங்க.

கடுச. மார்பனை - அந்த யூகியை. வாங்குபு - தூக்கி எடுத்து. தழீஇ - தழுவிக் கொண்டு.

கடு. கதுமென - ஞரேலென. ஒருவர்க்கு ஒருதுன்பச் செய்தி யைக்கூறத் தொடங்குவோர் சட்டெனக் கூறிவிட்டால் அத் துன்பத் தின் பொறையினைக் கேட்போர் ஆற்றாது மயங்கி வீழ்வர்; ஆதலான் அச்செய்தியை மறைத்து மறைத்து மெல்லக் கூறுதல் வேண்டும்; அங்ஙனம் கூறாமைக்கு இடபகன் தானே வருந்தினன் என்பதாம்.

கடுசு. பருவத்தை எதிர்ந்த குவளைமலர் என்க. நாள்மலர் என் பதாம். நீர், மணமும் குளிர்ச்சியும் எய்துதற் பொருட்டுக் குவளை மலரிடப்பட்டது என்பதாம்.

கடுஎ. சீதம் - குளிர்ச்சி. தாது - மகரந்தம்.

கடுஅ. ஏஎல்: இயல் என்பதன் மரூஉ. மீண்டும் தன்னியல் பெய்தி என்றவாறு. ஏஎல் - மனவெழுச்சி என்பர் நச்சினார்க்கினியர்; (சீவக ௩0உ.)

எழுந்திருந்தனன்: ஒருசொல்; முற்றெச்சம். உரைக்கென - மேலே கூறுக என்று வேண்ட.

[இடபகன் மேலே கூறுகின்றான்.]

கடுகூ - களo: மாஅலன்ன...............தோன்றி.

(பொ - ரை.) திருமாலை ஒத்த உதயண குமரன் ஆட்டுக் கூட்டத்திடையே பாயாநின்ற அரிமாப்போல அவ்வேடர் கூட்டத்திடையே பாய்தலை அஞ்சி அவ்வேடர் ஓடாநின்றனராக, நம் மன்னன் ஆங்கொருசார் அஞ்சி நின்ற வாசவதத்தையை அலத்தக மூட்டிய அவளின் மெல்லடிகளிலே பருக்கைக் கற்கள் வடுவுண்டாக அழுத்தும்படியும், கொடிபோன்ற சிற்றிடை வருந்தி அசையும்படியும், அவளது துன்பம் நீங்கும் பொருட்டுச் சிறிது தூரம் நடத்திச் செல்லச் சினங்கொண்ட அவ்வேடர்; மீண்டும் ஓடிவந்து திங்கள்மண்டிலத்தை வளைத்த ஊர்கோள் போன்று சூழப்பரந்து வளைத்துக் கொண்டு நின்ற பொழுதிலே என்க.

(வி - ம்.) கடுகூ. திருமால் உயிர்களைக் காத்தற் றொழில் உடை யனாகலின், அத்தொழிலிலே அத்திருமாலை ஒத்தவனான நம்மரசன் என் பான் மாலன்ன மன்னுயிர் காவலன் என்றான்.

கசுo. ஆடு வேட்டுவர்க்கும், அரிமா உதயணனுக்கும் உவமை.

கசுக. வேடு - வேடர். வெரீஇ - அஞ்சி.

கசுஉ. பஞ்சி - செம்பஞ்சுக்குழம்பு. பரல் - பருக்கைக் கல்.

கசுங. வஞ்சி மருங்குல் - கொடிபோன்ற இடை. வாடுபு - வாடி ; வருந்தி என்றவாறு.

கசுச. அஞ்சுபு - அஞ்சி. பைந்தொடி - பச்சை வளையல். மாதரை : வாசவத்த்தையை. வாசவதத்தையினையும் காஞ்சனமாலையினையும் எனினுமாம்.

கசுரு. சிறுவரை - சிறிதுதூரம். நடாஅய்-நடத்தி. செல்லல் - துன்பம். செல்லல் நீங்கச் சிறுவரை நடாஅய் என்று மாறிக் கூட்டி நடத்தி என்னும் எச்சத்தை நடத்தா நிற்ப எனத் திரித்துக் கொள்க.

கசுசு. கறுவு - சினம். மறுவு வந்து - மீண்டு வந்து. மறுவு ஓடிவந்தென மாறுக.

கசுஎ. உறுவு - பொருந்துதல். உரோணி - உரோகணி ; வாசவதத்தைக்கு உவமை.

கசுஅ. மறுவுடை மண்டிலக் கடவுள் : திங்கள் ; உதயணனுக்குவமை. மறு - களங்கம்.

கசுகூ. கரந்துறை - மறைத்துத் தங்குகின்ற. ஊர்கோள் - பரிவேடம். கடுப்ப - ஒப்ப. அவர் நிரந்து நின்று என மாறுக. நிரந்து - பரவி.

கஎ0 - கஎசு : பெயர்ந்து...............அகன்றனனிற்ப.

(பொ - ரை.) யாம் உதயணனிருந்த இடத்தில் அவனைச் சேர்தலைக் கருதி எம்படையோடு பெயர்ந்து செல்லுமளவில் அவ்வேடர் தலைவன் உதயணனுடைய கைகளைக் கட்டாநிற்ப அவனும் தன் அறிவாலே ஆராய்ந்து "நீயிர் பொருளை விரும்பினல் அரும்பொருள் எம்பால் உண்டு. என்றும் எம்பால் முதலாகவுள்ள அப்பொருள் முடிப்பின்கண் பொதிந்து புதைக்கப் பட்டிருக்கிறது. அதனைக் காட்டுவல்" என்றும் உரையாலே தன்பால் பொருள் உண்மையைக் காட்டி நின்ருனுக் ; அப்பொழுது யாங்களும் அவ்விடத்தை எய்தினேமாக எம்மை அறியாத அயலான் போல நம் வேந்தனும் அவரோடு சேர்ந்து ஓடத்தொடங்கி ஓடவியலாதான் போன்று, வாசவதத்தையோடு ஒருசார் ஒதுங்கி நிற்ப என்க.

(வி - ம்.) கஎக. குறி - உதயணன் இருத்தற்குக் குறிப்பிட்ட இடம். யாமென்றது, இடபகன் தன் படைஞரை உளப்படுத்திக் கூறியது.

கஎஉ - எரு. விரைமுதல் : வினைத்தொகை. விரைகின்ற முதல்வன் என்க. முதல்: ஆகுபெயர் ; தலைவன் ; வேடர் தலைவன். கட்டிய: செய்யிய என்னும் வினையெச்சம். இதனைச் செயவெனெச்சமாக்குக.

முதல் கட்ட (உதயணன்) அறிவினுடி நீயிர் (பொருளை) விரும்பின் (எம்பால்) அரும் பொருள் உண்டு என உரை(யால்) தம்பால் இமிழ்ப்பின் முதல் உளமை காட்டிக் கூறி நின்ற பொழுதில் எனக் கூட்டிச் சில சொற் பெய்து முடித்துக் கொள்க.

களஉ. அவர்பால் தப்புதற்குரிய வழியைத் தன்னறிவாலே ஆராய்ந்து என்க. களங. இமிழ்ப்பு - முடிச்சு.

களச. உளமை - உளதாந்தன்மை.

களரு. தலைப்பெய - கூடாநிற்ப.

களள. வேந்தன் - உதயணன். விராஅய் - கலந்து.

களஅ. ஓடத்தொடங்கி ஓட ஆற்ருதான் போல என்க. ஒருசிறை- ஒருபக்கத்தே.

களகூ. அசைகின்ற மூங்கிலை ஒத்த தோளையுடைய வாசவதத்தை யோடே என்க. அகன்றனன் : முற்றெச்சம்.

கஅ0 - கஅகூ : வேட்டுவர்..................அறியான்.

(பொ - ரை.) இங்ஙனம் அவ்வேட்டுவர் எம்மைக்கண்டு அஞ்சி அகலா நிற்பப் பின்னர், யாங்கள் ஒருங்கே கூடிச் சயந்தி நகரத்தின்கட் புகுந்து, உதயண குமரனுக்கு வாசவதத்தையை மணம் செய்வித்துக் கட்டிலேற்றிய காலந் தொடங்கி, வானத்திலே ஞாயிறெழுதலும், திங்கள் எழுதலும, அவை மறைதலும், அறியமாட்டாமைக்குக் காரணமான இன்பத்திலே அழுந்தித் தனது தலைநகரத்தைக் கைப்பற்றி ஆருணி அரசன் ஆட்சி செய்தலைத் தானும் கருதாதவனுய், என்க.

(வி - ம்.) கஅ0. கூட்டம் எய்தி - கூடி. கஅக. அரசகாரியங்களை நுண்ணிதாக ஆராய்ந்து கற்றவனும், போரின்கண் தறுகண்மையுடைய மறத்தன்மையுடையவனுமாகிய உருமண்ணுவா என்க. ஊர்- சயந்தி நகரம்.

கஅங. போகப் பெருநுகம் - நுகர்ச்சியாகிய பெரிய பாரம். போகப் பெருநுகம் என்றது திருமணத்தை.

கஅச. மாகவிசும்பு : பண்புத்தொகை.

மதியமும் ஞாயிறும் எழுதலும் படுதலும் அறியாமைக்குக் காரணமான இன்பம் எய்தி என்க. அவ்வின்பத்தை அல்லது உலகின்கண் நிகழுவனவற்றை ஒருசிறிதும் உணராதபடி அதன்கண் அழுந்திக் கிடக்கின்ருன் என்பது கருத்து.

கஅகூ. இயங்கும் நீரையுடைய அகழியை உடைபோல உடுத்துக் கிடந்த முழுமதிலையும் நெடிய தலைவாயிலையும் உடைய தலைநகரமாகிய பெரிய கோசம்பி நகரத்தை என்க.

கஅஅ. தாரணி - தூசிப்படை. மாலையணிந்த யானை எனக் கூட்டினுமாம். தலைநின்று - அரசனுக இருந்து.

ககூ0 - உ00 : தன்னுயிர்..................உரைப்ப.

(பொ - ரை.) தன் உயிர் போன்ற தம்பியர்களையும் நினையாதவனுய், உலகினுள்ள உயிர்க்கு உறுந்துன்பம் இத்தகை

யது என்று உணராதவனய், அவையோரைக் கூட்டுதலும் கருவி ஆராய்தலுமாகிய அவ்வரசகாரியங்களை வகுத்துக் கொள்ளாதவனய் முப்பொழுதினும் மந்திரத்தாலே இயற்றும் கடமைகளையும், விட்டுத் தன் தந்தையாலே தண்டித்துத் திருத்தப்படாதவனும் தானே சிந்திக்கும் உணர்ச்சியும் இல்லாத வனுமாகிய ஒரு பேதை மகன் போன்று தன் மனம்போல ஒழுகும் ஒழுக்கமுடையவனய் வானுலகத்தை எய்திய நகுட மன்னன் போலப் பிறர்க்குச் செவ்வியுங் கொடாதவனய் இத் தன்மை எய்தினன் அவன்தான் நம்மனேர்க்குத் தலைவன் ஆகலின் அவன் பொருட்டு யான் செயலற்ற நிலைமையுடையே னயினேன் என்று தன் தோழனுகிய யூகிக்கு விரித்துக் கூற என்க.

(வி - ம்.) ௧௧0. தன்னுயிரன்ன தம்பியர் - பிங்கல கடகர். தம்பியரையும் எனற்பால சிறப்பும்மையும் இரண்டனுருபும் செய்யுள் விகாரத்தால் தொக்கன.

௧௧௧. உலகிலுள்ள உயிர்களின் துன்பங்களை ஆராய்ந்தறிந்து அத்துன்பம் போக்குதல் அரசன் கடமையாகவும், அதனையும் செய்யான் என்பான் உயிர் இடுக்கண் இன்னது என்றறியான் என்றுன்.

௧௧௨. அவை - அரசவை. கருவி - இறைத்தொழிற்கு வேண்டிய கருவிகள். அவையும் கரணமுமாகிய அவற்றைக் கூறுபடுத்தி இருத்து வானல்லன் என்க.

௧௧௩. காலை நண்பகல் மாலை என்னும் முக்காலத்தும் மந்திர மோதிச் செய்யும் நியமங்களையும் விட்டு என்க. ஓரீஇ - நீங்கி.

௧௧௪ - ௫. தந்தையால் என்க - தானே சிந்தை செய்யும் அக வுணர்வு என்க. ௧௧௬. தன் மனம் பிறந்த ஒழுக்கினன் - தன் மனம் போனவாறு ஒழுகும் ஒழுக்கமுடையவன்.

௧௧௭. பொன்னகர் தழீஇய புதுக்கோ - நகுடமன்னன். இவன் கழிகாமத்தாற் சாப மெய்திக் கெட்டவன். அவன் போன்று கழிகாம முடையன் ஆயினன் உதயணன் என்பது கருத்து.

செவ்வி - பிறர், தன்னேடு அளவளாவுதற்குரிய அமயம்.

௧௧௯. அசைவிலன் : தன்மை ஒருமை. யான் அவன் பொருட்டு யாதும் செய்ய வியலாதேன் ஆயினேன் என்பது கருத்து.

[யூகி மகிழ்தலும் சாங்கியத்தாயினிடம் பின்னர் நிகழ்த்த வேண்டிய செயல்களை அறிவித்தலும்]

௨௦௦ - ௨௧௨ : வேகந்தணியா..........குறிப்பினனுகி.

(பொ - ரை.) இங்ஙனம் இடபகனலே கூறப்பட்ட செய்தி களை யூகி ஒழிவின்றிக்கேட்டுப் புன்முறுவல் பூத்த முகத்தை உடையவனய்ப் "பெருமகன் இனிது போகம் பெறுக" என்று வாழ்த்திப் பின்னர்ச் சாங்கியத்தாயைத் தன்பால் அழைப்

பித்து அறத்தின் இயல்பையும், செயல்களின் கிடக்கையையும், இறைவனது இயல்பையும், அப்பொழுதுள்ள நிலைமையினையும், தனித்தனியாக எடுத்து அவற்றைப் பாகுபாடு செய்து பொதுவாக அறிவித்துப் பின்னர் இஃது என்னுடைய கருத்தெனத் தன் கருத்தினையும், அவளுக்கு விளங்க அறிவித்தற்கு விரும்பிய குறிப்பையுடையனாய் என்க.

(வி - ம்.) உ0க - உ. வேகம் - விரைவு. வேகந்தணியா வெஞ்சினம் என்றது, ஆறாத சினம் என்றவாறு. உடையான் தன்மை உடைமை மேலேற்றப்பட்டது.

உ0ங. யூகந்தராயணன், இது யூகியின் முழுப் பெயர். ஒழிவிலன் : முற்றெச்சம். உ0ங. மகிழ்ச்சியாலே புன்முறுவல் பூத்த முகத்தையுடையனாய் என்க.

உ0ச. பெருமகன் இனிது போகம் பெறுக என மாறுக. இஃது உவகையாலே யூகி உதயணனை வாழ்த்தியபடியாம்.

உ0ஞ-எ. ஆறுவகைப்பட்ட மதங்களின் கொள்கைகளை எஞ்சாது ஆராய்ந்து தெளிந்தவளும் குற்றமற்ற மெய்ம் மொழியே பேசுபவளுமாகிய தொன்மூதாட்டியை என்க. அவளாவாள் சாங்கியத்தாய். துன்னத் தரீஇ - அணுக அழைப்பித்து. தருமம்-அரசர்க்குரிய அறம். கருமம் - அரசியற்குரிய வினைத்திறம். தலைமை - இறைமைத் தன்மை. நிலை - அப்பொழுதுள்ள நிலைமை.

உக0. ஒவ்வொன்றையும் வேறுவேறாக எடுத்து அவற்றையும் கூறுபடுத்து என்றவாறு. உகக. இதுவென் வலிப்பு - இஃது என் கருத்து. அவட்கு - அச் சாங்கியத்தாய்க்கு.

உகஉ. புரிந்த - விரும்பிய.

உகங - உகஅ : அகலாதோரையும்............காட்டி.

(பொ - ரை.) தன்னைவிட்டு அகலாத இயல்பினையுடையவரையும் அவ்விடத்தினின்றும் அகலச் செய்து பின்னர் அச் சாங்கியத்தாயை நோக்கி "அன்னையே! அரசியலுக்குரிய பொருள் நூலின்கண், அன்பினாலே பொருந்தியவர்க்கு மெய்ப் பொருளைக் கூறுவதல்லது, அல்லாதார்க்கும் கூறுதல் கூடும் என்பது காணப்படுவதொன்றன்று. நீயிரோ! நம் செம்மலுக்குத் தொன்றுதொட்டுப் பற்பல பிறப்பினும் அடிப்பட்டுவரும் உழுவலன்புடையீர், ஆதலின் என் உள்ளக்கிடையை நுமக்குக் கூறத்துணிந்தேன், விழிப்புடன் கேட்பீராக!" என்று விரிவாக எடுத்துக்காட்டி என்க.

(வி - ம்.) உகச. உம்மைப் பிறப்பிற் கொண்டு-பழம் பிறப்புக்களிலே தொடங்கி மேற்கொண்டென்க. பிறப்பு : சாதி யொருமை. தொன்றுதொட்டுப் பிறவிதோறும் தொடர்ந்துவரும் உழுவலன்புடையீர் என்பது கருத்து. செம்மல் : உதயணன். உகடு. தாயோரன்ன

தகையினிர் - தாயன்பு போன்ற அன்புத் தகுதியையுடையீர். தகை - தகுதி. தகையினிர்:முன்னிலைப் பன்மை வினைமுற்று. ௨௧௬. மேயோர் - அன்பாலே பொருந்தியவர். மெய்ப் பொருள் - உண்மைப் பொருள். ௨௧௭. ஏதில் - குற்றமற்ற. பொருள்நீதி - பொருள் பற்றிய நீதிகளைக் கூறும் நூல்.

[நண்பர் செய்தற்குரியன.]

௨௧௯ - ௨௨௫ : அற்றம்..................படுகடன்.

**(பொ - ரை.)** ஒருவனுக்கு நண்பர் ஆயினோர் அவனுக்குச் சோர்வு வாராமற் காத்தலிலே அவனது வீரம்போலவும், குற்றம் வாராமற் காத்தலிலே அவனது ஐம்பெருங் குரவர் போலவும், கூடி ஒழுகுதலிலே அவனது உயிர் போலவும், மிகுதிக்கண் மேற்சென்றிடித்துத் தகவில்லாத செயலைச் செய்தலிலே அவன் பகைவர் போலவும் இருந்து இன்னோரன்ன பிறவும் செய்தல் அவர் தம் கடமையாகும், என்றான் என்க.

**(வி - ம்.)** ௨௧௯. அற்றம் - சோர்வு; ஈண்டு உவகை மகிழ்ச்சியாலே உண்டாகும் சோர்வென்க. ஆண்மை - மறத்தன்மை. ௨௨௦. குற்றம் - கழிகாம முதலியவற்றால் உண்டாகும் பழி. குரவர்-அரசன் உவாத்தியான் தந்தை தாய் தம்முன் என்னுமிவ்வைவரும் என்க. ௨௨௧. ஒன்றி - பொருந்தி. அவனுடலில் ஒன்றிவாழும் அவன் உயிர் போல என்க.

௨௨௨. நன்றியின் கண்ணன்றித் தீமையின்கண் மிக்குச் சென்றொழுகும் ஒழுக்கத்தினை நீக்குதற் பொருட்டுத் தகவில்லாத செயல்களைச் செய்தலிலே என்க. தகவில - தகுதியில்லாத செயல் என்றது, துன்புறுத்தும் செயலை.

௨௨௪. இனியோர்க்கு இயன்ற படுகடன் - நண்பர்க்குரிய கடமை.

௨௨௫ - ௨௩௫ : தொடுகழல்.......................கூறி.

**(பொ - ரை.)** நங்குருசில் முன்னர் நிகழ்ந்ததனைச் சிறிதுங் கருதாதவனாய்த் தன்பாற் பழிச்சொல் நிலை பெறுநிற்பவே இன்பச் சேற்றில் இறங்கி அழுந்திக்கிடக்கின்றான் ஆதலாலே, (௨௨௬) அவன்பால் வைத்த அன்பாலே நீயிர் மயங்காமல், முன்பு முயன்று அவனது சிறைத்துன்பம் முதலியவற்றைப் போக்கினாற் போலவே, இப்பொழுதும் அவனது (உவகை மகிழ்ச்சியிற் சோர்வாகிய) அவலத்தை ஒழித்து அவன் சயந்தியினின்றும் இலாவாண நகரத்திற் சென்று அவ்விடத்தே விரும்பி உண்டு ஆடி மகிழ்ந்ததன் பின்னர் ஒருநாள், வாசவத்தையை அம்மன்னவன் பிரிந்தகல நேர்ந்த பொழுது அவன் உறையும் அரண்மனையில் தீக்கொளுவி, ஆங்கே அமைக்கப்பட்டுள்ள சுருங்கை வழியே அவனை என்பால் விரைந்து செலுத்திக் கொணர்தல் நும்முடைய கடமையாகும் என்று கூறி என்க.

(வி - ம்.) உஉரு. ஆதியிற் பட்டதென்றது தனது நகரத்தை ஆருணியரசன் கைப்பற்றி ஆள்வதனை என்க.

உஉசு. தொடுகழல் குருசில் - கட்டப்பட்ட வீரக்கழலையுடைய நந்தலைவனாகிய உதயணன். வடுவுரை - பழிச்சொல்.

உஉஎ. இன்ப அளறு - காமவின்பமாகிய சேறு.

உஉஅ. முன்னர் அவனுற்ற துன்பந்துடைத்த தொழிலே போல இப்பொழுதும் ஆவன செய்து அவலம் ஒழிப்பி என்க. அவலம் - அவலத்திற்குக் காரணமான அவனது சோர்வு: ஆகுபெயர். ஒழிப்பி - ஒழித்து.

உஉகூ. அவன்பால் வைத்த அன்பாலே நீயிர் மயங்காமல் என்றவாறு. திகையா - மயங்காமல்.

உ௩0. இகல் - போர். இலாவாணம் - ஒருநகரம்.

உ௩உ. மாதர் - வாசவதத்தை. அகல்விடை - அகன்ற செவ்வியல். உ௩௩. கோலம் - அழகு. கோயில் - அரண்மனை. கூர்எரி - மிக்க நெருப்பு. உ௩ச. பொய்ந்நிலம் - சுருங்கை. போத்தந்து - செலுத்தி. கண்ணென: விரைவுக் குறிப்பு. என்வயின் - என்பால்.

உ௩கூ - உசரு. இன்பந்......................................ஆகி.

(பொ - ரை.) மேலும், நங்குருசில் அவலத்திற்குக் காரணமான இன்பத்தைக் கெடுத்து அதன் வாயிலாய் அவனுக்கு அரசுரிமைபூட்டி விடுதல் நும்முடைய திராக்கடமையே ஆகும் என்று முகமன் கூறி, மேலும் "வழிப்போக்கிற்கு வேண்டும் என நினைந்து முன்னரே அமைத்து வைத்த அவல் விக்கி யூகி இறந்தொழிந்தான்" என இவ்வுலகம் அறியும்படி செய்து தன் நிலத்தை இழந்த நம் மன்னனை மீண்டும் அரசனாக நிலைபெறச் செய்தல் வேண்டும் என எம்முள்ளே ஆராய்ந்து துணிந்த இச் செயல் நும்மாலே முற்றுவதொன்றாகலான் யான் நீயிர்உணரும்படி கூறினேன் என்று அவளோடே பொருந்தச் செய்து முடித்ததொரு தெளிவினையுடையனாய் என்க.

(வி - ம்.) (உஉஉ) முன்னர்க் கன்றியது கடிதற்குத் தகவில செய்தலிற் பகைவர் போலவும் என்றதற் கிணங்க (உ௩கூ) இன்பத்தைத் துடைத்தலாகிய தகவிலது செய்தும் என்பது கருத்து.

உ௩கூ. இறைக்கடம் பூட்டுதலாவது: இறைவனுக்குரிய கடமைகளை மேற்கொள்ளச் செய்தல். உ௩எ. நெறி - ஆறுசெல்வோர் ஆற்றுணுக்கொள்ளும் முறைமை. உ௩அ. உருப்பம்-வெப்பம். நீளதர்க்கு - நெடிய வழியின்கண் உண்பதற்கு. நினைந்து முன் அமைத்து வைத்த எனக் கூட்டுக. உ௩கூ. தருப்பணம் - அவல். செருமி - விக்கி. உயிர்வைத்தான் - உயிர்விட்டான். உச0. என்பது - என்னும் பொய்ச் செய்தியை. உலகம் மெய்யென்று அறியும்படி செய்து என்க.

உசக. நிலங்குறைபட்ட மன்னன் - பகையரசன் கவர்ந்துகொண்டதனால் தனது நிலப்பரப்புக் குறையப்பட்ட உதயணன். நிறுவுதல் - மீண்டும் நிறைநிலமுடையனாக்கி நிலைபெறச் செய்தல்.

உசஉ. கற்றுத்துறைபோகிய புலத்தையும் வாய்மொழியையும் உடைய நும்மாலே என்க. புலம் - அறிவு. வாய்மொழி-மெய்ம்மொழி. எம்மில் என்றது தன் தோழரை உளப்படுத்தியவாறு.

உசசு - உசகூ : உருமண்ணுவா......................நூழ்ந்து.

(பொ - ரை.) பின்னர் உருமண்ணுவாவும் வயந்தக குமரனு மாகிய அமைச்சர்க்கும் தான் செய்யக்கருதிய செயன் முறை களைத் தெளியும்படி கூறுமின் என்றும் நீவிர் இன்னவிடத்தே வந்துஎன்னைக் காண்மின் என்றும் கூறி அத்தகைய பிற செயதிகளையும், அச்சாங்கியத்தாயோடே ஒன்றும் விடாதபடி ஆராய்ந்து என்க.

(வி - ம்.) உசஎ. கருமக்கிடக்கை - இன்னது செய்தபின்னர் இன்னது செய்தல் வேண்டும் என நெஞ்சத்துள்ளே முறைப்படுத்தப் பட்டுக் கிடந்த கிடக்கை என்க. காண்வர - விளங்கும்படி.

உசஅ. இன்னுழி - இன்ன இடத்தில். உசகூ. அவளொடு - அச்சாங்கியத்தாயோடு.

[யூகி தனது மாயச்சாக்காட்டினை உலகம் மெய்யேன்றுணரச் செய்தல்.]

உருo - உருச : மறைப்பிடன்....................தெளியக்காட்ட.

(பொ - ரை.) தான் மறைந்துறைதற்குரிய இடத்தை முன்னரே அமைத்து வைத்துப்பின்னர்த் தான் யாத்திரையின் பொருட்டு வைத்திருந்த அவலை மருந்தோடு கூட்டி உண்ணும் பொழுது கண்கள் மேலிமைக்குள் புகும்படி விக்கிச் செருமி உயிர்ப்பு இல்லாத உடம்பினனாய்ப் பொய்ச் சாவினை அயலோர் முன்னர் இயற்றி அவர் அதனை மெய்யாக நம்பும்படி காட்டா நிற்ப என்க.

(வி - ம்.) உருo. மறைப்பிடம்-தான் இறந்துவிட்டதாக நடித்த பின்னர் அயலோர் தன்னைக் காணுமல் மறைந்து வாழ்தற்குரிய இடம். உருக. ஆத்திரை - யாத்திரை. மாத்திரை - திரியோக மருந்து. உருஉ. உண்புழி - உண்ணும்பொழுது. கண் மேலிமைக்குட் புகும்படி என்க. செருமுதல் - விக்கல் உண்டாயபொழுது உண்டாவதொரு அவத்தை ; இருமுதலுமாம்.

உருங. உயிர்ப்பு - மூச்சு ; பிராணன்.

உருச. செயற்கைச் சாக்காடு - பொய்ச்சாவு.

உருரு - உசுo : தோழனும்......................மறைத்து

(பொ - ரை.) இடபகனுஞ் சுற்றத்தாரும் யூகியின் உடம் பைச் சூழ்ந்து குழுமிக்கொண்டு "இனி இவ்வுலகத்தே யாம் உயிர்வாழமாட்டேம்" என்று கூறி அழும் பொய்யாகிய அழு

கையைப் பிறர் எல்லாம் மெய்யென்று நம்பும்படி காட்டித் தீப் பெய்து சுடுதற் கொவ்வாத இவ்வமைச்சர்தலைவன் உடம் பினைக் கடிய. தீவினையைப் போக்கும் கங்கையின் இடுவேம் என்று அவ்வயலோர்க்கு அறிவித்து அவ்வுடம்பினைப் பிறர் அறியாதபடி மறைத்துவிட்டுப் பின்னர் என்க.

(வி - ம்.) உ௫௫. தோழன் - இடபகன். தமர் - சுற்றத்தார். சூழ்வனர் - சூழ்ந்து: முற்றெச்சம். குழீஇ-கூடி. அவ்வுடம்பின்கண் உயிர்ப்புளதென்று அயலோர் அறியாமைப் பொருட்டுச் சூழ்ந்து குழுமினர் என்பது கருத்து.

உ௫௬. வாழலம் : தன்மைப்பன்மை. உயிர்வாழ மாட்டேம்-யாங்களும் உயிர்விடுவோம் என்றவாறு. வஞ்ச இரக்கம் - பொய் யழுகை. உ௫௭. கொள்ள - மெய்யென்று கொள்ளும்படி.

உ௫அ. சூழ்ச்சித் தொழிலிற் றலைமைத் தன்மையுடையோன் என்க. சூழ்ச்சியண்ணல் என்றது, சுடலாகாமைக்குக் குறிப்பேதுக் காட்டியவாறு. சான்றோர் உடம்பினைச்சுடலாகாது என்பது ஓர் வழக்கு. உ௫௯. கடுவினை - தீவினை. கடுவினை கழூஉம் கங்காதீரத்திடுதும் என்றது, கங்கைநீரிலிடுதற்கு ஒருகாரணம் காட்டித் தெளித்தவாறு. கங்காதீரம் - கங்கைக்கரை : நீர்க்கு ஆகுபெயர். உய்த்து இடுதும் என மாறுக. இடுதும் : தன்மைப்பன்மை ; இடுதும் - இடுவேம். இசைத்த னர் : முற்றெச்சம். அச்செய்தி யாண்டும் பரவும் பொருட்டுப் பிறர்க் குக் கூறி என்றவாறு.

உ௬௧ - உ௬௭ : தவமுதுமகளை.....................மகளென்.

(பொ - ரை) இடபகன் சாங்கியத்தாயை விரும்பிநோக்கி, "நீயிர் இனி உதயணன்பாற்சென்று பண்டுபோல இருமின்" என்று கூறி நெஞ்சநிரம்பிய அன்போடே மரபிற்கேற்ப முகமன் கூறி விடைகொடுப்ப, யூகியுடனே பின்னர் நிகழ்த்தவேண்டிய வற்றைத் திறம்பட ஆராய்ந்து துணிந்தவளும், அரிய அறிவும், திண்ணிய கொள்கையும், அறத்தையே விரும்பும் இயல்பும் உடையவளும் ஆகிய அச்சாங்கியத்தாயும் அங்ஙனமே காட் டைக் கடந்து நாட்டினுட் புகுந்துசென்று உதயணன் இருந்த சயந்தி நகரத்திலே புகுந்தாள் என்க.

(வி - ம்.) உ௬௧. தவமுதுமகள் - சாங்கியத்தாய். தலைமகற் குறுகி - உதயணன்பாற் சென்று.

உ௬உ. முன்னையிராமின் என்று முகனமர்ந்துரைத்து என மாறுக. முகனமர்ந்து - முகத்தானே விரும்பி. முன்னையிராமின் - பண்டிருந் தாற்போல இருமின். உ௬௩. அகன் அமர் காதல்-நெஞ்சின் ஆழத்தே பொருந்திய அன்பு. ஆற்றுளி - முறைப்படி. முகமன்கூறுமுறைப்படி கூறி என்க. உ௬௪. காவலன் - உதயணன். உ௬௬. தெரிமதியமைச் சன் என்றது யூகியை. திறவிதில்-செவ்விதாக. மகள்-சாங்கியத்தாய்.

௬. யூகி சாக்காடு முற்றிற்று.

---

# க௦. யூகிக்கு விலாவித்தது

இதன்கண், சாங்கியத்தாய் உதயணன்பாற் செல்லுதலும், அவனோடு அளவளாவுதலும், பின்னர் வாசவதத்தையைக் கண்டு அளவளாவுதலும், பின்னர் உருமண்ணுவாவையும் வயந்தகனையும் கண்டு யூகி தன்பாற்கூறிய மறைச்செய்தியைக் கூறுதலும், வயந்தகன் வரைந்து தந்த உதயணன் உருவப் படத்தைக் கொண்டுசென்று உதயணன்பாற் கொடுத்தலும், உதயணன் அப்படத்தில் உள்ள குறிப்பாலே யூகி இறந்துவிட்டான் என்று கருதிக் கையறவெய்துதலும், பின்னர் ஒருவகையாகத் தெளிந்து, யூகியின் சிறப்புக்கள் பலவற்றையும் கூறிக் கூறிப் புலம்புதலும், நல்லோர் தேற்றுதலும் கூறப்படும்.

அறம்புரி யாட்டி அமைச்சனி னீங்கி
மறம்புரி தானை மன்னவன் இருந்த
தயங்கிதழ்த் தாமரைத் தண்பணை தழீஇய
சயந்தியம் பெரும்பதி இயைந்தகம் புக்குப்
பொன்வரை அன்ன பொருவில் ஆகத்து
மன்ன குமரனை மரபுளிக் குறுகித்
தாய்காண் கன்றிற் காவலன் விரும்பி
எற்ற செவ்வி மாற்றங் கூறிச்
சேடுபடப் புனைந்த சித்திரக் கம்மத்துப்
பீடங் காட்டலின் ஈடுபட இருந்து
மன்னவன் மகனே மாதரோடு போந்து
நின்னகர்ப் புகுந்த பின்னர்க் கண்டனென்
என்னு கியர்மற் றென்வயின் இனியென
முகமற் கிளவி தகுவ கூறி
ஆடியல் யானை அவந்திய னகர்வயின்
பாடி மாற்றமொடு பட்டதை உரைத்தபின்
முனிமூ தாட்டியை முகனமர்ந்து நோக்கி
இனியவர் பெருங்கடம் இயல்பின் தீர்த்த
யூகி நம்மோடு போந்தில னோவெனப்
போகிய புகழோற்குப் பொருக்கென உரையாள்
ஆங்கவன் கேட்ப அறிவின் நாடி
சாங்கிய முதுமகள் தான்தெரிந் துரைக்கும்

ஒலிஉஞ் சேனையுள் வலியோரை வணக்கி
நங்கையைத் தழீஇநீ போந்த கங்குல்
பட்டதை யெல்லாம் பட்டாங் குணர்ந்து
மறுபிறப் புணர்ந்த மாந்தர் போல
உறுகுறைக் கருமம் உள்ளக மருங்கின்
தானே உணரின் அல்லது புறப்பட்(டு)
ஏனோர் அறியா இயற்கைத் தாகிக்
காரிய முடிவின் ஆரிருள் மறையா
அரும்பொறி வையத்துக் கரந்தகத் தொடுங்கி
எம்மைக் கொண்டுவந் தேமஞ் சார்த்தி
வெம்மை வேட்டுவர் வியன்மலை வரைப்பின்
கொற்றொழிற் கருமம் ஆற்றுளி முடித்துச்
சிலபகல் கழிந்தபின் வருவ னீர்சென்று
நலமிகு வேந்தனை நண்ணுமின் விரைந்தென்(று)
ஒழிந்தனன் உதயண யூகி பின்னென
மொழிந்தனள் அடக்கி முகிழ்விரற் பணைத்தோள்
வாசவ தத்தையை வகையுளிக் காண்கெனத்
தேச மன்னன் திறத்துளிக் கூறக்
கன்றுகாண் கறவையிற் சென்றவட் பொருந்தித்
தளர்நடை இளமையில் தான்கொண் டோம்பிய
வளர்கொடி மருங்குல் வருந்தப் புல்லி
உவகைத் தண்துளி ஊழ்ஊழ் சிதறி
அமிர்துகடை கடலின் அரவம் ஓவாது
தமர்தலை மணந்த தம்பெருங் கோயிற்
கண்ணீர் வெள்ளங் காலலைத் தொழுக
வட்டிகை வாக்கின் வனப்பொடு புணர்ந்த
பட்டச் சின்னுதற் பதினா றுயிரர்
நம்மோய் மார்களுந் தம்மின மகளிரும்
ஒருதுணை ஆயமும் உடைவுகொண் டொழியப்
பெருமகன் தானெனப் பெற்றியிற் பிழையான்
யாப்பமை காதலொ டாருயிர் அன்ன
கோப்பெருந் தேவிக்கு நீப்பிடம் உணர்த்தித்
தந்தையுரை காட்ட உய்ந்தது முதலா
இன்பக் கட்டுரை பைந்தொடி கேட்ப

முறைமையின் விரிப்ப முகத்தோளி புல்லென
நிறைமலர் நெடுங்கண் நீஇர் நெகிழத்
தமர்வயின் நினைஇய தன்மையள் ஆகிப்
புகரில் கோலத்துப் புனையிழை புலம்பத்
தாழ்நகை ஆகத்துத் தண்சாந்து சிதைய
வீழ்தரு வெந்துளி விரலின் நீக்கிச்
செவிலித் தவமகள் தேறக் காட்டி
அவலங் கோடல் அங்கண் ஞாலத்து
வெங்கண் வேந்தன் பைந்தொடிப் பாவாய்
மங்கல மகளிர்க்கு மரபன் றிதுவென
நீலப் பொய்கைப் பாசடைத் தாமரை
கதிர்வாய் திறந்து ………….. ……………
பகுவாய்க் கிண்கிணி பரட்டுமிசை ஆர்ப்பக்
கோடுவாய் சிலம்பிற் கொழுஞ்சிகைக் குன்றின்
பாடமை படுகால் பைய ஏறி
நங்காய் காணுன் பெருமா னன்னகர்
உந்தத் திசையதென் றுரைன்றப் பிறவும்
உகப்பக் கூறி மிகப்பல வருட்டி
உலகியல் வழாஅ உருமண் ணுவாவொடு
வலிகெழு நோன்றாள் வயந்தகற் குறுகி
நட்டோன் துணிந்த கட்டழற் கருமம்
மந்தண மாக அந்தணி உரைத்தலும்
நன்னெறி நூல்வழித் திண்ணறி வாளன்
வருந்தி நோற்ற அருந்தவம் போலப்
பிற்பயம் உடைமை தெற்றெனத் தெளிந்து
தெரிமதி யாட்டியைத் திட்பங் கொளீஇ
அருமதி அமைச்சனை அன்பிற் கெழீஇத்
தோழற் குணர்த்துஞ் சூழ்வினை தொடங்கிக்
கட்டளை அமைந்த கண்ணார் வனப்பினோர்
வட்டிகைப் பலகையுள் வாக்குவகை அமைத்து
வத்தவன் வடிவினோர் வண்ணப் பாவை
வித்தகஞ் சிறப்ப வேறுபட எழுதி
நாற்க ணுக அமைத்துமற் றவற்றுள்
மேற்கண் மழுகிய வினையிற் றாகக்

கைத்தொழில் அமைத்தபின் உய்த்தவட் குணர்த்தி
விருத்தி அமைத்த வினைமுடி பாவைக்
கருத்துமெய் தெரிதல் காவலன் கடனெனத்
தேவியோ டிருந்த செவ்விக் கோட்டியுள்
ஓவியப் பாவை உய்த்தவள் காட்ட
நுண்ணுணர் மன்னன் தன்னுெப் பாகிய
கண்ணுளர் நுட்பத்துக் கருத்து நோக்கி
இடம்படு ஞாலத் துடம்பொடு புணர்ந்த
இன்னியன் மாந்தர் திண்ணியல் உறுப்பினுள்
தாளே பெருங்கிளை தோளே துணைவி
பல்லே மக்கள் கண்ணே தோழர்
முடியே குரவர் அடியே ஆளாம்
ஆக்கையி னுடி அங்ஙனங் காணின்
மேற்கட் குற்றது விதுப்பியல் வழாது
நூற்கண் நுனித்த நுண்ணுணர் வெண்ணத்தின்
யூகி தன்வயின் உறுகண் வெந்தொழில்
ஆகிய துண்டென ஐயந் தேறி
உதயணன் மாழாந் துயிர்வாழ் வொழிகெனச்
சிதர்பொறி எந்திரம் போலச் சிதர்ந்து
தாரும் பூணு மார்பிடைத் துயல்வரச்
சோருங் கண்ணினன் துளங்கிமெய்ம் மறப்ப
இடியே றுண்ட நாகம் போலக்
கொடியேர் சாயற் கொழுங்கவின் வாடப்
பூவிருங் கூந்தல் புல்லென விரிய
வாசவ தத்தையும் வத்தவன் மார்பின்
மம்மர் எய்திய மயக்க நோக்கி
விம்மல் எய்தி வியன்பெருங் கோயில்
அழுகை ஆகுலங் கழுமிய பின்றை
அவல உயிர்ப்பிணி அடியற எறியும்
தவலருஞ் சாந்தந் தடியுற அப்பிச்
சீதச் செய்கையின் மாதுயர் விடுப்பத்
தீதில் பெருமகன் தெளிவுமுந் துறீஇக்
காதலிற் கவலைப் பாசந் தட்பத்
தண்டா மரைக்கண் வெம்பனி வீழ

விண்டோய் கானத்து வேழ வேட்டத்துச்
சிறைகோளப் பட்டியான் செல்சார் வறுத்தபின்
மறைகோண் மாயமோடு துறைநகர் விழவினுள்
ஏதின் மன்னன் காதலி பயந்த
மாதரைத் தழீஇப் போதரப் புணர்த்துப்
போதுவல் என்றேய் போய்த்தனை யோவெனக்
காதல் தோழனைக் காணுது கலங்கி
மாதாங்கு தடக்கை மன்னருள் மன்னவன்
நளிகதிர் மண்டில நாண்முதல் தோன்றி
ஒளியிடப் பெறுஅ உலகம் போல
இருளகம் புதைப்ப மருளகத் தெய்தித்
தருமமுங் கருமமுந் தளரச் சாஅய்
ஆழின் அல்லதை அரசியல் வழாமை
வாழ்தல் ஆற்றேன் யானென மயங்கியும்
நிழற்பொலி காவின் நிரந்துடன் ஆடிக்
குழற்சிகை அவிழக் குண்டுநீர் யமுனைக்
கணைக்கடு நீத்திடைப் புணைப்புறந் தழீஇ
விளையாட்டு விரும்பி அளையின வாகிய
இன்சுவை அடிசில் உண்பதும் ஓரீஇ
மன்பெருங் கோயிலுள் வளர்ந்த காலை
வேக நம்பிக்கு விலக்குக அடிசிலென்(று)
ஆகுபொருள் அறிவி அரும்பொருள் என்மகன்
யூகந் தராயன் உண்கென உண்ணுய்
குடிப்பெருந் தேவி அடிக்கலம் பற்றி
அருளினுங் காயினும் ஒப்ப தல்லதை
பொருளஃ தன்று புரவலன் மாட்டேன்(று)
என்செய் குற்றம் நின்கண் தாங்கி
அன்பளி சிறப்பித் தின்பதம் இயற்றல்
இளமைக் காலத்தும் இயல்பா உடையோய்
முதுமைக் காலத்து மதலையின் தாங்கிப்
பின்போக் குரிய பெருந்தகை யாள
முன்போக்கு விரும்புதன் மூர்க்கர தியல்பெனக்
கேட்டோர் உருக மீட்டுமீட் டரற்றப்
பூந்தார் மார்ப புலம்புகோண் டழீஇ

இருநில வரைப்பின் இயற்கை ஓராப்
பெருநிலங் காவல பேணு தவர்முன்
இளையை ஆகுதல் இறைமை அன்றால்
கொடுங்காழ் சோரினுங் கூடம் ஊன்றிய
நெடுங்காழ் போல நிலைமையின் வழாஅது
துன்பத்தில் துளங்கா தின்பத்தின் மகிழா(து)
ஆற்றுளி நிற்றல் ஆடவர் கடனென
மாற்றம் பற்பல மரபிற் கூறி
யடநடு தருட டங்கண் டபுத்த
அந்த ணாளரின் வெந்திறல் வீரன்
சொற்றுணைத் தோழன் தொழில்பா ராட்டி
நற்றுணை மாந்தர் முற்றுணை யாக
அரசியல் ஆக்கங் கூடு மாயினும்
பெருவிறல் தோழன் வருதலும் உண்டெனத்
தானயர் பெருநெறித் தலைநின் றனனால்
வீணை வித்தகன் விலாவணை தொடர்ந்தேன்.

---

## கo. யூகிக்கு விலாவித்தது

அஃதாவது, சாங்கியத் தாயாலே உதயணன் யூகி இறந்து பட்டான் என்னும் செய்தியை அறிந்து புலம்பும் செய்தியைக் கூறும் பகுதி என்றவாறு.

### உரை

[சாங்கியத்தாய் உதயணன்பாற் சொல்லுதல்.]

க - கo : அறம்புரி....................இருந்து

(பொ - ரை.) இவ்வாறு சாங்கியத்தாய் யூகியினிடத்தி னின்று நீங்கித் தானையையுடைய உதயண மன்னவன் இருந்த சயந்தி நகரத்திற் புகுந்து அம் மன்னனை விதிப்படி அணுகா நிற்ப, அவனும், தன் தாயைக்கண்ட கன்றுபோல விரும்பி அவளை வரவேற்ற பொழுது, அவளொடும் பேச வேண்டுவன பேசிப் பின்னர் அவன் காட்டியதோர் இருக்கையின்மேல் அமர்ந்து என்க.

(வி - ம்.) க. அறம் - துறவறம். அமைச்சன் - யூகி. உ. மறம்புரிதானை - வீரச் செயலையே விரும்பும் படை. மன்னவன் - உதயணன்.

௫. தயங்கு இதழ்த் தாமரை - விளங்குகின்ற இதழ்களையுடைய தாமரை மலர் என்க. தண்பணை - மருதநிலம். தழீஇய - தழுவிய; மருத நிலத்தை யடுத்திருந்த சயந்தி என்றவாறு.

௬. பொன்வரை - இமவான். பொருவில் ஆகம் - ஒப்பற்ற மார்பு. ௬. மன்னகுமரன் - உதயணன். மரபுளி-அரசரைக்காணும் முறைப்படி. ௭. தாய் - தாய்ப்பசு. கன்று - ஆன்கன்று. ௮. ஏற்ற செவ்வி - வரவேற்ற பொழுது.

௯ - ௧0. அழகுண்டாக இயற்றப்பட்ட சித்திரத் தொழில் திறனமைந்த பீடம் என்க. அம்மன்னவன் காட்டலாலே அதன்கண் இருந்தென்க. ஈடுபட - சமமாக; எளிவரவுபட என்பாருமுளர். துறவி யாகலின் உதயணன் தன்னோடு சமமாக இருக்கச் செய்தான் என்பது கருத்து.

௧௧ - ௧௬: மன்னவன் மகனே............போந்திலனோவென

(பொ - ரை.) வேந்தன் மதலாய்! நீ வாசவதத்தையோடே புறப்பட்டு நினது நகரத்திற் புகுந்த பின்னர் இன்று நின்னைக் காணும் பேறு பெற்றேன் காண்! இனி இதனினுங் காட்டில் யான் பெறக் கடவ சிறந்த பேறு வேறு யாதுளது! என்று தகுந்த முகமன் மொழிந்து பிரச்சோதனன் நகரிடத்தே நீர் விழாவிற்கமைத்திருந்த பாடியிலுள்ளோர் உதயணன் வாசவதத்தையோடு புறப்பட்ட பின்னர்க் கூறிய மொழிகளோடே ஆண்டு நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் உதயணனுக்குக் கூறிய பின்னர் உதயணகுமரன் அத் தவமூதாட்டியை முகமலர்ந்து விரும்பி இனிது நோக்கி, நண்பர் செய்யக்கடவ பெரிய கடமையை நன்கு செய்து முடித்த யூகி நும்மோடு வந்திலனோ? என்று வினவாநிற்ப என்க.

(வி - ம்.) ௧௧. மாதர் - வாசவதத்தை.

௧௩. என்னுகியர் - யாது ஆகல்வேண்டும். ஒன்றுமில்லை என்றவாறு. என்வயின் - என்பால.

௧௪. முகமற் கிளவி - முகமன்மொழி. தகுவ - பலவறிசொல்.

௧௫ - ௧௬. அசையும் இயல்பினையுடைய யானையினையுடைய அவந்தி நாட்டு மன்னனாகிய பிரச்சோதனனுடைய உச்சைனியின்கண் என்க. ௧௬. பாடி - படவீடு. மாற்றம் - மொழி. பட்டது-நிகழ்ந்த நிகழ்ச்சி.

௧௭. முனிமூதாட்டி - தவமூதாட்டி; சாங்கியத்தாய்.

௧௮. இனியவர் - நண்பர். அவர்க்குரிய பெருங்கடன் ஆவது உற்றுழி விரைந்துதவுதல். இதனை,

"உடுக்கை இழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதா நட்பு." (குறள். ௭௮௮)

என்றற் றொடக்கத்துத் திருக்குறள்களானும் உணர்க.

தன்னைச் சிறைவிடு செய்த செயலையுணர்ந்து இனியவர் பெருங் கடன் இயல்பிற்றீர்ந்த யூகி என்றான்.

உ0 - ௩0 : போகிய..................காரியமுடிவின்

**(பொ - ரை.)** அங்ஙனம் வினவிய புகழோனுக்கு ஞெரே லென விடை கூறாமல் அவன் பொருந்திக் கேட்குமாற்றானே தனது அறிவாலே ஆராய்ந்து அத்தவமூதாட்டி தெளிந்து கூறுவாள்: "மன்னவன் மகனே! உச்சைனி நகரத்தின்கண் வலிமையுடைய வீரரை எல்லாம் அடக்கி நீ வாசவதத்தையைக் கைப்பற்றிக் கொண்டு புறப்பட்டு வந்த அவ்விரவிலே யூகி ஆண்டு நிகழ்ந்த நிகழ்ச்சிகளை எல்லாம் நிகழ்ந்தபடியே அறிந்து கொண்டு, அவற்றைப் பிறர் அறியாதபடி தன் நெஞ்சினுள்ளே அடக்கிக் கொண்டு ஆண்டுத்தான் ஆற்ற வேண்டிய செயல் கள் ஆற்றி முடித்த பின்னர்" என்க.

**(வி - ம்.)** உ0. போகிய புகழோன் - உலகெலாம் பரந்து சென்ற புகழையுடைய உதயணன். பொருக்கென - விரைவுக்குறிப்பு. பொருக் கெனச் சொல்லின் அத்துயரத்தை உதயணன் பொறாது இறந்துபடு வன் என்று கருதி அங்ஙனம் கூறாமல் என்றவாறு.

உக. அறிவினாலே ஆராய்ந்து அவன் பொறுக்கும் ஆற்றினைத் தெளிந்து அவ்வாற்றானே உரைப்பாள் என்க.

உ௩. ஒலி உஞ்சேனை - ஆரவாரமுடைய உச்சைனி நகரம். நீ புறப்பட்டமையால் ஆரவாரமுடைத்தாகிய என்பது கருத்து.

உ௩. வலியோர் - மறவர்.

உச. நங்கை - வாசவதத்தை. உரு. பட்டது - நிகழ்ந்தது. பட்டாங்கு - நிகழ்ந்தபடியே.

உரு - உஎ. அவதிஞானமெய்திய சான்றோர் தங்கருத்தினைத் தம் முள்ளே அடக்குதல் போலத் தான் அறிந்ததனைத் தானறிதலன்றி அது பிறர்க்கு அறியவியலாதபடி தன்னுள்ளே அடக்கி என்க.

ஆகி என்பதனை ஆக எனத் திரித்துக் கொள்க. காரியம் - தான் ஆண்டுச் செய்ய வேண்டிய செயல் என்க.

௩0 - ௩அ : ஆரிருள்..................அடங்கி.

**(பொ ரை.)** இருளினூடே மறைந்து பொறித்தேரின்கண் புகுந்து அதனகத்தே ஒடுங்கி என்னையும் தன்னோடு அழைத்துவந்து பாதுகாவலான இடத்திலே இருக்கச் செய்து, யான் இனி வேட்டுவர்க்குரிய குறிஞ்சி நிலத்திலே நமது இறைத் தொழிற் பொருட்டு இயற்ற வேண்டிய செயல்கள் சிலவுள. அவற்றை ஆற்றி முடித்த பின்னர் வருவேன்; நீயிர் முன்னர் விரைந்து சென்று நம் வேந்தனை எய்துமின்! என்று எமக்குக்

கூறிப் போயினன் என்று கூறியவள் ஏனையவற்றைக் கூறாமல் தன்னுள்ளே அடக்கி வைத்து என்க.

(வி - ம்.) ௩௦. ஆர் இருள் - செல்லுதற்கரிய இருள்; நிறைந்த இருளுமாம். மறையாக எனக்கொண்டு இருளே மறைக்கும் பொருளாக எனினுமாம்.

௩௧. பிறரால் செய்தற்கரிய பொறியையுடைய தேர் என்க.

௩௧. தவமுதாட்டியாகலின் எம்மை என்றாள். ௩௨. ஏமம் - காப்பிடம். சார்த்தி - சாரச் செய்து.

௩௩ - ௩௪. வெவ்விய பண்புடைய வேட்டுவர் வாழும் அகன்ற குறிஞ்சி நிலத்திலே யான் நம் உதயணனுடைய இறைத் தொழிலுக்குச் செய்யவேண்டிய சில கருமம் என்க. ஆற்றுளி - நெறிப்படி. ௩௬. நலமிகு வேந்தன் - உதயணன்.

௩௭. ஒழிந்தனன் என்பது இறந்தொழிந்தான் என்றும் போயினான் என்றும் இரு பொருளும்பட நின்றமை உணர்க. உதயண : அண்மைவிளி. யூகி : எழுவாய். யூகி மறைந்து சார்த்தி நண்ணுமின் என்று கூறி ஒழிந்தனன் என முடிக்க. அடக்கி - இனித் தான் நிகழ்த்த வேண்டிய செயல்களைத் தன்னுள்ளே மறைத்து என்க.

**[௩௮ - ௮௩. சாங்கியத்தாய் வாசவதத்தையைக் காணலும் அவளோடளவளாவுதலும் தான் செய்யக் கருதிய மறைச் செயல்களை அவட்குக் கூறி உடம்படச் செய்தலும்.]**

௩௮ - ௪௪ : முகிழ்விரல்..................சிதறி

(பொ - ரை.) காந்தள் அரும்பு போன்ற விரலையும், மூங்கில் போன்ற தோளையும், உடைய வாசவதத்தையை முறைப்படி சென்று காண்மின்! என்று உதயணன் சாங்கியத்தாய்க்குக் கூறுந்திறத்தாலே கூற நிற்ப; அவளும் தனது கன்றை விரும்பிக் காணச் செல்லும் கறவைப்பசுப் போல விரைந்து சென்று அவ்வாசவதத்தையை எய்தி, குழவிப் பருவந் தொட்டுத் தான் மேற்கொண்டு பாதுகாத்த அவளது கொடியிடை வருந்தும்படி இறுகத் தழுவிக்கொண்டு இன்பக் கண்ணீர் உகுத்து நின்று என்க.

(வி - ம்.) ௩௮. முகிழ் - ஈண்டுக் காந்தளரும்பு. பணை - மூங்கில். ௩௯. வகையுளி - முறைமையினாலே. காண்க-காண்மின். ௪௦. தேசமன்னவன் - உதயணன். திறத்துளி - கூறுந்திறத்தாலே.

௪௧. அவள் - அவ்வாசவதத்தையை.

௪௨. வளரும் பூங்கொடி போன்ற நுண்ணிடை என்க. ஆதரத்துடன் இறுகத் தழுவி என்றவாறு.

௪௩. உவகைக் கண்ணீர் ஆகலின். 'தண்டுளி' என்றார். ஊழூழ் - முறைமுறையாக. அடுத்தடுத்து என்றவாறு.

௬௫ - ௭௧ : அமிர்து............உடைவுகொண்டொழிய

(பொ - ரை.) அமிழ்தம் வரக் கடையப்பட்ட பாற்கடல் போன்று இடையறாத ஆரவாரத்தோடே சுற்றத்தார் வந்து குழுமிய அரண்மனையின்கண் நீ பிரிந்த காலத்தே பொற்பட்ட மணிந்த நெற்றியையுடையராகிய நின் தாயர் பதினாறுயிர வரும் அவர் தம்மினத்தாராய மகளிரும் நின் தோழியரும் நெஞ்சுடைந்து தங்கண்ணீர் வெள்ளமாகப் பெருகிக் காலை அலைத்து ஓடும்படி புலம்பா நிற்ப என்க.

(வி - ம்.) ௬௫. மந்தரமலையை மத்தாகக் கொண்டு அமரரும் அசுரரும் திருப்பாற் கடலை அமிழ்தெழக் கடைந்த பொழுது ஆண்டு எழுந்த ஆரவாரம் போல இடையறாது அரண்மனையில் ஆரவாரம் உண்டாக என்றவாறு.

௬௬. தமர் தலைமணந்த. சுற்றத்தாரால் குழுமப்பட்ட. பெருங் கோயில் - அரண்மனை.

௬௮ - ௭௦ ஓவியப் பலகையின்கண் எழுதிய சித்திரத்தின் திருத் தத்தைப் போல அழகமைந்த நுந்தாய்மார், பட்டமணிந்த சிறிய நுதலையுடைய நுந்தாய்மார் எனத் தனித்தனிக் கூட்டுக. வட்டிகை - ஓவியப்பலகை. வாக்கு - திருத்தம். சின்னுதல் - சிறிய நெற்றி. நும்மோய் - நும் தாய்மார் ; நும் என்றது, அவள் உடன்பிறந்தாரை யும் உளப்படுத்தியபடியாம். இனமகளிர் - அவரைச் சார்ந்த மகளிர்.

௭௧. ஒப்பற்ற துணையாகிய நின் தோழியரும் என்க. உடைவு- உடைதல்.

௭௦ - ௭௭. பெருமகன்......................விரிப்ப

(பொ - ரை ) ௭௨ - ௭௭ : தான் பெருமகன் என்னும் அந்தத் தன்மையினின்றும் நின் தந்தை பிறழாதவனாய்க் கட் டமைந்த காதலோடே தனது உயிர்போன்ற கோப்பெருந் தேவிக்கு நீ அவரை நீத்தெய்திய இடத்தின் சிறப்பை உணர்த் திக் கூறுதலானே அவள் உயிர்விடாமல் உய்ந்தாள் என்பது முதலாகவுள்ள இன்பத்திற்குக் காரணமான மொழிகளை வாச வதத்தை கேட்கும்படி பட்டமுறைமையாலே விரித்துக் கூற, என்க

(வி - ம் ) ௭௨. பெருமக்கள் மெய்த்திருவந்துற்றாலும் வெந் துயர் வந்துற்றாலும் ஒத்திருக்கும் உள்ளம் உடையராவர் என்பதற் கிணங்க, நின்தந்தை உள்ளம் பிறழாதவனாயினன் என்பது கருத்து. தான் பெருமகன் என் அப்பெற்றியில் பிழையான் என மாறுக. ௭௩. யாப்பமை காதல் - பலபிறப்புக்களினும் பொருந்தி அடிப்பட்டு வரும் உழுவலன்பு.

கோப்பெருந்தேவி - வாசவதத்தையின் தாய். தேவிக்கு உரை காட்ட அவள் உய்ந்தாள் என்று அவள் உய்ந்தது முதலாகவுள்ள கட்டுரை விரிப்ப என விரித்தோதுக.

௭௭. முறைமை - நிகழ்ந்த முறைமை.

ருஎ - சுசு : முகத்தொளி......................மரபன்றிதுவென

(பொ - ரை.) ருஎ - சுசு : அதுகேட்ட வாசவதத்தை தன்முகம் ஒளியிழந்து புற்கென்னும்படி தன்னைப் பிரிந்த தனது சுற்றத்தாரின் துன்பநிலையை நினைக்குந் தன்மையுடையளாகித் தனது மலர்க்கண்களினின்றும் நீர் துளிப்ப மார்பின்கட் சாந் தழியும்படி விழாநின்ற வெவ்விய அக்கண்ணீரைச் செவிலி யாகிய சாங்கியத்தாய் தனது விரலாலே நீக்கிப் பாவாய் ! துன் புறுதேகொள் ! இது மங்கல மகளிர்க்குப் பொருந்துவதன்று, என்று அவள் மனந்தெளியும்படி எடுத்துக்காட்டி என்க.

(வி - ம்.) ருஎ. முகம் ஒளியிழந்து புல்லென என்க.

ருஅ. மலர் - தாமரைமலர். கண்நிறை நீர்நெகிழ என மாறுக. ருகூ. தமர்வயின் உண்டான துன்பத்தை நினைஇய தன்மையளாகி என விரித்தோதுக.

சு0. புகர்இல் கோலம் - குற்றமில்லாத அழகு. புனையிழை: அன் மொழித்தொகை.

சுக. நகைதாழ் ஆகத்து என மாறுக. நகை - முத்துவடம். ஆகம் - மார்பு. தண்சாந்து - குளிர்ந்த சந்தனம்.

சுஉ. துன்பக் கண்ணீராகலின் வெந்துளி என்றார்.

சுகூ. செவிலித்தவமகள் - செவிலித்தாயாகிய சாங்கியத்தாய்.

சுச. அவலம் - துன்பம். கோடல் - கொள்ளாதே. அம்கண் - அழகிய இடமமைந்த. சுரு. வெங்கண் - தறுகண். வேந்தன்-பிரச் சோதனன். பாவாய்: ஆகுபெயர் விளியேற்று நின்றது.

மங்கலமகளிர் - சுமங்கலி. இது - இங்ஙனம் வருந்துவது.

சுஎ - எச : நீலப்பொய்கை......................வருட்டி.

(பொ - ரை.) மேலும் அவள் துன்பத்தை அகற்றுதற் பொருட்டு "நங்காய் ! நின்காற் கிண்கிணி ஒலிக்கும்படி இச்செய் குன்றின்மேற் சாத்தப்பட்ட ஏணியின் மிசை மெல்ல ஏறி நோக்குதி ; உந்தத் திசையிற் றோன்றுவதுதான் நின் தந்தை யின் நல்ல உச்சைனி நகரமாகும்" என்னும் இன்னோரன்ன பிறவும் அவள் மகிழும்படி மிகவும் பலவாகிய மொழிகளையும் கூறித் தன் வயப்படுத்திப் பின்னர் என்க.

(வி - ம்.) சுஎ-சுஅ. இவ்வடிக்கு முடிக்குஞ் சொல் சிதைந்தது போலும் நீலநிறமுடைய நீர்மிக்க வாவியிடத்துள்ள பசிய இலைக ளோடு கூடிய தாமரைமலரினது ஒளியுடைய வாயைத்திறந்து என்க. இது (எஉ) நன்னகர்க்கு அடையாகும் போலும்.

சுகூ. பகுவாய் - பிளவுபட்ட வாய். கிண்கிணி - சதங்கை. பரடு- காலில் ஓருறுப்பு.

எ0-எக. குவடு வாய்க்கப்பெற்ற இயற்கை மலையை ஒத்த கொழுவிய குவட்டினையுடைய இச் செயற்கை மலையின்மேல் சார்த்திய படியமைந்த ஏணியில் மெல்ல ஏறி என்க. கோடு - குவடு; சிகரம். சிலம்பு - மலை. சிகை - முடி; சிகரம். குன்றென்றது செய்குன்றினை. பைய - மெல்ல. படுகால் - ஏணி.

எஉ. நங்காய் - வாசவதத்தையே! உன்பெருமான் - உன் தந்தை. நகர் - உச்சைனி. இஃதிடமணித்தென்று ஆற்றியவாறு. எ௩. உந்த : சுட்டு. திசையிலே தோன்றுவது என்க. ஒன்ற-அவள் மனம் தன்மொழியோடு பொருந்தும்படி இன்னோரன்ன பிறவும் என்க.

எச. வருட்டி - வயப்படுத்து. பின்னர் என ஒரு சொல் பெய்க.

எ௫ - எஅ : உலகியல் ...................... உரைத்தலும்

(பொ - ரை.) அப் பார்ப்பன மகளாகிய சாங்கியத்தாய் அவளினின்றும் நீங்கி உருமண்ணுவாவையும் வயந்தகனையும் எய்தி யூகி இனிச் செய்யவேண்டியதாக ஆராய்ந்து துணிந்த தீக்கொளுவும் செயலைப் பிறர் அறியாதபடி மறைவாக வுணர்த்தாநிற்ப என்க.

(வி - ம்.) எ௫. உலகியலினின்றும் வழுவாத உருமண்ணுவா என்க.

எ௬. வலிமைபொருந்திய தாளையுடைய வயந்தகன் என்க. நோன்முள் - இயல்படைச்சொல்.

எஎ. நட்டோன் - யூகி- துணிந்த - ஆராய்ந்து தெளிந்த அழற் கருமம் என்றது, உதயணனிருக்கும் அரண்மனையில் தீக்கொளுவி வாச வதத்தையைப் பிரிக்குஞ் செயலை.

எஅ. மந்தணம்-மறைவு. அந்தணி-பார்ப்பனி; சாங்கியத்தாய்.

எ௯ - ௯௧ : நன்னெறி ............................ உணர்த்தி

(பொ - ரை.) அதுகேட்ட உருமண்ணுவா என்னும் அத் திண்ணிய அறிவுடை அமைச்சன், அவ்வழற் கருமம் தவம் போலத் தொடங்குங்காற் றுன்பமுடைத்தாய்ப் பின்னர்ப் பெரும்பயன் விளைவிப்பதாதலை நன்கு தெளிந்து அச்செயலை நிகழ்த்தற்கு வேண்டிய மனத்திண்மையைச் சாங்கியத்தாயக்கு உண்டாக்கிப் பின்னர் யூகியின் சாக்காட்டை உதயணனுக்கு உணர்த்தற்கு ஆராய்ந்து துணியப்பட்ட செயலைச் செய்யத் தொடங்கி இலக்கண நூலிற் கூறப்பட்ட அளவமைந்ததொரு ஓவியப்பலகையினைத் திருத்து முறைப்படி திருத்தி அமைத்து அதன்கண் உதயணன் உருவம்போன்ற ஒரு வண்ண ஓவியம் சிறப்ப எழுதி அதனைச் சிறிது மாறுபடும்படி நான்கு கண்கள் உடையதாகவும், அவற்றுள் மேற்கண் ஒன்று மங்கிப்போன தாகவும், இயற்றி அதனை அச் சாங்கியத்தாயிடம் கொடுத்து

அதனால் அவள் செய்யவேண்டிய செயலையும் அவட்குக் கூறி விடுப்ப என்க.

(வி - ம்.) நின்னறிவாளன் தெளிந்து, கொளீஇ, அன்பிற் கெழீஇ, தோழற்கு உணர்த்தும் வினை தொடங்கி, அமைத்து, எழுதி, அமைத்தபின் அவட்கு உய்த்து உணர்த்த என முடிக்க.

எக. நின்னறிவாளன் - உருமண்ணுவா. நன்னெறி - நூல்வழி. நோற்ற தவம் எனக் கூட்டுக. தவம் தொடங்குங்காற் றுன்பமாய்ப் பின்னர்ப் பேரின்பம் பயத்தலான். இச்செயலுக்கு உவமையாயிற்று.

அஉ. தெரிமதியாட்டி - சாங்கியத்தாய். அவள் பெண்பாலாக லின் இவ்வினை செய்தலிற் றின்மையிலள் ஆதல் கூடுமென்பது பற்றித் திட்பம் கொளீஇயினன் என்பது கருத்து.

அஉ. தானும் உதயணன்பாற் செய்யுஞ் செயலில் அன்பாலே பொருந்தி என்க.

அருமதி அமைச்சன் நிலைமையினைத் தோழற்கு உணர்த்தும் வினை என்க. அஃதாவது, யூகி இறந்தொழிந்தான் என்று உதயணனுக்கு உணர்த்துஞ் செயல்.

அடு. கட்டளை-ஓவிய நூல்விதி. கண்ணுக்குப் பொருந்திய வனப் பென்க. அசு. வட்டிகைப்பலகை - ஓவியந்தீட்டும் பலகை. வாக்கு வகை - திருத்தவகை.

அஎ. வத்தவன் - உதயணன். அஅ. வித்தகம் - ஓவியத்தொழிற் றிறம். நாற்கணுகச் சிறிது வேறுபட எழுதி என மாறுக.

கூ௦. மேற்கண் - மேலே அமைந்த கண். மழுகிய - மழுங்கிய. வினையிற்று - வினையை உடைத்து.

கூக. அவட்கு உய்த்து - அதுகொண்டு அவள் செய்யவேண்டிய செயலையும் உணர்த்தி என்க. உணர்த்தி என்னும் செய்தெனெச்சத் தைச் செயவெனெச்சமாக்குக.

கூஉ - கூஎ : விருத்தி ................................ நோக்கி

(பொ - ரை) அச்சாங்கியத்தாயும் நுண்மாணுழை புல னுடைய உதயணகுமரன் வாசவதத்தையோடிருந்ததொரு செவ்வியில் அவ்வோவியத்தை அவன்பாற்கொடுத்துக் கருத்து விரிதற்கிடனாக இயற்றப்பட்ட தொழில் முற்றுப்பெற்ற இவ் வோவியத்தின் மெய்க்கருத்தினை உணர்தல் மன்னன் கடமையே யாகும் என்று கூற, அதுபெற்ற (க௦அ) உதயணன் அவ் வோவிய உருவத்தை ஓவியப்புலவர் அங்ஙனம் வரைதற்குக் காரணமான அவரது நுண்மையுடைய கருத்தினை ஆராய்ந்து என்க.

(வி - ம்.) கூஉ. விருத்தி அமைத்த-அதனைக் காண்போர் இதன் கருத்தியாதென ஆராய்வதாகிய விருத்தித்தொழிலிற்கு இடனுய மைத்த என்க.

௯௧. காவலன்: முன்னிலைப் புறமொழி.

௯௨. செவ்வியையுடைய கோட்டி என்க. கோட்டி-கூட்டம்.

௯௩. ஓவியப்பாவை - ஓவியப்படம்: ஆகுபெயர்.

௯௬-௯௭. தன்னை ஒத்த ஓவியப்புலவர் என்க. உதயணன் தானே ஓவியப் புலமையிற் சிறந்தோன் ஆதலின் தன்ஒப்பாகிய கண்ணுளர் என்றார். "நோக்கினார் கண்களிடத்தே தம் தொழிலை நிறுத்துதலால் இவர் இப்பெயர் பெற்றார்" என்பர் நச்சினார்க்கினியர் (மதுரைக். ௫௧௮ உரை.)

௯௮ - ௧0௭: இடப்படு................................தேறி

(பொ - ரை.) உலகத்தின்கண் உடம்பொடு தோன்றி வாழும் மாந்தருடைய திண்ணிய உறுப்புக்களுள் வைத்து, அவர் தம் கால் சுற்றத்தார் ஆகும், தோள் மனைவியாகும், பல் மக்களாகும், கண் நண்பராகும், முடி ஐம்பெருங் குரவர் ஆகும்; அடி ஏவலர் ஆகும்; இவ்வாறு உடலின்கண் ஆராய்ந்து பார்க்குமிடத்து இவ்வுருவம் தனது மேற்கண் மழுங்கியிருக்கும் குற்றம் உடைமையின் யூகிக்குத் துன்பமானதொரு நிகழ்ச்சி உண்டாயது என்று எண்ணி நடுங்குதல் தவிரானாய் அதனை ஐயுற்றுப் பின்னர்த் தெளிந்து என்க.

(வி - ம்.) ௯௮. இடம்படு ஞாலம் - விரிந்த இடம் அமைந்த இவ்வுலகம். ௯௯. இனிய பண்புடைய மாந்தருடைய திண்ணிய தன்மையுடைய உறுப்புகளுள் என்க.

௧00. தாள் - கால். துணைவி - மனைவி. ௧0௨. முடி - தலை. ஆள் - ஏவலர். இவ்வுறுப்புக்கள் இன்னின்னவரை ஒக்கும் என்பதாம். ௧0௩. ஆக்கை - உடம்பு. அவ்வாறு ஒப்பிட்டு நோக்குமிடத்து, என்கண் போன்ற தோழனாகிய யூகிக்கு இடுக்கண் உற்றதுண்டு என்பதை இவ்வோவியம் குறிக்கின்றது என்று கருதினான் என்க. தன் அமைச்சர் நால்வருள் முதல்வன் யூகியே ஆதலால் நாற்கண்ணினும் மேற்கண் அவனையே குறிக்கும் என்று கருதினான் என்பதாம்.

௧0௫. நூலிடத்தே கூரிதாகக் கற்றுப் பெருகிய நுண்ணுணர்வினாலே ஆராய்ந்து எண்ணிய எண்ணத்தாலே உண்டென்று ஐயுற்றுப் பின் தேறி என்க.

௧0௬. உறுகண் - துன்பம். உறுகண் வெந்தொழில் என்றது சாக்காட்டினை; என்னை? "சாதலின் இன்னாதது இல்லை" ஆகலின். விதுப்பியல் வழாஅது-நடுங்குதலினின்றும் வழுவாமல் (நடுங்கி என்றவாறு.)

[இங்ஙனம் யூகி இறந்தான் என்று துணிந்த உதயணன் ஆற்றாது வருந்துதல்.]

௧0௮ - ௧௧௧: உதயணன்..........................நோக்கி

(பொ-ரை.) அவ்வுதயணன் மயங்கிக் "கெடுக என் ஆயுள்" என்று மார்பிலணிந்த மலர்மாலைகளும் அணிகலன்களும்

மார்பிற்கிடந்து புரளா நிற்ப, நீர்சோருங் கண்ணையுடையனுய்ச் சிதர்ந்துபோன இயந்திரம் போலப் பொறிகள் சிதர்ந்துபோக நடுங்கி விழ்ந்து மூர்ச்சையடைய என்க.

(வி - ம்.) க0அ. மாழாந்து-மயங்கி. என் உயிரினது வாழ்க்கை ஒழிவதாக என்று கூறி என்க.

க0கூ. பொறி - மெய்வாய் முதலிய பொறிகள்; விசைகெட்ட எந்திரம் எனினுமாம். சிதர்ந்து - சிதைந்து.

கக0. தார் - மாலை. பூண் - அணிகலன்.

ககக. துளங்கி - நடுங்கி. மெய்ம்மறப்ப - மூர்ச்சையடைய.

[வாசவதத்தையின் துயரம்.]

ககஉ - ககஅ: இடி.......................................பின்றை

(பொ - ரை) உதயணன் இங்ஙனம் மூர்ச்சித்து விழ்ந்தமை கண்ட வாசவதத்தையும் இடிஏறு கேட்ட நாகப்பாம்பு போலத் தனது சாயலும் அழகும் வாடும்படியும் கூந்தல் பொலிவிழந்து விரியாநிற்பவும் அவன் மார்பின்கண் சாய்ந்து மயங்கி மூர்ச்சையுற்ருள்; அதுகண்ட அரண்மனையினுள்ள ஏனை மகளிரும் பிறரும் நெஞ்சம் பொருமி அழுதலாலே அவ்வரண்மனை அழுகையொலியான் நிரம்பாநிற்பப் பின்னர் என்க.

(வி - ம்.) ககஉ. இடியேறுகேட்ட நாகம் என்க. ககங. பூங்கொடிபோன்ற மென்மையும் கொழுவிய அழகும் என்க. ககச. பூச்சூடப்பட்ட கரிய கூந்தல் புற்கென்று விரிய என்க. ககரு. மம்மர் - மயக்கம்; மூர்ச்சை. அம்மயக்கத்தை நோக்கி என்க. ககஎ. அகன்ற பெரிய அரண்மனை என்க.

ககஅ. ஆகுலம் - ஆரவாரம். கழுமிய - நிறைந்த: இதனைச் செயவெனெச்சமாக்குக.

ககக - கஉச: அவல........................வெம்பனிவிழ

(பொ - ரை.) ஆண்டுள்ளார் துன்பமாகிய உயிர்ப்பிணியைத் துவரப்போக்கும் சந்தன முதலியவற்றை அவர்தம் உடம்பிலே நன்கு தடவுதல் முதலிய குளிர்ச்சி செய்யும் செயல்களைச் செய்தலானே அப்பெருந்துன்பம் சிறிது தணியா நிற்ப உதயணன் ஒரோவழித் தெளிந்து, காதலால் உண்டான கவலை என்னும் தளை தன்னைக் கட்டுதலானே தனது தாமரைமலரை ஒத்த கண்ணினின்றும் வெவ்விய கண்ணீர் விழாநிற்ப என்க.

(வி - ம்.) ககக. அவலம் - துன்பத்தின் நான்கு நிலையினுள் ஒன்று; உயிரைப்பற்றும் நோய் என்க. அடி அற - முதலின்றிக் கெட. கஉ0. தவல் - குற்றம். தடி - தசை: உடம்புக்கு ஆகுபெயர். அப்பி- தடவி. சீதச்செய்கை - குளிரூட்டுஞ் செயல். கஉஉ. பெருமகன் -

உதயணகுமரன். தெளிவு முந்துறீஇ - தெளிவு முந்தப்பெற்று. கஉரு. காதலின் - அன்பினாலே. "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர் புன்கணீர் பூசல்தரும்" என்றார் தேவரும். தாமரை: ஆகுபெயர். துன்பக்கண்ணீர் ஆகலின் வெம்பனி என்றார்.

கஉ௬ - கநுக : விண்டோய்..........................கலங்கி.

(பொ - ரை.) வானுற வளர்ந்த காட்டின்கண் யான் பகைவரானே சிறையாகப் பற்றப்பட்டுப் புகலிடம் அற்ற பின்னர், மறைவான வஞ்சகச் செயலாலே உச்சைனி நகரத்தில் மாந்தர் கொண்டாடிய நீராட்டு விழவிலே அம்மன்னன் மகளாகிய வாசவதத்தையைக் கைப்பற்றிப் புறப்பட்டு வரும்படி செய்து நின் பின்னர் யானும் வருவேன் என்று எனக்குக் கூறினை. அக்கூற்றினைப் பொய்யாக்கினையோ என்று வாய்விட்டுப் புலம்பித் தன் தோழனைக் காணப் பெருமையானே கலக்கமடைந்து என்க.

(வி - ம்.) கஉ௬. வேழவேட்டம் - யானை வேட்டை.

கஉ௬. செல்சார்வு - புகலிடம்.

கஉஎ. மறைவினைக்கொண்ட வஞ்சகச் செயல் என்க.

நகர்த்துறை விழவினுள் எனமாறுக. நகர் - உச்சைனி. துறை விழவு - நீராட்டுவிழா.

கஉஅ. ஏதின்மன்னன்-அயன்மையுடைய பிரச்சோதன மன்னன். கோப்பெருந்தேவி பயந்த என்பான், மன்னன் காதலி பயந்த என்றான். கஉகூ. மாதரை - வாசவதத்தையை. என்றாய் அம்மொழியைப் பொய்யாக்கினையோ என்க.

கநுக. காதற்றோழன் - யூகி.

கநுஉ - கநுஅ: மாதாங்கு.......................மயங்கியும்

(பொ - ரை.) அவ்வுதயணன் ஞாயிறுதோன்றி ஒளிசெய்யப்படாத உலகம்போலத் தனது நெஞ்சத்தைத் துயரஇருள் மறைத்தொழிதலானே மயங்கி இனி யான் அறங்களும் செயல்களும் தளரும்படி இளைப்புற்றுத் துன்பக் கடலிலே அழுந்துதலன்றி, எனது அரசியலின்கண் வழுவாமனின்று வாழகில்லேன் என்று அரற்றி மீண்டு மயங்கியும் என்க.

(வி - ம்.) கநுஉ. யானையைத் தடுத்து வயமாக்கி நடத்தும் பெரிய கையினையுடையவனும், அரசர்க்கரசனுமாகிய உதயணகுமரன் என்க. கநுநு. நளிகதிர் மண்டிலம் - செறிந்த கதிரையுடைய ஞாயிற்று மண்டிலம். நாள்முதல் - வைகறைப் பொழுது.

ஞாயிறு - யூகிக்கும் கநுச. உலகம் உதயணன் நெஞ்சத்திற்கும் உவமைகள். கநு௫. மருள் - மயக்கம். அகம் - நெஞ்சு.

௧௩௬. தருமம்-அரசியலறம். கருமம்-அரசியற் செயல். சாஅய்-இளைத்து. ௧௩௭. ஆழின் அல்லதை-துன்பத்திலே அழுந்துதலன்றி.

௧௩௯ - ௧௫௩ : நிழற்பொலி................உடையோய்

(பொ - ரை.) யாம் விக்கிரமன்னன் அரண்மனையின்கண் வளர்ந்து வந்த அவ்விளமைக் காலத்தே விளையாட்டினைப் பெரிதும் விரும்பி உணவுகொள்ளாத குற்றத்தின் பொருட்டு, நந்தாய் "நம்பிக்கு உணவிடுதல் வேண்டா! பெறற்கருஞ் செல்வம் போன்ற என் மகனை யூகிமட்டும் உண்க" என்று கூறினளாக; அப்பொழுது அக்கோப்பெருந் தேவியின் அடிகளைப் பற்றிக்கொண்டு "தாயிர்! நீயிர் எம்பாற் குணங்கண்டு போற்றுவிர் ஆயினும், அன்றிக் குற்றங்கண்டு வெகுள்வீர் ஆயினும், இருவழியும் எம்மிருவர்பாலும் ஒப்பச் செய்வதல்லது இங்ஙனம் எம்மில் ஒருவரை உவத்தலும் ஒருவரை உவர்த்தலும் தகுதியன்று. அவர் செய்குற்றம் என்குற்றமே" என்று கூறி, என் குற்றத்தை நின்னதாக்கிக் கொண்டு அன்புடைமையாலே அவளது அருளைச் சிறப்பித்து எனக்கு இன்பம் உண்டாகும் செவ்வியை உண்டாக்குதல் அவ் விளம் பருவத்திலேயே இயல்பாக உடையை என்க.

(வி - ம்.) ௧௩௯. நிழலாலே பொலிவுற்ற கா என்க. கா - பூம் பொழில். நிரந்து-கூடி. ௧௪௦. குழற்சிகை-குழலாகக் கட்டிய குடுமி. அவிழ - அவிழும்படி. குண்டுநீர் - ஆழ்ந்தநீர். யமுனை - ஓர்யாறு. ௧௪௧. கணைக்கடு நீத்து - அம்புபோல விரைந்தொழுகும் வெள்ளம். புணை - தெப்பம். தழீஇ - தழுவி. ௧௪௧ - ௧௪௨. தயிரையுடையனவாகிய இனிய சுவையுடைய உணவு. ௧௪௩. ஓரீஇ - விடுத்து. ௧௪௪ மன் - ஈண்டு உதயணன் மாமனாகிய விக்கிரமன்னன். வேகநம்பி-சினமிக்க உதயணன். தாய் சினந்துமிழ்த் தானுஞ் சிவத்தலால் வேகநம்பி என்றபடியாம். ௧௪௫. ஆகுபொருள் அறிவி என்றது தன் தாயாகிய மிருகாபதியை - மிருகாபதி உதயணனுக்கும் யூகிக்கும் வேற்றுமை கருதாதவள், ஆகலின் யூகியை என்மகன் என்றுள் என்பது கருத்து.

௧௪௭. யூகந்தராயன் - யூகி. ௧௪௮. அடிக்கலம் - அடியின்கண் அணியும் அணிகலன். எம்பாற் குற்றம் காண்பீரேனும் அல்லது குணங்காண்பீரேனும் அவை இருவர்க்கும் பொதுவாமன்றி ஒருவர்க்கே உரியவாகா ஆகலின் யான் குணமுடையேனாகவும் உதயணன் குற்றமுடையனாகவும் தாங்கள் கொள்வது தகுதியன்று. அக்குற்றம் புரவலன்மாட்டுமட்டுமே உளதன்று என்மாட்டும் உள்ளதே யாகும் என்று என் குற்றத்தை நின்மேலதாகவும் கொண்டு அன்பானும் அளியானும் என்னைச் சிறப்பிக்கும் தன்மையுடையோய் என்றவாறு. ௧௫௨. இன்பதம் - இனிய செவ்விகள்.

௧௫௪ - ௧௫௭ : முதுமை..................அரற்ற

(பொ - ரை.) இனி அவ்விளம்பருவத்தேயன்றி அகவை முதிர்ந்த காலத்தும், எனக்குத் தாழ்வு வரும்போதெல்லாம்

தூண்போலத் தாங்கி என் பின்னரே வரும் உரிமையை உடைய பெருந்தகுதியுடையோய்! அவ்வுரிமை கருதாமல் என்னைத் தனியே விடுத்து முன்னர்ச் செல்லுதல் நின்னியல்பிற்கு ஒத்ததன்று அங்ஙனம் செல்லுதல் மூர்க்கர்க்குரிய இயல்பே ஆகும், என்று இன்னோரன்ன பலவும் கேட்டோர் பெரிதும் உளம் உருகும்படி மீட்டும் மீட்டும் கூறிப் புலம்பா நிற்க என்க.

(வி - ம்). முதுமைக் காலம் - இனிவரும் முதுமைப் பருவத்தும் என்க. மதலை - தூண்; நன்மகவுமாம். கடுசு. முன்போக்கு - முன்னர் இறந்துபோதல். மூர்க்கர் - கயவர். கடுஎ. அரற்ற - புலம்பா நிற்ப.

[உருமண்ணுவா உதயணனைத் தேற்றுதல்]

கடுஅ - ககூகூ : பூந்தார்...............மாரிற்கூறி

(பொ-ரை.) அதுகண்ட உருமண்ணுவா "பூந்தார் மார்ப! உலகியல்பினை எண்ணிப்பாராத காவலனே! நீ நம் பகைவர் முன்னர் அழுதலை மேற்கொண்டு இத்தன்மையுடையை ஆதல் நினது தலைமைத் தன்மைக்குப் பொருந்துவதொன்றன்று. வளைந்த கைமரங்கள் ஆக்கையற்றுக் கீழே வீழ்ந்த விடத்தும் தன்னிலைமையிற் றளராது நிலைத்து நிற்கும் தூண்போன்று துன்பம் வந்த பொழுது நடுங்காமலும் இன்பம் வந்த காலத்து மகிழாமலும் தம் நிலைமையிலேயே உறுதியாக நிற்றல் வீரர்கட்குரிய கடமையாகும்," என இன்னோரன்ன மொழிகள் பல முறைமையோடே கூறி என்க.

(வி - ம்.) கடுஅ. மார்ப : விளி. புலம்பு - துன்பம்; அழுகை. அழிஇ - அழிந்து : நெஞ்சழிந்து. கடுகூ. இரு நிலவரைப்பு - பெரிய மண்ணுலகம்.

இரு நிலவரைப்பின் இயற்கை என்றது, இவ்வுலகப் பொருள்கள் அனைத்தும் நிலையுதலில்லாதன ஆகும் இயல்பு என்றவாறு.

ககூ0. காவல : விளி. பேணுதவர் - ஆருணியரசன் முதலிய பகைவர். ககூக. இனையை - இத்தன்மையுடையை. இறைமை - தலைமைத்தன்மை. ககூஉ. கொடுங்காழ் - வளைந்த கைமரங்கள். கூடம் : ஓர் இல்லுறுப்பு. ஊன்றிய - ஊன்றப்பட்ட. நெடுங்காழ் - நெடிய தூண். ககூச. துளங்காது - நடுங்காமல். மகிழாது - பொச்சாப்பு எய்தாமல், எனவே உதயணன் உவகை மகிழ்ச்சியிற் சோர்ந்திருத்தலையும் எடுத்துக்காட்டுதல் உணர்க. ககூகு. ஆடவர் - வீரர் என்பதுபட நின்றது. மாற்றம் - மொழி.

ககூஅ - களச : அடநடுநர்...............தொடர்ந்தென்

(பொ-ரை.) மேலும் அவ்வூகியினது அமைச்சுத் தொழிற்றிறத்தைத் தானும் இடையிடையே பாராட்டி அமைச்சர்

முதலியோருடைய உதவியாலே நின் அரசியல் நினக்கு உரிய தாகும் பொழுது அவ்வூகி பிழைத்து வருதலுங்கூடும் என்று கூறித் தேற்ற நிற்பவும், தேருனுய்த் தான் வருந்தும் அந்நெறி யிலேயே அவ்விணை வித்தகன் தொடர்ந்து செல்லாநின்றனன் என்க.

(வி - ம்.) கசுஎ. அடநடதருடடங்கன் தபுத்த அந்தணாளர் என்போர் ஈண்டு உருமண்ணுவாவிற்கு உவமையாகக் கூறப்பட்டனர் போலும். இவ்வடியாலே கூறப்படும் அந்தணாளரும் அவர் தஞ் செய லும் நன்கு விளக்கமுறவில்லை.

கசுஅ. வெந்திறல் வீரன் என்றது உருமண்ணுவாவினை. கசுகூ. சொற்றுணைத் தோழன் என்றது யூகியை. ஒருவர்க்கு இரங்குவாரைத் தேற்ற முயல்வோர் அவரால் இரங்கப்படுவோர் குணநலங்களைப் பாராட்டுதல் ஓர் உலகியல்பாதல் நுண்ணிதின் உணர்க.

கஎ௦. நற்றுணை மாந்தர் - ஐம்பெருங் குழுவினர் முதலியோர். கஎக. ஆயினும் என்புழி உம்மையை அசைச் சொல்லாகக் கொள்க. தோழன் - யூகி. கஎஉ. அயர் பெருநெறி-அயர்தற்குக் காரணமான பெரிய வழி. கஎச. வீணை வித்தகன் - உதயணகுமரன். விலாவணை - புலம்பல்.

க௦. யூகிக்கு விலாவித்தது முற்றிற்று

---

# கக. அவலந் தீர்ந்தது

இதன்கண், உருமண்ணுவா என்னும் அமைச்சனை உதயண குமரனுக்குத் துணைவனாகத் தோழர்கள் அமைத்ததும், அவ்வமைச்சன் அவ்வுதயணனுடைய துயரத்தை அகற்றுதற்கும் ஓதிஞானமுடைய ஒரு துறவியின்பாற் சென்று குறிகேட்டற்கும் இலாவாண நகரத்தின் பக்கத்திலுள்ள மலைச்சாரலிலே உண்டாட்டுத் தலைக்கிடாகச் சயந்தி நகர மக்களுடன் உதயணனை அழைத்துச் செல்லக் கருதி அதற்கு அவனை உடம்படுவித்தலும் பிறவும் கூறப்படும்.

விலாவணை ஒழியான் வீணைக் கைவினை
நிலாமணிக் கொடும்பூண் நெடுந்தகை நினைந்து
வைகல் தோறும் வான்மதி மெலிவிற்
பையுள் கொண்ட படிமை நோக்கி
அரும்பெறல் அமைச்சரொ டொருங்குடன் குழீஇக்
காவலன் அதிர்ந்த காலை மண்மிசைத்
தாவில் பல்லுயிர் தளர்ச்சி எய்தலின்
எத்திறத் தாயினும் அத்திறம் அகற்றுதல்
மந்திர மாந்தர் தந்திரம் ஆதலின்
வத்தவர் கோமாற் கொத்த உறுதொழில்
உத்தம மந்திரி யூகியிற் பின்னர்
அருமை சான்ற ஆய்பொருட் கேள்வி
உருமண் ணுவாவிற் குறுகடன் இதுவெனத்
தாழாத் தோழர் தன்மேல் வைத்தபின்
வீழாக் காதலொடும் விரும்புவனன் ஆகிச்
செய்பொருள் இதுவென ஐயந் தீர
மன்னுயிர் ஞாலக் கின்னுயிர் ஒக்கும்
இறைபடு துன்பங் குறைபட எறியும்
மருந்தின் பிண்டந் தெரிந்தனிர் கேண்மின்
தணப்பில் வேட்கை தலைத்தலை சிறப்ப
உணர்ப்புள் ளுறுத்த ஊடல் அமிர்தத்துப்
புணர்ப்புள் ளுறுத்த புரைபதம் பேணும்
காமக் காரிகைக் காதன் மகளிர்
தாமப் புணர்முலைத் தலைப்பிணி உறீஇ

யாமக் கோட்டத் தருஞ்சிறைக் கோடல்
வணங்கா மன்னரை வாழ்வுகெட முருக்கி
அணங்கரும் பெருந்திறை கொணர்ந்துமுன் இடுதல்
பூமலர் பொதுளிய புனல்வரைச் சோலை
மாமலைச் சாரலொடு கானங் காட்டுதல்
யானையுஞ் சுரியுளை அரிமான் ஏறும்
மானிற் பெடையும் வாள்வரி யுழுவையும்
புள்ளு மாக்களும் உள்ளுறுத் தியன்ற
நொய்ம்மர நெடும்புணை கைம்முதல் தழீஇக்
கூறு டாயமொடு குழூஉக்கொண் டீண்டி
ஆறு டாயமொ டணிவிழ வமர்தல்
இன்ன தொன்றினுள் என்னதொன் றுயினும்
காமுறு கருமங் கால்வலை யாக
ஏமுற வொழியா ஏயர் மன்னனை
உடுத்துவழி வந்த உழுவல் அன்பின்
வடுத்தீர் கைவினை வாசவ தத்தையொ(டு)
ஒருப்படுத் தொழியா தோங்குமலை மருங்கிற்
கடிகமழ் கானங் காணக் காட்டிப்
படிவப் பள்ளியுட் பாவப் பெருமரம்
விரத மழுவின் வேரறத் துணிக்கும்
குறிக்கோள் உறுதவன் உண்மை கூறி
........................................................
இன்றே யன்றியுந் தொன்றுவழி வந்த
குன்றாக் கற்பினெங் கோப்பெருங் கிழவோள்
நித்திலம் பொதிந்த இப்பி போல
திருவயிற் றகவயின் உருவொளி அரூஅ
நின்னைத் தாங்கிய நன்னாள் அமயத்துக்
கண்ணிழல் ஞாறிய காமர் பள்ளியுள்
வெண்ணிலா முற்றத்து விரும்பி அசைதலின்
ஒள்ளொளி அரத்தம் ஊனென நசைஇப்
பல்வலிப் பறவை பற்றுபு பரிந்து
விபுலம் என்னும் வியன்பெருங் குன்றத்(து)
அருவரை அருகர் ஆய்நலங் கவினிய
ஆலங் கானத் தணியொடு பொலிந்த

ஞாலங் காவல் நஞ்சென நீக்கிப்
பாய்பரி இவுளி ஏயர் பெருமகன்
தன்கட் கோற்றம் எல்லாந் தன்மகன்
வென்றித் தானை விக்கிரற் கருளி
மறுவில் நெஞ்சமொடு மாதவந் தாங்கி
உறுபெருங் காட்சி ஓங்கிய படிவத்(து)
அறம்புரி தந்தை பள்ளிய தருகர்ப்
பறந்துசெல் சிம்புள் பையென வைத்தலும்
கயலேர் கண்ணி துயில்ஏற் றெழவே
உயிர்போய் உறுமையின் உறுபுட் போக
போற்றுருடி மாதர் பொறைநோய் கூர
எல்லாக் கோளு நல்வழி நோக்கத்
திருமணி விளக்கந் திசைநின் றழலப்
பெருமணிப் பாவையிற் பிறந்தனை கிடந்தோய்
திருமெய் தழீஇ அருமைத் தாக
நிகழ்ந்ததை அறியாள் கவன்றனள் இரங்க
ஆத்திரை போந்த அருந்தவன் கண்டுதன்
ஆத்த காதன்மகள் ஆவ தறிந்துசென்(று)
அஞ்சல் ஓம்பென நெஞ்சகம் புகலப்
பள்ளிக் கொண்டுபுக் குள்ளழி வோம்பி
அதிரா ஞாலத் தரசுவீற் றிருந்த
கதையுரைக் கெல்லாங் காரணன் ஆதலின்
புதைஇருள் அகற்றும் பொங்கொளி மண்டிலம்
உதயம் இவர்தர உதித்தோன் மற்றிவன்
உதயணன் ஆகெனப் பெயர்முதற் கொளீஇப்
பரம இருடிகள் பல்லோர்க்குத் தலைவன்
தருமந் தாங்கிய தவாஅக் கொள்கைப்
பிரமசுந் தரனெனும் பெரும்பெயர் முனிவற்குப்
பழிப்பில் கற்பின் பரமசுந் தரியெனும்
விழுத்தகு பத்தினி விரும்பிப் பெற்ற
புத்திரன் தன்னொடு வத்தவர் தோன்றலும்
இருவிரும் அவ்வழி மருவிவிளை யாடிச்
செல்லா நின்ற சில்லென் காலை
வெஞ்சின வேழ வெகுளி நீக்கும்

மந்திர நாமம் வந்துநீர் கன்மேனத்
தேவ இந்திரனின் திருந்தப் பெற்ற
ஆய்பெரு நல்லியாழ் அமைவர எழீஇக்
கான யானையுங் கரந்துறை புள்ளும்
ஏனைய பிறவும் ஆனு உவகையோடு
கேட்டவை எல்லாம் வேட்டவை விரும்பி
வேண்டிய செய்தலின் ஈண்டிய மாதவன்
வரத்தின் வல்லே வல்லை யாகேன
உரைத்தம் முனிவன் உவந்தனன் கொடுத்துப்
பெறலரும் பேரியாழ் பெற்ற வாறும்
ஆர்வ நெஞ்சினன் ஆகிய கல்வி
நேர்தனக் கில்லா நெஞ்சுண் அமைதி
யூகி நினக்கிங் கடைக்கலம் என்பதும்
போகிய புகழோன் பணிப்பக் கொண்டு
தோழன் ஆகித் தோமில் கேள்வி
யாழும் பாட்டும் அவைதுறை போகிக்
கல்லா நின்ற சில்லேன் காலத்து
மைவரை மருங்கின் மடப்பிடி சூழத்
தெய்வ யானை நின்றது நோக்கிக்
கண்டே நின்று காதல் ஊர்தர
மந்திர வாய்ப்பும் வல்ல யாழின்
தந்திர வகையுங் காண்பல் யானேன
எழீஇயவண் இயக்கப் பொழிமத யானை
வேண்டிய செய்தலின் ஈண்டிய மாதவன்
பள்ளிக் குய்ப்ப நள்ளிருட் கூறும்
பாகர் ஏறினுந் தோற்கயி றிடினும்
நீமுன் உண்ணினு நீங்குவல் யானேன
ஆகு பொருள்கேட் டறிவுற் றெழுந்து
போதுங் காலை மாதவன் ஒருமகன்
வீயாச் செங்கோல் விக்கிரன் ஒருநாள்
எச்சம் இன்மையின் எவ்வங் கூராத்
துப்புர வெல்லாந் துறப்பேன் யானேனத்
தற்பயந் தெடுத்தவன் தாள்நிழல் வந்தோன்
மதலை யாகுமிப் புதல்வன் யாரேனச்

செருமிகு சீற்றத்துக் குருகுலத் தரசன்
சாயாச் செங்கோற் சதானிகன் தேவி
அருமைசால் கற்பின் மிருகா பதியெனும்
நங்கை தன்னகர்க் கங்குற் கிடந்தோட்(கு)
இன்னது நிகழ இவ்வயின் தந்த
பொன்னணி பைம்பூட் புதல்வன் தானிவன்
ஐயாண்டு நிறைந்தனன் ஆதலின் இவனைத்
தெய்வ ஞானந் திறம்படக் காட்டித்
தன்னகர்க் குய்ப்பென் என்றலும் அடிகள்
என்னுழைத் தம்மின் இறையென இயற்றித்
தாய மெல்லாந் தனக்குரித் தாக
ஏயர் கோற்றம் இவன்வயிற் கொடுத்துப்
பெறலரும் பெருந்தவத் துறுபயன் கொள்வலென்(று)
ஆய்புகழ் முனிவனொடு தேவியை இரந்து சேடகமுனி
செருமிகு உருசில்தன் மருமகற் றழீஇ
நீல யானை நின்றது பண்ணிக்
கோல எருத்தங் குலவ ஏற்றி
வைசாலி வளநகர் புக்குத்தன் னுளமனைக் கெல்லாம்
உதயணன் இறையென அறிவரச் சாற்றி
வேத்தவை நடுவண் வீற்றினி திருத்தி
ஏயர் குலமுதற் கிறைவன் ஆகி
அவ்வழி மற்றுநீ வளர இவ்வழிப்
பட்டதை அறியான் பயநிலங் காவலன்
கட்டழல் எவ்வமோடு கடவுளை வினவக்
கடும்புள் எதிர்ந்து காட்டகத் திட்டதூஉம்
நெடுந்தோள் அரிவை நின்னைப் பெற்றதூஉம்
தகையுடை முனிவன் தலைப்பட் டதூஉம்
வகையுடை நல்யாழ் வரத்திற் பெற்றதூஉம்
விசையுடை வேழம் வணக்கும் விச்சையும்
மாமன் கொண்டுதன் மாநகர் புக்கதூஉம்
ஏயர்க் கிறையென இயற்றிய வண்ணமும்
மாசில் கோற்றவன் மறுத்திவண் வரவும்
ஆண்டகை மொய்ம்பினோர் அரசடிப் படுப்பதூஉம்
ஈண்டிவண் வந்துநீ வீற்றிருப் பதூஉம்

உள்ளுறுத் தோதியான் உள்ளம் உவப்ப
முற்பா னிகழ்ந்தவும் பிற்பாற் பெருக்கமும்
இனையவை எல்லாம் இயற்படப் பிழையாது
வினவிய பொழுதின் விரித்துரைத் தனனோர்
பனுவ லாளனைப் பணிந்துகை கூப்பிக்
கண்போற் காதல்நின் கழிபே ரமைச்சன்
முன்போல் விளிந்து முடிக்குங் காரியம்
உண்டு மாங்கோல் கண்டுவந் தோர்களைக்
கண்டில மாதலிற் பண்போடு புணரக்
கேட்டபின் அறிதும் யாமென வேட்ப
இன்னவை கிளந்துபின் தன்வயின் தழீஇ
என்கூற் றினையு நங்கூற் றாகத்
தேன்சுவைக் கொளீஇ வேம்பின் ஊட்டும்
மகாஅர்மருந் தாளரின் மறத்தகை அண்ணலை
நகாஅர் பல்லவர் நலம்புகழ்ந் தேத்தும்
விழுப்பம் எய்தி ஒழுக்கியல் போம்பி
இழுக்கா தியன்ற இலாவாணத் தயல்
உண்டாட் டயர்தல் உறுதி உடைத்தென
வண்டார் மார்பனை வலியுள் ளுரீஇ
எழ்ச்சி வேண்டுஞ் சூழ்ச்சி கொடுக்கென
உள்ள தோழரும் ஒருப்பட் டெய்தி
வள்ளிதழ் நறுந்தார் வத்தவற் குறுகி
முறைபட உணர்ந்த குறைவில் கட்டுரை
கொள்ளக் கூறலும் வள்ளலும் விரும்பி
நிதியக் கலத்தொடு பதிபல அருளிக்
கொற்ற முரசிற் கோடணை கொட்டி
ஓசைபோக் கினரால் உவகையின் மகிழ்ந்தென்.

---

## ௧௧. அவலந் தீர்ந்தது.

அஃதாவது, யூகியின் சாக்காடு பற்றித் துன்புற்ற உதயணனுடைய துன்பத்தை உருமண்ணுவா உபாயத்தானே போக்க அவன் அத்துன்ப மொழிந்திருந்ததனைக் கூறும்பகுதி என்றவாறு.

## உரை

க - ரு : விலாவணை.........................குழீஇ.

(பொ - ரை.) இவ்வண்ணமாக நெடுந்தகை யூகியை நினைந்து புலம்புதல் தவிரானாய், நாள்தோறும் தேய்பிறைபோல மெலிந்து வருத்தம் மேற்கொள்ளாநிற்ப, அவனது உருவத்தை நோக்கிய உருமண்ணுவா ஏனை அமைச்சரோடு ஒருங்குகூடி ஆராய்ந்தபொழுது என்க.

(வி - ம்.) க - உ. விலாவணை - அழுகை. வீணை வாசித்தலிற் சிறந்தவனும், முத்துமாலை முதலிய அணிகலன்களை அணிந்தவனும் நெடிய புகழினையுடையவனும் ஆகிய உதயணகுமரன் என்க. யூகியை நினைந்தென்க. ங. வைகறொறும் - நாள்தோறும். மதி-தேய்பிறை. ச. பையுள் - துன்பம். படிமை - உருவம். ரு. குழீஇ - கூடி. ஆராய்ந்தபொழுது என வருவித்துரைக்க.

சு - கச : காவலன்.....................வைத்தபின்.

(பொ - ரை.) மன்னவன் தளர்ச்சி எய்தியபொழுது மன்னுயிர் எல்லாம் தளர்ச்சி எய்துதல் இயல்பு; அங்ஙனம் தளர்ச்சி எய்திய பொழுது எவ்வாறாயினும் முயன்று அம் மன்னவன் தளர்ச்சியைப் போக்குதல் அவன்றன் அமைச்சர்க்குரிய கடமையாம்; ஆகலின் யூகிக்குப் பின்னர் உதயணகுமரனுக்கு எய்திய தளர்ச்சியைப் போக்குதல் உருமண்ணுவாவின் கடமையே யாயிற்று என்று கூறி அக்கடமையைத் தோழர், அவ் உருமண்ணுவாவின் மேலதாக்கி வைத்தபின்னர் என்க.

(வி - ம்.) சு. அதிர்ந்தகாலை-துன்பத்தால் நடுக்கமுற்றபொழுது என்க. எ. தாஇல் - குற்றமற்ற. அ. எத்திறத்தாயினும்-எவ்வுபாயத்தாலேனும். கூ. அத்திறம் - அத்தளர்ச்சியை, மந்திரமாந்தர்-மந்திரச் சுற்றத்தார்; அமைச்சர். தந்திரம் - ஈண்டு ஆகுபெயராய்க் கடமைக்காயிற்று. க0. வத்தவர் கோமான்-உதயணகுமரன். கக. உத்தம மந்திரியாகிய யூகி என்க. கஉ. உணர்தற்கரிய தன்மை நிரம்பியதும், ஆராய்தற்குரியதுமாகிய நாற்கேள்வியையுடைய உருமண்ணுவாவிற்கே என்க. கச. குறையாத பெருமையையுடைய தோழராகிய ஏனை அமைச்சர் என்க. தன்மேல் வைத்தபின் - தன் கடமையாக்கி வைத்தபின்னர் என்பதாம். (தன்-உருமண்ணுவா)

[உருமண்ணுவாவின் கூற்று.]

கரு- கக : வீழாக்காதல்.....................கேண்மின்.

(பொ - ரை.) அக்கடமையை ஏற்றுக் கோடற்கண் கெடாத விருப்பமுடையனாய் அவ் உருமண்ணுவாவும், தன் தோழரை நோக்கி "உணர்வுடையீரே! நமது வேந்தன்படும் துன்பந்திரும்பபடி அவனுக்கு ஊட்டற்பாலவாகிய மருந்தின் தொகுதியை யான் கூறக் கேண்மின்" என்றான், என்க.

(வி - ம்.) கடு. வீழாக்காதல்-குறையாத அன்பு. விரும்புவனன்-விரும்புவோன்.

கசு. செய்பொருள் - யாம் செய்யற்பால செயல்.

கஎ. நிலைபெற்ற உயிர்த்தொகுதியையுடைய உலகத்திற்கு உயிர் எனச் சிறந்த அரசன் என்க. "நெல்லும் உயிரன்றே நீரும் உயிர் அன்றே மன்னன் உயிர்த்தே மலர்தலையுலகம்" (புறநா. கஅசு)என்றார், பிறரும். குறைபட - தணிய. எறியும் என்றது தீர்க்கும் என்பது பட நின்றது. கசு. பிண்டம் - தொகுதி. தெரிந்தனிர் : விளி. அறிவுடையீரே என்று விளித்தபடியாம்.

[உதயணன் துன்பம்போக்கும் உபாயங்கள்.]

உ௦ - உடு : தணப்பில்.................சிறைக்கோடல்.

(பொ - ரை.) நீக்கமில்லாத விருப்பம் இடந்தோறும் இடந்தொறும் மிகாநிற்ப உணர்த்துதலை உட்கொண்ட ஊடலாகிய அமிழ்தத்தினது, புணர்தலை உட்கொண்ட உயரிய பதன் அழியாமற் பேணுதற்குரிய காமத்தையும், அழகையும், காதலையும் உடைய மகளிர் தம் முலையிற் பிணித்து உவளகமாகிய தப்புதற்கரிய சிறைக்கோட்டத்திலே வைத்தலும், பகைமன்னர் வாழ்வு கெடும்படி வென்று அவர் தரும் அரிய திறைப்பொருளைக் கொணர்ந்து முன்னே குவித்தலும், மலைவளம் காட்டுவளம் முதலியவற்றைக் காட்டி மகிழ்வித்தலும் என்க.

(வி - ம்.) உ௦. தணப்புஇல் - பிரிவில்லாத. உக. ஊடியவழி அதனை உணர்த்தல் ஒருதலையாகலின் உணர்ப்புள்ளுறுத்த ஊடல் என்றார் ; "ஊடுதல் காமத்திற்கு இன்ப" மாகலின் அதனை அமிர்தம் என்றார். ஐம்பொறி நுகர்ச்சிகளையும் உடைய மகளிர்பால் ஊற்றின்பமே தலைசிறந்ததாதல் பற்றி அதனை விதந்தோதுவார் புணர்ப்புள்ளுறுத்த புரைபதம் என்றார். புரைபதம்பேணும் - உயர்ந்த செவ்வி கெடாமற் பாதுகாக்கும் (மகளிர்) என்க. அஃதாவது ஊடல் மிக்கவழிக் கூடல் இன்பமின்றாதல் அறிந்து காமம் பதனழியாது உணர்ந்து கூடுகின்ற மகளிர் என்றவாறு.

உஉ. காரிகை-அழகு. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கஞ் சிறந்ததன்றென்பது தோன்ற காதன் மகளிர் என்றார்.

உ௩. தாமம் - மாலை. புணர்தற்குக் காரணமான முலை என்க. பிணியுறீஇ - பிணித்து. உடு. யாமக்கோட்டம் என்றது உவளகத்தை; தப்புதற்கரிய சிறை என்க. கோடல் - கொள்ளுதல்.

உசு. வணங்காமன்னர் - பகையரசர். வாழ்வுகெட முருக்கி அணங்குதலானே வரும் பெருந்திறை என்க. அணங்கு - துன்பம்.

உஅ. பூமலர் : இருபெயரொட்டு. பொதுளிய-நிரம்பிய. புனலையுடைய மலையின்கட் சோலைஎன்க.

உகூ. கானம் - காடு.

கூ0 - கூள: யானையும்......................கால்வலையாக.

(பொ - ரை.) யானை முதலியவற்றின் முகங்கள் போன்ற முகங்களையுடையவாய் இயற்றப்பட்ட நெடிய தெப்பங்களைத் தழுவிக்கொண்டு ஆயத்தாரோடு நீராட்டு விழாவயர்வித்தலு மாகிய இன்னோரன்ன செயல்களுள் அவன் விரும்புவதொன் றனை வலையாகக் கொண்டு என்க.

(வி - ம்.) கூ0 - கூகூ. யானையும் அதன் பகையாகிய உளைமா னும், பெண்மானும் அதன் பகையாகிய உழுவையும், இங்ஙனமே ஒன்றற்கொன்று பகையான பறவைகளும் விலங்குகளுமாகியவற்றின் முகங்கள் போன்ற முகங்களையுடையனவாகச் செய்யப்பட்ட புணைகள் என்பது கருத்து.

கூ0. சுரியுளை அரிமான் ஏறு - சுரிந்த பிடரிமயிரையுடைய ஆண் சிங்கம். கூக. மானிற்பெடை - பெண்மான். கூஉ. வாள்வரி உழுவை- ஒளியுடைய வரிகளையுடைய புலி. வாள்போன்ற வரி எனினுமாம். கூஉ. மாக்கள், ஏனைய விலங்குகள் என்க. கூகூ. நொய்ம்மரம் - நொய்யமரம். கைம்முதல் - கையினாலே: உருபுமயக்கம். கூச. கூருடு ஆயம் கூறு கூறாகப்பிரிந்து விளையாடும் மகளிர் கூட்டம். அணிவிழவு - நீராட்டணிவிழா. கூரு. அமர்தல் - விரும்புதல்; விரும்பச்செய்தல் என்பதாம். கூசா. இன்னது: பன்மை ஒருமையின் மயங்கிற்று. இவற்றுள் என்க.

கூசா - கூள. இன்னதொன்றினுள் காமுறு கருமம் என்னதொன் றாயினும் கால்வலையாக என மாறுக. உதயணனைத் தம்வழிப்படுத்துங் கருவியாகலின் வலை என்றார்.

கூஅ - சஉ: ஏமுறவு..........................காட்டி.

(பொ - ரை.) மயக்க மொழியாத அவ்வுதயணகுமரனை உழுவலன்புடைய வாசவதத்தையோடே கூடிவருமாறு வயஞ் செய்து அழைத்துப்போய் உயர்ந்த மலைச்சாரலிடத்தேயுள்ள மணங்கமழும் பூம்பொழில்களை விரும்பிக் காணும்படி செய்து பின்னர் அக்காட்டின்கண் ஓதி ஞானமுடைய முனிவர் ஒருவர் இருத்தலையும் உணர்த்தி என்க.

(வி - ம்.) கூஅ. ஏமுறவு - மயக்கம். ஏயர்மன்னன்-உதயண குமரன். கூகூ. உடுத்து - வயஞ்செய்து. உழுவலன்பு - எழுமையுந் தொடர்ந்துவரும் அன்பு. ச0. வடுத்திர் - பழியற்ற. கைவினை - ஒழுக்கம் என்பதுபட நின்றது. சக. ஒருப்படுத்து - சேர்த்து.

சஉ. கடி - மணம். காணக்காட்டி என்பது, விரும்பிக்காணும்படி செய்தென்றவாறு. சகூ. படிவப்பள்ளி - தவவொழுக்கமுடையோர் உறையுமிடம். தீவினையாகிய பெரியமரத்தை விரதமாகிய கோடரி யாலேவேர் அற்றுப் போகும்படி வெட்டுகின்ற ஒரே குறிக்கோளை யுடைய மிக்க தவத்தையுடையோன் ஒரு துறவி உளனாதலையும் உணர்த்தி என்க. இனிக் குறிக்கோள் உறுதவன் என்றதற்கு எதிர் காலத்தே நிகழ்வனவற்றை அறிதற்குரிய குறி கேட்டற்குரிய தவன் எனினுமாம்.

[உதயணன் வரலாற்றினை அவனுக்கு நீயிர் இங்ஙனம் கூறி நினை வூட்டுமின் என்றல்.]

௪௬ - ௬௫ : இன்றே......................வைத்தலும்.

(பொ - ரை.) வேந்தனே! இற்றை நாளிலே மட்டும் அன்றிப் பண்டும் எங்கோப்பெருந்தேவியார் முத்தினைக் கருக்கொண்ட இப்பிபோல நின்னைத் தம் கருவயிற்றுள்ளங்கியிருந்த காலத்தே அழகிய மேனிலைமாடத்து நிலாமுற்றத்தமைந்த படுக்கையின்கண் விரும்பித் துயில்கொண்டிருந்தாராக, அப்பொழுது ஆண்டுவந்ததொரு சிம்புள் அவர் செவ்வாடை போர்த்திருந்தமையானே அவரை இஃதோர் ஊன்திரள் போலும் என்று கருதி அவ்வூனை உண்ண விரும்பிப் பற்றிக்கொண்டு சென்று விபுலம் என்னும் பெரிய மலையின் சாரலிலே தவஞ்செய்து கொண்டிருந்தவரும், அக்கோப்பெருந்தேவியாருடைய தந்தையும் ஆகிய துறவியினது தவப்பள்ளியினது பக்கத்தே பறந்து போகாநின்ற அப்பறவை மெத்தென நிலத்தின்கண் வைத்தது; அங்ஙனம் வைத்தவுடனே என்க.

(வி - ம்.) ௪௬. இன்றேயன்றியும் நின்னைத் தாங்கிய நன்னுளமயத்தும் (௧௪௬) காவலன் கடவுளைவினவ அவன் உரைத்தான் ஆதலின் யாமும் ஓர் (௧௬௫) பனுவலாளனைக் கேட்டபின் அறிதும் எனமுடியும்; எனவே யாம் இன்று ஓர் முனிவனைக்கேட்டறிதும்; இங்ஙனம் அறிதல் இன்றே அன்றிப் பண்டும் உண்டு என்றவாறும்.

தொன்றுதொட்டு அடிப்பட்டு வந்த பண்பாகிய குன்றாத கற்பையுடைய கோப்பெருங்கிழவோள் என்க. அவள் - மிருகாபதி.

௪அ. முத்தினைக் கருக்கொண்ட இப்பிபோல என்க. முத்து உதயணகுமரனுக்கும், இப்பி மிருகாபதிக்கும் உவமை. உருவும் ஒளியும் அருக நின்னை என்க. அழகும் ஒளியும் நீங்காத நின்னை என்றவாறு.

௫0. உதயணனைக் கருக்கொண்ட காலமாகலின் நன்னுள் அமயத்து என்றான். ௫௧. தன் கண் ஒளிதோன்றிய அழகிய படுக்கையுள் என்க. ௫௨. அசைதலின் - உறங்குதலானே.

௫௩. அரத்தம் - செவ்வாடைக்கு ஆகுபெயர். நசைஇ-உண்ண விரும்பி. ௫௪. பல்வலியாலே சிறந்த பறவை என்றவாறு. அது சிம்புள். பற்றுபு - கால்களாலே பற்றிக்கொண்டு. பரிந்து - சென்று.

௫௬. குன்றத்தினது அரிய பக்கமலையின் பக்கத்தே என்க. ஆராய்தற்குக் காரணமான நலத்தால் அழகுற்ற ஆலங்கானம் என்னும் காட்டகத்தில் என்க. ௫௭ - ௫அ. அழகோடே பொலிவுற்ற உலகத்தைக் காக்குந் தொழிலை நஞ்சுபோல நீக்கி என்க.

௫௯. ஏயர் பெருமகன் என்றது மிருகாபதியின் தந்தையை. ௬௧. கொற்றம் - ஈண்டு அரசுரிமை.

௫௩ - ௬௪. ஏயர் பெருமகனுகிய தந்தை, மாதவந்தாங்கி அறம்புரி தந்தை, தன்கட் கொற்றமெல்லாம் தன்மகன் விக்கிரற்கு அருளி உறுபெருங்காட்சி ஓங்கிய படிவத்தந்தை என்று தனித்தனிக் கூட்டுக. ௬௪. விக்கிரன் - உதயணன் மாமன்.

௬௨. மறு - குற்றம்.. ஈண்டுக் காமவெகுளி மயக்கங்கள்.

௬௩. பெருங்காட்சி - மெய்யுணர்ச்சி.

௬௪. அறம் - துறவறம். ௬௫. பையென: குறிப்புச்சொல்.

௬௬ - ௭௨: கயலேர்...................கிடந்தோய்

(பொ - ரை.) கயல் மீனை ஒத்த கண்ணையுடைய அக் கோப்பெருந்தேவியார் துயிலுணர்ந்து எழுதலானே அச்சிம்புள் உயிர் நீங்காமையை அறிந்து அகன்று போகாநிற்ப, அச்சத்தானும், வான்வழியே வந்தமையானும் தேவியார்க்குக் கருஉயிர்த் தற்றுன்பம் மிகாநிற்ப, அப்பொழுது கோள்கள் அனைத்தும் நன்றுகிய நெறியிலே இயங்காநிற்ப, அழகிய மணிவிளக்கம் திசைகளிடத்தே பரவிநின்று ஒளிவிடாநிற்ப மாணிக்கப் பாவைபோன்று பெருமானே! நீ பிறந்து கிடந்தனை என்க.

(வி - ம்.) ௬௬. கயல் ஏர் கண்ணி - கயல்மீனை ஒத்த கண்ணை யுடைய மிருகாபதி. துயிலினின்றும் நீங்கி உணர்ச்சி ஏற்று எழாநிற்ப என்க. ௬௭. புள் - சிம்புள். ௬௮. அச்சிம்புளைக் கண்டமையானே உண்டான அச்ச வகை என்க. அந்தரச்செலவு - அப்பறவை, தன்னை அந்தரத்தே கொண்டு சென்ற செலவானும் என்க. ௬௯. பொறை நோய் - கருவுயிர்த்தற்றுன்பம். கூர-மிக. ௭௧. ஞாயிறு முதலிய எல்லாக் கோள்களும் என்க. நல்வழி - நன்மையுண்டாதற்குக் காரண மான வழி. மணிவிளக்கம், கோப்பெருந்தேவியார் அணிந்திருந்த அணி கலன்களிலுள்ள மணிகளாகிய விளக்கங்கள் என்றவாறு. இனி அக் காட்டினூடே கிடந்த மணிகள் எனினுமாம்.

இங்ஙனமே திருத்தக்க முனிவரும் சீவகன் பிறந்தபொழுது,

"இருள்கெட இகலிஎங்கும் மணிவிளக்கெரிய ஏந்தி
அருளுடை மனத்தவாகி அணங்கெலாம் வணங்கிநிற்பப்
பொருகடற் பருதிபோலப் பொன்னனுன் பிறந்த போழ்தே
மருளுடை மாதர்உற்ற மம்மர்நோய் மறைந்த தன்றே"

என்பர். (சீவக. ௩0௪.)

௭௩ - ௮௩: திருமெய்.......................கொளீஇ.

(பொ - ரை.) அங்ஙனம் பிறந்த நின்னைக் கண்ட தேவி யார் நினது அழகிய மெய்யினை அன்பாலே தழுவிக்கொண்டு அரிதாகநிகழ்ந்த அந்நிகழ்ச்சியை அறியாதவராய் மனங்கவன்று அழுதனராக; அப்பொழுது அவ்வழியே யாத்திரை வந்த சேடகமுனிவர் அத்தேவியாரைக்கண்டு அவர் தம் மகளாரா தலை

யுணர்ந்து அவர்பாற் சென்று அஞ்சற்க! என்று தேற்றித் தமது நெஞ்சம் விரும்புதலானே அவரை அழைத்துக்கொண்டு தந் தவப்பள்ளியிலே புகுந்து அவரது துயரத்தைப் போக்கி நீ பின்னர் நிகழும் நிகழ்ச்சிக்கெல்லாம் காரணமாக இருத்தலைத் தம் ஓதி ஞானத்தால் உணர்ந்து கொண்டவராய் ஞாயிறு தோன்றியபொழுது தோன்றினமையாலே இவன் உதயண குமரன் என்று பெயர் பெறுவானாக என்று கருதி நினக்கு அப்பெயரைச் சூட்டாநிற்ப என்க.

(வி - ம்.) ௭௬. தனது திருமெய்யினிடத்தே தழுவிக்கொண் டெனினுமாம். பறவை தூக்கிப்போதல் அரிய நிகழ்ச்சியாகலின், அருமைத்தாக நிகழ்ந்ததை என்றார். ௭௪. கவன்றனள்: முற்றெச்சம். ௭௫. ஆத்திரை - யாத்திரை. அருந்தவன் - மிருகாபதியின் தந்தையாகிய சேடகமுனிவர். ௭௬. ஆத்தகாதல் - பிணிப்புற்ற அன்பு. ௭௭. அஞ்சல்ஓம்பு-அஞ்சுதலை விட்டொழி. கடந்த ஞானியும் மக்கண்மேல் காதல் கடத்தல் அரிதென்பது தோன்ற நெஞ்சகம் புகல என்றார். புகல-விரும்ப. ௭௮. ஞாலத்து அதிரா அரசு வீற்றிருந்த என மாறுக. ௮௦. கதை - நிகழ்ச்சி. ௮௧. புதையிருள் - பொருள்களை மறைக்கும் இருள். ஒளிமண்டிலம் - ஞாயிறு.

௮௩. கொளீஇ - கொடுத்து; கொள்ளச்செய்து. இவ்வெச்சத்தைச் செயவெனெச்சமாகத் திரித்துக்கொள்க.

௮௪ - ௯௧ : பரமஇருடிகள்....................சில்லென்காலை.

(பொ - ரை.) அன்று தொட்டுப் பிரமசுந்தரன் என்னும் முனிவர்க்கும் பரமசுந்தரி என்னும் அவர் பத்தினிக்கும் பிறந்த யூகி என்பானொடு தோன்றலே! நீ அருவி முதலியவற்றில் விளையாடி வளராநின்ற அவ்விளம் பருவத்திலே என்க.

(வி - ம்.) ௮௪. பரம இருடிகள்-உயர்ந்த முனிவர்கள். தருமம்-துறவறம். தவாஅ - கெடாத. ௮௮. பத்தினி - ஈண்டு மனைவி என்னும் பொருட்டாய் நின்றது. ௮௯. புத்திரன் என்றது, யூகியை.

௯௦. புத்திரனும் தோன்றலும் ஆகிய நீவிர் இருவிரும் என்க. ௯௧. சில்லென்காலை என்புழிச் சின்மை இளமைப் பண்புகுறித்து நின்றது.

௯௨ - ௧௦௨ : வெஞ்சின.......................பெற்றவாறும்.

(பொ - ரை.) அப்பிரமசுந்தரன் என்னும் முனிவர் நும்மை விரும்பியவராய் நீயிர் எம்பால் நாடோறும் வந்து யாம் ஓதுவிக்கும் மந்திரங்களைக் கற்றுக்கொண்மின் என்று கூறிக் கற்பித்து மேலும் நினக்கு ஓர் யாழினைக் காட்டி அதனை இசையெழுப்பியும் காட்டி இஃது இந்திரன்பால் யாம் பெற்ற தொரு தெய்வயாழாகும். இதனை வாசித்தால் காட்டியானை முதலியன உவகையோடு வந்து கூடி யாம் விரும்பியவற்றைச்

செய்யாநிற்கும்; ஆதலின் இதனை யாம் நினக்கு வரமாகத் தருகின்றேம். இதனையும் பெற்று இதனானும் நீவல்லை ஆகுக என்று கூறிக்கொடாநிற்ப, இவ்வாற்றால் அத் தெய்வயாழினை அவ்வுதயணன் பெற்றதனையும் எடுத்துக்கூறி என்க.

(வி - ம்.) ௯௯. மந்திரமாகிய நாமம். ௯௪. ஆய் - ஆராயப் படும். அமைவர-பொருந்துதல்வர. ௯௯. கானயானை-காட்டியானை. கரந்துறைபுள் - மறைந்து வாழும் பறவை. ௯௭. ஆறு - அமையாத: ௧0௧. அம்முனிவன் - அப்பிரமசுந்தரன் என்னும் துறவி. உவந்தனன். முற்றெச்சம். கொடுத்து என்னும் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாகக் கொள்க. ௧0௨. இவ்வாற்றால் யாம்பெற்ற வரலாறும் என்க.

௧0௩ - ௧0௯: ஆர்வ................ரில்லென் காலத்து.

(பொ - ரை.) பின்னர் அம்முனிவர், நின்பால் ஆர்வமிக்க நெஞ்சுடையவனும் கல்வியில் தன்னை ஒப்பாவாரில்லாதவனும், பிறர் உள்ளத்தைக் கவர்ந்துகொள்ளும் இயல்புடையவனும் ஆகிய இந்த யூகி நினக்கு அடைக்கலம் என்று தம் மகனாகிய யூகியையும் நின்பால் ஓம்படைசெய்ய அதனை மேற்கொண்டு அவ்வியூகிக்குச் சிறந்த நண்பனாகி, மேலும் குற்றமற்ற நூற் கேள்விகளையும் யாழ்ப் பயிற்சியும் மிடற்றுப்பாடலும் ஆகிய கலைகளையும் அம்முனிவர்பாற் பயின்றுவந்த அவ்விளம் பருவத்திலே என்க.

(வி - ம்.) ௧0௩. ஆர்வம் - அன்பு காரணமாகப் பிறர் மாட்டுச் செல்லும் விருப்பம்; "அன்பீனும் ஆர்வமுடைமை" என்றார் திருவள்ளுவனாரும். கல்வியில் தனக்கு நேர் இல்லாதவன் என்க. நேர் - ஒப்பு. நெஞ்சுஉண்அமைதி-பிறர் உளத்தைக் கவர்ந்துகொள்ளும் இயல்பு. ௧0௬. திசையெலாம் பரந்து சென்ற புகழையுடைய பிரமசுந்தர முனிவன். ௧0௭. தோம்இல்கேள்வி - குற்றமற்ற நூற்கேள்வி. ௧0௮. யாழ் - யாழ்க்கல்வி. பாட்டு - மிடற்றுப் பாடல்.

௧௧0 - ௧௨௧: மைவரை........................போதுங்காலை.

(பொ - ரை.) ஒருநாள் கரியமலையினது பக்கத்திலே பிடிகள் தன்னைச் சூழாநிற்ப ஒரு தெய்வயானை வந்து நின்றதாக; அதனைக் கண்ட அளவிலே அதன்பால் நினக்கு விருப்பமிக்கதாக; யான் முனிவன்பாற் பெற்ற மந்திரவகையையும், அத் தெய்வயாழின் இசையின் வகையையும், இப்பொழுதியற்றி அவற்றின் தன்மையை அறிகுவேன் என்று துணிந்து, அம் மந்திரத்தோடே அவ்வியாழின்கண் இசையை எழுப்பி இயக்காநிற்ப, மதம்பொழியும் அத்தெய்வயானை நின்வயப்பட்டு நின்பால் வந்து நீ விரும்பியவற்றைச் செய்தலானே, அதனைப் பிரமசுந்தர முனிவர் பள்ளிக்கு அழைத்து வந்தாயாக; அவ்வியானை

அன்று நள்ளிரவிலே நினது கனவின்கண் தோன்றி "மன்னவன் மகனே! என் எருத்தத்தே நின்னையன்றிப் பாகர் ஏறினும், என்னைத் தோற்கயிற்றாலே கட்டினும், யான் உண்பதற்கு முன்னர் நீ உண்டாலும் யான் நின்னைவிட்டு நீங்குவேன்," என்று அறிவுறுத்தாநிற்ப, அவ்வியானை கூற்றாலே தோன்றிய பொருளை உணர்ந்து உறக்கங் கலைந்து நீ எழுந்து சென்றனை. இங்ஙனம் செல்லாநின்ற நாள்களிலேவைத்து என்க.

(வி - ம்.) ககo. மைவரை-கரியமலை; முகில்படிந்த மலையுமாம். மருங்கு - பக்கம். மடப்பிடி - இளைய பெண்யானைகள். தனது அழகானே அக்காட்டில் வாழும் பிடிகள் தன்னைக் காமுற்றுச் சூழா நிற்ப என்பது கருத்து. கக௧ - உ. நோக்கி அதன் அழகைக்கண்டு காதல் ஊர்தர என்க. கக௩. மந்திரம் வாய்க்கும் தன்மையையும் யாழின் கந்திரவகை வாய்க்கும் தன்மையையும் என்க. கக௪. கந்திர வகை - கந்தருவ வகை. கந்தருவம் ஈண்டு இசைக்கு ஆகுபெயர். காண்பல் : தன்மை ஒருமை. கக௫. எழீஇ என்னும் எச்சத்தைச் செயவெனெச்சமாக்கி எழஇயக்க என்க.

கக௬. விரும்பியவற்றைக் குறிப்பான் உணர்ந்து செய்தலின் என்றவாறு. மாதவன் - அப்பிரம சுந்தர முனிவன்.

கக௭. பள்ளி - தவப்பள்ளி. உய்ப்ப - செலுத்த.

கக௮. நள்ளிருட் கூறும் என்ற குறிப்பாலும் பின்னர் அறிவுற்று எழுந்து என்றதனானும் அவ்வியானை கனவிற் றோன்றிக் கூறிற்று என்பது பெற்றாம். கக௮. பாகர் ஏறினும் என்றது, நீமட்டும் ஏறுத லன்றி என்பதுபட நின்றது. கயிறிடினும் என்றது கட்டினும் என்ற வாறு. தோற் கயிறு என்புழி தோல் இயல்படைமொழி. கக௯. நீ முன்னுண்ணினும் என்றது, என்னை ஊட்டிய பின்னன்றி என்பது பட நின்றது.

கஉo. ஆகுபொருள் இக் குற்றங்கள் நிகழ்ந்த விடத்து நிகழும் பொருள் என்க.

கஉக - க௩௫ : மாதவன்..........உய்ப்பெனென்றலும்.

(பொ - ரை) மாதவன் மகனாகிய விக்கிரன் என்னும் வேந்தன் தனக்கு மகப் பேறின்மையானே பெரிதும் வருந்தி இனி எனக்கமைந்த நுகர்ச்சி யெல்லாம் துறந்து தவஞ்செய் வேன் எனத் துணிந்து ஒருநாள் தன்னாட்டைவிட்டுத் தன் தந்தையாகிய சேடக முனிவன் திருவடி நீழலிலே புகல் புகுவான் அங்கு வந்தானாக; அப்பொழுது அப்பள்ளியிலே அவ்விக்கிரன் நின்னைக் கண்டு தன் தந்தையை நோக்கி இச் சிறுவன் யார்? என்று வினவாநிற்ப, அச் சேடக முனிவனும் சாதனிகன் என்னும் குருகுலத்தரசன் தேவியாகிய நின் தங்கை கருவுற் றிருந்த பொழுது அவளை ஒரு சிம்புள் தூக்கி வந்து இவ் விடத்தே வைத்துச் சென்றதாக, அவள் இச் சிறுவனை இப்

பள்ளியிலே ஈன்றாள். இப்பொழுது இவன் ஐந்தாண்டகவையன் ஆயினன். ஆதலின், இவனைக் கற்பித்து அவன் நகரத்திற்குப் போக்கக் கருதியுள்ளேன் என்று கூற என்க.

(வி - ம்.) ௧௨௧. மாதவன் - ஈண்டுச் சேடக முனிவன். ௧௨௨. வீயாச் செங்கோல் - கெடாத செங்கோன்மை. ௧௨௩. எச்சம்-மகவு. எவ்வம் - துன்பம். கூரா - கூர்ந்து; மிக்கு. துப்புரவு-நுகர்பொருள். ௧௨௫. தற்பயந்தெடுத்தவன் - தன்னைப்பெற்ற தந்தையாகிய சேடக முனிவன். ௧௨௬. மதலை - சிறுவன். ௧௨௭. செரு - போர். குரு குலத்திற்றோன்றிய அரசன். ௧௨௮. சாயாச் செங்கோல் - வளையாத செங்கோல். சதானிகன் - உதயண குமரனுடைய தந்தை.

௧௩௦. நுங்கை - நுந்தங்கை. நும் என்னும் பன்மை ஏனைச் சகோதரர்களையும் உளப்படுத்தவாறு. ௧௩௧. இவ்வயின் - இப் பள்ளியின்கண். ௧௩௨. புதல்வன்றான் என்றது, பிறனலன் என்பது பட நின்றது. ௧௩௩. ஐயாண்டு அகவை கலைபயிற்றுதற் குரிய பருவம் என்பதுபட ஐயாண்டு நிறைந்தனன் ஆதலின் என்றார். ௧௩௪. தெய்வ ஞானம் - மெய்யறிவு. ௧௩௫. தன்னகர் என்றது, கோசம்பியை.

௧௩௫ - ௧௪௮ : அடிகள்..............நீ வளர.

(பொ - ரை.) அதுகேட்ட விக்கிரன் "அடிகேள்! இச் சிறுவனை எனக்கு அருள்க! அங்ஙனம் அருள்வீராயின் இவனை அரசனாக்கி வைத்துப் பொருள் அனைத்தையும் இவனுக்கு உரிமையாக்கி ஏயர் குலத்து அரசுரிமையையும் இவன்பாற் கொடுத்துப் பின்னர் அடியேன் தவமேற் கொண்டு அதன் பயனை எய்திச் சிறப்புறுவேன்" என்று கூறி அச் சேடக முனிவனையும் மிருகாபதியையும் இரந்து பெற்று அவ் விக்கிரன் தன் மருகனாகிய நின்னைத் தழுவிக்கொண்டு அங்கு நின்ற தனது நீலயானையைப் பண்ணுறுத்தி அதன்மிசை நின்னை ஏற்றிக்கொண்டு தனது வளநகரமாகிய வைசாலிக்குச் சென்று தன் குடிமக்கட்கெல்லாம் இவ்வுதயணனே இன்றுதொட்டு அரசன் ஆவான் என அறிவித்து அரசவை நடுவண் இனிது இருக்கச் செய்ய இவ்வாற்றான் நீ அவ்வேயர் குலத்து அரசனாகி அங்கே வளராநிற்ப என்க.

(வி - ம்.) ௧௩௫. அடிகள் : அண்மைவிளி. ௧௩௬. என்னுழை- என்பால். தம்மின் : முன்னிலைப்பன்மை. ௧௩௭. தாயம் - உரிமைப் பொருள். ௧௩௮. கொற்றம் ஆகுபெயராய் அரசுரிமையைக் குறித்து நின்றது. ௧௪௦. ஆய்புகழ் முனிவன் - பலரும் ஆராய்ந்து நன்றென் றற்குக் காரணமான புகழையுடைய சேடக முனிவன் என்க. நீத்தார் பெருமையையே நூலோர் சிறந்ததாகத் துணிதலின் ஆய்புகழ் என்றார். தேவி - கோப்பெருந்தேவியாகிய மிருகாபதி.

௧௪௧. போரின்கண் மிகும் தலைமைத்தன்மையுடைய அவ்விக்கிர மன்னன் என்க. ௧௪௧. மருமகன் - உடன்பிறந்தாள்மகன். ௧௪௨. நீலயானை - யானைச் சாதியுள் ஒன்று. ௪௨. பண்ணி - ஒப்பனை

செய்து. ௧௬௩. நகர் - ஈண்டு வைசாலி நகரம். ௧௬௪. மனை : ஈண்டு குடிமக்கட்கு ஆகுபெயர். ௧௬௫ இருத்தி என்னும் செய்தெனெச்சத்தை இருத்த எனச் செயவெனச்சமாகத் திரித்துக் கொள்க.

[தேவியைப் பிரிந்த சதானிகன் செயல்.]

௧௬௮ - ௧௫௭ : இவ்வழி............இயற்றியவண்ணமும்.

(பொ - ரை) இனி இப்பாற் கோசம்பி நகரத்தின்கண் சதானிக மன்னன் தன் மனைவிக்கு நேர்ந்தது யாதென்று அறியாதவனாய்த் தீப்போன்ற கொடிய துன்பத்தோடே ஒரு துறவியைக்கண்டு தன் மனைவியைப்பற்றி வினவாநிற்ப ; அத் துறவி மிருகாபதியைச் சிம்புளொன்று கண்டு ஊன்குவை எனக் கருதி எடுத்துச் சென்று காட்டின்கண் வைத்துச் சென்றதும், அக் காட்டில் கோப்பெருந் தேவியார் பெருமானே ! நின்னைப் பெற்றதும், அங்கே சேடக முனிவன் தேவியாரைக் கண்டதும், நீ பிரமசுந்தர முனிவன்பால் வரத்தினாலே தெய்வ யாழையும், சினமிக்க யானையை அடக்கும் வித்தையையும் பெற்றதும், அவ் வழி வந்த நின் மாமன் நின்னை அழைத்துக்கொண்டு தனது மாண்புடைய வைசாலி நகரத்திற்குச் சென்றதும், அந்நகரத் தின்கண் நின்னை அரசனாக்கி வைத்ததும் என்க.

(வி - ம்.) ௧௬௮ இவ்வழி - இங்கே கோசம்பி நகரத்திலே என்க. ௧௬௯. பட்டதை - நிகழ்ந்ததனை. பயநிலங் காவலன் - பயன்மிக்க உலகினைக் காக்கும் சதானிக மன்னன்.

௧௭௦. கட்டழல் எவ்வம் - நெருப்புப் போன்ற துன்பம். கடவுள்- துறவி. ௧௭௧. கடும்புள் - சிம்புள். இதனை என்காற்புள் என்றும் கூறுப. ௧௭௨. நெடிய தோளையுடைய மிருகாபதி. ௧௭௩. தகை யுடை முனிவன் - பெருந்தகைமையுடைய சேடக முனிவன்.

௧௭௭. விசை - வேகம்; சினம்: வெறியுமாம். விச்சை - வித்தை ; மந்திரம். ௧௭௯. மாமன் - நின்மாமனாகிய விக்கிர வேந்தன். மாண்நகர் - மாண்புடைய வைசாலி நகரம்.

௧௭௮ - ௧௮௪ : மாசில்...............விரித்துரைத்தனன்.

(பொ - ரை.) குற்றமற்ற கொற்றவனாகிய அச் சதானி கன் மீண்டும் வைசாலி நகரத்தே வருதலையும் பிரச்சோதன மன்னன் நின்னைச் சிறைப்படுத்தலும், இச் சயந்தியின்கண் வந்து நீ இருத்தலும், உள்ளிட்ட நிகழ்ச்சிகளை எல்லாம் தனது ஓதிஞானத்தானே உணர்ந்து அச் சதானிக மன்னன் நெஞ்சம் உவக்கும்படி இறந்தகாலத்தே நிகழ்ந்தனவும், எதிர்காலத்தே நிகழும் நின் ஆக்கங்களையும், இன்னோரன்ன பிறவற்றையும் வாய்மையாகப் பிழை சிறிதும் இல்லாமல் வினவிய அப்பொழுதே விரித்துக் கூறினன், என்க.

(வி - ம்.) ௧௫௮. கொற்றவன் - சதானிகன். இவன் - இந் நகரத்தே. ௧௫௯. ஆண்மைத்தன்மை மிக்க வலியுடைய ஒப்பற்ற அரசனாகிய பிரச்சோதன மன்னன் என்க. அடிப்படுத்தல் - சிறைப் படுத்தல். ௧௬0. ஈண்டுஇவன் - இச்சயந்தியின்கண். ௧௬௧. உள்ளுறுத்து - உட்படுத்தி. ஓதி - முக்காலத்து நிகழ்ச்சிகளையும் உணரும் தெய்வஞானம். உள்ளமுவப்ப - அச் சதானிகன் நெஞ்சம் உவக்கும்படி. ௧௬௨. முற்பால் - இறந்த காலம். பிற்பால் - எதிர் காலம். பெருக்கம்-ஆக்கம். ௧௬௩. இயற்பட - வாய்மையாக. (௧௫0) வினவ (௧௬௪) வினவிய அப்பொழுதின் என்றியைக்க.

௧௬௪ - ௧௭௧ : ஓர்......................தழீஇ

(பொ - ரை.) நின் கண்போன்ற அன்பனாகிய யூகி நீ சிறைப்பட்ட காலத்தே செய்தாற் போன்று இன்றும் தான் இறத்தலானே செய்யக்கடவ காரியமும் ஒருகால் உளவாதல் கூடும்; அவற்றின் பொருட்டு இறந்தானாகக் காட்டியிருத்தலும் கூடும்; ஆதலானும் யூகி இறந்தனன் என்று யாம் ஊகித்துக் கொண்டதன்றி அவன் இறந்தமையைக் கண் கூடாகக் கண்டு வந்து கூறினோரை யாம் கண்டிலேம் ஆதலானும், யாமும் நின் தந்தைபோல ஒரு ஞான முனிவனைத் தலைப்பட்டு வணங்கித் தொழுது உண்மையொடு பொருந்தும்படி வினவிய பின் உணர்ந்து கொள்வேமாக என்று வரும் இம் மொழிகளை அவ் வுருமண்ணுவா என்னும் அமைச்சன் அத் தோழர்கள் விரும்பும் படி எடுத்துக்கூறிப் பின்னர் அவரைத் தனித்தனித் தன்பால் அழைத்துத் தழுவிக்கொண்டு என்க.

(வி - ம்.) ௧௬௫. "ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து வேண்டும் பனுவல் துணிவு" (குறள் - ௨௧) என்பது பற்றிப் பனு வலின்கண் எடுத்தாளப்படும் பெருமையுடைய முனிவனைப் பனுவ லாளன் என்றார். ௧௬௬. நின் கண்போன்றவனும் காதலையுடைய வனும் மிகச் சிறந்த அமைச்சனுமாகிய யூகி என்க.

௧௬௭. முன்போல் என்பது - முன்னர் நீ பிரச்சோதனன் சிறை யிடைக் கிடந்த பொழுது இறந்தானாகத் தன்னைக் காட்டிச் செய்த காரியம் போல என்றவாறு. விளிந்து - இறந்து. காரியமும் உண்டு கொல் என உம்மையைப் பிரித்துக் கூட்டுக. கொல் : ஐயப்பொருட்டு. ஆம் : அசைச்சொல். அவ்யூகி இறந்தமையைக் கண்டு வந்தோர்களை யாங் கண்டிலேம் ஆதலானும் என்க. பண்பு - ஈண்டு வாய்மைப் பண்பு குறித்து நின்றது.

௧௭0. அறிதும் : தன்மைப்பன்மை. அத்தோழரும் விரும்பும்படி உருமண்ணுவா கூறி. இதுகாறும் உருமண்ணுவா தோழர்க்கு இங் ஙனம் கூறுமின் என்பான் எடுத்துக்கூறிக் காட்டியபடியாம்.

௧௭௧. இன்னவை - ஈண்டுக் கூறப்பட்டவற்றை. கிளந்து-கூறி- தன்பால் அத்தோழரை அழைத்துத் தழுவிக்கொண்டு என்க.

கஎஉ - கஅ0 : என்கூற்றினையும்................கொடுக்கென.

(பொ - ரை.) தோழரே! ஈண்டு யான் எடுத்துக் கூறிய என் மொழிகளையும் நும்முடைய மொழிகளாக மேற்கொண்டு தேன்சுவையைக் கூட்டி வேம்பினை ஊட்டாநின்ற குழந்தை மருத்துவர் போன்று வீரத்தன்மைமிக்க நங் தலைவனுக்கு இனியவாகக் கூறி "நீ பலரானும் நகைக்கப்படாமலும், நின் நலங்களையே பலரும் புகழ்ந்தேத்தும்படியும் சிறப்புற்று நினது ஒழுக்கத்தை ஓம்பி அவ்வொழுக்கத்தினின்றும் இழுக்காது மேலும் சிறப்புறுதற்கு இலாவாண நகரத்தின் பக்கத்தே உண்டாட்டயர்தல் நலம் ஆகும்." என்றும் எடுத்துக்கூறி அவ்வுதயணனை ஒருப்படுத்து அவன் அவ்வுண்டாட்டு விழவிற்கு எழுதலை விரும்பும் சூழ்ச்சியை அவனுக்குக் கொடுமின் என்று கூறுநிற்ப என்க.

(வி - ம்.) கஎஉ. யான் ஈண்டுக் கூறியவற்றை நீயிரே கூறுமாறுபோல என்பான் "என் கூற்றினையும் நுங்கூற்றாக" என்றான். கஎங. வேம்பு - வேம்பினாலாய கைப்புடைய மருந்து. "வேம்பினாலாய மருந்தினைத் தேன்சுவையைச் சேர்த்து இனிதாக ஊட்டும் மகார் மருந்தாளர்போல என்க. அவன் விரும்பாதவற்றையும் விரும்புவனவற்றோடு கலந்து அவன் விரும்பிக் கேட்கும்படிக் கூறி என்றவாறு. கஎச. மகாஅர்மருந்தாளர் - குழந்தைகட்கு மருத்துவஞ் செய்யும் மருத்துவர். மறத்தகையண்ணல் - உதயணகுமரன்: அண்ணலுக்கு என்க. கஎரு. பல்லவர் - பலரும். பலரும் நகாராய், நலம்புகழ்ந்தேத்தும்படி ஒழுக்கியல் ஓம்பி விழுப்பம் எய்த என்று மாறிக் கூட்டி எய்தி என்னும் எச்சத்தைச் செயவெனெச்சமாக்கிக்கொள்க.

கஎஎ. இயன்ற - இயற்றப்பட்ட.

பலர் ஏத்தவும் ஒழுக்கியல் ஓம்பி விழுப்பம் எய்தவும் உண்டாட்டயர்தல் உறுதியுடைத்து என்று எடுத்துக் கூறி என்றவாறு.

இதனுல் காமவின்பத்திலும், கையறவிலும் அழுந்திக் கிடக்கும் உதயணனை அந்நிலையினின்றும் மீட்கும் உபாயம் கூறப்பட்டமை உணர்க.

கஎகூ. மார்பன் - உதயணன்.

கஅ0. ஏழ்ச்சி - எழுச்சி. சூழ்ச்சிகொடுத்தலாவது அவ்வழியில் அவனது ஆராய்ச்சி நிகழும்படி செய்தல்.

கஅக - கஅஎ : உள்ளதோழரும்...............மகிழ்ந்தென்

(பொ - ரை.) அதுகேட்ட அத்தோழரும் அது செய்தற்கு உடம்பட்டுச் சென்று உதயணகுமரனை அடைந்து முறைமையானே ஆராய்ந்துணர்ந்த குறைவில்லாத பொருள் பொதிந்த உரைகளை அவன் உளங்கொள்ளுமாறு கூறினராக; அது

கேட்ட அவ்வுதயணனும் பெரிதும் மகிழ்ந்து அவர்க்கு அணிகலன் முதலியவற்றை வழங்கினன். பின்னர், அவனது உடம்பாடுபெற்ற அத்தோழர் மிக மகிழ்ந்து வெற்றி முரசினை முழக்கி அச்செய்தியை ஊர்முழுதும் அறியும்படி செய்தனர் என்க.

(வி - ம்.) கஅக. ஒருப்பட்டு - உடம்பட்டு.

கஅஉ. பெரிய இதழ்களையுடைய நறிய மலர்மாலையினையுடைய உதயணனை என்க. கஅச. வள்ளல் - உதயணகுமரன். வள்ளல் என்றது கலனும் பதியும் அருளுதற்குக் குறிப்பேதுவாய் நின்றது. கஅரு. நிதியக்கலம்: இருபெயரொட்டு; நிதியமாகிய அணிகலன் என்க. பதி - ஊர்.

கஅசு. கொற்றமுரசின் - வெற்றி முரசத்தின்கண். கோடணை - முழக்கம். ஓசை - செய்தி.

கக. அவலந்தீர்ந்தது முற்றிற்று.




---



# கஉ. மாசன மகிழ்ந்தது

இதன்கண், இலாவாண நகரத்தின் பக்கத்தேயுள்ள இயற்கை அழகும், செயற்கை அழகும், அங்குள்ள மரவகைகளும், செடிகொடிகளும், சயந்தி நகரமாந்தர் அம் மலைச் சாரலை அடைதலும், அவர் இயற்றிய பாடிவீடுகளின் இயல்பும், அம் மைந்தரும் மகளிரும் அக்காட்டினூடே பலவகைக் காட்சிகளையும் கண்டு மகிழ்தலும் பிறவுங் கூறப்படும்.

ஓசை போக்கிய பின்றை ஓவா
மாசில் சிறப்பின் வான்பூத் தன்ன
நகரம் வறுவி தாகநாட் கொண்டு
தகரங் கமழுந் தண்வரைச் சாரல்
தக்கோர் உறையுந் தாபதப் பள்ளியும்
கற்றோர் உறையுங் கடவுள் தானமும்
புக்கோர் புறப்படல் உறாஅப் பொலிவின்
சுனையும் யாறும் இனையவை மல்கி
மேவர அமைத்த மேதகு வனப்பின்
கோலக் கோயிலொடு குரம்பை கூடிப்
பலவு மாவு நலமா நாகமும்
மகிழும் பிண்டியும் வரியிதழ் அனிச்சமும்
வேங்கையும் ஆவும் விளவும் வேயும்
கோங்கமுங் குரவும் கொடிக்குருக் கத்தியும்
நறையு நந்தியும் அறைபயில் அகிலும்
வழையும் வாழையுங் கழைவளங் கவினிய
திகிரியுந் தில்லையும் பயில்பூம் பயினும்
முல்லையும் பிடாவுங் குல்லையுங் கொன்றையும்
குருந்தும் வெட்சியு நரந்தையு நறவும்
நறும்பா திரியு நாண்மலர்க் கோகுடியும்
இரும்பமல் ஏலமும் ஏரில வங்கமும்
பைங்கூ தாளமும் வெண்பூஞ் சுள்ளியும்
கொய்தகை போந்துங் கைதகை காந்தளும்
திமிசுந் தேக்கு ஞெமையும் ஆரமும்
சேபா லிகையுஞ் செங்கோடு வேரியும்

தீவாய்த் தோன்றியுந் திலகமுந் திரிகோற்
பகன்றையும் பலாசும் அகன்றலைப் புழகும்
குளவியுங் குறிஞ்சியும் வளவிய மௌவலும்
சிறுசெங் குரலியுஞ் சிறுசெண் பகமும்
நறும்போற் கோட்டமுந் துறும்புபு கஞலி
இன்னவை பிறவும் பன்மரம் பயின்று
கோடிப்பூம் பந்த ரிடைப்பரந் தியன்ற
இடமிடந் தோறுங் கடனது வாகித்
தண்டாக் காதலின் உண்டாட் டுரைப்பேன்
தேரும் வையமுஞ் சிவிகையும் பண்டியும்
ஊரும் ஊர்தியும் பிடிகையும் உயர்வரை
மையணி வேழமு மாவும் பண்ணி
மடமொழி மகளிரு மைந்தரும் ஏறிக்
கடன்மலை பெயருங் காலம் போல
............விடு தேனிற் பூநகர் புல்லென
நீரணி பெருமலைச் சாரல் எய்தி
மாசில் வானத்து மதிவிரிந் தன்ன
தூசக் குடிஞையுந் துலாமண் டபமும்
பல்காழ்த் திரையும் படாகையுங் கோட்டிலும்
ஒல்காக் கூடமும் ஒருங்குதலைப் பிணங்கி
மன்றும் வீதியுந் துன்றிவீ றெய்தி
எவ்விடந் தோறும் அவ்விடத் தாகி
உயர்மிசை யுலக நீங்கி நிலமிசை
அந்தர மருங்கி னந்தன வனத்தோ(டு)
இந்திரன் உரிமையோ டெண்கோண் டிறங்கின
இன்பம் பயந்த இலாவா ணத்தயல்
மன்பெருஞ் சோலை மலைவயிற் போகா
அறைவாய் முரசின் அதிர்கண் அன்ன
நிறைவாய்த் தண்சுனை நிவந்த நீலத்(து)
ஒண்மலர் குற்ற மகளிர் அவைநம்
கண்மலர் அழித்த கவின போன்மென
நீலமோ டிகன்ற நேரிழை மகளிரைக்
கோலமோடு கலந்த குமரர் மற்றவை
தேம்புடை விரியக் கூம்பிடங் காட்டிநம்

கண்ணிழல் எறிப்பக் கலக்கமொடு நடுங்கி
ஒண்ணிழல் இழந்த ஒளிய வாகித்
தொழுவன இரக்குந் தொழிகைக் கொடீஇ
ஒழிக உள்ளழி விவற்றொடு நீரெனக்
கழுமிய வெகுளியர் காணக் காட்டி
மாறாத் தானை மன்னனை வழுத்தி
ஆறாக் காதலொ டாடினர் ஒருசார்
பூந்தண் சாரல் பொங்குகுலை யெடுத்த
காந்தட் கொழுமுகை கண்ட மகளிர்நம்
கைவிரல் எழினலங் கவர்ந்தன இவையெனக்
கொய்பூங் காந்தள் கொண்ட கையினர்
எமக்கணி உடையர்என் றெம்மொ டுறையுநீர்
நமக்கணி யுடையரை எதிர்ந்தனிர் ஈங்கென
எழில்விரல் தோறும் இயைந்தணி யாகிய
கழுமணி மோதிரங் கழித்தனர் களைந்து
கவற்சி கொண்ட காமத் துணைவியர்
இயற்கை ஓரின் இற்றென மதித்துக்
காலக் காந்தள் கதழ்விடங் காட்டிக்
கோலக் கொழுவிரல் ஏலொளி எறிப்ப
அரும்பென நில்லா அஞ்சின அளிய
விரிந்த இவற்றொடு விடுமின் வேர்வென்(று)
இரந்தனர் தெருட்டி இயைந்தனர் ஒருசார்
தேங்கமழ் சிலம்பிற் பாங்குபட நிவந்த
வேங்கை விரியிணர் விரும்புபு கொய்து
புணர்வெங் காதலர் புனையிருங் கூந்தற்(கு)
இணரிவை அணிமினென் றிரந்தனர் நீட்ட
விரும்பினர் கொண்டு வீயென வுணரார்
அரும்பிள வனமுலை ஆகத் தருகர்ச்
சிதர்வன கிடந்த சில்லரிச் சுணங்கிவை
புதல்வர்ப் பயப்பிற் புலந்துகை நீங்கி
மலையக மருங்கின் மரம்பொருந் தினவெனச்
சிலையணி அழித்த சென்றேந்து புருவத்(து)
அரிமலர் நெடுங்கண் அழலெழ நோக்கித்
தெரிவை மகளிர் திண்பார் வீசிட

மாலை யோதி மடவரன் மகளிர்க்குக்
காலை கழியினுங் கழியா திதுவென
உவந்த உள்ளமோடு நயந்துபா ராட்டி
அன்மையை உணர்த்த வண்மையிற் றாழ்ந்து
வீழ்பூங் கோம்பின் வேங்கை நிரந்த
ஆய்பூங் கானத் தாடினர் ஒருசார்
அரும்பேறற் காதலோடு அணிநமக் காகி
மருங்குலும் ஆகமும் வருந்தப் போந்த
கருங்கண் வெம்முலை அரும்பின் அழித்து
வண்போன் தட்டம் மலர்ந்த ஆதலின்
நண்பிற் கோத்தில நம்மோ டிவையெனக்
கோங்கங் குறுகல் செல்லார் அயல
மாம்பொழிற் சோலை மகிழ்ந்துடன் ஆடும்
ஒள்ளிழை மகளிர்க் கோளிர்மதி யன்ன
சுள்ளிவெண் சூழ்ச்சி சுரும்புணத் தொடுத்து
நெறிப்பல கூந்தல் நேயந் தோன்றக்
குறிப்பறிந் தணிந்து கூடினர் ஒருசார்
நாக நறுமர நவியத்திற் றணித்து
வேக வெவ்வழல் விளிய மாட்டி
மான்நிணப் புழுக்கலோடு தேனெய் விதவையின்
பன்முறை பகர்ந்து தொன்முறை பிழையார்
நன்னாட் கொண்டு தன்னையர் பரியப்
போன்னேர் சிறுதினை விளைந்த புனந்தோறும்
சாயலுங் கிளவியுந் தம்மோடு நிகர்த்த
தோகையுங் கிளியுந் தோக்கவை அகலத்
துறுகல் வேயின் குறைகண் டன்ன
தடந்தோள் அசையத் தட்டை புடைத்து
முடந்தாட் பலவின் முன்றில் நின்ற
கானவர் மகளிர் காரிகை நோக்கி
வானவர் மகளிர் அல்லர் ஆயின்
வளமலைச் சாரல் வரைமிசை யுறையும்
இளநல மகளிர் இவரென எண்ணி
அஞ்சில் ஓதியர் அஞ்சினர் ஒருசார்
எச்சார் மருங்கினும் இன்னோர் பிறரும்

விச்சா தரியரின் வியப்பத் தோன்றிச்
சுனைப்பூக் குற்றுஞ் சுள்ளி சூடியும்
சினைப்பூ அணிந்துங் கொடிப்பூக் கொய்தும்
மகிழின் வட்ட வார்மலர் தொடுத்தும்
பவழப் பிண்டிப் பல்லிணர் பரிந்தும்
செண்ணத் தளிரிற் கண்ணி கட்டியும்
மாலை தொடுத்து மலைவளம் புகழ்ந்தும்
கோலக் குறிஞ்சிக் குரவை ஆடியும்
மணிமயிற் பீலி மாமயிற் றெழுதி
அணிநலம் நோக்கியும் ஆடல்கண் டுவந்தும்
மாதர்ப் பைங்கிளி மழலை கேட்டும்
மகளிர் நாப்பண் மன்னவன் போலத்
துகளணி இரும்பிடி துன்னுபு சூழ
அந்தண் மராஅத்த பைந்தளிர் வாங்கிக்
கண்ணயற் பிறந்த கவுளிழி கடாஅத்துத்
தண்ணறு நாற்றந் தாழ்ப்பத் தவிர்த்துப்
பெருமையிற் பிறப்பினும் பெற்றி போகாச்
சிறுமை யாளர் செய்கை போல
மூசுதல் ஓவா மிஞிற்றினம் இரிய
வீசுதல் ஓவா விழுத்தகு தடக்கை
இருங்களிற் றினநிரை விரும்புபு நோக்கியும்
கொய்குரல் ஏனலுங் குளிர்சுனைப் பாறையும்
மைவளர் சென்னி மரம்பயில் கானமும்
மலர்ப்பூஞ் சோலையுந் திளைத்தல் ஆனார்
ஆடியும் பாடியுங் கூடியும் பிரிந்தும்
ஊடியும் உணர்ந்தும் ஓடியும் ஒளித்தும்
நாடியு நயந்து நலம்பா ராட்டியும்
மைந்தரும் மகளிரும் மணந்துவிளை யாடி
மைந்துற் றனரால் வளமலை புகழ்ந்தேன்

---

## ௧௨. மாசன மகிழ்ந்தது

*அஃதாவது-இலாவாணத்தினயல் உண்டாடலாலே மக்கள் மகிழ்ந்ததனைக் கூறும்பகுதி என்றவாறு.*

## உரை

க - க0 : ஓசை..............................குரம்பைகூடி.

(பொ - ரை.) இங்ஙனம் தோழர் முரசறைவித்த பின்னர்த் தேவருலகம் போன்ற பொலிவினையுடையதும், குற்றமற்றதும், சிறப்பினையுடையதும் ஆகிய அச்சயந்தி நகரம் வறிதாகிக்கிடக்கும்படி (௲அ) அங்குறையும் மகளிரும் மைந்தரும், நல்லமுழுத்தத்திலே புறப்பட்டுத் தகரமணங் கமழாநின்ற குளிர்ந்த மலைச்சாரலிலே, சுனைகளும், யாறுகளும் மிக்க விடத்தில் துறவியர் உறையும் தவப்பள்ளியும், கற்றோர் உறையும், திருக்கோயில்களும் ஆகிய இவற்றோடு, கண்டோர்க்கு விருப்பம் வருமாறு சிறந்த அழகோடே அமைக்கப்பட்ட அரண்மனையினும் குடில்களினும் சென்று குழுமி என்க.

(வி - ம்.) க. முதலாக ௲௪. ஈறாக நூலாசிரியர் நுதலிப்புகுதல் என்னும் உத்தியாலே தங்கூற்றாகக் கூறுகின்றார்.

க. ஓசை - செய்தி. ஓவாச்சிறப்பு, மாசுஇல் சிறப்பு எனத் தனித்தனிக் கூட்டுக. ஓவா - ஒழியாத. உ. வான் : ஆகுபெயர்; தேவர் நகரம். பூத்தன்ன - பொலிவுற்றாற்போன்ற என்க. ௲. நகரம் - சயந்திநகரம். வறுவிது - வறுமையுடையது. அந்நகரத்துள்ள சான்றோர் அரசன் முதலிய அனைவரும் அதனைவிட்டுப் போதலின் அது வறுமையுற என்பது கருத்து. நாள் - நல்லமுழுத்தம்.

௪. தகரம் - ஒருவகை மணமுடைய மரம். தண்வரைச்சாரல் - குளிர்ச்சியுடைய மலைச்சாரல். ௫. தக்கோர் - துறவியர். தாபதப் பள்ளி - துறவியர் உறையும் இடம். ௬. கடவுள்தானம் - கோயில். கடவுட்டன்மையுடைய தீர்த்தங்களமைந்த இடங்களுமாம். எ. தம் பாற்புகுந்தோர் மீண்டுபோக நினையாமைக்குக் காரணமான பொலிவினையுடைய சுனைகளும் யாறுமாகிய இவை செறிந்த இடத்திலே என்க. கக. மேவர - கண்டோர்க்கு விருப்பமுண்டாகும்படி. மேதகுவனப்பு - மேன்மைதக்கிருந்த அழகு. க0. கோலம் - ஒப்பனையழகு. கோயில் - அரசன் தங்குதற்கமைத்த படவீடு. குரம்பை - குடில் என்றது ஏனையோர் உறைதற்குரிய படவீடுகளை.

கக - ௲௪ : பலவும்..............................உரைப்பேன்

(பொ - ரை.) அச்சாரலிலே பலா முதலிய மரங்களும், அம்மரங்களின் மிசைப்படர்ந்த பூங்கொடிப் பந்தர்களும், மிக்க இடங்கள்தோறும் அம்மாந்தர் தணியாத விருப்பத்தோடே ஆடிய உண்டாட்டு விழவினை இனிக் கூறுவேன் கேண்மின் என்க.

(வி - ம்.) கக. பல - பலாமரம். மா - மாமரம். நலமாநாகம் - நன்மையுடைய பெரிய நாகமரம். கஉ. மகிழ் - மகிழமரம். பிண்டி - அசோகமரம்; செயலைமரம். வரிகளமைந்த இதழ்களையுடைய அனிச்ச மரம். க௲. வேங்கை - ஒருமரம். ஆ - ஆச்சாமரம். விள - விளாமரம். வேய் - மூங்கில்.

௧௪. கோங்கம் - கோங்கமரம். குரவு - குராமரம். குருக்கத்திக் கொடி - மாதவிக்கொடி.

௧௫. நறை - நறைக்கொடி. நந்தி-நந்தியாவட்டம். அறைபயில் அகில் - அறுத்தலைச் செய்யப்படும் அகில்.

௧௬. வழை - சுரபுன்னை. கழை - கரும்பு; ஒருவகை மூங்கிலு மாம். இனி கழைவளங் கவினியதிகிரி எனக்கொண்டு கோல்வளத் தாலே அழகுற்ற சிறுமூங்கில் எனினுமாம். கழை - கோல்.

௧௭. தில்லை - ஒருமரம். பயில்பூம்பயின் - செறிந்த மலர்களை யுடைய பயின்மரம் என்க. ௧௮. பிடா - ஓர்மரம்; பிடவஞ் செடியு மாம். குல்லை - கஞ்சங்குல்லை (கஞ்சா) துழாயுமாம். நரந்தை-நரந் தம்புல்; ஒருமணப்புல்; நாரத்தையுமாம். நறவு - நருமரம். உ0. கரிய பாதிரிமரம்.

நாடோறுமலரும் கொகுடி என்க. கொகுடி - ஒருவகை முல்லை.

உ௧. இறும்பாகச் செறிந்த ஏலம் என்க. சிறுகாடாக மண்டிய ஆஞ்சி என்றவாறு. இறும்பு - சிறுகாடு. அமலுதல்-செறிதல். ஏர் - அழகிய. இலவங்கம் - ஒருவகை மணமுடையமரம்.

உஉ. பசிய கூதளி-வெள்ளிய மலரையுடைய கூதாளஞ்செடி. சுள்ளி - மராமரம். உ௩. கொய்து அகை போந்து - கொய்துழித் தழைக்கும் இயல்புடைய இளம்பனை. கை தகை காந்தள் - மகளிர் கையை ஒத்த பூவையுடைய செங்காந்தள் என்க. உ௪. திமிசு - வேங்கை மரத்தில் ஒருவகை. ஞெமை - ஒருவகை மரம். ஆரம் - சந்தனமரம்.

உ௫. சேபாலிகை - கருநொச்சி மரம். செங்கொடுவேரி - இஃது இக்காலத்தே கொடிவேலி என்று வழங்கப்படுவதுபோலும். உ௬. தீப்போல மலரும் தோன்றி என்க. தோன்றி ஒருவகைக் காந்தள். திலகம் மஞ்சாடிமரம். உ௬-உ௭. திரிந்த (முறுக்குடைய) கோலை யுடைய பகன்றைக்கொடி. பலாசு - புரசு. புழகு - புனமுருங்கை; மலை எருக்குமாம். உ௮. குளவி-காட்டுமல்லிகை. குறிஞ்சி - ஒரு வகைமரம். வளவிய மௌவல் - வளப்பமுடைய முல்லை; ஒருவகை மல்லிகையுமாம்.

உ௯. சிறுசெங்குரலி - கருந்தாமக்கொடி.

௩0. நறியனவும் பொன்னிறமுடையனவுமாகிய மலர்களையுடைய கொட்டமரமும் என்க. துறும்புபு கஞலி - மிக நெருங்கி: ஒருபொருட் பன்மொழி.

௩௧. இவைபோன்ற பிறமரங்களும் (செடிகொடிகளும்) செறி யப்பட்டு அவற்றின் மிசைப்படர்ந்த பூங்கொடிகளாலுய பந்தரின் கீழ்ப் பரந்தியன்ற இடந்தோறும் என்க. ௩௩. இடவிடம்தோறும்!- இடந்தோறும் இடந்தோறும்.

கடன் அதுவாக எனச் செயவெனெச்சமாக்கிக் கொள்க. கடமை அஃதாகலான் உண்டாட்டு உரைப்பேன் என்பது கருத்தாகக்கொள்க.

(க - ௩௪) (௩அ) மகளிரும் மைந்தரும் நகர்வறுவிதாக நாட் கொண்டு (௪0) கூடி (௩௩) இடமிடந்தோறும் (ஆடிய) உண்டாட்டினை உரைப்பேன் என இயைக்க.

௩௪. தண்டாக் காதலின் (ஆடிய) உண்டாட்டென்க. தண்டா - அமையாத.

[நகரமாந்தர் மலைச்சாரலை அடைந்தது]

௩௫ - ௪௧: நேரும்.................................எய்தி.

(பொ - ரை) சயந்தியிலுள்ள மகளிரும் மைந்தரும் தேர் முதலிய ஊர்திகளை ஒப்பனைசெய்து அவற்றில் ஏறிக், கடல் மலைநிலத்திலே பெயர்ந்து செல்லுமாறுபோல் அழகிய சயந்தி நகரம் பொலிவிழக்கும்படி அருவியை அணிந்த பெரிய மலைச் சாரலை அடைந்து என்க.

(வி - ம்.) ௩௫- வையம் - கூடாரப்பண்டி; தண்டிகை என்னும் ஊர்தியுமாம். சிவிகை - பல்லக்கு. பண்டி - வண்டி. பிடிகை - ஒரு வகை ஊர்தி. ௩௬ - ௩எ. மாவும் இன்னோரன்ன ஊரும் ஊர்தியும் பண்ணி என மாறிக்கூட்டுக. உயர்ந்த மலையை நிகர்த்த மைபூசப்பட்ட வேழம் என்க. வேழம் - யானை. மா - குதிரை. பண்ணி - பண் ணுறுத்தி; ஒப்பனை செய்து.

௩அ. மடமொழிமகளிர் - மடப்பமுடைய மொழியையுடைய மகளிர். கடல்: மக்கட்கூட்டத்திற்கு உவமை. ஊழி இறுதிக் காலத்தே கடல் மலை நிலத்திலே பெயர்தல்போல என்பது கருத்து.

௪0. ஈண்டு ஒருசொல் விடுபட்டது பூநகர் - பொலிவுடைய சயந்திநகர்.

நீர் - அருவிநீர்.

[அச்சயந்தி மக்கள் அம்மலைச்சாரலிலே அமைத்துக்கொண்ட பாடிகளின் இயல்பு]

௪௨ - ௫௨: மாசில்..........................மலைவயிற்போகா

(பொ - ரை.) அச்சாரலின்கண் எவ்விடங்களினும் அவ் வவ்விடத்தேயும் தூசக் குடிஞையும், துலாமண்டபமும், மதில் திரையும், படாகைக் கொட்டிலும், கூடமும் ஒருங்குசேர இயற்றப் பட்டு, அம்பலங்களும் வீதிகளும் செறிந்து பேரழகு பொருந்திய தும் இலாவாண நகரின் பக்கத்துள்ளதுமாகிய பெரியதோர் சோலையையுடைய மலையிடத்தே சென்று என்க.

(வி - ம்.) ௪௨. குற்றமற்ற விண்ணிடத்துத் திங்களினது நிலா வொளி பரந்தாற்போன்ற வெள்ளிய ஒளியையுடைய குடிஞை முதலி யன என்க. மதி: ஆகுபெயர்.

௪௩. தூசக்குடிஞை - வெள்ளிய ஆடையால் இயற்றிய பாடி வீடு. துலாமண்டபம் -துலாம் என்னும் உறுப்புடையதாய் இயற்றுவ

தொரு மண்டபம் என்க. "கதவை அனுகாதபடி கற்கவி தொடங்கி நாற்றும் துலாம்" என்பர் சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர். "பற்றுக்கைதூக்கிப் போகட்ட விட்டம்" என்பர் அடியார்க்கு நல்லார். (சிலப். கரு-உகரு. உரை.) இனி இந்நூலின்கண் உஞ்சைக் காண்டத்து இவ்வாசிரியரே "துகிர்த் துலாமண்டபம்" என்பது முணர்க. ௪௪. பல் காழ்த்திரை - பல குத்துக்கோல்களுடனே செய்யப்பட்ட மதிட் டிரையை வளைத்தியற்றியதொரு வீடென்க. படாகைக் கொட்டில் - பெருங்கொடி நடப்பட்ட கொட்டில். ௪௫. ஒல்காக் கூடம் - மெலியாத கூடம் என்னும் உறுப்புடைய குடில் என்க. "கூடங்குத்திக் கயிறுவாங்கிருக்கை" என்றார் முல்லைப் பாட்டினும் (௪0)

௪௬. மன்று - அம்பலம். குடிஞை முதலியன பிணங்கி மன்றும் வீதியும் செறிதலானே வீறு எய்திய இடந்தோறும் என்க.

௪அ - ௫0. இந்திரன் தன் உயர்மிசை யுலகம் நீங்கித் தன் நந்தன வனத்தோடும் தன் உரிமை மகளிரோடும் நிலமிசை (வந்து) இறங்கினாற்போன்ற மன்பெருஞ்சோலை என மாறிக்கூட்டுக.

உயர்மிசையுலகம் - வானுலகம். அந்தரமருங்கின் - அவ்வானத்தின்கண் உள்ள. நந்தனவனம் - இளமரக்கா; என்றது, கற்பகச் சோலையை. உரிமை - மனைவி. இந்திரன் உதயணனுக்கும் உரிமையாகிய இந்திராணி வாசவதத்தைக்கும் நந்தனவனம், அவர்கள் சென்றுறையும் சோலைக்கும் உவமைகள். இறங்கினாற்போன்ற என்க. ௫௧. இலாவாணத்தயல் இன்பம்பயந்த மன்பெருஞ்சோலை என மாறுக. ௫௨. போகா - போய்.

[அக் குறிஞ்சி நிலக் காட்சியினை அம்மாநீதர் நுகர்ந்து மகிழ்தல்.]

௫௩ - ௬௬ : அறைவாய்..........ஆடினர் ஒருசார்

(பொ - ரை.) ஒருசார் முரசின் கண்ணை ஒத்த வாயையுடைய சுனைகளிலே உயர்ந்து மலர்ந்த ஒளியுடைய நீலமலர்களைக் கொய்த மகளிர், அம்மலர்கள் நம் கண்ணின் அழகினை அழித்த அழகுடையன என்று கருதி, அம்மலர்களைப் பகைத்தனராக; அவர்தம் கணவன்மார் அம்மகளிர் நெஞ்சழிவினைப் போக்கக் கருதி அவரை அழைத்துச்சென்று அந்நீல மலர்கள் குவிந்துள்ள இடங்களைக்காட்டி நங்கையீர்! இவற்றைக் காண்மின்! இவை நும்முடைய கண்ணொளி பாய்தலானே கலங்கி நடுங்கி ஒளியிழந்தனவாய் நும்மைக் கைகுவித்து இரவாநின்றன; ஆதலான் நுமது அழிவினைத் தவிர்மின். இம்மலர்களை நுந்தோழியரிடத்தே கொடுமின் என அக்கூம்பிய மலரைக் கொய்து அவர்க்குக் காட்டாநிற்ப அவரும் வெகுளிநீங்கித் தத்தங் கணவன்மாரோடு அரசனை வாழ்த்தி ஆடா நின்றனர் என்க.

(வி - ம்.) ௫௩ - ௪. முழக்கம் பொருந்திய முரசினது அதிருகின்ற கண்ணை ஒத்த வாயினையுடைய சுனை; நீரான் நிறைந்த சுனை தண்சுனை, எனத்தனித்தனிக் கூட்டுக. "பறைக்கண் அன்ன நிறைச் சுனை" (௩௨அ, ௩௨௪.) என்றார் அகத்தினும். நிவந்த - ஓங்கி வளர்ந்த. நீலம் - குவளைப்பூ.

௩௫. குற்ற - பறித்த. அவை - அந்நீலமலர்கள்.

௩௬. கண்மலர் அழித்த கவின போன்மென - கண்ணாகிய மலரின் அழகை அழித்துயர்ந்த அழகுடையனபோலும் என்று கருதி என்க. போன்ம்-போலும். ௩௭. நீலமொடு - அந்நீல மலரொடு. இகன்ற- இகலிய; பகைத்த. அந்நேரிழை மகளிரை என்க. ௩௮. கோலமொடு - ஒப்பனை அழகோடே. குமரர், அவர் தம் கணவன்மார் என்க.

௩௯. தேம்புடை விரியக் கூம்பிடங் காட்டி - அந் நீலமலர்கள் தேன்பக்கத்தே வீழக் கூம்பிய இடங்களைக் காட்டி.

௪0. கண்ணிழல் - கண்ணொளி. குவளை முதலிய சில நீர்ப் பூக்கள் ஒளிபாய்தலானே கூம்பும் இயல்புடைய வாதலின் நுங்கண் ணொளி எறிப்பக் கலக்கமொடு நடுங்கின என்றார்.

௪௧. ஒண்ணிழல் இழந்த ஒளியவாகி - தமக்கு இயல்பாயமைந்த ஒளியையும் இழந்தனவாகி என்பதாம்.

௪௨. நுமக்குத் தோற்றலானே நும்மைத் தொழுது இரக்கும்; ஆதலால் அவை அளிய என்றவாறு.

அவற்றை நுந்தோழி கையிலே கொடுமின் என்க. கொடீஇ - கொடுத்து. தொழுவன : முற்றெச்சம்.

௪௩. எளியாரைப் பகைத்தல் தகவன்று என்பதுபற்றி நீர் இவ் வெளிய நீல மலரைப் பகைத்தலொழிக என்பார். நீர் இவற்றொடு உள்ளழிவு ஒழிக என்றார்.

௪௪. கழுமிய - மிகுந்த.

௪௫. மாறுத்தானை மன்னனை வழுத்தி-பிறக்கிடாத மறப்படையை யுடைய உதயண மன்னனை வாழ்த்தி என்க.

௪௬. ஆறாக்காதல் - தணியாத அன்பு.

௪எ - அக : பூந்தண்சாரல்...........இயைந்தனரொருசார்

(பொ - ரை.) அம்மலைச் சாரலிலே மற்றொரு பக்கத்திலே காந்தளினது கொழுவிய அரும்புகளைக் கண்ட சில மகளிர் அவற்றைக் கொய்து தங்கையிலே கொண்டு நோக்கி இவை நம் கைவிரல்களின் அழகினது நலத்தை அழித்தன என்று அவற் றைப் பகைத்துத் தம் விரல்களிற் செறித்த மோதிரங்களை நோக்கி "நீர் எமக்கு அழகு செய்வாரைப்போன்று எம்மோடு வாளா உறைகின்றீர்! இப்பொழுது நுமக்கும் அழகு செய்த லுடையாரை நீயிரே கண்டீர்! ஆதலின் நீயிர் ஒழிக," என்று அவற்றைக் களைந்து கழித்துப் பின்னரும் கவலாநின்றனராக அக் காமக்கிழத்தியரின் தன்மைகண்ட தலைவர் இம்மகளிரின் பேதைமையை ஆராயின் இத்தன்மைத்தேயாம் என்று நகைத்து அவர்தம் கவலையை அகற்றக் கருதி அவர்க்குப் பருவத்தாலே மலரும் காந்தண் மலரைக் காட்டி "இவற்றைக்

காண்மின்! இவை நும் விரல்கள் விசிய ஒளியாலே தம் அரும்பு நிலையிலேயே நிற்கமாட்டாதனவாய் அஞ்சி விரிந்தன. ஆதலால் இவை அளியன! இவ்வெளிய காந்தட் பூக்களைச் சினத்தல் தவிர்மின்!" என்று அவர்களைத் தெளிவித்து இரந்து அவரொடு கூடி ஆடாநின்றனர் என்க.

(வி - ம்.) ௬எ. பூந்தண்சாரல் - அழகிய குளிர்ந்த மலைச்சாரல். பொங்கு குலை - மிக்க பூங்கொத்து; பரிய பூங்கொத்துமாம்.

௬அ. கொழுமுகை - கொழுத்த (பருத்த) அரும்பு.

௬௯. எழில்நலம் - அழகினது நன்மை. இவை - இவ்வரும்புகள். எ0. கொய்த பூவாகிய காந்தட்பூ என்க.

எக - உ. இவை அம் மகளிர் தம் மோதிரத்தை முன்னிலைப் படுத்துக் கூறுவன. எமக்கு அழகு செய்தல் உடையீர் போல வாளா எம்மோடு உறையாநின்ற நீர் என்பது கருத்து.

எ௩. இப்பொழுது நுமக்கும் அணி செய்தல் உடையரைத் தலைப் பட்டீர் ஆதலின் ஒழிக என்று கூறிக் களைந்து கழித்தனராய் என்க.

எ௪. கழுமணி - கழுவியமணி; அராவப்பட்ட மணி என்றவாறு.

எ௫. அப் பூக்களுக்குத் தங் கைவிரலழகு தோற்றமைக்குக் கவற்சி கொண்ட என்க. கவற்சி - கவலை. காமத்துணைவியர் - காமக் கிழத்தியர்.

எ௬. இம் மகளிரின் இயல்பினை ஆராயின் இத்தகைய பேதைமைத்தே ஆகும் என்று கருதித் தம்முள் நக்கென்க; என்னை? பிறர் பேதைமை காண்டல் நகைக்கிடமாதலின்.

எஎ. காலக்காந்தள் - செவ்வியுடைய காந்தள் மலர். கதழ்விடம்- மலர்ந்துள்ள இடம்.

எஅ. கோலக் கொழுவிரல் - அழகிய கொழுவிய நும் விரல் என்க. எல் ஒளி - எழுச்சியையுடைய ஒளி.

எ௯. நுங் கைவிரல் எழில் அழிப்பதாகிய அரும்பாந் தன்மையிலே நிலைத்து நிற்றல் ஆற்றாது, அஞ்சி விரிந்தன என்க. கோட்டுப் பூ ஒளி கண்டு மலரும் இயல்புடையன ஆதல் அறிக.

அஞ்சின ஆதலால் அளிய என்க. அளிய - இரங்கத் தக்கன. அ0. வேர்வு - சினம்: ஆகுபெயர். "பொள்ளென ஆங்கே புறம் வேரார்" (குறள் - ௪அஎ.) என்புழிப்போல.

அக. இரந்தனர்: முற்றெச்சம். தெருட்டி - தெருளச் செய்து.

அஉ - ௬௩: தேங்கமழ்..........வீசிட

(பொ - ரை.) ஒருசார் தேன் மணங்கமழாநின்ற மலைப் பக்கத்தே உயர்ந்து நின்ற வேங்கை மரங்களினது மலர்ந்த பூங் கொத்துக்களைச் சில மைந்தர் தங் காதன் மகளிர் கரிய கூந்தற்கு

இவை நன்கு பொருந்துவன என்று கருதி அவற்றை விரும்பிக் கொய்து கொணர்ந்து "இவற்றை நீயிர் அணிமின்" என்று பணிமொழி கூறிக்கொடுப்ப அம்மகளிரும் அவற்றை விரும்பி ஏற்றுக்கொண்டு அவை வேங்கை மலர்களே என்பதுணராராய் இவை நமது மார்பகத்தின் முலையினருகே சிதரிக் கிடந்த சுணங்குகளே; யாம் மகப்பெற்றமையாலே இவை நம்மை வெறுத்துநீங்கி இம்மலைச்சாரலிடத்துள்ள மரத்தைப் பொருந்தின என்று கருதித் தங்கண்களில் தீயெழ அவற்றைச் சினந்து நோக்கி நிலத்தின்கண் வீசாநிற்ப என்க.

(வி - ம்.) ௮௨. தேம் - தேன். சிலம்பு - மலை. பாங்குபட - அழகுண்டாக; பக்கத்தே எனினுமாம்.

௮௩. நிவந்த - உயர்ந்து வளர்ந்த. வேங்கை - ஒருவகை மரம். விரியிணர் - மலர்ந்த பூங்கொத்து. விரும்புபு - விரும்பி. ௮௪. புணர் வெங் காதலர் - புணர்தற்கும் விரும்புதற்கும் காரணமான காதலை யுடைய மகளிர் என்க. புனை இருங்கூந்தற்கு-ஒப்பனை செய்யப்பட்ட கரிய கூந்தலுக்கு.

௮௫. இவை பொருத்தமான இணர் என்று கருதி என்க. இரந்தனர் : முற்றெச்சம். நீட்ட - கொடுப்ப.

௮௬. அம்மகளிர் விரும்பி அவற்றை ஏற்றுக் கொண்டென்க. விரும்பினர் : முற்றெச்சம். வீ - மலர்.

௮௭. ஆகத்து அரும்பு இளமுலை அருகர் என மாறுக. அருகர் - பக்கத்தே

௮௮. சிதர்வன கிடந்த - சிதர்ந்து கிடந்த. சில் அரிச்சுணங்கு- சிலவாகிய கோடுகளையுடைய தேமல்.

௮௯. புதல்வர்ப் பயப்பின் - யாம் மகப் பெற்றமையானே. புலந்து - வருந்தி; ஈண்டு வெறுத்து என்பதுபட நின்றது.

௯௧. வில்லினது அழகை அழித்தனவும் நீண்டு உயர்ந்தனவு மாகிய புருவத்து என்க.

௯௨. அரிமலர் நெடுங்கண் - செவ்வரி கருவரிகள் படர்ந்த தாமரை மலரை ஒத்த அழகிய நெடிய கண் என்க. அழலெழ - தீயெழ.

௯௩. தெரிவை மகளிர் - தெரிவைப் பருவமெய்திய மகளிர். அஃதாவது இருபத்தாருண்டகவை முதலாக முப்பத்தோராண்டகவை ஈருக இவற்றுட்பட்ட அகவை என்க. திண்பார் - திண்ணிய நிலத்தில்.

௯௪ - ௯௯ : மாலைபோதி..............ஆடினரொருசார்

(பொ - ரை.) அதுகண்ட அம்மைந்தர் மகளிர்க்குப் பருவம் பல கழிந்தவிடத்தும் இப்பேதைமை மட்டும் கழிவதில்லை

என்று கருதித் தம்முள் உவந்து அம் மகளிரைப் பாராட்டி அவை சுணங்கன்மையை எதுக்காட்டி உணர்த்த அம்மகளிரும் தமக்கியல்பாக வமைந்த அளியுடைமையாலே சினந்தணிந்து பூத்த கொம்புகளையுடைய அவ்வேங்கை மரங்கள் நிரல்பட்டு நின்ற அப் பூஞ்சோலையிலே அம் மைந்தரோடே ஆடாநின்றனர் என்க.

(வி - ம்.) கூ௩. மாலை ஓதி மடவரல் மகளிர்க்கு - மலர் மாலை யணிந்த கூந்தலையும் மடப்பம் வருதலையும் உடைய மகளிர்க்கு என்க.

கூ௫. காலை - காலம். ஈண்டு இளமைப் பருவம் என்பதுபட நின்றது. பேதைமைக்குரிய இளம் பருவம் கழியினும் மகளிர்க்கு அப் பேதைமை மட்டும் கழிவதில்லை என்பது கருத்து. இது-இப்பேதைமை.

கூஎ. அன்மையை - அவை சுணங்கல்லாமையை.

கூஎ. வண்மை - வள்ளற்றன்மை. தாழ்ந்து - சினந்தணிந்து.

கூஅ. வீழ்பூ - விரும்புதற்குக் காரணமான மலர்.

கOO - கOசு : அருப்பேறல்................மகிழ்ந்துடனுடும்.

(பொ - ரை) இனி மற்றொரு பக்கத்தே ஒள்ளிய அணி கலன்களையுடைய மகளிர் சிலர் அரும்பியும் மலர்ந்துமுள்ள கோங்க மரங்களை நோக்கி, இவை நம் பெறற்கரிய காதலோடே நமக்கு அழகாக நம் இடையும் மார்பும் வருந்தும்படி அரும்பிய கரிய கண்ணையுடைய வெவ்விய முலைகளின் அழகினைத் தமது அரும்பின் அழகானே கெடுத்து, மேலும் நமது அல்குலின் அழகும் கெடப் பொன் தட்டம்போலவும் மலர்ந்தன. இங்ஙனமாகலின் இவை நம்பாற் பகையுடையனவேயன்றி நண்பிற்குப் பொருந்தின அல்ல என்று அவற்றினூடே செல்லாமல் அவற்றின் பக்கத்தே உள்ள மாஞ்சோலையுட் சென்று ஆடாநிற்ப என்க.

(வி - ம்.) கOO-கO௩. முலையரும்புங்காற் காதற்பண்பும் அரும்புதல் பற்றிக் காதலோடு போந்த வெம்முலை என்றார்.

கOக. நமக்கு அணியாகி எனமாறுக.

கOஉ. மருங்குல் பாரத்தானும், ஆகம் தன்னிடமெலாங் கவர்ந்து கோடலானும் வருந்தப்போந்த (முலை) என்க.

கO௩. அரும்பின் - அரும்பினது அழகானே என்க.

கO௪. வண்பொற்றட்டம் - வளவிய பொன்தட்டம். பொன் தட்டம்போல மலர்ந்து நம் அல்குலழகையும் அழித்தலானே என்பது குறிப்பு.

கO௫. குறுகல்செல்லார்-ஒருசொல் நீர்மைத்து ; குறுகார். அயலஃ பலவறிசொல். அயலிடத்தனவாகிய என்க.

கOசு. பொழிற்சோலை - இருபெயரொட்டு.

க0சு - கக0 : ஒள்ளிழை....................கூடிவரெரருசார்.

(பொ - ரை.) அம் மகளிருடைய கேள்வர் நிலாப்போன்று ஒளிரும் மராமலர் மாலைகளைப் புதியனவாகத் தொடுத்துக் கொடுபோய் அவர்தம் கூந்தலிலே தமது அன்புடைமை தோன்றும்படி சூட்டி அவர்தம் குறிப்பறிந்து கூடிமகிழாநின்றனர் என்க.

(வி - ம்.) க0எ. ஒளிரும் திங்கள் போன்று ஒளிரும் சூழ்ச்சி என்க. க0அ. சுள்ளி - மராமர மலர்; ஆகுபெயர். வெண் சூழ்ச்சி - வெள்ளியமாலை. சுரும்பு - வண்டு. சுரும்புணத்தொடுத்து என்றது புதியமலர்களை எடுத்துத் தொடுத்து என்பது பட நின்றது.

க0கூ. நெறிப்புடைய பலவாகிய கூந்தல் என்க. நெறிப்பு - அறல்படுதல். நேயம் - தம்மன்புடைமை.

ககO. அம்மகளிரும் கூடுதற்கவாவும் செவ்வியைக் குறிப்பினுலே உணர்ந்து என்க.

ககக - கஉரு : நகநறுமரம்....................அஞ்சினரெரருசார்.

(பொ - ரை.) ஒருசார் நாகமாகிய நறிய மணமுடைய மரங்களைக் கோடரியாலே துணித்து அவற்றின்கண் தீக்கொளுவி அத்தியினுலே சமைக்கப்பட்ட மான் நிணங்கலந்த ஊனைத் தேன்கலந்த பாற்சோற்றேடு தமது பழைய முறைமையில் தப்பாது கடவுளுக்கு மடையாகக் கொடுத்துப் பலமுறை வாழ்த்தித் தமையன்மார் வினைமேற் செல்லா நிற்பப் பொன்னிறமுடைய சிறிய தினைகள் விளைந்து முதிர்ந்த தத்தம் கொல்லைகள் தோறும் மென்மையானும் சொல்லானும் தம்மை நிகர்த்த மயில்களும் கிளிகளும் ஆகிய பறவைகள் அத்தினையைத் தின்ன வந்தவை அகன்று போம்படி மூங்கிலை ஒத்த தம் பெரிய தோள்கள் அசையத் தட்டை என்னும் கருவியைப் புடைத்து முடம்பட்ட அடிப்பகுதியையுடைய பலாமரத்தினையுடைய தம் முற்றத்திலே நின்ற குறமகளிரின் அழகை நோக்கி இம்மகளிர் வானவர் மகளிர் போலும்; அவர் அல்லரெனின் வளவிய மலைச்சாரலிலே அம்மலையுச்சியிலே உறைவோர் என யாம் கேள்வியுற்ற வரையர மகளிரே ஆதல் வேண்டும் என்று கருதிச் சிலமகளிர் அஞ்சா நின்றனர் என்க.

(வி - ம்.) ககக. நாகம் என்னும் பெயரையுடைய நறுமணமுடைய மரம் என்க. நவியம் - கோடரி.

ககஉ. வேகவெவ்வழல் - சினமுடைய வெவ்விய நெருப்பு. விளிய - அம்மரங்கள் வேகும்படி. மாட்டி - கொளுவி.

ககங. அத்தியிற் சமைத்த புழுக்கல், என்க. தேனெய்-பண்புத் தொகை. விதவை - பாற்சோறு.

கககச. பகர்ந்து - வாழ்த்தி ; கடவுளை வாழ்த்தி என்க. தொன் முறை - பழையவழக்கம்.

ககரு. நன்னுள் - நல்லமுழுத்தம். தன்னையர் - தமையன்மார். பரிய - வினைமேற் செல்ல என்க.

ககசு. பொன்போன்ற நிறமுடைய தினைஎன்க. புனம்-கொல்லை.

ககஎ. சாயல் - மென்மை. கிளவி - மொழி.

ககஎ - ககஅ. சாயலாற் றம்மை ஒத்த தோகையும், கிளவியாற் றம்மை ஒத்த கிளியும் என்க. தோகை - மயில் ; ஆகுபெயர். தொக்கவை - வந்து கூடியவை.

ககக. துறுகல் - குண்டுக்கல். துறுகல்லிடத்தே வளர்ந்தவேய் என்க. வேய் - மூங்கில். குறை - துணுக்கு.

கஉ0. தடந்தோள் - பெரியதோள். தட்டை - கிளிகடிகருவி.

கஉக. முடம்பட்ட அடியினையுடைய பலாமரம் நிற்கும் தம் குடிலின் முற்றத்தே என்க.

கஉஉ. கானவர் மகளிர் - குறவர் மகளிர். காரிகை - அழகு.

கஉங. வானவர் மகளிர் ஆதல் வேண்டும் ; அவர் அல்லராயின் என்க.

கஉசு. என்றும் இளநலத்தோடிருக்கும் வரையர மகளிர் ஆதல் வேண்டும் என்று கருதி என்க. வரையரமகளிர் தீண்டி வருத்து மியல்பினராதலின் அஞ்சினர் என்பது கருத்து.

கஉரு. அஞ்சில் ஓதியர் - அழகிய சிலவாகிய கூந்தலையுடைய மகளிர்.

கஉஎ - கஙஅ : எச்சார்....................மழலைகேட்டும்.

(பொ - ரை) இங்ஙனமே எல்லாப் பக்கங்களினும் இன் னோரன்ன பிறமகளிரும் வித்தியாதர மகளிர்போலக் கண்டோர் வியக்கும்படி தோன்றி, சுனைப்பூக்கொய்தும், மராமரப் பூக்களைச் சூடியும், பிற கோட்டுப்பூக்களை அணிந்தும், கொடிப்பூக்களைக் கொய்தும், மகிழினது மலரை நெடிய மாலையாகத் தொடுத்தும், அசோகினது சிவந்த மலர்களைக் கரத்திலேந்தியும், அழகிய தளிர்மாலைகளை கண்ணியாகத் தொடுத்தும், மாலையாகத் தொடுத்தும், அம்மலையினது வளத்தைப்புகழ்ந்து பாராட்டியும், குரவைக் கூத்தினை ஆடியும், மயிற் கூட்டத்தின் அழகினது நலத்தைக் கண்டும், அவற்றின் ஆடல்களைகண்டு மகிழ்ந் தும் அழகுடைய பசிய கிளிகளின் மழலைமொழிகளைக் கேட்டு உவந்தும் என்க.

(வி - ம்.) கஉஎ. எச்சார் மருங்கினும் எல்லாப் பக்கங்களினும். கஉஅ. விச்சாதரியர்-கந்தருவமகளிர். கண்டோர் வியப்பத் தோன்றி

என்க. சுனைப்பூ - சுனையின்கண்மலர்ந்தபூ. குற்றும் - பறித்தும். சுள்ளி - ஆகுபெயர்; மராமரப்பூ. கசுO. சினைப்பூ - கோட்டுப்பூ. கசுக. மகிழின் வட்டமான மலரை நெடிதாகத் தொடுத்தும் என்க. வட்டமலர் வார் தொடுத்தும் எனமாறி ஆக்கச்சொற் பெய்துரைக்க. கசுஉ. பவழ நிறமுடைய அசோகினது பலவாகிய இணர் என்க. பரிதல் - ஏந்துதல். செண்ணம் - அழகு. கண்ணி - தலையிற்சூடுமாலை. மாலை - மார்பினணிவது. கசுரு. அழகிய குறிஞ்சி நிலத்திற்குரிய குரவைக் கூத்தினையாடியும் என்க. குரவைக் கூத்தாவது - காமமும் வென்றியும் பொருளாகப்பாடி எழுவரேனும் எண்மரேனும் தம்முள் கைபிணைந்தாடுவது.

கசுசு. மணிமயில் - நீலமணிபோன்ற நிறமுடைய மயில். மயிலினது தோகையினையும் அவற்றின் கூட்டத்தினையும் கண்டும் அவற்றின் அணிநலத்தை நோக்கியும் என்க. தொழுதி-கூட்டம். கசுஎ. அணிநலம். அழகினது நன்மை.

கசுஅ. மாதர்ப் பைங்கிளி - அழகிய பச்சைக்கிளிகள்.

கசுஎ. உவந்தும் என்பதனை மழலை கேட்டுவந்தும் எனப்பின்னுங் கூட்டுக.

கசுகூ - கசஅ : மகளிர்............................நோக்கியும்.

(பொ - ரை.) மகளிர் கூட்டத்தினிடையே மன்னவர் செல்லுதல்போலப் பிடியானைகள் தம்மைச் சூழ்ந்துவரத் தமது கவுளினின்றும் ஒழுகுகின்ற மதத்தினது மணம் வண்டுகளைப் புறம்போகாமல் தடுத்தலானே அவை அம்மதத்தின் மேல் ஒழியாதேவந்து மொய்ப்ப அவ்வண்டுகள் கெட்டோடும்படி உயர்ந்த குடியிலே பிறந்துவைத்தும் தமக்கியல்பாகவுள்ள கயமைக் குணம் போகாத சிறியோர் செய்கைபோல மராமரத்தின் பசிய தளிரைக் கைக்கொண்டு வீசுதல் ஒழியாத கையினையுடைய களிற்றியானை வரிசைகளை விரும்பிப் பார்த்து மகிழ்ந்தும் என்க.

(வி - ம்.) கசுகூ. நாப்பண் - நடுவே.

கசO. துகளை அணிந்துகொண்ட கரிய பெண்யானை. துன்னுபு - நெருங்கி. கசக. அந்தண் மராஅத்த பைந்தளிர் வாங்கி - அழகிய குளிர்ந்த மராமரத்தினது பசிய தளிரைக் கைக்கொண்டு. கவுளிற் பிறந்து கண்ணயல் இழி கடாத்து என மாறுக. கடாம் - மதம். கசரு. தண்ணிய நறுமணம்.

கசச. சிறுமையாளர் செய்கையாவது - பிறருக்கு ஈயாமை. சிறுமையாளர், தம்மதத்தே மொய்க்கும் வண்டினத்தைக் கடியும் யானைக்கு உவமை. இனி உண்ணீர் உண்ணீர் என்றுபசரியார் மனையிலுண்ணுதல் சிறுமையாளர் செய்கை எனக்கொண்டு தம்மைக் கடியும் யானை மதத்திலே ஓவாது மூசும் வண்டினத்திற்கே உவமை எனினுமாம்.

யானைக்குப் பெருமையிற் பிறத்தல் உயர்ந்த சாதியிற் பிறத்தலையாதல் குறிஞ்சியிற் பிறத்தலையாதல் கொள்க. வண்டினத்திற்குக் கொள்ளின் தேனுண்ணும் மரபிற் பிறத்தலைக் கொள்க.

௧௪௩. மூசுதல் - மொய்த்தல். ஒவா - ஒழியாத.

௧௪௮. கரிய களிற்றியானையினத்தின் நிரல் என்க. விரும்புபு - விரும்பி.

௧௪௯ - ௧௫௧ : கொய்குரல்...........புகழ்ந்தேன்.

(பொ-ரை.) இங்ஙனமாக அம்மைந்தரும் மகளிரும் விரும்பினராய் வளமுடைய அம்மலை நிலத்தைப் பாராட்டித் தினைப் புனங்களிடத்தும், சுனையையுடைய பாறைகளிடத்தும், முகில்கள் கண்வளரா நின்ற உச்சியையுடைய உயரிய மரங்கள் செறிந்த காட்டினூடும், பூம்பொழில்களிடத்தும் அவற்றின் நலங்களை நுகர்ந்தும் தம்முள்ளே கூடியும் பிரிந்தும், ஊடியும் உணர்ந்தும், ஓடியும் ஒளித்தும், ஒருவரை ஒருவர் நாடியும் நயந்தும் நலம்பாராட்டியும் புணர்ந்தும் விளையாடி நுகர்தலை ஒழியாராயினர் என்க.

(வி - ம்.) கொய்குரல் ஏனல் - கொய்தற்குரிய பருவமெய்திய கதிரையுடைய தினைப்புனம். ஏனல் - தினை. ஆகுபெயர். ௧௫0. மை - முகில். முகில் கண்வளரும் சென்னி என்க. சென்னி - உச்சி. மரம் பயில் கானம் - மரங்கள் நெருங்கிய காடு. ௧௫௧. திளைத்தலானர் - நுகர்தலை ஒழியார்.

௧௫௩. மைந்து - விருப்பம்.

௧௨. மாசன மகிழ்ந்தது முற்றிற்று.

# கரு. குறிக்கோள் கேட்டது

இதன்கண், உதயண குமரன் அரசியற் சுற்றஞ் சூழ ஒரு காட்டை யடைந்து, அக்காட்டிலிருந்த ஒரு முனிவனைக் கண்டு குறிகேட்டலும், அம் முனிவர் குறி கூறுதலும், சோலைவளமும் உதயணன் உவத்தலும், பிறவும் கூறப்படும்.

மைந்தரு மகளிரு மலைவயின் ஆடி
வெந்திறல் வேந்தன் வீழ்பவை காட்டி
ஐம்பெருங் குழுவும் எண்பே ராயமும்
கண்ணுறக் கவவிக் கலந்து விடாஅ
அருமைக் கோத்த அஞ்சுவரு காப்பின்
உரிமைச் சுற்றம் பின்பட உய்த்துத்
தீதற எறியுந் தெரிபொருட் கேள்வி
மூதறி முனிவன் பள்ளி முன்னர்
அரணம் வேண்டா தச்சம் நீக்கி
வருணம் ஒன்றாய் மயங்கிய ஊழிச்
சிறுமையும் வறுமையுந் தின்மையும் புன்மையும்
இறுபும் புலம்பும் இன்மையும் இரக்கமும்
அறியு மாந்தரின் உறுவளங் கவினி
ஐந்திணை மரனும் பைந்தளிர்க் கொடியும்
தந்துணைச் செல்வந் தலைத்தலை பெருகி
அருமதி முனிவர் நிருமிதம் போல
அழல்கண் ணகற்றி நிழன்மீக் கூரி
நீர்புக் கன்ன நீர்மைத் தாகி
ஊர்புக் கன்ன உள்ளுவப் புறீஇ
மலர்த்தவி சடுத்துத் தளிர்க்குடை யோங்கிப்
பூங்கொடிக் கவரி புடைபுடை வீசித்
தேங்கொடிப் பறவையுந் திருந்துசிறை மஞ்ஞையும்
விரும்புறு சுரும்பும் பெரும்பொறி வண்டும்
குழல்வாய்த் தும்பியுங் குயிலுங் கூடி
மழலையம் பாடலின் மனம்பிணி யுறீஇ
முதிர்கனி அமிர்தம் எதிர்கொண் டேந்தி
மேவன பலபயின் றீவன போன்ற

பயமரம் அல்லது கயமரம் இல்லாக்
காவினுள் இரீஇக் காவல் போற்றி
மாதவ முனிவற்கு மன்னவன் காணும்
கருமம் உண்மை மரபிற் கிளப்பப்
பெருங்குலப் பிறப்பினும் அரும்பொருள் வகையினும்
இருங்கண் ஞாலத் தின்னுயிர் ஓம்பும்
காவல் பூண்ட கடத்தினும் விரும்பி
இமையோர் இறைவனை எதிர்கொண் டோம்பும்
அமையா தீட்டிய அருந்தவ முனிவரின்
வியலக வேந்தனை இயல்புளி எதிர்கொண்(டு)
அணித்தகு பள்ளி அசோகத் தணிநிழல்
மணித்தார் மார்பனை மணன்மிசை அடுத்த
பத்திப் பன்மலர்ச் சித்திரங் குயின்ற
இயற்றுத் தவிசின்மிசை இருக்கை காட்டக்
கவற்சி மனத்தோடு காண்டக இருந்ததன்
தாண்முதல் சார்ந்து தோண்முதற் றோழனை
உள்ளி உள்ளழிந் தொழுகுவரைத் தடக்கையின்
வெள்ளிதழ் நறுமலர் வீழப்பை யாந்து
நினைப்புள் ளுறுத்தவந் நிலைமை நோக்கி
இனத்தின் இரித்தாங் கெவ்வகை நிமித்தமும்
மனத்தின் உற்றவை மறையின் றுணர்தலின்
துனிவுகொண் மன்னற்கு முனிவன் கூறும்
பசுமரஞ் சார்ந்தனை ஆதலின் மற்றுநின்
உசிர்ப்பெருந் தோழன் உண்மையுங் கூட்டமும்
கண்ணகன் றுறைந்த கடிநாள் அமையத்துத்
திண்ணி தாகுந் தெளிந்தனை யாகுமதி
விரும்பிநீ பிடித்த வெண்மலர் வீழ்ச்சி
பொருந்திநீ அளக்கும் பொருவில் போகத்(து)
இடையூ றுண்மை முடியத் தோன்றும்
வீழ்ந்த வெண்மலர் வெறுநிலம் படாது
தாழ்ந்த கச்சைநின் தாள்முதல் தங்கலிற்
பிரிந்த போகம் பெயர்த்தும் பெறுகுவை
நிலத்துமிசை இருந்தனை ஆதலின் மற்றுநின்
தலைப்பெரு நகரமொடு நன்னாடு தழீஇக்

கோற்றங் கோடலு முற்றிய தாகி
முன்னிய நின்றவை முடியத் தோன்றுமேன்(று)
எண்ணிய இப்பொருள் திண்ணிதின் எய்தும்
பெறும்பயம் இதுவெனப் பிழைத்த லின்றி
உறும்பெருஞ் சாரணர் உரைவே றுண்மையும்
இறுவா எழுச்சியும் இத்துணை அளவென
உறுதவ முனிவன் உள்விரித் தோழியாது
வத்தவர் பெருமகன் தத்துற வகலக்
கழிபொருள் எதிர்பொருள் எது வாக
அழிபொருள் அன்றி ஆகுபயங் கூறத்
தக்கது மன்ற மிக்கோன் கூற்றென
நட்புடைத் தோழனை நண்ணி அன்னதோர்
உட்புகன் றெழுதரும் உவகையன் ஆகிப்
பள்ளி மருங்கிற் பாவங் கழீஇ
வள்ளி மருங்குல் வாசவ தத்தையைக்
கூடுதல் ஆனுக் குறிப்புமுந் துறீஇ
ஆடுதல் ஊற்றமோ டமர்ந்தனன் உவந்தேன்.

---

## கங. குறிக்கோள் கேட்டது

அஃதாவது - உதயணகுமரன் காட்டின்கண் ஒரு துறவியை எய்தி நிமித்தங் கேட்டதனைக் கூறும் பகுதி என்றவாறு.

### உரை

க - அ : மைந்தரும்..............................முன்னர்.

(பொ - ரை.) இங்ஙனமாகக் காட்டின்கண் மணந்து விளையாடா நின்ற மைந்தரும் மகளிரும் வெவ்விய ஆற்றலுடைய தம் மன்னனாகிய உதயணகுமரன் விரும்பும் காட்சிகளைக் காட்டி மகிழ்விப்பப் பின்னர், அவ்வுதயணகுமரன் தன் ஐம்பெருங் குழுவினரும் எண்பேராயத்தினரும் நெருங்கிச் சூழ்ந்து அகலாமல் காக்கும், கண்டோர்க்கு அச்சம் வருதற்குக் காரணமான பாதுகாவலையுடைய உரிமைச் சுற்றத்து மகளிரைத் தனக்குப் பின்னாகச் செலுத்தி அவ்விடத்தே அமைந்ததோர் முனிவனுடைய தவப்பள்ளியின் முன்னிடத்தே உள்ளதும், என்க.

(வி - பு.) (அ) பள்ளி முன்னர் (உள்ளதும் உஅ-கூ) கயமரம் (இல்லாததும் ஆகியதோர்) காவினுள் இரீஇக் காவல் போற்றி எனச் சென்று இயையும்.

க. மலைவயின் - அம்மலைச்சாரலிடத்தே.

உ. வெந்திறல்-வெவ்விய ஆற்றல். வேந்தன்-உதயணகுமரன் வீழ்பவை - விரும்புவனவற்றை.

ங. ஐம்பெருங்குழு - "அமைச்சர் புரோகிதர் சேனா பதியர், தாவாத் தொழிற் றூதுவர், சாரணர் என்றிவர், பார்த்திபர்க் கைம் பெருங்குழுவெனப் படுமே."

ங. என் பேராயம் - "கரணத்தியலவர் கருமகாரர் கனகச் சுற்றங் கடைகாப்பாளர் நகரமாந்தர் நளிபடைத் தலைவர், யானைவீரர் இவுளி மறவர் இனையர் எண்பேராயம் என்ப"இவை சிலப்பதிகாரத்தில் (டு : கடுஎ - கூ0) அடியார்க்கு நல்லார் உரை மேற்கோள்கள். இனி அந்நூலின் அரும்பதவுரையாசிரியர்,

"சாந்துபூக் கச்சாடை பாக்கிலை கஞ்சுகநெய்
ஆய்ந்த இவரெண்மர் ஆயத்தார்—வேந்தர்க்கு
மாசனம் பார்ப்பார் மருத்தர்வா னிமித்தரோ(டு)
ஆசில் அவைக்களத்தார் ஐந்து"

எனக் காட்டுவர்.

ச. கவவி - சூழ்ந்து. விடாஅ - விடாத.

டு. அருமைக்கு ஒத்த - அருமையுடையதாக மதித்துப் பேணத் தகுந்த. அஞ்சு - அச்சம். காப்பின் - காவலையுடைய.

சு. உரிமைச் சுற்றம் - உவளக மகளிர் (அந்தப்புரத்து மகளிர்.) உய்த்து - செலுத்தி.

எ. தீது - காதிகர்மம். இவை உயிர்ப்பண்புகளைக்கொல்லுதல் பற்றித் தீது எனப்பட்டன. அவையாவன: ஞானாவரணீயம் தரிசனா வரணீயம் மோகனீயம் வேதனீயம் என்பன, இவற்றை,

"பாலனைய சிந்தைசுடரப் படர்செய் காதி
நாலுமுட னேயறிந்து"

எனவரும் சீவகசிந்தாமணியானும் (ங0 கஉ) உணர்க.

தெரிபொருள் கேள்வி மூது அறிமுனிவன் - ஆராய்ந்தறியும் பொருட் கேள்வியானே உணரப்படும் பழம்பொருளை அறிந்த முனிவன் என்க. மெய்யுணர்ந்தோன் என்பது கருத்து.

அ-பள்ளி - தவக்குடில்.

கூ-உகூ. இனி இடைப்பிறவரலாக அத்தவப் பள்ளியின் முன் னுள்ள அப் பொழிலின் மாண்பு கூறுகின்றார்.

கூ - கங: அரணம்................................மாந்தரின்.

(பொ - ரை.) பாதுகாவலை விரும்பாமல் தீவினைக்கு அஞ்சும் அச்சத்தையும் நீக்கிப் பால்வேறு தெரிந்த நால்வேறு வருணத்தார்களும் தம்முள் வேற்றுமையின்றிக் கூடியொழுகு தற்குக் காரணமான இக்கலியூழியில் வாழ்வோருடைய இழிவும் வறுமையும் தீமையும் புன்மையும் இறத்தலும் துயரமும் நற்பண்பின்மையும் அருட்பண்பின் பெருமையினையும் நன்குணர்ந்த சான்றோர்போல தன்பால் வந்த விருந்தினர்களின் வெப்பத்தை அகற்றி நிழலளித்தற்கண் மிகுந்து என்க.

(வி - ம்.) கங. அறியும் மாந்தரின் (கஎ) அழல் கன்னகற்றி நிழல் மீக்கூரி எனக் கொண்டு கூட்டி உரைத்துக்கொள்க. தம்பால் வருபவர்க்கு அவர்தம் தகுதியை அளவாமல் அவர்தம் சிறுமை முதலியவற்றைக் கண்டு இரங்கி அவர்தம் துயர்போக்கி அவர்க்கு நலமே செய்கின்ற சான்றோர் போல அப்பொழில் தன்பால் வருவோர் தகுதியை அளவாமல் அவர்தம் அழல் கன்னகற்றி நிழலளிப்பது என்னும் கருத்துடைய இவ்வுவமை நினைந்துநினைந்து இன்புறற் பாலதாம் இங்ஙனம் கொண்டு கூட்டாக்காற் பொருள்சிறவாமையும் நுண்ணிதின் உணர்க.

கூ. அரணம் - பாதுகாவல். அச்சம் - தீவினைக்கு அஞ்சும் சீரிய அச்சம் என்க.

> “தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
> தீவினை என்னுஞ் செருக்கு” (திருக்குறள் - உ0க)

என்னும் வள்ளுவர் மெய்ம்மொழியும் ஈண்டு நினைக.

க0. வருணம் - அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் முதலிய வகுப்பு.

கக. சிறுமை - இழிதகவு. தின்மை - தீமை. புன்மை-கீழ்மை.

கஉ. இறுபு - இறத்தல். புலம்பு - வருத்தம். இன்மை - பண்பின்மை என்க. இரக்கம் - அருள், அருளுடைமையின் மாண்பு என்க.

கங. அறியும் மாந்தரின் - அறிகின்ற சான்றோர் போல.

கங - கசு: உறுவளம்....... ....................நிருமிதம் போல.

(பொ - ரை.) மெய்ஞ்ஞானமுடைய துறவோர் தம் தவ வலிமையானே படைத்துவைத்தாற் போன்று குறிஞ்சி முதலிய ஐந்து திணைக்கும் உரியவாகிய மரமும் கொடியும் முதலிய எல்லாம் அவ்வொரு திணையிடத்தேயே தத்தமளவில் இடந்தோறும் செழிப்புடையவாய்ப் பெருகி மிக்க வளத்தானே அழகுற்றுத் திகழ்ந்தென்க.

கங. உறு - மிக்க. கவினி - அழகுற்று.

கசு. ஐந்திணை - குறிஞ்சிமுல்லை மருதம் நெய்தல் பாலை என்பன. மரன் - மரம். மரமும் கொடியுமே கூறினும் இனம்பற்றிப் புற்பூண்டு செடி முதலியனவும் கொள்க.

கரு. செல்வம், கிழங்கு தளிர் மலர் காய்கனி முதலியன.

கசு. அருமதி - மெய்யறிவு. நிருமிதம் - படைப்பு.

கஎ - உசு: அரல்.................................ஏந்தி.

(பொ - ரை) தன்கட் புகுவார்க்குக் குளத்திலே மூழ்கினாற் போன்ற குளிர்ப்பினைத்தருவதாய், தம்மூரின்கட் புகுந்தாற் போன்ற மகிழ்ச்சியை எய்துவிப்பதாய், அவ்விருந்தினர்க்கு மலரானே இருக்கைகள் அளித்தும் தளிராகிய குடைகளானே நிழற்றியும் மலர்க் கொடிகளாகிய சாமரைகளைப் பக்கமெங்கும் வீசியும், மேலும் தேனும் மிஞிறும் சுரும்பும் பொறிவண்டும் தும்பியும் குயிலும் ஆகிய தன் இசைவாணர்களானே இனிய அழகிய பாடல்களைப் பாடச்செய்து அவ்விருந்தினருடைய நெஞ்சத்தைக் கவர்ந்துகொண்டு தன்பால் உள்ள முதிர்ந்த பழங்களாகிய சிறந்த உணவினையும் ஏந்தி அவரை ஊட்டியும் என்க.

(வி - ம்.) கஎ. இவ்வடி முன்னரே கூட்டப்பட்டது.

கஅ. நீர்மைத்தாகி - தன்மையையுடையதாகி.

கக. தம்மூரிற் புகுவோர் அங்கே தமக்கு வேண்டிய உணவு உடை உறையுள் முதலியன கிடைத்தலின் மகிழ்வரன்றே; அங்ஙனமே இப்பொழிலின்கட் புகுவாரும் உணவு முதலியன உடையராதலானே மகிழ்வர் என்றவாறு.

உறப்புகீஇ என்றும் பாடம்.

உo. தவிசு - இருக்கை; தளிராகிய குடை என்க.

உக. கவரி - சாமரை.

உஉ. தேங்கொடிப்பறவை - தேனாகிய வண்டொழுங்கு. கொடி-ஒழுங்கு.

தேன். மிஞிறு, சுரும்பு, வண்டு, தும்பி என்பன வண்டுவகை.

உரு. பிணியுறீஇ - பிணித்து.

உஎ - ௩க: மேவன.........................கிளப்ப.

(பொ - ரை.) மேலும் அவர் விரும்புவன பலவற்றையும் நெஞ்சுவந்து வழங்குவனபோன்று பயன்தரும் நன்மரமன்றி இழிவான மரங்கள் இல்லாததாகிய அச்சோலையினுள் இருக்கச் செய்து அவர்க்குப் பாதுகாவலாவாரையும் வைத்துப் பேணிய பின்னர்ப் பெரிய தவத்தையுடைய அம்முனிவரைக் காணுதற்கு

அவர்பால் தனக்கொரு காரியம் இருத்தலைத் தூதன் வாயிலாய் முறைமையோடே அறிவிப்ப என்க.

(வி - ம்.) உ௭. மேவன - விரும்புதற்குரிய பொருள்கள்.

பயின்று என்றது அடுத்தடுத்து என்பதுபட நின்றது.

உ௮. பயமரம் - பயனைத்தரும் மரங்கள். அவை தேமாவும், பலாவும், வாழையும், இன்னோரன்ன பிறவுமாம். கயமரம் - இழிவான மரங்கள். அவை முண்மரங்களும், நச்சு மரங்களும், இன்னோரன்ன பிறவுமாம்.

உ௯. இரீஇ - இருக்கச் செய்து.

௩0. பெரிய தவத்தையுடைய முனிவனை என்க.

௩௧. கிளப்ப - சொல்ல.

[உதயணகுமரன் முனிவரைக் காண்டலும், அவர் மகிழ்ந்து வரவேற்றலும்]

௩உ - ௪௩: பெருங்குல..................................காட்ட.

(பொ - ரை.) அம்முனிவனும் உதயணகுமரன் உயர்குடிப் பிறப்பும் சிறந்த செல்வப்பேறும், உலகத்தின்கண் வாழும் உயிர்கட்குத் துன்பம்வாராமற் பாதுகாத்தலாகிய உயர்ந்ததொழிலும் உடைமையான் அத்தகையாரைக் காண்டலே சிறப்பாதல் பற்றி அவ்வுதயணகுமரனைக் கண்டுமகிழ விரும்பித் தேவேந்திரனை எதிர்கொண்டு வரவேற்கும் தேவவிருடியைப் போன்று அவ்வேந்தர் பெருமானை நான் மரபானே எதிர்கொண்டு அழைத்து வந்து அழகிய தமது தவப்பள்ளியின் முன்றிலிலே உள்ளதோர் அசோக மரத்தினது அழகிய நீழலின்கண் மணற் பரப்பின் மேல் பன்னிற மலரும் உதிர்ந்து சித்திரம் போன்று திகழாநின்ற இயற்கை இருக்கையினைக் காட்டாநிற்ப என்க.

(வி - ம்.) ௩உ-௩௪. உயர்ந்த குடிப்பிறப்பும் சிறந்த செல்வமும் உயரிய தொழிலும் உடைய மன்னர் முனிவரானும் வரவேற்கத் தகுந்தோர் ஆதலின் அம்முனிவரும் விரும்பி வரவேற்பாராயினர் என்பது கருத்து. இக்கருத்தினை, ஆசிரியர் பரிமேலழகர் திருக்குறள் ௩௯-ஆம் அதிகாரத்தில் "உலகபாலர் உருவாய் நின்று உலகங் காத்தலின், இறை' என்றார்; "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும்" என்று பெரியாரும் பணித்தார் என்று கூறியருளிய நல்லுரையோடு ஒப்பு நோக்குக.

௩உ. அரும்பொருள் - அரசச்செல்வம்.

௩௩. இருங்கண் ஞாலத்து-பெரிய இடத்தையுடைய உலகத்தே. தொழில்களுள் வைத்துத் தலைசிறந்தது உயிரோம்புதற் றொழிலேயாதலின் அத்தொழிலைத் தன் கடமையாக மேற்கொண்டிருத்தலானும் விரும்பி என்பது கருத்து.

கூகூ. இமையோர் இறைவன் - தேவேந்திரன். இவன் உதயண குமரனுக்கு உவமை.

கூசு. இடையறுதுசேர்த்த அரிய தவமாகிய செல்வத்தையுடைய தேவ முனிவர்போல என்க. இவர் - அப்பள்ளியிலிருந்த முனிவர்க்கு உவமை.

கூஎ. வியலகம்-உலகம். வேந்தன்-உதயணகுமரன். இயல்புளி-நூலிற் கூறப்பட்ட இயல்பானே.

கூஅ. அசோகு - அருகசமயத்தினர் கொண்டாடும் மரமாதலறிக.

கூகூ. அம்மணித்தார் மார்பனை எனச் சுட்டு வருவித்தோதுக.

சக. இயற்ருத் தவிசு - இயற்கையான் அமைந்த இருக்கை. காட்ட என்றது காட்டி அதன்மிசை அமர்க என்று கூற என்பது பட நின்றது.

சஉ - சகூ : கவற்சி.........................முனிவன் கூறும்.

(பொ - ரை) அவ்வியற்கை இருக்கையின்மேல் கவலை தேங்கிய மனத்தோடே வீற்றிருந்த அவ்வுதயணகுமரன் யூகியை நினைந்து நினைந்து நெஞ்சம் அழிதலானே நெடியதன் பெரிய கையிற் கொண்டிருந்த வெள்ளிய இதழையுடையதொரு நறிய மலர் அக்கையினின்றும் நழுவித் தனது துடையின்மேல் வீழ்ந்ததாக; இங்ஙனம் துன்புற்று நினைவினூடே அழுந்தியிருந்த அவ்வுதயணனுடைய நிலைமையைக் கூர்ந்து நோக்கி மானிடரைக் கூட்டத்தினின்றும் பிரித்துத் தனியே வைத்து அவர்தம் மனத்துள் நினைந்த எண்ணங்களையும் நிமித்தங்களையும் வெளியாக உணர்ந்துகொள்ளும் தன்மையுடைய அம்முனிவன் வருந்தாநின்ற அவ்வுதயண மன்னனுக்குக் (பின்வருமாறு) கூரு நின்றனர் என்க.

(வி - ம்.) சஉ. கவற்சி - கவலை. கான் - காட்சியின்பம்.

சங. தாள்முதல் - கான்மேல்.

சச. தோள்போன்ற தோழனுகிய யூகியை என்க. தோள்முதற் ருேழன் என்பதனேடு.

"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதா நட்பு" (குறள் - எஅஅ.)

என்னும் திருக்குறளையும் நினைக.

சகூ. பையாந்து - துன்புற்று.

சஎ. இனம் - கூட்டம். இரித்து - பிரித்துவைத்து. நிமித்தம் - எதிர்கால நிகழ்ச்சியை முன்னறிவித்தல். அதுதானும் பலவகைப் படுதலின் எவ்வகை நிமித்தமும் என்ருர். மனத்தில் உற்றவையும் என உம்மை கொடுத்தோதுக.

சஅ. மறை - மறைப்பு. வெளிப்படையாக என்பது கருத்து.

சகூ. துனிவு - துன்பம். மன்னற்கு - உதயணனுக்கு.

[௫௦ - ௭௧: முனிவர் நிமித்தம் கூறுதல்.]

௫௦ - ௫௬: பசுமரம்................................தோன்றும்.

(பொ-ரை.) வேந்தனே! நீ பசிய மரத்தினைச் சார்ந்திருக்கின்றனை ஆதலான், நின் உயிர் நண்பன் உயிருடன் இருத்தலும், அந் நண்பன் நெடிதுநாள் நின்னைப் பிரிந்துறைவானாயினும் ஒருகாலத்தே நின்னைக் கூடுதல் ஒருதலையே ஆகும் இவற்றைத் தெளிந்து கொள்வாயாக! இனி நீ விரும்பி நினது கையிற் பிடித்திருந்த வெள்ளிய மலர் நின்கையினின்றும் நழுவி விழ்ந்தமையான் நீ இப்பொழுது நுகராநின்ற ஒப்பற்ற காம நுகர்ச்சிக்கு இடையூறு உண்டாகும் என்பது நன்கு விளங்கும் (என்றார்) என்க.

(வி - ம்.) ௫௦-௧. பசுமரம் என்றது, உயிருடைய மரத்தை. நீ உயிர்மரத்தைச் சார்ந்திருந்து நிமித்தம் கேட்டலான் நின் தோழன் உயிருடன் இருக்கின்றான் என்பது உணரப்படும் என்பது கருத்து.

௫௧. உசிர்-உயிர் என்பதன் திரிபு. உயிர்போன்ற சிறந்த நண்பன் என்க. அவனுவான் யூகி. எனவே அவன்மனத்தகத்தே யூகியை நினைந்து வருந்துதலையும் அம்முனிவர் உணர்ந்துகொண்டமை விளங்கும்.

உண்மையும் - உயிருடன் இருத்தலும் என்க.

கூட்டம் - அவனோடு கூடும் கூட்டமும் என்க.

௫௨. கன் அகன்று உறைந்த கடிநாள் அமையத்து - நீயிர் இடத்தால் அகன்று உறையாநின்று கழிக்கும் எதிர்காலத்தே ஓரமையத்து என்க. கடி நாள்: வினைத்தொகை. கடியும் நாள் என விரிக்க. கடிதல்-கழித்தல்.

௫௩. தெளிந்தனையாகுமதி என்புழி மதிமுன்னிலை அசைச்சொல்.

௫௪. பொருந்தி - நெஞ்சம் பொருந்தி என்க. அளக்கும்-நுகராநின்ற. போகம் - ஈண்டுக் காமநுகர்ச்சி.

௫௬. முடிய - முற்ற; நன்கு என்றவாறு.

௫௭ - ௬௩: வீழ்ந்த................................தோன்றுமென்று.

(பொ - ரை.) அம்மலர் தானும் வறுநிலத்தே விழாமல் நினது கான்மேல் விழ்ந்து கிடத்தலான் அங்ஙனம் பிரிந்த இன்ப நுகர்ச்சியை நீ மீண்டும் எய்துவை என்பது திண்ணம்; இனி நீ நிலத்தின்மேல் இருக்கின்றனை; அதனால் நினது தலைநகரத்தோடே நல்ல நாட்டினையும் நீ மீளவும் பெறுவாய்; மேலும் நினது வெற்றியும் முற்றியதாகி எஞ்சிநின்ற நின் கருத்துக்களும் நிறைவுறும் என்பதும் நன்கு தோன்றும் (என்றார்) என்க.

(வி - ம்.) ௫௮. தாழக்கட்டிய கச்சையையுடைய நின் கான்மேல் என்க.

கூஉ. கொற்றங் கோடலும் - வெற்றி கொள்ளுதற் ருெழிலும் என்க. சுங. முன்னிய நின்றவை - எஞ்சி நின்ற கருத்துக்கள்.

சுச - எக : எண்ணிய....................ஆருபயங் கூற.

(பொ - ரை.) என்றிவ்வாறு நிமித்தம் கூறிய அத் தவ முனிவன் மேலும் நீ எண்ணியவற்றுள் இன்னின்ன திண்ணிதாக நினக்கு எய்தும் என்றும், நீ இனிப் பெறக்கிடந்த பயன்கள் இவை இவை என்றும் கூறிப் பின்னரும் சாரணருடைய உபதேச மொழிகளையும் கூறி நினக்கு வீடெய்தும் காலமும் இவ்வளவினது என்றும் அவ்வுதயணகுமரனுடைய மனத்தடுமாற்றம் அகலும்படி அவன்பால் நின்று கழியும் பொருளும் எய்தும் பொருளும் இவற்றிற்கு ஏதுவாக அழியும் பொருளும் அன்றி மேலும் ஆக்கமாகிய பயன்களையும் கூறுநிற்ப என்க.

(வி - ம்.) சுரு. பெறும் பயன் - எய்தும் பயன். பிழைத்தல் இன்றி - தவறின்றி.

சுசு. சாரணர் உரை - சாரணருடைய உபதேசம்.

சுஎ. இறுவாய் எழுச்சி - வீடுபேறு.

சுகூ. தத்துறவு - மனத்தடுமாற்றம்.

[உதயணன் மகிழ்தல்.]

எஉ - எஅ : தங்கது...................................உவந்தேன்.

(பொ - ரை.) அதுகேட்ட உதயணகுமரன் இப்பெரியோர் மொழி நிச்சயமாக மெய்ம்மையுடைத்து என்று கருதி யூகியைக் கண்டாற்போன்று உவகை எய்தியவனுய் அம்முனிவனைக்கண்ட புண்ணியத்தானே அத்தவப்பள்ளியிலேயே தன் பாவங்களைக் கழித்து அவணின்றும் சென்று கொடியிடையினையுடைய வாசவதத்தையைக் காண்டற்கு விரும்புமோர் அமையாத விருப்பத்தோடு மீண்டும் அவளோடு விளையாடும் முயற்சியின்கண் தலைப்பட்டான் என்க.

(வி - ம்.) எஉ. தக்கது - தகுதியுடையது; என்றது மெய்ம்மையுடையதென்றவாறு. மன்ற - நிச்சயமாக.

எங. தோழன் - யூகி.

எச. உள்ளத்துள் விரும்புதலானே எழாநின்ற மகிழ்ச்சி என்க.

எரு. முனிவரைக்கண்ட புண்ணியத்தானே பாவத்தைப் போக்கி என்க. எசு. வள்ளி மருங்குல் - கொடிபோன்ற இடை. எஎ. ஆனு - அமையாத. முந்துறீஇ - முந்துற்று. எஅ. ஊற்றம் - முயற்சி.

கஙு. குறிக்கோள் கேட்டது முற்றிற்று.

---

# கச. உண்டாட்டு

இதன்கண், அவ்வளமலைச்சாரல் வருணனையும், அதன்கண் உதயணகுமரன் வாசவதத்தையோடும் பிற மாந்தருடனும் உண்டாட்டயர்தலும் பிறவுங் கூறப்படும்.

ஆடுதல் ஆனா அளப்பினன் ஆகி
நாடுதலை மணந்த நன்னகர் நினையான்
மாயோன் மார்பின் மன்னுபு கிடந்த
ஆரம் போல அணிபெறத் தோன்றிப்
பசும்பொன் தாதொடு பன்மணி வரன்றி
அசும்புசோர் அருவரை அகலம் பொருந்தி
ஞால மாந்தரை நாணி யன்ன
நடுங்குசெலற் கான்யாற்றுக் கடும்புனல் ஆடி
மணிநிழற் பாறை மருங்கிற் பல்கி
அணிகலப் பேழை அகந்திறந் தன்ன
நறுமலர் அணிந்த குறுவாய்க் குண்டுசுனை
நீணீர் முழவின் பாணியிற் பாடியும்
குழையர் கோதையர் இழையர் எரிணர்த்
தழையர் தாரினர் உழைவயிற் பிரியார்
பல்வகை மகளிரொடு செல்வஞ் சிறந்தும்
கானுறை மகளிரிற் கவின்பெறத் தோன்றித்
தேனுறை சிலம்பின் தானந் தோறும்
விரவுமலர்க் கோதையர் வேறுவே றியலிக்
குரவம் பாவைகொண் டோலுறுத் தாடியும்
விரிந்துவேய் உடைத்த வெண்கதிர் முத்தம்
தெரிந்துவே றமைத்துச் சிற்றில் இழைத்தும்
பூங்கட் பாவைக்குப் பொற்கலம் இவையெனத்
தேங்கட் சாரல் திருந்துசினை மலர்ந்த
கோங்கந் தட்டம் வாங்கினர் வைத்தும்
செப்படர் அன்ன செங்குழைப் பிண்டிக்
கப்புடைக் கவிசினை நற்புடை நான்ற
தழைக்கயிற் றூசல் விருப்பிற் றூக்கி
பைங்கொடி முல்லை வெண்போது பறித்தும்

கத்திகை தொடுத்தும் பித்திகை பிணைத்தும்
சித்திரமாகச் செந்தளிர் வாங்கிப்
பத்திரச் சேதம் பற்பல கிள்ளியும்
உறியோர்க் குதவுதல் செல்லா தொய்யெனச்
சிறியோர் உற்ற செல்வம் போலப்
பொருசிறை வண்டினம் பொருந்தாது மறக்க
நறுமலர்ச் செல்வமொடு நாட்கடி கமழும்
செண்பகச் சோலைத் தண்டழை தைஇயும்
பெறருங் கற்பிற் பிரச்சோ தனன்மகள்
மாறடு வேற்கண் வாசவ தத்தை
செல்வமுஞ் சிறப்பும் பல்லூழ் பாடிக்
குராஅ நீழற் கோல்வளை ஒலிப்ப
மராஅங் குரவை மகிழ்ந்தனர் மறலியும்
ஆடுபொற் கிண்கிணி அடிமிசை அரற்ற
நீடி யன்ன நிழலறை மருங்கிற்
பந்தெறிந் தாடியும் பாவை புனைந்தும்
அந்தளிர்ப் படைமிசை அயர்ந்தனர் ஒடுங்கியும்
ஏனற் குறவர் இருங்குடிச் சீறூர்
மானமர் நோக்கின் மகளிரொடு மரீஇ
வெங்கண் மறவர் வில்லின் வீழ்த்த
பைங்கண் வேழத்துப் பணைமருப் புலக்கையின்
அறையுரல் நிறைய ஐவனப் பாசவல்
இசையொடு தன்னையர் இயல்புபுகழ்ந் திடிக்கும்
அம்மனை வள்ளை இன்னிசை கேட்டும்
கோயின் மகளிர் மேயினர் ஆடப்
பொருவில் போகமொ டொருமீக் கூறிய
உருவப் பூந்தார் உதயண குமரனும்
வள்ளியம் பணைத்தோண் முள்ளெயிற் றமர்நகை
வாண்மணிக் கொடும்பூண் வாசவ தத்தையும்
இயல்பிற் செய்ய வாயினும் உயர்வரை
அருவி யாட்டினும் அறற்கனைத் திளைப்பினும்
பூங்குழை மகளிர் பொலங்கலத் தேந்திய
தேங்கமழ் தேறலொடு தெளிமது மடுப்பினும்
தாமரைச் செவ்விதழ்த் தலைக்கேழ் விரித்த

காமர் நெடுங்கண் கைம்மீச் சிவப்பக்
கனிந்த காதலோடு முனிந்து ..............
௬௫ மயக்க மாகி முயக்க மில்லாது
பிரிவரும் புள்ளின் ஒருமையின் ஒட்டி
வண்டார் சோலை வளமலைச் சாரல்
உண்டாட் டயர்பவால் உவகையுண் மகிழ்ந்தேன்.

---

## ௧௪. உண்டாட்டு

அஃதாவது, முனிவன்பாற் குறிகேட்டமையால் புத்துணர்ச்சி பெற்ற உதயணகுமரன் மீண்டுவந்து தன் அரசியற் சுற்றத்தாரும் உரிமை மகளிரும் குடிமக்களுமாகிய பரிசனங்களுடன் உண்டாடி மகிழ்தலைக் கூறும் பகுதி என்றவாறு.

### உரை

௧ - அ: ஆடுதல்........................கடும்புனலாடி.

(பொ - ரை.) இங்ஙனமாக உதயணகுமரன் வாசவதத்தையோடு விளையாடி இன்ப நுகர்தற்கண் மிக்க பற்றுடையனாகி நன்னாடு சூழ்ந்த தன் தலைநகரைப் பகைமன்னன் பற்றி ஆளுதலையும், கருதாதவனாகி அக்காட்டின்கண் திருமால் மார்பிற் கிடக்கும் முத்தாரம் போன்ற அருவி வீழாநின்ற மலையிடத்தைச் சேர்ந்து ஆடியும், கான்யாற்று நீரின்கண் ஆடியும் என்க.

(வி - ம்.) ௧. ஆடுதல் - வாசவதத்தையோடு கூடி ஆடுதலின் கண். ஆரா அளப்பு - நுகர்ந்தமையாத இன்பநுகர்ச்சி.

௨. 'நல்நாடு' என்பது வளப்பமுடைய நன்னாடு என்பது படநின்றது. தலைநகர் நினையான் என்றது தன் தலைநகரமாகிய கோசம்பியை மாற்றான் ஆள்வதனையும் நினையான் என்பது படநின்றது. தலைநகரும் எனற்பாலதான சிறப்பும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது.

௩. திருமால் மார்பிடத்தே கிடக்கும் ஆரம்போன்ற அருவி வீழாநின்ற ஏறுதற்கரிய மலையிடத்தே என்க.

மலை, மாயோனுக்கும், அருவி, ஆரத்திற்கும் உவமை.

"மாயோன் மார்பின் ஆரம்போல மணிவரை இழிதரும் அணிகிளர் அருவி" (தொல்-செய். ௯௰, எஅ. பேரா.மேற்) என்றும், "நெடியோன் மார்பில் ஆரம்போன்று பெருமலை விலங்கிய பேரியாறு" (சிலப் ௨௰: ௨௧-௨.) என்றும் பிறசான்றோரும் ஓதுதல் உணர்க.

மன்னுபு - நிலைபெற்று.

ச. ஆரம் - கௌத்துவ மணிமாலை; முத்துமாலையுமாம். அணி பெற - அழகுண்டாக.

௫ - ௬. பசிய பொன்துகளோடு பலவேறு மணிகளையும் வரன்றி வரும் அசும்பு விழ்கின்ற ஏறுதற்கரிய மலையிடத்தே என்க. அசும்பு - நீரூற்று; ஈண்டு அருவி என்க. அகலம், என்பது வாளா இடம் என்னும் பொருட்டாய் நின்றது.

எ. தன்போல நல்லொழுக்கமுடையரன்மையின் உலகத்து மக்களூடே செல்லுதலை நாணி நடுங்கிக் கானிடத்தே ஒழுகும் யாற்றினது விரைந்த செலவினையுடைய நீரிலே ஆடியும், என்க. ஞாலம் - உலகம். நாணினாற் போல, என்க.

அ. கான்யாற்று - காட்டியாற்றின். கடும்புனல் - விரைந்தோடு நீர் என்க. ஆடியும் என உம்மை கொடுத்துரைக்க.

௯ - ௧௫ : மணிநிரல்......................சிறந்தும்.

(பொ - ரை.) நீலமணிபோன்று ஒளிரும் பாறை நிலத்தின்கண் அணிகலப் பேழையைத் திறந்தாற் போன்று தோன்றும் நறிய மலர்கள் அழகுசெய்த குறிய வாயையுடைய ஆழ்ந்த சுனைகளிடத்தே பெருகிப் பொங்கி விழாநின்ற அருவியாகிய மத்தள முழக்கத்தின் தாளத்திற்குப் பொருந்தப் பாடியும், குழையணிந்தவராய்க் கோதையை அணிந்தவராய், அணிகலன்களை அணிந்தவராய்த் தழையுடையினை உடுத்தவராய் மலர் மாலைகளை அணிந்தவராய்த் தம்முட் பிரியாதவருமாகிய பல வகை மகளிரோடும் கூடி ஆடி இன்பத்தாற் சிறப்புற்றும் என்க.

(வி - ம்.) ௯. மணிநிழற் பாறை - நீலமணிபோல ஒளிவிடும் பாறை என்க. நிழல் மணிப்பாறை என மாறி ஒளியுடைய மாணிக்கப் பாறைகளிடத்தே எனினுமாம்.

௧௦. அணிகலப்பேழை-அணிகலன் வைத்த பெட்டி. அணிகலப் பேழையின் அகத்தைத் திறந்து கண்டாலன்ன என்பது கருத்து.

௧௧. குறுவாய் - குறுகிய வாய். குண்டுசுனை - ஆழமான சுனை. குண்டுசுனையின்கட் பல்கி நீள் நீர் முழவினது எனக் கூட்டிக் கூறுக. பல்கி - பெருகி. பொங்கி வீழாநின்ற அருவி நீர் ஆகிய மத்தள முழக்கத்தின் தாளத்திற்குப் பொருந்த என்க. முழவு - மத்தளம். பாணி-தாளம்.

௧௩ - ௧௪. குழை - காதணி. கோதை - ஒருவகை மாலை; ஏர் இணர்த்தழையர் - அழகிய பூங்கொத்துக்களாலும் தழையாலும் இயற்றிய ஆடையினை உடையர் என்க. தார் - ஒருவகைமாலை.

தம்முழைவயிற் பிரியாதவராகிய என்க. தம்மிடத்தினின்றும் பிரியாதவராகிய என்பது கருத்து.

௧௫. செல்வம் - இன்பம்.

௧சு - உஎ : கானுறை.............தூக்கியும்.

(பொ - ரை.) (௫௩) அவ்வரண்மனை மகளிர் தம்மிடத்தினின்றும் பிரிந்து சென்று, அக்காட்டகத்தே வாழும் குறவர் மகளிரைப்போல அம்மலையிடத்தே வேறு வேறு இடங்களிற் சென்று அவ்வவ் விடங்களிலே குரவம் பூவாகிய பாவையினை மகவாகக் கையிலேந்தித் தாலாட்டியும், மூங்கிலினின்றும் உதிர்ந்த முத்துக்களாலே சிற்றிலிழைத்தும், பொன்னிறமுடைய கோங்க மலர்களைக் கொய்து இவை எம் பாவைக்கு ஏற்ற பொன்னணிகலமாம் என்று அப்பாவைக்கு அணிந்தும், அசோகினது கவர்த்துக் கவிந்த கிளைகளிலே தாழங்கயிற்றாலே இயற்றப்பட்ட ஊசல்களிலே விரும்பி ஒருவர் ஒருவரை ஏற்றி ஆட்டியும் என்க.

(வி - ம்.) (௫௩) கோயின் மகளிர் என்பதனை எழுவாயாகக் கொள்க. ௧எ. விரவு மலர்க் கோதையர் கானுறை மகளிரின் தோன்றி என மாறுக. என்றது அவ்வரண்மனை மகளிர் கானவர் மகளிர் போல உள்வரிக் கோலங் (வேடம்) கொண்டு என்றவாறு.

௧சு. கான்உறை மகளிர் - குறிஞ்சித்திணை மகளிர். கவின்பெற - அழகுண்டாக.

௧எ. தேன் உறை சிலம்பு - தேத்திறால் பொருந்திய மலை. தானம் - இடம்.

௧அ. இயலி - சென்று.

௧௯. குரவம்பாவை - குராஅமலர். இம்மலரைப் பாவை என்று வழங்குதல் மரபு : இதனை. "நறும்பூங்குரவம் பயந்த செய்யாப் பாவை" (௩௪௪.) எனவரும் ஐங்குறு நூற்றினும், பிறசங்க நூல்களகத்துங் காணலாம். ஓலுறுத்துதல் - தாலாட்டுதல். ௨௦. வேயை, வேய் - மூங்கில்; இதன்கண் முத்துப் பிறத்தலுண்டென்ப. ௨௧. தெரிந்து - ஆராய்ந்து. சிற்றில் - விளையாடுதற் பொருட்டுச் சிறார் இழைக்கும் வீடு

௨௨. பூப்போன்ற கண்ணையுடைய பாவைக்கு. பொற்கலம் - பொன்னாலியற்றிய அணிகலம்.

௨௪. கோங்கந் தட்டம் - கோங்கமலர். இது தட்டம் போறலின் தட்டம் எனப்பட்டது. வாங்கினர் : முற்றெச்சம். வாங்குதல் - பறித்தல்.

௨௫. செப்புத் தகடு போன்ற சிவந்த தளிரையுடைய அசோகம் என்க.

௨௬. கப்பு - கவை. கவிசினை : வினைத்தொகை; கவிழ்ந்த கிளை. நற்புடை - நன்றாகிய பக்கத்தில்.

௨௬ - எ. தூங்குகின்ற தாழையின் வீழ்தாலாகிய கயிறு என்க. தாழை : தழை என முதல் குறுகியது.

தூக்கியும் - தூங்கவிட்டு (ஆடியும் என்க)

உஅ - ௩௬ : பைங்கொடி................தைஇயும்.

(பொ - ரை.) முல்லைமலர்களைப் பறித்தும் அவற்றை மாலையாகத் தொடுத்தும் சிறு சண்பகமலரைக் கொய்து தொடுத்தும், சிவந்த தளிர்களைக் கொய்து அவற்றினைப் பற்பல சித்திரங்கள் தோன்றும்படி கிள்ளியும் உறவினர்க்கியாத சிறியோர் ஈட்டிய செல்வத்தின்பால் இரவலர் போகாமைபோல வண்டுகள் பொருந்துதலை மறந்த நறிய மலராகிய செல்வத்தான் நிரம்பிப் புதுமணங் கமழாநின்ற செண்பகச் சோலையிற் சென்று அச் செண்பகத்தழைகளை ஆடையாக்கி அணிந்தும் என்க.

(வி-ம்.) உஅ. பசிய கொடியையுடைய முல்லையினது வெள்ளிய மலரைக் கொய்தும் என்க.

உ௯. கத்திகை - ஒருவகை மாலை. பித்திகை - சிறுசண்பகம்.

௩0. பத்திரச் சேதம் - இலைகளிற் கிள்ளுதலானே இயற்றும் உருவம்.

௩௧. உறியோர் - உறவோர். ஒய்யென உதவுதல் செல்லாச் செல்வம் என மாறுக. செல்வத்தை அவ்வுறவோர் பொருந்தாது மறத்தல் போல வண்டினம் சென்று தேன் நுகராமல் மறந்துவிட்ட மலரையுடைய செண்பகச் சோலை என்க. செண்பக மலரில் வண்டு மொய்யா என்பதுபற்றி இங்ஙனம் கூறினர். ௩௫. நாட்கடி - புது மணம்.

௩௬. தைஇயும் - உடுத்தியும்.

௩௭ - ௪௫ : பேறரும்..........ஒடுங்கியும்.

(பொ - ரை.) வாசவதத்தையின் செல்வமும் சிறப்பும் பொருளாக அமைந்த பாடல்களைப் பன்முறையும் பாடிக் குராமரத்தின் நிழலிலே வளையல் ஒலிப்பக் குரவைக் கூத்தாடியும், அடியின்கண் சதங்கை ஒலிப்ப நிழலுடைய பாறைநிலத்தே தம்முள் மாறுபட்டு நின்று பந்தெறிந்து ஆடியும் பாவை புனைந்தும் அழகிய தளிரால் இயற்றிய படுக்கையின்கண் படுத்து அயர்ந்து உறங்கியும்.

(வி - ம்.) ௩௭ - அ. பெறுதற்கு அரிய கற்பினையுடைய வாசவதத்தை, பிரச்சோதனன் மகளாகிய வாசவதத்தை, மாறு அடு வேல் கண்ணையுடைய வாசவதத்தை எனத் தனித் தனிக் கூட்டுக. மாறு - பகைவர். வேற்கண் : உவமத்தொகை.

௩௯. சிறப்பு, கற்புடைமை அறிவுடைமை பெண்மை நல முடைமை முதலியன. பல்லூழ் - பலமுறையும்.

௪0 - ௪௧. மராஅங் குராஅ நீழல் எனமாறி மராமரம் குராமரம் இவற்றின் நீழலிலே என்க.

குரவை - மகளிர் ஆடும் ஒருவகைக் கூத்து. ஆடி மகிழ்ந்தன ராகிய அவர் தம்முள் மறலியும் நின்று பந்தெறிந்து ஆடியும் என்க. மறலுதல் - எதிர்த்தல். பாவை புனைந்தும் - மணற் பாவை முதலிய வைகளை இயற்றியும்.

௪௫. அம் தளிர்ப்படை - அழகிய தளிரால் இயற்றிய படுக்கை.

௪௬. ஒடுங்கியும் - உறங்கியும். பொறிபுலன் அனைத்தும் ஒடுங் குதல் பற்றி உறக்கத்தை ஒடுக்கம் என்றார்.

௪௬ - ௫௩ : ஏனல்.......................மேயினராட.

(பொ - ரை.) குறவர்கள் பெருங்குடியிருப்புக்களையுடைய சிறிய ஊர்களிலே சென்று அக்குறவர் மகளிரோடு சேர்ந்து, அக் குறமகளிர் தம் மறவர் வில்லாலே கொன்று வீழ்த்தப்பட்ட யானையினது பரிய கொம்பாகிய உலக்கையைக்கொண்டு பாறைக் கல்லிற் குழித்த உரல் நிறையும்படி மலை நெல்லைப் பெய்து இசைப்பாடலாலே தந்தமையன்மார் தன்மையைப் புகழ்ந்து இடிக்கும் உலக்கைப் பாட்டினைக் கேட்டு மகிழ்ந்தும் இங்ஙனமாக விருப்பமுடையராய் விளையாடாநிற்ப என்க.

(வி - ம்.) ௩௫ - ௫௩. கோயின் மகளிர் வேறு வேறு இயலி, ஆடியும், இழைத்தும், வைத்தும், தூக்கியும், பறித்தும், தொடுத்தும், பிணைத்தும், கிள்ளியும், தைஇயும், மறலியும், ஆடியும், புனைந்தும், ஒடுங்கியும், கேட்டும், மேயினராய் ஆடாநிற்ப என்க.

௪௬. ஏனற் குறவர் - தினைப்புனங்களையுடைய குறவர். இருங் குடி - பெருங்குடி. சீறூர் - குறிஞ்சி நிலத்துள்ள சிறிய ஊர்.

௪௭. மான் அமர் நோக்கு - மான்களும் விரும்பும் நோக்கம். மரீஇ - மருவி ; சேர்ந்து. ௪௮. வெங்கண் - தறுகண். வில்லினாலே கொன்று வீழ்த்த என்க. ௪௯. பணைமருப்பு - பருத்த கொம்பு.

௫0. அறையுரல் - பாறைக் கல்லிலே குழித்த உரல். ஐவனம் - மலைநெல். பாசவல் - வறுதே இடிக்கும் அவல். ௫௧. இசைப்பாட் டிலே தந்தமையன்மார் புகழை விரவிப் பாடி என்க.

௫௨. அம்மனை வள்ளை - உலக்கைப்பாட்டு. இயல்பு - மறத் தன்மை முதலியன. மேயினர் - விரும்பி : முற்றெச்சம்.

௫௪ - ௬௮ : பொருவில்................மகிழ்ந்தென்.

(பொ - ரை.) உதயண குமரனும் வாசவதத்தையும், சோலைகளையுடைய அம் மலைச்சாரலிலே இயல்பாகவே சிவந்த தம்மிதழ்கள் அருவியில் ஆடுதலானும், சுனையிலே ஆடுதலா னும், தேறலோடே மதுவருந்துதலானும், மேலும் மிகமிகச் சிவக்கும்படி முதிர்ந்த காதலோடே ஊடியும், (உணர்ந்தும்) கூடியும், பிரிவின்மையானே முயக்கமுமிலராய் இருதலைப் புள்ளின் ஒருடல் போன்று மனத்தானே ஒன்றி உவகையாலே மகிழ்ந்து உண்டு ஆடுதலைச் செய்வாராயினர் என்க.

**(வி - ம்.)** ருச. பொருவு இல் போகம் - ஒப்பற்ற இன்ப நுகர்ச்சி. ஒருமீக் கூறிய - ஒப்பற்றதாகப் புகழப்பட்ட என்க. ருரு. உருவம் - அழகு.

ருசு. வள்ளி - சங்கு வளையல். பணை - மூங்கில். அமர்நகை - விரும்புதற்குக் காரணமான புன்முறுவல். ருஎ. வாள் மணிக் கொடும் பூண் - ஒளியுடைய மணிகளிழைத்த வளைந்த அணிகலன்கள்.

ருஅ. செய்யவாயினும் - சிவந்தனவாகுலும்.

ருகூ. ஆட்டினும் - ஆடுதலானும். திளைப்பினும் - ஆடுதலானும்.

சூ0 - க. பொலிவுடைய குழையணிந்த ஏவன் மகளிர் பொன் வள்ளத்திலே ஏந்திக் கொணரும் தேன் மணக்கும் தேறலோடு தெளிந்த மதுவினையும் நுகர்தலானும் என்க.

பொலங்கலம் - பொற்கலம். தேம் - தேன். தேறல் - கட்டெளிவு. மது - பழச்சாற்ருலே இயற்றியதொரு கள்.

சூஉ - ங. செந்தாமரை மலரின் சிவந்த இதழ் போன்று சிறந்த நிறத்தைப் பரப்பிய அழகிய நெடிய கண் என்க.

சூச. கனிந்த காதல் - முதிர்ந்த காதல். முனிந்து - ஊடி. ஈண்டு ஒரு சீர் விடுபட்டது.

சூரு. பிரிவின்மையானே முயக்கும் இன்றி என்க.

சூசு. பிரிவரும்புள் - இருதலைப்புள். ஒருமையின் ஒட்டி என்றது இரண்டறக் கலந்து என்றவாறு.

சூஎ. வண்டு ஆர் சோலை - வண்டுகள் ஆரவாரிக்கும் சோலை. சோலையினையுடைய வளவிய மலைச்சாரலிலே என்க.

சூஅ. அயர்ப - செய்வர். உவகையுள் மகிழ்ந்து - இன்பத்துள் மகிழ்ந்தென்க.

**கச. உவிடாட்டு முற்றிற்று.**

---

# கரு. விரிசிகை மாலைசூட்டு

இதன்கண், உதயணன் வளமலைச்சாரலில் தன் சுற்றத்துடன் உண்டாடி மகிழ்ந்திருக்கும் பொழுது, ஒருநாள் ஒரு பூம்பொழிலில் ஒரு துறவியின் மகள் விரிசிகை என்பாள் அவனைக் காண்டலும், அவள் நறிய மலர்களைக் கொணர்ந்து அவற்றை மாலையாகத் தொடுத்துத் தரும்படி வேண்டலும், அவன் மாலை தொடுத்து அளித்தலும், அவற்றை அவள் நன்கு சூடிக்கொள்ளாமை கண்டு அவளைத் தன்பால் அழைத்துத் தன் மடிமீதிருத்தி அவளழகிற்குப் பொருந்த அம்மாலைகளைச் சூட்டுதலும், துறவோர் பள்ளி, நறுமலர், விரிசிகையின் அழகு முதலியவற்றின் வருணனையும் பிறவும் கூறப்படும்.

வண்டார் சோலை வளமலைச் சாரல்
உண்டாட் டயரும் பொழுதின் ஒருநாள்
வழைஅமன் முன்றிலோடு வார்மணல் பரப்பிக்
கழைவளர் கான்யாறு கல்லலைத் தொழுகி
ஊகம் உகளும் உயர்பெருஞ் சினைய
நாகப் படப்பையொடு நறுமலர் துறுமிச்
சந்தனப் பலகைச் சதுரக் கூட்டமொடு
மந்திரச் சாலை மருங்கணி பெற்ற
ஆத்திரை யாளர் சேக்குங் கோட்டிலும்
நெடியவன் மூவகைப் படிவம் பயின்ற
எழுதுநிலை மாடமும் இடுகுகொடிப் பந்தரும்
கல்லறை உறையுளொடு பல்லிடம் பயின்றே
துறக்கக் கிழவனுந் துன்னிய காலை
இறக்க லாகா எழிற்பொலி வெய்தித்
தண்பூந் தணக்கந் தமாலந் தகரம்
ஒண்பூங் காந்தள் வெண்பூஞ் சுள்ளி
வீயா நாற்றமொ டணிவளங் கொடுப்பக்
கையமைத் தியற்றிய செய்சுனை தோறும்
வராலும் வாளையும் உராஅய் மறலக்
கழுநீர் ஆம்பல் கருங்கேழ்க் குவளையொடு
கொழுநகைக் குறும்போது குறிப்பிற் பிரியாப்
புணர்ச்சி மகளிர் போகத்துக் கழுமித்

துயிற்கண் திறந்த தோற்றம் போல
நறவுவாய் திறந்து நாண்மதுக் கமழ
அறுகால் வண்டினம் ஆர்ப்ப அயலே
அந்தீம் பலவும் அள்ளிலை வாழையும்
முதிர்கோள் தெங்கொடு முன்றில் நிவந்து
மணிக்கண் மஞ்ஞையு மழலை அன்னமும்
களிக்குரற் புறவுங் கருங்குயிற் பெடையும்
பூவையுங் கிளியும் யூகமும் மந்தியும்
மருளி மாவும் வெருளிப் பிணையும்
அன்னவை பிறவுங் கண்ணுறக் குழீஇ
நலிவோர் இன்மையின் ஒலிசிறந் துராஅய்
அரசிறை கொண்ட ஆவணம் போலப்
பொலிவொடு புணர்ந்த பொழிலகம் புதைஇப்
பெருந்தகு படிவமொடு பிறப்பற முயலும்
அருந்தவ நோன்மையர் ஆத்திரைக் கோட்டிலிற்
கேள்வி முற்றிக் கிரிசை நுனித்த
வேள்விக் கலப்பை விழுப்பொருள் விரதத்துச்
சீரை யுடுக்கை வார்வளர் புன்சடை
ஏதமில் காட்சியோர் மாதவர் உறையும்
பள்ளி குறுகி ஒள்ளிழை மகளிரொடு
வான்பொற் கோதை வாசவ தத்தையும்
காஞ்சன மாலையுங் காண்டற் ககலப்
பெருந்தண் பிண்டி பிணங்கிய நீழல்
அரும்படைத் தானை அகன்ற செவ்வியுள்
வயந்தக குமரனொடு வத்தவன் இருந்துழி
ஏதம் இன்றி இறைக்கடங் கழித்துக்
காதற் பெருந்தொடர் களைதல் ஆற்றான்
மாதர்த் தேவியொடு மாதவம் புரிந்த
மன்னவ முனிவன் தன்னமர் ஒருமகள்
அணித்தகு பேரொளி அரத்தம் அடுத்த
மணிப்பளிங் கன்ன மாசில் வனப்பின்
உகிரணி பெற்ற நுதிமுறை சுருங்கி
நிரலள வமைத்த விரலிற் கேற்பச்
செம்மையிற் சிறந்து வெம்மைய வாகி

ஊன்பெறப் பிறங்கி ஒழுகுநீர் ஆமைக்
கூன்புறம் பழித்த கோலப் புறவடிக்
குவிந்த அடிமையிற் கோபத் தன்ன
பரட்டின் நன்னர்ப் பாய சீறடித்
திரட்டி யன்ன செல்வக் கணைக்கால்
செறிந்துவனப் பெதிர்ந்த தேன்பெய் காம்பின்
நிறங்கவின் பெற்ற காலமை குறங்கின்
கைவரை நில்லாக் கடுஞ்சின அரவின்
பையழித் தகன்ற பரந்தேந் தல்குல்
துடிநடு அன்ன துளங்கிய நுசுப்பின்
கொடியடர்ந் தொழுகிய கோல மருங்கின்
புனற்சுழி அலைத்துப் பொருந்திய கொப்பூழ்
வனப்புவீற் றிருந்த வாக்கமை அவ்வயிற்(று)
அஞ்சில் ஆகத் தெஞ்சுதல் இன்றித்
திணைமுதல் இட்ட செங்கண் முகிழ்முலை
அணைபுரை மேன்மை அமைபடு பணைத்தோள்
காம்பமை சிலம்பிற் கடிநாட் காந்தட்
பூந்துடுப் பன்ன முன்கையிற் பொலிந்து
கொழுமுகை குவித்த செழுமென் சிறுவிரல்
கிளிவாய் அன்ன ஒளிவாய் உகிரின்
விரிந்துநிலா நிறைந்த மேதகு கமுகின்
எருத்திற் கேற்ற திருத்தகு கழுத்தின்
கூடுமதி அன்ன சேடணி திருமுகத்(து)
அகழ்கடற் பிறந்த ஆசறு பேரொளிப்
பவழக் கடிகை பழித்த செவ்வாய்
முருந்தொளி முருக்கிய திருந்தொளி முறுவல்
நேர்கோடு சிவந்த வார்கொடி மூக்கின்
பொருகயல் போலப் புடைசேர்ந் துலாஅய்ச்
செருவேல் பழித்த சேயரி நெடுங்கண்
கண்ணிற் கேற்ப நுண்ணிதின் ஒழுகி
முரிந்தேந்து புருவம் பொருந்திய பூநுதல்
நாள்வாய் வீழ்ந்த நறுநீர் வள்ளைத்
தாள்வாட் டன்ன தகையமை காதின்
நீல மாமணி நிமிர்ந்தியன் றன்ன

கோலங் கொண்ட குறுநெறிக் கூழை
ஒருசிகை முடித்த உறுப்பமை கோலத்து
விரிசிகை என்னும் விளங்கிழைக் குறுமகள்
இருந்தினி தொழுகும் இயன்மலைப் பள்ளியுள்
அருந்தவர் அல்லதை ஆடவர் அறியாள்
தவிர்வில் காதலொடு தன்வழிப் படூஉம்
கவர்கணை நோன்சிலைக் காமன் இவனெனும்
மையல் உள்ளமொடு பைய இயலிப்
பிள்ளைமை கலந்த பேதைப் பெரும்பிணை
வெள்ளை நோக்கமொடு விரும்புபு விதும்பிப்
பவழப் பாவையும் பந்துங் கிடைஇப்
புகழப் பட்ட பூமரக் காவினுள்
நந்தி வட்டமு நாகத் தலரும்
சிந்து வாரமுஞ் சேபா லிகையும்
மணிக்குருக் கத்தியு மணிப்பூஞ் சுள்ளியும்
நாட்சிறு சேடமு நறுஞ்செண் பகமும்
கோட்கமைந் தேந்திய கோலப் பன்மலர்
அம்பூங் குடங்கை அகவயின் அடக்கிக்
கொம்பேர் மருங்குல் கோமகற் குறுகித்
திருந்துவாய் திறந்து தேனென மிழற்றிப்
பெருந்தண் மலரிற் பிணையல் தொடுத்தேன்
பாவையும் யானும் பண்புளிச் சூடுகம்
ஈமின் ஐயவென் றிரந்தனள் நீட்ட
நூலொடு புணர்ந்த வாலியன் மார்பின்
தவத்தியற் பள்ளி சார்ந்தனள் உறையும்
இயற்கைத் திருமகள் இவளென எண்ணி
இணைமலர் நெடுங்கண் இமைத்தலும் வாடிய
துணைமலர்க் கோதைத் தோற்றமுங் கண்டே
முனிவர் மகளெனத் தெளிவுமுந் துறீஇ
ஐய மின்றி ஆணை யோட்டிய
தெய்வத் திகிரி கைவலத் துயரிய
நிலப்பெரு மன்னர் மகளிர்க் கமைந்த
இலக்கணக் கூட்டம் இயற்படத் தெரியா
அரும்படை வழக்கின் அன்றியு முனியாது

நரம்புபோரத் தழும்பிய திருந்துவிரல்!அங்கையிற்
புரிநூன் மீக்கோள் பூம்புறத் தேற்றதன்
தெரிநூல் வாங்கி இருநூற் கோளீஇப்
பவழமும் வெள்ளியும் பசும்பொன் அடரும்
திகழ்கதிர் முத்தமுந் திருமணிக் காசும்
உறழ்படக் கோத்த ஒளியின போல
வண்ணம் வாடாது வாசங் கலந்த
தண்ணறும் பன்மலர் தானத் திரீஇ
வாட்டொழில் தடக்கையின் வத்தவர் பெருமகன்
சூட்டுநலம் புனைந்து சுடர்நுதற் கீய
ஈயக் கொண்டுதன் எழின்முடிக் கேற்பச்
சூடுதல் தேற்றாள் சுற்றுபு திரியும்
ஆடமைத் தோளி அலமரல் நோக்கி
மடவரன் மாதரை வாவென அருளித்
தடவரை மார்பன் தாண்முதல் உறீஇ
உச்சிக் கேற்ப ஒப்பனை கோளீஇப்
பக்கச் சின்மலர் பத்தியிற் கட்டுபு
நீல நாகம் பைவிரித் தன்ன
கோலச் சிகழிகை தான்முதல் சேர்த்தி
அஞ்செங் கத்திகை அணிபெற அடைச்சிப்
பைங்கேழ்த் தாமம் பக்கம் வளைஇ
இருளறு மதியின் திருமுகஞ் சுடர
அமைபுரி தோளியை அன்பின் அளைஇப்
புனைமலர்ப் பிணையல் சூட்டினன் புகன்றேன்.

---

## கரு. விரிசிகை மாலைசூட்டு

அஃதாவது, உதயணகுமரன் மலைச்சாரலிலே உண்டாடிய காலத்தே ஒருநாள், தன்பால் வந்து மாலை புனைந்து தரும்படி இரந்து வேண்டிய விரிசிகை என்னும் காமஞ் சாலா இளமையுடையாளுக்கு மலர்மாலை தொடுத்துச் சூட்டியதனைக் கூறும் பகுதி என்றவாறு.

### உரை

க - கஉ: வண்டார்.........................பயின்றே.

(பொ - ரை.) இங்ஙனம் மலைச்சாரலிலே உண்டாடி மகிழ் கின்ற பொழுது ஒருநாள், சுரபுன்னை மரஞ்செறிந்த மணல்

பரப்பப்பட்ட முன்றிலையுடைத்தாய் மூங்கில் வளர்ந்த கான் யாற்றின் அயலதாய், நாகமரச் சோலையும் நறிய மலர்க்காவும் சூழப்பட்டதாய்ச் சந்தனமரத்தாலாய சதுரப்பலகைகளையுடைய தாய், மந்திரமோதும் சாலையை உடைத்தாய், யாத்திரையாளர் தங்குதற்குரிய அழகுமிக்க கொட்டிலும் திருமாலினது மூன்று வகைப்பட்ட திருவுருவங்களையும் வரையப்பட்ட ஓவியமாடமும் பூங்கொடிகளால் இயற்றப்பட்ட பந்தரும் கற்களானியற்றிய இருக்கைகளும் இன்னோரன்ன பலவேறு இடங்களும் உடைத் தாய் என்க.

(வி - ம்.) க. வண்டுகள் ஆரவாரிக்கும் சோலையினையுடைய வளவிய மலைச்சாரலிலே என்க.

உ. உண்டாடுதலைச் செய்யாநின்றபொழுதில் ஒருநாள் என்க.

௩. வழை - சுரபுன்னை. அமலுதல் - செறிதல். வார் மணல்: வினைத்தொகை; வார்ந்த மணல் என்க. வார்தலாவது எக்கரிடுதல்.

௪. கான்யாறு கல்லலைத்து ஒழுக என்க. அயலே கான்யாறு ஒழுகாநிற்ப அதன் கரையிலே அணிபெற்ற கொட்டில் எனக் கூட்டுக. ௪. கான்யாறு என இயைத்துக் கொள்க. ௫. ஊகம் - கருங்குரங்கு.

௬. நாகப்படப்பை - நாகமரத்தோட்டம். கருங்குரங்கு தாவா நின்ற உயர்ந்த கிளைகளையுடையவாகிய நாகமரம் என்க. ௭. சதுர வடிவினவாகிய சந்தனப்பலகைக் கூட்டம் என்க. சந்தன மரத்தா லியற்றப்பட்ட மணைப்பலகை என்பது கருத்து. துறுமி - செறிந்து.

அ. மந்திரச்சாலை - தேவித்தற்குரிய (தியானித்தற்கு) இடம். மந்திரச்சாலையும் அதன் அயலே அழகுற்ற கொட்டிலும் என்க.

௯. யாத்திரை செய்துவரும் விருந்தினர் தங்குதற்குரிய கொட்டில் என்க.

௧0. நெடியவன் - திருமால். அவனது மூவகைப் படிவங்களா வன:—நீர்வாழ் உயிரினமும் விலங்கினமும் மானிடமும் ஆகிய மூன்று கூற்றினும் அடங்கிய மீன் ஆமை பன்றி மானுட மடங்கல் குதிரை வாமனன் பரசுராமன் இராமன் பலதேவன் கண்ணன் என்பன.

௧௧. எழுதுநிலை மாடம்-ஓவியமாடம். மிடுகு-பிணைந்த. கொடி- பூங்கொடி.

௧௨. கல்லறை உறையுள் - கல்லை அறுத்தியற்றிய இருக்கை என்க. பல்லிடம் - (இன்னோரன்ன உண்ணவும் உறங்கவும் ஓதவும் உரிய) பிற பலவிடங்களும் என்க.

பல்லிடம் பயின்று (௨௫) பொலிவொடு புணர்ந்த பொழிலகம் என இயையும்.

௧௩ - ௨௫ : துறக்க........................ஆர்ப்ப.

(பொ - ரை.) இந்திரனும் ஒருகால் அங்குவந்து புகுந்த பின்னர் அவ்விடத்தைவிட்டு நீங்கவியலாமைக்குக் காரணமான

அழகுப் பொலிவினையுடையதாய்த் தன்னகத்தே தணக்கம், தமாலம், தகரம், காந்தள், மராமரம், என்னும் மரங்கள் ஒழியாத நறுமணத்தோடே அழகு வளத்தினைச் செய்யாநிற்பவும், ஆண்டுள்ள செய்சுனைகள்தோறும் வராலும் வாளையும் உலாவி எதிராநிற்பக் கழுநீரும் ஆம்பலும் நீலமும், தத்தம் மலர்வாய்களைத் திறந்து புதிய தேன்மணத்தைக் கமழச்செய்ய அந்த மணத்தை நுகர்ந்த வண்டுகள் அவற்றின் அயலே இன்னிசை முரலாநிற்பவும் என்க.

(வி - ம்.) துறக்கக் கிழவன்: இந்திரன். உம்மை: உயர்வு சிறப்பும்மை. துன்னிய காலை - அங்கு ஒருகால் வருவானாயின் என்க. இறக்கலாகா - பின் அவ்விடத்தை நீங்கிப்போக இயலாமைக்குக் காரணமான என்க. எழிற்பொலிவு - அழகாலுண்டான பொலிவு.

கடு. தண்பூந் தணக்கம் - குளிர்ந்த மலர்களையுடைய தணக்க மரங்கள். தணக்க முதலியன மரவகைகள்.

கசு. ஒண்பூங்காந்தள் - ஒளியுடைய மலர்களையுடைய தோன்றி என்க. சுள்ளி - மராமரம்.

கஎ. வியா நாற்றம்-ஒருபொழுதும் கெடாத மணம். அணிவளம்-காட்சியின்பம்.

கஅ. துறவிகள் தங்கள் கைத்தொழிலாலே இயற்றப்பட்ட செயற்கைச் சுனைகள்தோறும் என்க.

கசு. வரால் வாளை என்பன மீன்வகை. உராஅய் - உராய்ந்து எனினுமாம். மறல - மாறுபட.

உ0 - உச. கழுநீர், ஆம்பல், குவளை முதலியவற்றின் அரும்புகள் கணவன் குறிப்பினின்றும் நீங்காத குலமகளிர் தத்தங் கணவரொடு புணர்ந்த புணர்ச்சியிற்பின் நிகழ்த்தும் இன்ப நித்திரைப்பொழுதில் அவர் கண் இன்பமெய்ப்பாடொழுகச் சிறிதே திறந்திருந்தாற்போலத் தத்தம் தேன்றுளிக்கும் வாயைச் சிறிதே திறந்து மணங்கமழ்விக்க என்க.

உ0. கருங்கேழ்க்குவளை கரிய நிறமுடைய குவளை அரும்பு என்க.

உக. கொழுநகைக் குறும்போது - கொழுவிய ஒளியையுடைய அரும்பு. உஉ. கணவர் குறிப்பினின்றும் விலகாத குலமகளிர்.

போகத்துக் கழுமி - நுகர்ச்சியின்பத்தாலே நிறைந்து துயிலும் துயில் என்க. துயில்-இன்ப நித்திரை.

உச. நறவு - தேன். நாள்மது - புதுத்தேன்.

உடு. அறுகால் - ஆறுகால்களையுடைய வண்டினம் என்க.

உடு - நடு : அயலே......................புதைஇ.

(பொ - ரை.) பலாவும் வாழையும் தெங்கும் முன்றிலின் கண் உயர்ந்து நிற்பவும், மயிலும் அன்னமும் புறவும் குயிலும்,

இவற்றின் பெடைகளும், நாகணவாய்ப்புள்ளும், கருங்குரங்கும், மந்தியும், கலையும், பிணையும், இன்னோரன்ன பிறவும் கூடித் தம்மை நலியும் தீயோர் எக்காலத்தும் அவ்விடத்தே இல்லாமையான், அச்சமிலவாய் ஆரவாரித்து உலாவாநிற்றலான், அரசன் வீற்றிருந்ததோர் வீதிபோலப் பொலிந்து திகழும் பொழிலினூடே மறைந்து என்க.

(வி - ம்.) உ௬. அழகும் இனிமையும் உடைய பலாமரமும் என்க. அள்ளிலை - செறிந்த இலை.

உ௭. முதிர்கோள் தெங்கு - முதிர்ந்த குலைகளையுடைய தென்னை. முன்றில் - தவப்பள்ளியின் முற்றம். நிவந்து - உயர்ந்து.

நீலமணிபோன்ற புள்ளிகளையுடைய மயில்களும் என்க.

மழலை அன்னம் என்புழி மழலை, இளமைப்பண்பு குறித்துநின்றது. மழலை மொழியையுடைய அன்னம் என்பாருமுளர்.

உ௯. களிக்குரல் புறவு-களிப்பிற்குக் காரணமான இனிய குரலையுடைய புறவும் (அவற்றின் பெடைகளும் என்க.)

௩0. பூவை - நாகணவாய்ப்புள். மந்தி - பெண்குரங்கு. ௩௧. மருளிமா - மருளும் இயல்பையுடைய மான். வெருளிப்பிணை - அஞ்சுதலையுடைய பெண்மான் என்க.

௩௨. கண் - இடம். ஒலி சிறந்து - ஆரவாரம் மிகுந்து.

௩௩. நலிவோர் - தம்மை நலிபவர்.

௩௪. அரசிறை கொண்ட ஆவணம் - அரசர் தங்கிய வீதி.

௩௫. புதைஇ - மறைந்து. புதையப் பெற்றென்க. பொழிலினூடே மறைந்தென்க.

௩௬ - ௭௭ : பெருந்தரு................இருந்துழி.

(பொ - ரை.) தவவேடத்தோடே பிறவிப்பிணிதீர முயலாநின்ற அரிய தவவலிமையையுடைய யாத்திரையாளர் வந்து தங்காநின்ற கொட்டிலின்கண் மெய்ப்பொருட் கேள்வியாலே முதிர்ந்து அந்நெறியிலே ஒழுகி முதிர்ந்தவரும், வழிபாட்டிற்குரிய பொருள்கள் வைத்த பைகளையுடையோரும், மெய்ப்பொருளை எய்துதற்குரிய விரதத்தினையுடையோரும், மரவுரி உடுத்தவரும், சடையினையுடையவரும், குற்றமற்ற மெய்க்காட்சியுடையோரும் ஆகிய சிறந்த துறவோர் உறைதற்கிடமான தவப்பள்ளியை அடைந்து ஆண்டுறையும் துறவியரைக் காண்டல் காரணமாக, ஆயமகளிரோடே வாசவதத்தையும் காஞ்சனமாலையும் உதயணகுமரனை நீங்கிச் செல்லா நிற்பவும், அரிய படைக்கலங்களையுடைய மறவரும் தன்னை நீங்கி அகன்ற செவ்வியிலே, அவ்வுதயணகுமரன் வயந்தககுமரன் என்னும் அமைச்சனோடு இருந்த பொழுது என்க.

(வி - ம்.) ௩௬. பெருந்தகு படிவம் - பெருமை தக்கிருக்கின்ற தவவேடம். ௩௭. நோன்மை - வலிமை.

௩௮. கேள்வி - ஞானக்கேள்வி. கிரிசை - கிரியை ; ஒழுக்கம்.

௩௯. வேள்வி - பூசனை. கலப்பை - கலங்களையுடைய பை. விழுப்பொருள் - இறைப்பொருள்.

௪0. சீரை - மரவுரி. வளர்வார்சடை என மாறுக. வளர்கின்ற நெடிய சடை என்க. பேணப்படாமை தோன்ற புன்சடை என்றார். ௪௧. ஏதமில் காட்சி - மெய்க்காட்சி. மாதவர் - பெரிய தவத்தை யுடைய துறவோர்.

௪௨. ஒள்ளிழை மகளிரொடு - ஒள்ளிய அணிகலன்களையுடைய மகளிருடன்.

௪௩. வான்பொன் - சிறந்த பொன்.

௪௪. காண்டற்கு - தவப்பள்ளிகளையும் துறவோரையும் காணு தற் பொருட்டு.

௪௫-௭. அரும்படைத்தானை அகன்ற செவ்வியுள் பெருந்தண் பிண்டி நீழல் வயந்தக குமரனொடு வத்தவன் இருந்துழி என மாறுக. பிண்டி-அசோகு. கிளைகளடர்ந்து பின்னியதனாலே உண்டான நீழலில் என்க.

அரும்படை - அரிய படைக்கலன். தானை - சேனை. செவ்வி - அமயம். வத்தவன் : உதயணகுமரன்.

[௪௮ - ௬௩ : விரிசிகை என்னும் ஒரு மகளின் எழில் வருணனை]

௪௮ - ௬௬ : ஏதமின்றி..............அவ்வயிறு.

(பொ - ரை.) அக் காட்டின்கண் ஒரு மன்னவன் தன் அரசவுரிமையைத் துறந்துவைத்தும் அன்புத்தொடரை அறுக்க இயலாதவனாய்த் தன் மனைவியோடும் வந்து தவம் புரிந்திருந்தானாக. அம் மன்னவ முனிவனுடைய ஒரே மகள், செம்பஞ்சினை அடுத்த பளிங்கு போன்ற திருமேனி அழகினையும், நகத்தாலே அழகு பெற்றனவும் நுனி முறையே சிறுத்தனவும் ஒழுங்குபட்டனவும் இலக்கண நூலிற் கூறப்பட்ட அளவானே அமைந்தனவும் ஆகிய (கால்) விரல்களையும், அவ் விரலிற் கிணங்கச் செம்மை நிறத்தாலே சிறந்து விரும்பப்படுவனவாய்த் தசைப்பற்றுடையவாய் ஒளி வீசி, ஆமையினது புறத்தினைப் பழியாநின்ற புறவடியினையும், அப்புறவடியின் தன்மைக்குப் பொருந்த இந்திரகோபத்தை ஒத்த பரட்டினையும், பரவிய சிற்றடிக் கேற்பத் திரட்சியுற்றனவும், தேன் பெய்த மூங்கிலை ஒத்தனவும் ஆகிய கணைக்காலினையும், நிறத்தாலே அழகுற்ற அக்கால்களுக்குப் பொருந்திய துடைகளையும், அழகானே பாம்பின் பணத்தை அழித்து அகன்று பரந்துயர்ந்த

அல்குலினையும், உடுக்கையின் நடுவினை ஒத்த அசையாநின்ற நுசுப்பினையும், பூங்கொடியை வென்று நீண்ட அழகிய இடையினையும், நீர்ச்சுழியை வருத்தி நூலிற்குப் பொருந்திய கொப்பூழினையும், திருத்தமமைந்து அழகு குடியிருந்த வயிற்றினையும் என்க.

(வி - ம்.) சஅ. ஏதம் - குற்றம். தன் தவவொழுக்கத்திற்குக் குற்றம் நேர்தலின்றி என்க. இறைக்கடம்-அரசவுரிமை. கழித்தும் எனற்பாலதாகிய சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

சகூ. காதற் பெருந்தொடர் - அன்பு செலுத்துதற்குக் காரண பெரிய தொடர்பு. எனவே, மனைவி மக்களாகிய அன்புத் தொடர்புடையாரைத் துறக்க இயலாதவனாகி என்றாராயிற்று.

ருO. மாதர்த் தேவி-அழகிய மனைவி. மனைவியுந் தவம்புரிந்தமை தோன்றத் தேவியொடு மாதவம் புரிந்த முனிவன் என்றார்.

ருக. மன்னவமுனிவன் - மன்னவர் மரபிற் பிறந்தவனாகிய முனிவன். அமர் ஒருமகள் - பெரிதும் விரும்புதற்குக் காரணமான ஒரே மகள்.

ருஉ. அழகு தக்கிருக்கின்ற பெரிய ஒளியினையுடைய மணிப்பளிங்கு, அரத்தம் அடுத்த மணிப்பளிங்கு எனத் தனித்தனிக் கூட்டுக.

அரத்தம் - செம்பஞ்சு. மணிப்பளிங்கு : பண்புத்தொகை.

பளிங்கு தன்னயலே உள்ள பொருளின் நிறத்தை ஏற்று எதிரொளிவிடும் தன்மையுடையது ஆகலின், மாசின்மைக்கும் ஒளியுடைமைக்கும் நிறமுடைமைக்கும் உவமையாக அரத்தம் அடுத்த பளிங்கு என்றார். வனப்பு - ஈண்டுத்திருமேனியின் வனப்பு என்க.

ருச. உகிர் - நகம். ஒன்றற்கொன்று நுதி முறையே சிறுத்தென்க.

ருரு. அமைத்த-அமைந்த. இனி அமைந்த நிரல் அளவு விரலின் என மாறி அழகு நூலிற் கூறப்பட்ட ஒழுக்கும் அளவும் உடைய விரலினையும் எனினுமாம்.

ருசு. வெம்மைய - விரும்புதற்கிடமான என்க.

ருஎ. ஊன்பெற - தசைத்திரட்சியைப் பெறுதலானே. பிறங்கி- ஒளிவிசி. கோலம் - அழகு.

ருஅ. அடிமையின்-அவ்வடியின் செம்மைக்கேற்ப என்க. கோபம்- இந்திரகோபப் புழு.

சுO. நன்னர்ப் பாய சிரடிக்கேற்பத் திரட்டினாற் போன்றனவும் தேன்பெய் காம்புபோன்றனவுமாகிய நிறம் கவின் பெற்ற செல்வக் கணைக்கால் என்க.

சுக. திரட்டியன்ன - திரட்டிச் செய்தாற் போன்ற.

சுஉ. தேன்பெய் காம்பு-தேன் பெய்து வைக்கும் மூங்கிற் றுண்டு. "தேனெய்பெய் வாடாத காம்பேபோற் கணைக்காலின் வனப்பினவே" (சீவக - கஎசு.) என்றார் பிறரும்.

௬௩. அக்கணைக்காலுக்கு அமைந்த குறங்கினையும் என்க. குறங்கு - துடை.

௬௪. கைவரை நில்லாக் கடுஞ்சின அரவு-தன்வயத்திலே நில்லாமற் கிளர்ந்தெழா நின்ற கடிய வெகுளியையுடைய பாம்பு. ௬௫. பை - பணம் (படம்)

௬௬. துடிநடு - உடுக்கையின் நடுப்பகுதி. நுசுப்பு - இடையின் நடுப்பகுதி.

௬௭. கொடி - பூங்கொடியை வென்று. ஒழுகிய - நீண்ட, மருங்கு - இடை.

௬௮. புனற்சுழி - நீர்ச்சுழி. இது கொப்பூழுக்குவமை.

௬௯. வனப்பு - அழகு. வாக்கு-திருத்தம். வயிற்றினையும் அவ்வயிற்றின்மேல் உள்ள ஆகத்து என இயைக்க.

எ0 - அக : அஞ்சிலாகத்து....................செவ்வாய்.

(பொ - ரை.) மார்பிடத்தை எஞ்சாது கவர்ந்துகொண்டு அடியிட்டு முகிழ்த்த சிவந்த கண்களையுடைய முலையினையும், பஞ்சணையை நிகர்த்த மென்மையுடையதும் அழகிய மூங்கில் போன்றதுமாகிய தோளினையும், காந்தள் துடுப்பை ஒத்த முன்கையினையும், அம்முன்கையின்கண் அக்காந்தளினது சிற்றரும்புகளை ஒத்த மெல்லிய சிறு விரல்களினையும், கிளியினது அலகை ஒத்த ஒளி வாய்த்த நகத்தினையும், கமுகினை ஒத்ததும் பிடரியில் பொருந்திய அளவிற்கு அழகுடையதும் ஒளிவிடுவதும் மேன்மை தக்கிருப்பதும் ஆகிய கழுத்தினையும், முழுமதிபோன்ற அழகுடைய முகத்தினையும், அம்முகத்தின்கண் கடலிலே தோன்றிய குற்றமற்ற ஒளியையுடைய பவழத்துணுக்கினைப் பழித்த சிவந்த வாயினையும், என்க.

(வி - ம்.) எ0. அம்சில் ஆகம்-அழகிய சிலவாகிய உரோமங்கள் பொருந்திய மார்பிடத்தை என்க. எஞ்சுதல் இன்றி - (முழுதும்) குறைகிடவாமல். எக. திணை முதலிட்ட - இருப்பிடமாக அடியிட்ட என்க. திணை - இடம். முகிழ்முலை : வினைத்தொகை.

எஉ. அணைபுரை - பஞ்சணையை ஒத்த. அமை-அழகு (பிங்கல-௩0௬அ). பணை - மூங்கில்.

எ௩-௪. மூங்கில் பொருந்திய மலையின்கண்ணுள்ள மணமுடைய காந்தளினது புதுமலரை ஒத்த முன்கை என்க.

துடுப்புப் போறலின் காந்தண்மலர் துடுப்பெனப்பட்டது.

காந்தள் கடிநாட் பூந்துடுப்பு என மாறுக. நாள் துடுப்பு - அன்று மலர்ந்த பூ என்க.

முன்கையினையும் அக்கையினிற் பொலிந்து குவித்த விரலினையும் என்க.

எ௫. கொழுவிய அக்காந்தண் முகையைக் குவித்தாற் போன்ற செழுமையுடைய மெல்லிய விரலிணையும் என்க.

எசு. கிளிவாய் - கிளியினது அலகு. ஒளிவாய்த்த உகிர் என்க. உகிர் - நகம்.

எஎ-அ. விரிந்துநிலா நிறைந்தகழுத்து, மேதகுகமுகினை ஒத்த கழுத்து, எருத்திற்கேற்ற கழுத்து, திருத்தகு கழுத்து எனத் தனித் தனிக் கூட்டுக.

எகூ. கூடுமதி - எல்லாக்கலைகளும் கூடிய முழுத்திங்கள். சேடு - பெருமை. திருமுகத்தினையும் அம்முகத்தின்கண் என விரிக்க.

அ௦. அகழ்கடல், சகரரால் அகழப்பட்ட கடல் என்க. ஆசு - குற்றம். பவழக்கடிகை - பவழத் துணுக்கு: இது நிறத்திற்குவமை.

அ௧ - கூ௩ : முருந்தொளி.............................குறுமகள்.

(பொ - ரை.) முருந்தினை வென்ற ஒளிமுறுவலினையும், நேர்மைகொண்டு சிவந்த நெடிய மூக்கினையும், போரிடுங் கயல் மீன்களை ஒத்து மிளிரா நிற்பனவும் வேலைப்பழிப்பனவும் சிவந்த வரிபடர்ந்தனவும் ஆகிய நீண்ட கண்களையும், அக்கண்ணின் அழகுக்கு ஏற்ப நுண்ணிதின் நீண்டு முரிந்து உயர்ந்த புருவத்தினையும், அப்புருவத்திற்கேற்ற பொலிவுடைய நுதலினையும், ஞாயிற்றின் வெயிலிலே பறித்துப் போகடப்பட்ட வள்ளையினது வாடிய தண்டினை ஒத்த அழகமைந்த செவியினையும், நீலமணி நீண்டு வளர்ந்தாலொத்த அழகினைக் கொண்ட குறிய நெறிப்பினையுடைய கூந்தலினையும், அக்கூந்தலைக் கை செய்யாது ஒரே சிகையாக முடிக்கப்பட்ட அழகினையும் உடைய விரிசிகை என்னும் குறுமகள் என்க.

(வி - ம்.) அ௧. முருந்து-மயிலிறகின் அடிக்குருத்து. முருக்கிய-வென்ற. முறுவல் - பல்.

அ௩. நேர்மையைக் கொண்டென்க. வார் கொடி மூக்கின் - நீண்ட பொற்கொடிபோன்ற மூக்கு என்க.

அசு. கண்களுக்குத் தம்மு[illegible] - போரிடுகின்ற இரண்டு கயல் மீன்கள் உவமை. புடை சேர்ந்து உலாஅய் - பக்கங்களை அணுகிச்சென்று உலாவி என்க.

அ௫. செருவேல் - போர்வேல். சேயரி-சிவந்த கோடு. அசு-அஎ. நெடுங்கண்ணினையும் அக்கண்ணிற்கேற்ப என விரிக்க.

அஎ. முரிந்தேந்து புருவம் - வளைந்துயர்ந்த புருவம். பூநுதல் - பொலிவுடைய நெற்றி.

அஅ. நாள் வாய் வீழ்ந்த வெயிலிற் போகட்ட என்க. நாள் : வெயிலிற்கு ஆகுபெயர். இது ஞாயிற்றிற்காகி அதன் வெயிலிற்கு இருமடி ஆகுபெயராயிற்று. நாள்வாய் வீழ்ந்த என்றது, வள்ளைத் தண்டு வாடுதற்குக் குறிப்பேதுவாய் நின்றது.

அ௬. வாட்டு - வாடல். தகை - அழகு.

௬0-௧. நீலமணி நீண்டுவளர்ந்தாற் போன்ற அழகினைக் கொண்ட கூழை, குறுநெறிக் கூழை எனத் தனித்தனிக் கூட்டுக.

மா - கரிய. குறுநெறிய-குறிய நெறிப்பினையுடைய. நெறிப்பு-அறல் படல். கூழை - கூந்தல். ௬௨. பலவகையிற் பண்படுத்தி முடியாமல் ஒரே முடிப்பாக முடிந்த சிகை என்பார் ஒருசிகை முடித்த என்றார். சிகை - கொண்டை.

௬௪ - ௧௧௩: இருந்நிவிது..............................நீட்ட.

(பொ - ரை.) இவ்விரிசிகை தான் உறைந்து ஒழுகாநின்ற அம்மலைச்சாரலின்கண் அமைந்த துறவோரை அறிந்திருப்பாள் அல்லது, பிற ஆடவரை அறிந்ததில்லை, அத்தகையோள் உதயணகுமரன் இருந்த பொழிலின்கண் வந்து அவனை நோக்கினாள்: அங்ஙனம் நோக்கியவள், இவன் தான் கதைவாயிலாய்க் கேட்டிருந்த காமனே போலும்! இவன் தன்பாற் காதலுடையவனாய் அநங்கனாயினும் இவ்வுருவத்தோடே தன்பால் எய்தினான் போலும் என்னும் கருத்துடையவளாய் மயங்கிய நெஞ்சத்தோடு மெல்லமெல்ல நடந்து பிள்ளைமைத்தன்மை கலந்த பெண்மான் நோக்கம் போன்றதொரு வெள்ளை நோக்கத்தோடே அவ்வுதயணனைப் பெரிதும் விரும்பித் தனது பாவை பந்து முதலிய விளையாட்டுக் கருவிகளைப் போகட்டு விட்டுத் தான் அப்பொழிலில் கொய்து வைத்திருந்த நந்தியா வட்டம் முதலிய பலவேறு மலர்களைத் தன் அங்கையில் ஏந்திச் சென்று அக்கோமகனை எய்தி அழகிய தன் வாயினைத் திறந்து தேன்போன்ற சில மொழிகளாலே "ஐய! இம் மலர்களை மாலையாகத் தொடுத்துத் தருக! அங்ஙனம் தரின் அவற்றை யானும் என்பாவையும் சூடாநிற்பேம்" என்று இரந்து கூறி அவற்றை உதயணனுக்குக் கொடாநிற்ப என்க.

(வி - ம்.) ௬௪-௫. இனிதாக உறைந்து வரும் அழகிய அம்மலைப் பள்ளியின்கண் உள்ள அரிய தவவொழுக்கமுடைய துறவோரை அல்லது என்க. ஆடவர் - பிற ஆடவர்.

௬௬. தன்னை விரும்பித் தன்பால் வந்த காமன் என்க. ௬௭-அ. உளத்தைக் கவரும் மலர்க்கணையினையும் வலிய கருப்பு வில்லினையும் உடையோன் என யான் கதையிற்கேட்ட அக்காமனே இவன் என்று துணிந்து அவன்பால் மயங்கிய நெஞ்சத்தோடே மெல்ல நடந்து என்க.

௬௬. பேதைப் பெரும்பிணையினது நோக்கம் போன்றதொரு வெள்ளை நோக்கத்தோடு விரும்பி விதும்பி என்க.

எனவே அவ்விரிசிகை காமஞ்சாலா இளமைப் பருவத்தாளாயிருந்தும் உதயணன்பாற் பழம்பிறப்பிற்றொடர்பு பட்டமையானும் அவனது பேரழகானும் அவனைக் காண விரும்பிக் கண் விதுப்புற்றனள் என்பது கருத்தாயிற்று.

பேதைப்பிணை - பெண்ணாகிய பிணைமான். பிள்ளைமை கலந்த வெள்ளைநோக்கம் - காமமுதலியன கலவாத பிள்ளைத்தன்மையுடைய நோக்கம். விதும்புதல்-வேட்கை மிகுதியினால் காண்டற்கு விரைதல்.

காட்சி விருப்பினாலே பாவை முதலிய விளையாட்டுக்கருவிகளை அவ்விடத்திலேயே போகட்டு என்க. ௧0உ. கிடைஇ - கிடக்கச் செய்து.

௧0௩. புலவர் முதலியோரால் புகழப்பட்ட அழகுடைய பூமரக் காவினுள் என்க.

௧0௪. நந்தி வட்டம்: நந்தியாவட்டம். நாகத்தலர் - நாகப் பூ.

௧0௫. சிந்துவாரம் - சேபாலிகை என்பன நொச்சி வகைகள். அவற்றின் மலர்க்கு ஆகுபெயர்.

௧0௬. மணிபோன்ற நிறமுடைய குருக்கத்திமலர் என்க. பணிப்பூ- அணிகலன்போன்ற மலர். சுள்ளி - மராமரப்பூ.

௧0௬. நாள் சிறு சேடம் - புதிதலர்ந்த சிறு சேடமலர் என்க.

௧0௭. தான் கொய்து கொள்ளுதற்குப் பொருந்தி இருந்தவற்றைக் கொய்து ஏந்திய அழகிய அப் பலவேறு மலர்களையும் என்க.

௧0௮. குடங்கை - அகங்கை (உள்ளங்கை) குடலையுமாம்.

௧0௯. கொம்பு ஏர் மருங்குல் - பூங்கொம்பு போன்ற இடையினை யுடைய அவ்விரிசிகை என்க. கோமகன்: உதயணகுமரன்.

௧௧௧. பிணையல் - மாலை.

௧௧உ. பண்புளி - பண்போடே. சூடுகம் - சூடுவேம்.

௧௧௩. ஈமின் - கொடுமின். இரந்தனள்: முற்றெச்சம்.

[அவ்விரிசிகை நல்லாளைக் கண்ட உதயணகுமரன் நிலைமை.]

௧௧௪ - ௧உ௩ : நூலொடு..................................தெரியா.

(பொ - ரை.) இவள் மெய்ந்நெறி நூலோடு பொருந்திய தூய முறைமையோடே தவம் இயற்றும் இத்தவப்பள்ளியின்கண் உறைதலை விரும்பி வந்து உறையாநின்ற திருமகளோ? என முதலில் ஐயுற்றுப் பின்னர் அவளுடைய தாமரைமலர் போன்ற அழகிய நெடிய கண்கள் இமைத்தலையும், மாலை வாடியிருத்தலை யும் கண்டு, இவள் திருமகள் அல்லள்; இப்பள்ளியில் உறையும் முனிவர் மகளே ஆதல் வேண்டும் எனத் துணிந்து, பின்னரும் அவள்பால் அமைந்துகிடந்த அரசமகளிர்க்குரிய இலக்கணங் களை அந்நூலிலக்கணத்தாலே ஆராய்ந்துணர்ந்து என்க.

(வி - ம்.) ௧௧௪. நூல்-மெய்ந்நூல். வால்இயல் மரபின் தவம் - தூய இயல்பினையுடைய முறைமையையுடைய தவவொழுக்கம்.

௪௧௫. சார்ந்தனள் : முற்றெச்சம். ஈண்டு உறைதலை விரும்பி உறையும் திருமகளோ? என்று ஐயுற்று என்க.

௧௧௬. இயற்கையினையுடைய திருமகள் என்க.

திருமகளோ எனற்பாலதாகிய ஐய ஓகாரம் செய்யுள் விகாரத்தாற் றொக்கது. திருமகளோ அல்லது மானிடமகளோ என்று ஐயுற்று என விரித்தோதுக. எண்ணி என்பது ஐயுற்று என்பதுபட நின்றது.

௧௧௭. இணைக்கப்பட்ட இரண்டு செந்தாமரைமலரை ஒத்த அழகுடைய நெடிய கண்கள் இமைத்தலையும் என்க.

௧௧௮. துணைமலர் : வினைத்தொகை ; துணைத்தல் - பிணைத்தல். கோதை - மாலை.

௧௧௯-௨௦. ஐயமின்றி முனிவர் மகளெனத் தெளிவு முந்துறீஇ என மாறுக. முந்துறீஇ - முந்தி. தெளிவு முந்துறீஇ என்றது தெளிந்து என்றவாறு.

௧௨௧-௩. பின்னரும் தெய்வத்தன்மையுடைய ஆணைச்சக்கரத்தைக் கைவன்மையானே உயர்த்திய முடிவேந்தர் மகளிர்க்குப் பொருந்திய இலக்கணத் தொகுதி அவள்பாற் கிடத்தலை அழகு இலக்கண நூலுக்குப் பொருந்த ஆராய்ந்துணர்ந்து என்க. தெரியா - தெரிந்து. திகிரி - ஆணைச் சக்கரம்- கைவலம் - கைவன்மை. உயரிய - உயர்ந்த. பெரு மன்னர் - முடிவேந்தர்.

௧௨௩. இயல்பட - அழகுநூல் இலக்கணத்திற்கேற்ப என்க.

[உதயணன் விரிசிகைக்கு மாலைபுனைந்தளித்தல்]

௧௨௪ - ௧௩௪: அரும்படை.... ..............................சுடர்நுதற்கீய.

(பொ - ரை.) தன் பகைவர் தப்புதல் அரிய படைக்கலன்களைச் செலுத்துதலுண்மையானும், அல்லதூஉம் வெருதே எப்பொழுதும் யாழை இயக்குதலான் அதன் நரம்பு பொருதலானும் தழும்புடையதாகிய திருந்துதலுற்ற விரலையுடைய தனது கையானே தனது மேலாடையை வாங்கி அதன்கண் ஆராய்ந்து தேர்ந்த நூல்களுள் இரண்டினை உருவி அவ் விரண்டினையும் சேர்த்துத் திரித்துப் பவழமும் வெள்ளித் தகடும் பசும்பொற்றகடும் முத்தும் மணிக்காசும் ஒன்றனோடொன்று ஒளியால் மாறுபட வைத்துக்கோத்த மாலைபோல நிறம் வாடாமல் மணங்கலந்த தண்ணிய நறிய பலவேறு நிறமமைந்த மலர்களையும் அந்நூலின்கண் உரிய விடங்களிலே வைத்துத் தனது கைவன்மையானே அவ்வுதயணகுமரன் அழகிய மாலைகளைப் புனைந்து அவ் விரிசிகைக்கு அளிப்ப என்க.

(வி - ம்.) ௧௨௪. பகைவர் தடுத்தற்கரிய படை எனினுமாம். படை - போர்க் கருவி. முனியாது - வெருமல்.

கஉடு. நரம்பு - யாழ்நரம்பு. திருந்து விரல்-இலக்கணத்திற்குத் தகத் திருந்திய விரல். அங்கை - ஈண்டு அழகிய கை; அகங்கை என்பதன்று.

கஉகூ. முறுக்கிய நூலாகிய மீக்கோள் என்க. மீக்கோள் - மேலாடை. அங்கையின் பூம்புறத்து மீக்கோள் ஏற்று அதன் நூல் வாங்கி என மாறுக. பூம்புறம் - பொலிவுடைய முதுகு. தெரிநூல்: வினைத்தொகை.

கஉஎ-அ. கொளீஇ - கொளுவி.

கஉஅ. பவழ முதலியன நிறம்பற்றிவந்த உவமைகள்.

கஉஅ. அடர் - தகடு. அதனை வெள்ளியோடும் கூட்டுக.

கஉகூ. விளங்குகின்ற கதிர்களையுடைய முத்தும் என்க. திரு மணிக்காசு-அழகிய மணிகளாகிய காசு. காசு : மணிப்பொதுப் பெயர்.

கங௦. உறழ்பட-ஒன்றனோடொன்று நிறத்தானே மாறுபடும்படி. ஒளியினை - ஒளிமாலை.

கஙக. வண்ணம் - நிறம். வாசம் - மணம்.

கஙஉ. தானம் - உரிய இடம். இரீஇ - வைத்து.

கஙங. வாள் தொழில் - போர்த்தொழில்.

கஙச. சூட்டு - மாலை. நலம் உண்டாகப் புனைந்து.

கஙடு. சுடர்நுதல் : அன்மொழித்தொகை; விரிசிகை.

கஙடு - கஙஎ : ஈயக்கொண்டு.........................அலமரனோக்கி.

(பொ - ரை.) இங்ஙனம் உதயணன் அளிப்ப அவ்விரிசிகை அவற்றை ஏற்றுக்கொண்டு அவற்றைத் தன் அழகிய முடிக்கேற்பச் சூடுதலை அறியாதவளாய்த் தன் மனம் போனபடி அவற்றை முடியிலே சுற்றிக்கொண்டு திரிந்தாளாக; அங்ஙனம் திரியா நின்ற அவ்விரிசிகையினது மனச் சுழற்சியை அவ்வுதயணன் குறிப்பால் உணர்ந்து என்க.

(வி - ம்.) கஙடு. அழகிய தன் மயிர்முடிக்குப் பொருந்த,

கஙகூ. சூடுதல் தேற்றாள் - சூடுதலை அறியாதவளாய். சுற்றுபு - தன் மனம்போனவாறு சுற்றிக் கொண்டென்க.

கஙஎ. ஆடமைத் தோளி - ஆடாநின்ற மூங்கிலை ஒத்த தோளையுடைய அவ்விரிசிகையினுடைய. அலமரல் - சுழற்சி. மனக்கலக்கம்.

கஙஅ - கசஅ : மடவரல் மாதரை.........................புகன்றேன்.

(பொ - ரை.) அவ்விரிசிகையை வா என்று அழைத்து அவ்வுதயணகுமரன் அவளைத் தன் மடிமேலிருத்தி அவளது அழகிய முடிக்குப் பொருந்த ஒப்பனைசெய்து அம் முடியின்

பக்கத்தே சிலவாகிய மலரையிட்டு நிரல்படச் கட்டி நீலநாகம் தனது பையை விரித்தாற் போன்று தோன்றும் அழகினை யுடைய சிகழிகையை முன்னர்ச் சேர்த்து அழகிய சிவந்த மாலை களையும் அழகுண்டாகச் செருகிப் பசிய நிறமுடைய மாலைகளை அவற்றின் அயலே வளைத்து அமைத்து அவள்முகம் முழுமதி போலச் சுடர்விட்டு விளங்கும்படி செய்து அவ்விரிசிகையை அன்பினாலே கலந்து தான் புனைந்த பிணையல்களையும் விரும்பிச் சூட்டாநின்றனன் என்க.

(வி - ம்.) கசக. சின்மலர் - சிலவாகிய விடுபூக்களை. பத்தி - வரிசை. கட்டுபு - கட்டி. விடுபூக்களைச் சரமாகக் கட்டி என்க.

கசஉ. நீலநிறமுடைய நாகப்பாம்பு தனது படத்தை விரித்தாற் போன்ற அழகுடைய சிகழிகை என்க. சிகழிகை - மயிர்முடி. தான்: அசை.

கசச. அமசெங்கத்திகை - அழகிய சிவந்த மாலை. அடைச்சி - செருகி.

கசரு. பைங்கேழ்த் தாமம் - பசிய நிறமுடைய மாலை. கசசு இருளறுமதி - முழுத்திங்கள்.

கசஎ. மூங்கிலையொத்த தோளையுடைய அவ்விரிசிகையை அன்பின் அளைஇ என்றது அன்பாலே கலந்து என்றவாறு. இஃது அவளை அவன் காதலித்தாளுயவாறு கூறிற்று.

கசஅ. புகன்று சூட்டினன் என மாறுக. புகன்று - விரும்பி.

கரு. விரிசிகை மாலைசூட்டு முற்றிற்று.

---

# கசா. ஊடல் உணர்த்தியது

இதன்கண், உதயணன் விரிசிகைக்கு மாலை சூட்டியதனைக் கண்ணுற்ற வாசவதத்தை ஊடுதலும், ஊடிய அவள் நிலைமையும், அவள் அவ்வூடலாலே உதயணன்பாற் செல்லாது ஒரு புதுமலர்ச் சோலையுட் புகுதலும், அவளைப் பின் தொடர்ந்து உதயணன் முதலியோர் செல்லுதலும், உதயணன் அவளைத் தழுவிக் கொண்டு பாராட்டிப் பணிமொழி கூறுதலும், வாசவதத்தை உதயணனைச் சினத்தலும், அவ்வமயத்தே அவ் விடத்து ஒரு கருங்குரங்கு வருதலும், அதனைக் கண்டு வாசவதத்தை அஞ்சி உதயணனைத் தழுவிக் கோடலும், அக்காட் டகத்தே உதயணன் வாசவதத்தையோடு விளையாடி மகிழ்ந் திருத்தலும், பிறவும் கூறப்படும்.

புனைமலர்ப் பிணையல் புரவலன் சூட்டி
இனமடற் பெண்ணை ஈர்ங்தோடு திருத்திச்
செல்க நங்கை மெல்ல நடங்தென
அடுத்த காதலோ டண்ணல் விடுப்ப
வேண்டிடத் தாடும் விருப்புறு நீக்கம்
யாண்டுகழிங் தன்ன ஆர்வம் ஊர்தரத்
தழையுங் கண்ணியும் விழைவன ஏந்திப்
பொற்பூங் கிண்கிணி புறவடிப் பிறழ
நற்பூங் கொம்பர் நடைபெற் றாங்குக்
கவவுறு காதலிற் கண்ணுற வரூஉம்
உவவுறு மதிமுகத் தொளிவளை முன்கைக்
கண்ணார் கனங்குழை கதுமெனக் கண்டே
மண்ணார் மார்வன் மாதரைச் சூட்டிய
காமர்ப் பிணையற் கதுப்பணி கனற்றத்
தாமரை யன்னதன் தகைமுக மழுங்கா
ஓடரி சிதரிய ஒள்ளரி மழைக்கண்
ஊடெரி யுமிழ மொளியே போலச்
சிவப்புள் ளுறுத்துச் செயிர்ப்பு முந்துறீஇ
நயப்புள் ளுறுத்த வேட்கை நாணி
உருத்தரி வெம்பனி ஊழூழ் சிதரி
விருப்புமறைத் தடக்கி வேக நோக்கமொடு

பனிப்பிறை அழித்த படிமைத் தாகிய
அணித்தகு சிறுநுதல் அழன்றுவியர் இழிய
உருவ வானத் தொளிபெறக் குலாஅய
திருவில் அன்ன சென்றேந்து புருவம்
முரிவொடு புரிந்த முறைமையிற் றுளங்க
இன்பம் பொதிந்த எந்தணி வனமுலை
குங்குமக் கொடியொடு குலாஅய்க் கிடந்த
பூந்தா தொழுக்கஞ் சாந்தொடு திமிர்ந்து
தளிர்ப்பூங் கண்ணியுந் தழையும் வீசியிட்(டு)
ஒளிப்பூந் தாமம் உள்பரிந்து சிதறி
முழுநீர்ப் பொய்கையுட் பொழுதொடு விரிந்த
செழுமலர்த் தாமரைச் செவ்விப்பைந் தாது
வைகல் ஊதா வந்தக் கடைத்தும்
எவ்வந் தீராது நெய்தற் கவாவும்
வண்டே யனையர் மைந்தர் என்பது
பண்டே யுரைத்த பழமொழி மெய்யாக்
கண்டேன் ஒழிகினிக் காமக் கலப்பெனப்
பிறப்பிடைக் கொண்டுஞ் சிறப்பொடு பெருகி
நெஞ்சிற் பின்னி நீங்கல் செல்லா
அன்பிற் கொண்ட ஆர்வ வேகமொடு
நச்சுயிர்ப் பளைஇ நண்ணல் செல்லாக்
கச்சத் தானைக் காவலன் மடமகள்
பெருமகன் மார்பிற் பிரியா துறையுமோர்
திருமகள் உளளெனச் செவியிற் கேட்பினும்
கதுமெனப் பொறாஅ ளாதலிற் கண்கூ(டு)
அதுஅவண் கண்டகத் தருஅ அழற்சியில்
தற்புடை சார்ந்த தவமுது மகளையும்
கைப்புடை நின்ற காஞ்சனை தன்னையும்
அற்பிடை யறாஅ எந்தை அணிநகர்
உய்த்தனிர் கொடுமின்என் றூழடி யொதுங்கிச்
சிதர்மலர் அணிந்து செந்தளிர் ஒழுகிய
புதுமலர்ச் சோலையுட் புலந்தவள் அகல
அகலு மாதரை அன்பிற் கெழீஇக்
கலையுணர் கணவனொடு காஞ்சனை பிற்படக்

கண்ணிற் காட்டிக் காமவெகுளி
நண்ணின் மற்றிது நயந்துவழி யோடி
மாசறக் கழீஇ மனத்திடை யாநோய்
ஆரா வாய்முத் தார்த்தி னல்லது
தீரா துயிர்க்கெனத் தெளிவுமுந் துறீஇ
ஊராண் குறிப்பினொ டொருவயி னொதுங்கும்
தன்னமர் மகளொடு தாய்முன் னியங்க
நறவிளை தேறல் உறுபிணி போலப்
பிறிதின் தீராப் பெற்றி நோக்கிக்
குறிப்புவயின் வாரா ளாயினுங் கூடிப்
பொறிப்பூண் ஆகத்துப் புல்லுவனன் ஒடுக்கி
அருமைக் காலத் தகலா நின்ற
திருமகட் பரவும் ஒருமகன் போல
உரிமைத் தேவி உள்ளக நெகிழும்
வழிமொழிக் கட்டளை வழிவழி அளைஇ
முடியணி திருத்தியு முலைமுதல் வருடியும்
அடிமிசைக் கிண்கிணி அடைதுகள் அகற்றியும்
கதுப்பணி புனைந்துங் கதிர்வளை யேற்றியும்
மதுக்களி கொண்ட மதரரி நெடுங்கண்
கடைத்துளி துடைத்துங் கடிப்புப்பெயர்த் தணிந்தும்
புதுத்தளிர் கொடுத்தும் பூம்புற நீவியும்
செயிரிடை இட்டிது சிறக்குவ தாயின்
உயிரிடை யிட்ட உறுகண் தருமெனத்
தன்னுயிர்க் கணவன் உண்ணெகிழ்ந் துரைக்க
அம்மொழி கேளா தசைந்த மாதரை
அருவி அரற்றிசை அணிமுழ வாகக்
கருவிரன் மந்தி பாடக் கடுவன்
குரவை அயருங் குன்றச் சாரல்
துகிலிணைப் பொலிந்த பகலணைப் பள்ளியுள்
முகிழ்ந்தேந் திளமுலை முத்தொடு முழீஇத்
திகழ்ந்தேந் தகலத்துச் செஞ்சாந்து சிதையப்
பூண்வடுப் பொறிப்பப் புல்லுவயின் வாராள்
நாணொடு மிடைந்த நடுக்குறு மழலையள்
காம வேகம் உள்ளங் கனற்றத்

தாமரைத் தடக்கையின் தாமம் பிணைஇ
ஆத்த அன்பின் அரும்பெறற் காதலிக்கு
ஈத்ததும் அமையாய் பூத்த கோம்பின்
அவாவுறு நெஞ்சமோடு கவான்முதல் இரீஇத்
தெரிமலர்க் கோதை திகழச் சூட்டி
அரிமலர்க் கண்ணிநின் அகத்தனள் ஆக
அருளின்நீ விழைந்த மருளி நோக்கின்
மாதரை யாமுங் காதலெம் பெரும
பொம்மென் முலையொடு பொற்பூண் நெருங்க
விம்ம முறுமவள் வேண்டா முயக்கெனப்
பண்ணெகிழ் பாடலிற் பழத்திடைத் தேன்போல்
உண்ணெகிழ்ந்து கலவா ஊடற் செவ்வியுள்
தாழ்வரை அடுக்கத்துத் தளிர்சேர் தேமாத்(து)
ஊழுறு தீங்கனி உண்ணு விருத்தலின்
இவறினை நீயெனத் தவறுமுந் துறீஇ
இனப்பெருந் தலைமகன் ஆணையின் ஆட்டித்
தனக்கரண் காணுது தடவரை தத்திப்
பெருமகன் கோயில் திருமுற் பாய்ந்தெனக்(கு)
அரணீ அருளென் றடைவது போன்றோர்
கருமுக முசுக்கலை கதுமெனத் தோன்ற
இன்னதென் றுணரா நன்னுதல் நடுங்கி
அழல்கதிர் பரப்பி உழல்சேர் வட்டமொடு
நிழலவிர் கதிர்மதி நிரந்துநின் றுங்குத்
திலகத் திருமுகஞ் செவ்வன் திருத்தி
ஒழுகுகொடி மருங்குல் ஒன்றுயொட்டி
மெழுகுசெய் பாவையின் மெல்லியல் அசைந்து
மன்னவன் மார்பின் மின்னென ஒடுங்கி
அச்ச முயக்க நச்சுவனள் விரும்பி
அமிழ்துபடு போகத் தற்புவலைப் படுத்த
மாதரை மணந்த தார்கெழு வேந்தன்
வழித்தொழிற் கரும மனத்தின் எண்ணுன்
விழுத்தகு மாதரொடு விளையாட்டு விரும்பிக்
கழிக்குவனன் மாதோ கானத் தினிதென்.

---

## கரு. ஊடல் உணர்த்தியது

அஃதாவது, உதயணகுமரன் விரிசிகைக்கு மாலைபுனைந்து சூட்டிய தனைக் கண்டு வாசவதத்தை ஊடா நிற்ப, உதயணன் அவள் ஊடலைத் தணித்ததனைக் கூறும் பகுதி என்றவாறு.

### உரை

[உதயணன் விரிசிகையைப் போகவிடுதல்]

க - ச: புனைமலர்.......................விடுப்ப

(பொ - ரை.) இவ்வண்ணம் புரவலன் விரிசிகைக்குப் புனை மலர்ப்பிணையலைச் சூட்டி அவள்தன் காதோலையினையுஞ் சிர் திருத்தியிட்டு "நங்காய்! இனி மெல்ல மெல்ல நடந்து செல்வா யாக" என்று கூறிக் காதலோடே விடைகொடுத்துய்ப்ப என்க.

(வி - ம்.) க. புரவலனாகிய (ச) அண்ணல் காதலோடு சூட்டித் திருத்தி நங்கை (இனி) நீ மெல்ல நடந்து செல்க என்று கூறிவிடுப்ப எனக் கூட்டுக.

புனைமலர்: வினைத்தொகை. பிணையல் - மாலை. புரவலன் - அரசனாகிய உதயணன்.

உ. புல்லினமாகிய பெண்ணை, மடற் பெண்ணை என்று தனித் தனிக் கூட்டுக. இளமலர்ப் பெண்ணை என்றும் பாடம். பெண்ணை - பனை. ஈர்ந்தோடு - ஈரமான ஓலை; இஃது காதணி.

ங. நங்கை - மகளிருட் சிறந்தவள்.

[வாசவதத்தை வருதலும் அவள் அந்நிகழ்ச்சியை அறிந்து ஊடுதலும்]

ரு - கஉ: வேண்டிடத்து...................கண்டே

(பொ - ரை.) உதயணனைச் சிறிது பொழுது பிரிந்து தான் விரும்பிய விடத்தே ஆடுதல் வேண்டும் என்று விரும்பிய விருப்பத்தால் உற்ற அச்சிறு பிரிவுதானும் ஓரியாண்டு கழிந் தாற்போன்று தோன்றி விதுப்புறுத்தலானே அவ் வுதயண னைக் காண்டற்கு ஆர்வம் பெருகாநிற்பத் தழையும் மாலையு மாகிய தான் விரும்பியவற்றைக் கையிலேந்திக் கொண்டு கிண் கிணி புறவடியிற் கிடந்து பிறழ்ந்தொலிப்ப அழகியதொரு பூங்கொடி நடத்தலைப் பயின்முற் போன்று ஒல்கி நடந்து காதன் மிகுதியாலே காண்டற்கு வாராநின்ற முகமுதலியவற்றை யுடைய வாசவதத்தை அவ்வுதயணன் விரிசிகைக்கு மாலை சூட்டி விடுத்த நிகழ்ச்சியினைக் கதுமெனக் கண்டனளாக என்க.

(வி - ம்.) ரு. வேண்டிடம் - தான் விரும்பும் இடத்தின்கண். விருப்புறு நீக்கம் - விருப்பத்தால் உற்ற சிறு பிரிவு.

௬. யாண்டு கழிந்தன்ன - ஓரியாண்டு பிரிந்திருந்தாற் போல. அச்சிறு பிரிவு மிக நீளிதாய்த் தோன்றி வருத்த என்பது கருத்து.

"உவக்காண் எங்காதலர் செல்வார் இவக்காண்என்
மேனி பசப்பூர் வது" (குறள். ௧௧அ௫)

எனவும்,

"ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு" (குறள். ௧௨௬௯)

எனவும் வரும் அருமைத் திருக்குறள்களானே தலைவன்புடைய காதலர்க்குச் சிறு பிரிவும் நீளிதாய்த் தோன்றிப் பசப்புறுத்தி வருத்து மியல்புடைத்தாத லறிக.

எ. விழைவன - தன்னால் விரும்பப்பட்டன.

அ. கிண் கிணி - சதங்கை.

௯. நற்பூங்கொம்பர் - நல்ல பூங்கொடி. இது தழையுங் கண்ணி யும் ஏந்தி அசைந் தொல்கி நடக்கும் வாசவத்தைக்கு உவமை.

நடைபெற்றாங்கு - நடந்தாற்போன்று.

௧௦. கவவுறு காதல் - அகத்தே பின்னிக் கிடந்த அன்பு. கண் ணுற - காண்டற்கு.

௧௧ - ௧௨. பூரணையைப் பொருந்திய முழுவெண்டிங்கள் போன்ற முகத்தினையும், ஒளியையுடைய வளையல் அணிந்த முன்கையினையும் கண்ணுக்கு நிறைந்த அழகுடைய பொற் குழையினையும் உடைய வாசவதத்தை என்க.

கதுமென - விரைந்து: (குறிப்புமொழி).

௧௩ - ௧௬ : மன்னார்..............................நாணி.

(பொ - ரை.) மார்வன் விரிசிகைக்குச் சூட்டிய கூந்தலணி தன் நெஞ்சத்தைக் கனற்றுதலானே செந்தாமரை மலரை ஒத்த அழகுடைய தன் முகத்தினது ஒளி மழுங்கா நிற்பவும், குளிர்ந்த கண்கள் தீப் போலச் சிவப்பவும், சினமுடையளாய்த் தான் அவ்வுதயணன்பாற் கொண்டுள்ள வேட்கைக்குத் தானே நாணியவளாய் என்க.

(வி - ம்.) ௧௩. மன் ஆர் மார்வன் - ஒப்பனை பொருந்திய மார்பை யுடைய உதயணகுமரன். மாதரை - விரிசிகைக்கு.

௧௪. அழகிய மாலையாகிய கூந்தல் அணி என்க. கனற்ற - நெஞ் சத்தை கனலச் செய்தலானே.

௧௫. தாமரை - சிறப்பானே ஈண்டுச் செந்தாமரை மலரைச் குறித்து நின்றது. தகை - அழகு. மழுங்கா - மழுங்கி.

௧௬. ஓடாநின்ற வரிகள் சிதர்ந்த ஒள்ளிய அழகிய குளிர்ந்த கண்கள் என்க. அரி இரண்டனுள் முன்னது வரி பின்னது அழகு என்க.

கஎ. அகத்தே கனலுமிழும் தீப்போல என்க. ஒளி - நெருப்பு.

கஅ. சிவப்பு - நிறம். செயிர்ப்பு - சினம். செயிர்ப்புமூந்துறீஇ என்றது, சினந்து என்றவாறு.

ககூ. நயத்தலைத் தன்னகத்தே கொண்ட வேட்கை என்க.

வேட்கை - அவா. அதன்தொழில் நயத்தலாகலின் நயப்புள்ளூறுத்த வேட்கை எனப்பட்டது. இங்ஙனம் பிறமகளிரையும் விரும்பும் இயல்புடைய அவ்வுதயணன்பாற் செல்லாநின்ற தனது வேட்கையை நாணி என்பது கருத்து.

உ0 - ௩க : உருத்து......................சிதறி.

(பொ - ரை.) மேலும் வெவ்விதாக அரித்து விழாநின்ற கண்ணீரை முறை முறையே சிந்தித் தனது விருப்பத்தைத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு சினந்த பார்வையோடே பிறையைப் பழித்த தன் சிறிய நெற்றியினின்றும் வியர்வை துளியா நிற்பவும், புருவம் நெரிந்து வளைந்து அசையா நிற்பவும், தனது அழகிய முலையின் மேற்கிடந்த தொய்யிற் கொடியினையும் பூந்தாதுக்களையும் சந்தனத்தையும் அழித்துத் தான் ஏந்தி வந்த கண்ணியையும் தழைகளையும் வீசிவிட்டு ஒளியுடைய மாலைகளையும் அறுத்துச் சிதறிவிட்டு என்க.

(வி - ம்) உ0. வெதும்பி அரித்துவிழா நின்ற வெவ்விய கண்ணீர்த் துளி முறையே முறையே சிதரா நிற்ப என்க. உருத்து - வெதும்பி. துன்பக் கண்ணீர் ஆகலின் வெம்பனி என்றார். ஊழ் - முறை.

உக. விருப்பு - தன்னுடைய விருப்பத்தை. வேகம் - சினம்.

உஉ - உச. குளிர்ந்த பிறையினது அழகினை அழித்த உருவத்தையுடையதாகிய அழகு தக்கிருக்கின்ற சிறிய நெற்றி சினத்தலானே வியர்வு தோன்றித் துளியா நிற்ப என்க. முதலின் அழற்சியைச் சினைமேலேற்றிக் கூறியது. (உரு-கூ) அழகிய வானத்தின்கண் ஒளியுற வளைந்து கிடந்த இந்திர வில்லை ஒத்த நீண்டுயர்ந்த புருவம் நெரிப்போடு முறை முறையே அசையா நிற்ப என்க.

உஎ. இன்பத்தைத் தம்மகத்தே பொதிந்து கொண்டுள்ள ஏந்திய அழகிய முலைகளின்மேல் எழுதப்பட்ட என்க.

உஅ. குங்குமத்தாற் கொடியுருவமாக எழுதப்பட்ட தொய்யிலுடனே என்க. குலாஅய்க் கிடந்த - வளைந்து கிடந்த.

உகூ. பூந்தாதினை ஒழுகவிட்ட ஒழுக்கம் என்க. சாந்து - சந்தனம். திமிர்ந்து - தேய்த்து (துடைத்து) என்க.

௩0. தான் ஏந்திவந்த கண்ணியையும் தழையையும் வீசி விட்டு என்க.

௩க. ஒளியுடைய மலர்களையும் அறுத்துச் சிதறி என்க. உள் பரிந்து - அவற்றின் அகத்தே அறுத்து என்றவாறு. பரிந்து - அறுத்து. இனி உள்பரிந்து என்பதற்கு மனம் வருந்தி என்பாருமுளர்.

கூஉ - சஉ : முழுநீர்..................செல்லாள்.

(பொ - ரை.) நீர்நிலையின்கண் விடியற்காலத்தே மலரா நின்ற செழிய தாமரை மலரினது செவ்வியுடைய பசிய தாதினை நாள்தோறும் நுகர்ந்து வந்தவிடத்தும், தனது வேட்கை அடங்காமல் புல்லிய நெய்தற் பூந்தாதினையும் விரும்பாநின்ற அவ்வண்டினையே ஒப்பர் ஆடவர் என்பது பழங்காலத்தே சான்றோர் கூறிய பழமொழியே அன்றோ! அம்மொழியின் பொருளை யான் இப்பொழுது கண் கூடாக உணரா நின்றேன். இனி இவனோடு காமத்தாற் கூடும் கூட்டமும் ஒழிவதாக என்று கூறிப் பிறந்தநாள் தொடங்கி நாளுக்குநாள் சிறப்பாகப் பெருகி நெஞ்சின்கட் பின்னி நீங்குதல் இல்லாத அன்பினாலே கொண்ட ஆர்வ வேகத்தோடே நச்சுயிர்ப்பெறிந்து அவ்வுதயணன்பாற் செல்லாதவளாயினாள் என்க.

(வி - ம்.) கூஉ. முழுநீர்ப் பொய்கையுள் - நிறைந்த நீரையுடைய நீர்நிலையின்கண் தோன்றி என்க. இது தன் குலமாண்பு கருதிக் கூறியது. பொழுது - வைகறைப் பொழுதென்க.

கூகூ. செழித்த தாமரை மலரினது புதிய பசிய தாதினை என்க.

கூச. வைகலும் எனற்பாலதாகிய உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. நாள்தோறும் என்க. ஊதா - ஊதி. வந்தக் கடைத்தும் - வந்த விடத்தும்.

கூரு. எவ்வம் - வேட்கைத் துன்பம். நெய்தல் - ஒரு நீர்ப்பூ. நெய்தல் என்புழி, புல்லிய நெய்தல் என்பதுபட நின்றது.

கூஎ. பண்டே - பழங்காலத்திலேயே.

"பெண்டிர் நலம் வௌவித் தண்சாரற் றாதுண்ணும் வண்டிற் றுறப்பான் மலை" (கலி - சo : உகூ - ச.) என்றும், "தாதுண் வேட்கையிற் போது தெரிந்தூதா வண்டோரன்ன வவன்" (கற். உரு : கூ. கo) என்றும், "கன்னி நறுந்தேறன் மாந்திக் கமலத்தின் மன்னித் துயின்ற வரிவண்டு - பின்னையும்போய் நெய்தற் கவாவு நெடுநாட" (நளவெ - கலிநீங்கு - ருக.) என்றும் பிறசான்றோர் கூறுவனவற்றையும் ஈண்டு நினைக.

கூகூ. சிறப்பொடு பெருகி என்றது ஒருகாலைக்கொருகாற் பெருகி என்றவாறு.

சக. ஆர்வவேகம் - விருப்பத்தின் மிகுதி.

சஉ. நச்சுயிர்ப்பு-நஞ்சு போன்ற கொடிய பெருமூச்சு. நண்ணல் செல்லாள் - நண்ணாளாய்.

சகூ - ருகூ : கச்சத்தானை..........புலந்தவளகல.

(பொ - ரை.) கச்சம் என்னும் பேரெண் அளவினதாகிய பெரும்படையையுடைய பிரச்சோதன மன்னனுடைய மடமகளா

கிய இவ் வாசவதத்தை "நின் கணவன் மார்பிலே எப்பொழுதும் நீங்காது உறைகின்ருள் திருமகள் என்னும் ஒரு பெண்" என்று யாரேனும் கூற அதனைச் செவியினாலே கேட்டவிடத்தும் பொறுக்கமாட்டாள்; இத்தகைய இயல்புடைய அவள் அவ் வுதயண குமரன் மடிமேல் ஒருத்தி அமர்ந்திருந்த அந் நிகழ்ச்சியினைத் தானே கண்கூடாகக் கண்டாள் ஆதலின், தன் நெஞ்சத்தே அருத சினமுடையளாயினள். அச் சினத்தானே புலந்து தன் பக்கத்தே நின்ற சாங்கியத்தாயையும், அவள் பக்கத்தே நின்ற காஞ்சனமாலையையும் நோக்கி "அன்புடையீர்! நீயிர் என்னை இடையறவு படாத அன்புடைய என் தந்தையினது அழகிய உச்சயினி நகர்க்கு அழைத்துக் கொடு செல்லுமின்" என்று கூறி அவ்விடத்தினின்றும் அகன்று மலரணிந்து செந்தளிர் விடுத்ததொரு புது மலர்ப்பொழிலினுள்ளே புகாநிற்ப என்க.

(வி - ம்.) ௬௩. கச்சம் - ஒருபேரெண்; (நூருயிரம் என்பாருமுளர்.) இதனை:

"பார்நனை மதத்தபல்பேய் பருந்தொடு பரவச் செல்லும்
போர்மதக் களிறு பொற்றேர் நான்கரைக் கச்சமாகும்"
(சீவக - உஉ௧௯)

எனவரும் செய்யுளானும், இதற்கு நச்சினர்க்கினியர்,

"கச்சம் (தேவகோடி என்பன சில) எண்ணுப் பெயர்(கள்)" என விளக்கங் கூறலானும் உணர்க,

காவலன் - பிரச்சோதன மன்னன். மடமகள் : வாசவதத்தை.

௬௪. பெருமகன் - உதயண குமரன்.

௬௫. ஓர் திருமகள் உளள் என்றது திருமகள் என்பாளொரு பெண் உளள் என்றவாறு.

௬௬. கதுமெனக் கேட்பினும் பொருள் என மாறுக. கதுமென - விரைந்து.

௬௬ - ௬௭. அவள் அது கண் கூடு கண்டு அகத்து அரு அழற்சியின் என மாறுக. அவள் என்பது அத்தகையோள் என்பதுபட நின்றது. அது என்றது, உதயணன் விரிசிகையைத் தன் மடி மீது இருத்தி மலர் சூட்டிய அந் நிகழ்ச்சியினை என்றவாறு.

கண்டமையானே தன் அகத்தே எழுந்த அரு அழற்சியான் என்க.

௬௭. தற்புடை - தன் பக்கத்தே. தவமுதுமகள் - சாங்கியத் தாய். ௬௮. கைப்புடை - பக்கம். காஞ்சனை தன்னையும் நோக்கி என்க.

௭0. அற்பு-அன்பு. அன்பிடையறுஅ எந்தை என்றது, உதயணன் அன்பு இடையறவுடைத்து என்பதனைக் குறிப்பாகக் கூறியபடியாம். நகர் - உஞ்சை நகரம்.

௫௧. உய்த்தனிர் கொடுமின் என்றது ஒருசொன்னீர்மைத்து. உய்த்துக் கொடுமின் என்றவாறு. உய்த்துக் கொடுத்தல் - செலுத்தி விடுதல். "தணந்தனை யாயின் எம் இல்லுய்த்துக் கொடுமோ" எனவரும் குறுந்தொகையும் (௩௫௪ - ௩.) நினைக. ஊழ் - முறை.

௫௨. சிதர் - வண்டு. சிதர் மலர் : வினைத்தொகை எனினுமாம். தளிர் ஒழுகிய - தளிர் விடுத்த ; தளிர்த்த என்றவாறு.

[காஞ்சனமாலை முதலியோர் வாசவதத்தையைத் தொடர்ந்து செல்லுதல்.]

௫௪ - ௬௨ : அகலும்....................இயங்க

(பொ - ரை.) இங்ஙனம் புலந்து பூங்காவினூடே செல்லா நின்ற அவ்வாசவதத்தையைத் தொடர்ந்து அவள் கணவனாகிய உதயண குமரனுங் காஞ்சனமாலையும் பின்னே செல்லா நிற்ப அவர்க்கு அச் சாங்கியத்தாய் இக் காமவெகுளி ஒருயிர்க்கு உண்டாயின் அது நெஞ்சத்தின்கண் ஒரு நோயாகும்; அந்நோய் வெகுளப்பட்டார் நயந்து பின்னின்று அக் குற்றந்தீரக் கழுவித் தமது வாய் முத்தம் ஆகிய மருந்தினை ஊட்டினாலன்றி அவ் வுயிர்க்குத் தீர்வதன்று என்று கூறிக் கண்ணானே குறிப்பாகக் காட்டிப் பின்னர் அவ்வாசவதத்தைக்கு உதவி செய்யும் ஒரு குறிப்போடு அவளோடு முன்னே செல்லா நிற்ப என்க.

(வி - ம்.) ௫௪. மாதரை - அவ் வாசவதத்தையை. அன்பிற் கெழீஇ - அன்பினாலே பொருந்தி.

௫௫. கலைகளை நன்கு கற்றுணர்ந்தவனும் அவள் கணவனுமாகிய அவ்வுதயணனோடென்க.

௫௬ - ௬௨. தாய் ஒருயிர்க்குக் காமவெகுளி நண்ணின் இது மனத்திடை நோய் ஆகும்: வெகுளப்பட்டார் நயந்து வழியோடி மாசு அறக்கழீஇ முத்தார்த்தின் அல்லது அந்நோய் அவ்வுயிர்க்குத் தீராது என்று பொதுவாகக் கூறிக் குறிப்பாற் காட்டித் தெளிவுறுத்திப் பின்னர் ஒருவயின் ஒதுங்கும் தன் மகளோடு அவட்கு முன் இயங்க என இயைத்துக் கொள்க.

௫௬. கண்ணாற் குறிப்பாகக் காட்டி என்க. காம வெகுளி - ஊடல்.

௫௭. நண்ணின் - உண்டாயின். இது - இவ் வெகுளி. இது மனத்திடை நோயாம் என மாறுக. ௫௮. மாசு - அவ் வெகுளிக்குக் காரணமான குற்றம். ௫௯. ஆராவாய்முத்து - நுகர்ந்தமையாத வாய் முத்தமாகிய மருந்து என்க.

ஒருயிர்க்குக் காமவெகுளி நண்ணின் நோயாம்; இந்நோய் ஆர்த்தி னல்லது அவ்வுயிர்க்குத் தீராது என்று பொதுவாகக் கூறி என்க.

௬௧. ஊராண் குறிப்பு - உதவி செய்யுங் கருத்து.

௬௨. மகள் : வாசவதத்தை. இயங்க - செல்ல.

[உதயணன் வாசவத்தையின் ஊடல் தீர்க்க முயலுதல்.]

கூ௩ - எகூ : நறவிஃே................................நீவியும்

(பொ - ரை.) வாசவதத்தை இங்ஙனம் ஊடிச் செல்லு தலைக் கண்ட அவ்வுதயண குமரன், கள்ளால் உற்ற நோய் அக் கள்ளாலேயே தீர்தலன்றிப் பிறிதொன்றனாற் றீராதது போன்று என்னாலுற்ற இந் நோய் என்னாலேயே தீர்தல் வேண்டும் என்று கருதி, அவ்வாசவதத்தை தன் குறிப்பிற் கிணங்கி வாராளாய்ச் செல்லா நிற்பவும், தானே அவளை எய்தித் தனது மார்பின்கண் தழுவிக் கொண்டு, ஒருவன் தன்னை விட்டகலும் திருமகளைப் புகழ்ந்து பரவுதல் போன்று அவ் வாசவதத்தையின் உள்ளம் நெகிழும்படி பணிமொழி பற்பல அடுத்தடுத்து மொழிந்து, மேலும் அவளுடைய தலைக் கோலங்களைத் திருத்தியும், முலையினை வருடியும் அவள் அடியில் அணிந்துள்ள கிண்கிணியினைத் துகள் போகத்துடைத்தும், கூந்தலின்கண் அணிந்துள்ள கோதைகளைத் திருத்தி அணிந் தும், ஒளியுடைய வளையல்களை உயர ஏற்றியும், கடைக்கண்ணின் பால் தேங்கிய துளியைத் துடைத்தும் காதணிகலனைக் கழற்றி மீண்டும் திருத்தமுற அணிந்தும், புதிய தளிர்களை அவள் கையிலே கொடுத்தும் பொலிவுடைய முதுகினைத் தடவியும் என்க.

(வி - ம்.) கூ௩ - ச. நற - நறு ; தேன். குறியதன் கீழ் ஆகாரம் குறுகியது. தேனாலே விளைவித்த தேறல் என்க. தேறல் - கள்ளினது தெளிவு. கள்ளாலே உற்ற நோய்க்கு அக் கள்ளே மருந்தானாற்போலத் தன்னாலே உற்ற இந் நோய்க்குத் தானே மருந்தாம் பெற்றியை நினைந்து என்க. "கள்ளினாற் கள்ளறுத்தல் வேண்டும் அதுவன்றே முள்ளினால் முள்களையுமாறு" (௫ச) என்பது பழமொழி

கூ௫. குறிப்புவயின் வாராளாயினும் - தன் கருத்திற்கிணங்கி வாராள் என உணர்ந்திருந்தேயும் என்றவாறு.

கூகூ. பொறியும் பூணும் புணர்ந்த ஆகத்து என்க. பொறி - திருமகள். பூண் - அணிகலன். ஆகம் - மார்பு. புல்லுவனன் : முற் றெச்சம். புல்லி ; தழுவி. ஒடுக்கி - ஒடுங்கும்படி புல்லி என்றவாறு.

கூஎ - அ. ஒருமகன் தன்பால் இருத்தற்கரிய காலத்தே தன்னை விட்டு அகலா நின்ற திருமகளை மீண்டும் அவளருளைப் பெறப் பரவு வதுபோல என்க. அருமைக் காலம் - திருமகளின் அருள்பெறற் கரிய இழவும் உடைய காலம் என்பதாம். பரவுதல் - இரந்து வேண்டுதல்.

கூகூ. தன் உரிமையாகிய தேவி ; அவள் வாசவதத்தை.

எ0. வழிமொழிக் கட்டளை - கேட்போர் கருத்தறிந்து அதற் கிணங்கக் கூறும் பணிமொழி. மிகுதிச் சொல்லன்றி பணிவு என்னும் கட்டளைக்குட்படுத்த சொல்லாகலின் வழிமொழிக் கட்டளை என்றார்.

கட்டளை - அளவு. வழி வழி - மேலும் மேலும். அளைஇ - ஈண்டுக் கூறி என்னும் பொருட்டு.

எக. முடியணி - தலைக்கோலம்.

எஉ. கிண்கிணி - சதங்கை.

எங. கதுப்பு - கூந்தல். கதிர்வளை - ஒளியையுடைய வளையல்.

எச - ரு. மதுவின் களிப்பைக்கொண்ட மதர்த்த நெடிய கண்ணினது கடைப்பகுதியிற் றேங்கிய கண்ணீர்த்துளியை என்க.

எரு. கடிப்பு - ஒரு காதணிகலன்.

எசு. புதுவதாகத்தான் கொய்துவந்த தளிரை என்க. பூம்புறம்- பொலிவுடைய முதுகு. நீவியும் - தடவியும்.

எஎ - அஎ: செயிரிடை..................புல்லுவயின்வாராள்

(பொ - ரை.) "நங்காய் ! என் குற்றத்தை நெஞ்சகத்தே கொண்டு ஊடாநின்ற இவ்வூடல் மிகுமாயின் அஃது என் உயிர்க்கே துன்பந்தருவதொன்றாம்" என்று தன் உயிர் போன்ற கணவன் நெஞ்சம் நெகிழ்ந்து கூறாநிற்ப அம்மொழியினை ஏற்றுக் கொள்ளாமல் பின்னும் ஊடலானே மெலிந்த அவ் வாசவதத் தையைப் பின்னும் அவ்வுதயண குமரன் அருவி முழக்கம் அழகிய மத்தள முழக்கமாகக் கொண்டு மந்திகள் பாடா நிற்பக் கடுவன்கள் குரவைக் கூத்தாடாநின்ற அம்மலைச்சாரலில் துகிலணையாலே பொலிவுற்றதொரு பகற் பள்ளியிடத்தே முகிழ்த் துயர்ந்த அவளது இள முலைகள் முத்தாரத்தோடே தனது மார்பிடத்தே புக்கு மறையும்படியாகவும் சிவந்த சந்தனஞ் சிதையும்படியும் அணிகலன்கள் வடுப்பட அழுந்தா நிற்பவும் தழுவினனாக அத் தழுவுகைக்கு அவ் வாசவதத்தை உடன் படாதவளாய் என்க.

(வி - ம்.) எஎ. செயிர் - குற்றம். சிறக்குவதாயின் - மிகுமாயின். உயிர் இடையிட்ட உறுகண் - சாதற்றுன்பம். அ0. அசைந்த- மெலிந்த. மாதரை-அவ் வாசவதத்தையை. அக. அரற்றிசை : வினைத் தொகை. அணிமுழவு - அழகிய மத்தள இசையாக என்க. அஉ. கருவிரல் மந்தி - கரிய விரலையுடைய பெண் குரங்கு. கடுவன் - ஆண் குரங்கு. அச. துகில் இணைத்தியற்றப்பட்ட பொலிவுற்ற அணையை யுடைய பகற் பள்ளியுள் என்க. பகற்பள்ளி - பகற் பொழுதிலே படுக்கும் பள்ளி. அரு. முகிஇ - முழுவி : மறைய என்க. அசு. அகலம் - மார்பு. அஎ. புல்லினனாக அப்புல்லுவயின் வாராள் என விரித்து ஓதுக.

அஅ - கoக : நாணொடு.......................செவ்வியுள்

(பொ - ரை.) அவ்வுதயணனை நோக்கி நாணங் கலந்த நடுங்காநின்ற மழலைமொழியாலே, "பெருமானே காமவேகம்

நின் நெஞ்சத்தைக் கனற்றலானே நின் தடக்கையாலே மாலை புனைந்து பெறற்கரிய நினது புதிய காதலிக்கு அளித்தனை; அத்துணையின் ஒழியாது, மேலும் அவாவாநின்ற நெஞ்சத்தோடே அவளை நினது தொடையின்மேல் இருத்திஅம் மலர்க் கோதைகளை விளக்கமாகச் சூட்டவும் சூட்டினை; ஆகவே, தாமரை மலர்போன்ற கண்களையுடைய அப்புதுவோள் நின் நெஞ்சின் கண்ணே வீற்றிருக்கின்றாள் என்பதுணர்ந்து கொண்டேன். ஐய! அருளுடைமையானே இங்ஙனம் நின்னால் விரும்பப்பட்ட மருண்ட நோக்கமுடைய அவ்வழகியை யாமும் பெரிதும் விரும்பா நின்றேம், பொம்மெனப் பருத்த இம்முலையொடு பூண்களும் நெருங்கும்படி நீ முயங்காநின்ற இப்பொய்மை முயக்கம் யாம் வேண்டுகிலேம்; இதனை நின்னெஞ்சுறையும் அக்காதலியுணரின் பெரிதும் விம்மி வருந்துவாள் அல்லளோ!" என்று கூறிப் பண்ணிடை நெகிழும் பாடல்போன்றும், பழத்திடை நெகிழும் சாறுபோன்றும் உள்ளம் கசிந்து கலக்காமற் பின்னும் ஊடாநின்ற அவ்வமயத்தே என்க.

(வி - ம்.) அஅ. நாணொடு மிடைந்த - நாணத்தோடு கலந்த. மழலையள் - மழலை மொழியுடையளாய்.

அகூ. காமத்தினது விரைவுத்தன்மை. கனற்ற - கனலச் செய்ய.

கூ0. தாமரை : ஆகுபெயர். தடக்கை - பெரிய கை. தாமம் - மாலை. பிணைஇ - பிணைத்து.

கூஉ. ஆத்த - யாத்த; பிணித்த. பூத்த கொம்பின் (கூச) கோதை திகழச் சூட்டி என இயைக்க. (கூஉ) காதலிக்கு ஈத்ததும் அமையாய்! மேலும், அவள் கொம்பிற்றிகழக் கோதையும் சூட்டினை என உம்மை விரித்தியைத்துக் கொள்க.

கூச. சூட்டவும் சூட்டினை ஆதலானே என விரித்தோதுக.

கூரு. அரிக்கண்ணி, மலர்க்கண்ணி, என்று தனித்தனிக் கூட்டுக. அரி - வரி. மலர் - ஈண்டுத் தாமரைமலர். அகத்தனள் - நெஞ்சிலுறைவாள்.

கூகூ. அருளின் - அருளுடைமையானே. மருளி - மருட்சியையுடைய.

கூஎ. காதலெம் : தன்மைப் பன்மை.

கூகூ. விம்மம் - விம்முதல். இம்முயக்கு வேண்டா என மாறுக. முயக்கு என்றது, இப்பொய்மை முயக்கென்பதுபட நின்றது. க00. பண்ணினின்றும் நெகிழும் பாடல் போன்றும் பழத்திடை நெகிழும் சாறுபோன்றும் உள்ளத்தினின்றும் நெகிழாநின்ற அன்பாலே கலத்தலைச் செய்யாமல் என்றவாறு.

க0க. ஊடற்செவ்வியுள் - ஊடாநின்ற பொழுதின்.

[ஒரு குரங்கின் செயல்]

க0உ - க0௯: தாழ்வரை....................தோன்ற

(பொ - ரை.) அம் மலைப் பக்கத்தே ஒரு கருங்குரங்கு ஒரு தேமாவினது இனிய பழத்தினைத் தனித்துண்டு கொண்டிருப்ப, அதுகண்ட அக்குரக்கினத் தலைவனாகிய குரங்கு "நீ எனக்கியாது இவறுகின்றனை" என அக்குரங்கின்மேல் ஒரு தவற்றினை ஏற்றி அத்தவற்றிற்காக அதனை அலைத்து வருத்தாநிற்ப, அதனினின்றும் அக்குரங்கு தப்புதற்கு இடங்காணப் பெறுமல் பெரிய பல மலைகளையும் தாவிக் கடந்து, அவ்வுதயணனுடைய அப் பகற்பள்ளியின் முன்றிலிலே குதித்துப் "பெருமானே எளியேனுக்கு நீயே புகலிடம் ஆவாய்; என்னைக் காத்தருள்க!" என்று தஞ்சம் புகுவதுபோலத் தோன்று நிற்ப என்க.

(வி - ம்.) க0உ. தாழ்வரை அடுக்கம் - தாழ்ந்த மலைப்பக்கம். தேமாத்து - தேமாமரத்தினது.

க0௩. ஊழுறு தீங்கனி - ஊழ்த்தலுற்ற இனிய பழம். ஊழ்த்தல்—தோன்றுதல். உண்ணுவிருத்தல்: ஒருசொல்; உண்ணுநிற்ப.

க0௪. இவறினை - கொடாது உலோவினை. தவறுமுந்துரீஇ - தவற்றினை முன்னிட்டு.

க0௫. குரங்கினங்கட்கு அரசனுன குரங்கு என்க. பெருந்தலைமகன் - அரசன். ஆட்டி என்னும் எச்சத்தைச் செயவெனெச்சமாகக் கொள்க. ஆட்டுதல் - அலைத்து வருத்துதல்.

க0௬. அக்குரங்கு தான் தப்புதற்கோர் அரணைக் காணப்பெறுமல் என்க. தடவரை - பெரிய மலை. தத்தி - தாவி.

க0௭. பெருமகன் கோயில், உதயணன் வாசவதத்தையோடிருந்த அப் பகலணைப் பள்ளி என்க.

க0௮. அரண் - பாதுகாவல்; புகலிடம்.

க0௯. முசுக்கலை - குரங்கினுள் ஒருவகைக் குரங்கு. கதும்என - விரைந்து.

[அக் குரங்கினைக் கண்டஞ்சிய வாசவதத்தை ஊடல் தீர்தல்]

கக0 - கக௯: இன்னது.............................மாதரை

(பொ - ரை.) இஃதின்ன தாம் என்று நன்னுதல் உணராதவளாய் மெழுகானியன்ற பாவைபோன்று உருகி மெலிந்து ஞாயிற்று மண்டிலத்தோடே திங்கள் மண்டிலம் சேர்ந்தாற்பான்று நெடிய பூங்கொடி போன்ற தன்னிடை மிகவும் பொருந்த உதயணகுமரன் மார்பின்கண் ஒடுங்கி, அச்சந் தலைக்கிடாய் வந்த அத்தழுவுதலைப் பெரிதும் விரும்பாநிற்ப,

அமிழ்தத் தன்மையுடைய அந்நுகர்ச்சியாலே வேந்தன் தன் அன்புவலையுட் படுத்தப் பட்ட அவ்வாசவதத்தையை என்க.

(வி - ம்.) ௧௧0. இஃதின்னது என்று உணராத வாசவதத்தை என்க.

௧௧௧ - உ. கொதியாநின்ற கதிர்களை வானத்தே பரப்பிச் செல்லும் செலவையுடைய ஞாயிற்றுமண்டிலத்தோடு ஒளி விரிக்கும் குளிர்ந்த கதிர்சேர் திங்கள்மண்டிலம் கூடி நின்றாற்போல என்க. இவற்றுள் ஞாயிறு உதயணனுக்கும், மதி வாசவதத்தைக்கும் உவமை. நிரந்து - கூடி. "சிரிடங்காணின் எறிதற்குப் பட்டடை, நேரா நிரந்தவர் நட்பு" (குறள் - அ௨௧) என்புழியும் அஃதப் பொருட்டாதல் உணர்க.

௧௧௩. திலகம் - பொட்டு. செவ்வன் - செவ்வையாக.

௧௧௪. ஒழுகு கொடி - ஓடுகின்ற (படர்கின்ற) கொடி. மருங்குல் - இடை.

௧௧௫. மெழுகாற் செய்த பாவைபோல அசைந்து என்க. அசைந்து - மெலிந்து. மெல்லியல் : வாசவதத்தை.

௧௧௬. மன்னவன் - உதயணகுமரன். மின்னென - மின்னல்போல.

௧௧௭. அச்சந் தலைக்கிடாய் வந்த முயக்கம் என்க. நச்சுவனள் : முற்றெச்சம். நச்சுவனள் விரும்பி - மிகவிரும்பி.

௧௧அ. அமிழ்துபடு போகம் - அமிழ்தத்தன்மை தோன்றுகின்ற நுகர்ச்சி. "உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்(கு) அமிழ்தின் இயன்றன தோள்" எனவரும் அருமைத் திருக்குறளையும் (௧௧0௬) ஈண்டு நினைக. அற்புவலை - அன்பாகிய வலை.

௧௧௯. மாதரை - அவ் வாசவதத்தையை.

௧௧௯ - ௧௨௨ : மணந்த..............................கானத்திவிதென்

(பொ - ரை.) இவ்வாற்றாற் கூடிய வேந்தன் தனது மரபுத் தொழிலாகிய அரசாட்சியையும் தன் நெஞ்சிற் கருதாத வனுய்ச் சிறப்பாற் றகுதி பெற்ற அவ்வாசவதத்தையோடு கூடி விளையாடுதலையே பெரிதும் விரும்பி அக்காட்டினூடே நீண்ட நாள் இனிதாக உறைவானாயினன் என்க.

(வி - ம்.) ௧௧௯. தார்கெழு - மாலை பொருந்திய. வேந்தன் - அவ்வுதயண குமரன்.

௧௨0. வழி - தன் மரபு. தொழிற் கருமம் - இருபெயரொட்டு.

௧௨௨. கழிக்குவன்—(காலங்) கழிப்பான். கானம் - காடு. மாது, ஓ. இரண்டும் அசைச்சொல்.

௧௬. ஊடல் உணர்த்தியது முற்றிற்று.

---

# ௧௭. தேவியைப் பிரித்தது

இதன்கண் - யூகி, காமச் சேற்றில் அழுந்தித் தன் கடமையிற் சோர்ந்திருந்த உதயண குமரனை வாசவதத்தையினின்றும் பிரித்துத் தன் கடமையைக் கருதும்படி செய்வித்தற் பொருட்டு நண்பருடன் ஆராய்ந்து, வளமலைச் சாரலின்கண் விளையாட்டு விரும்பியிருந்த உதயணனை வாசவதத்தையோடு வந்து இலாவாண நகரத்தில் அரண்மனையின்கண் இருக்கச் செய்வித்ததும், பின்னர் உதயணன் வாசவதத்தையின் வேண்டுகோட்கிணங்கிக் காடு செல்லுதலும், அவன் மீண்டு வருவதற்குள் அரண்மனையின்கண் வேடர்களானே திக் கொளுவச் செய்து அரண்மனை யகத்திருந்த வாசவதத்தையைச் சாங்கியத் தாயுடன் சுருங்கை வழியே தானிருக்குமிடத்திற்கு வருவித்துக் கோடலும், அவளுக்கு உண்மை கூறித் தேற்றுதலும் பிறவும் கூறப்படும்.

கழிக்குங் காலைக் கானத் தகவயின்
வழுக்கில் தோழரோ டிழுக்கின் றெண்ணி
வந்தவண் ஒடுங்கிய வெந்திறல் அமைச்சன்
பொய்ந்நிலம் அமைத்துப் புரிசைக் கோயில்
வெவ்வழல் உறீஇ விளங்கிழைப் பிரித்து
நலத்தகு சேதா நறுநெய்த் தீம்பால்
அலைத்துவாய்ப் பெய்யும் அன்புடைத் தாயின்
இன்னா செய்த மன்னனை நிறாஉம்
கருமக் கடுக்கம் ஒருமையி னாடி
உருமண் ணுவாவோடு வயந்தகற் குணர்த்தித்
தவமுது மகளைத் தக்கவை காட்டி
உயர்பெருங் கோயிலுள் தேவியை ஒழியா
நிலாமணிக் கொடும்பூண் நெடுந்தகைக் குருசிலை
உலாவெழப் போக்கி ஒள்ளழல் உறீஇயபின்
இன்னுழித் தம்மினேன் றன்னுழி அவளொடு
பின்கூட் டமைவும் பிறவும் கூறிக்
கன்கூட் டெய்திக் கரந்தனன் இருப்ப
மந்திர நாவின் அந்த ணாட்டி
தேருடை மன்னர் திறல்படக் கடந்த
போரடு குருசிலைப் பொழுதிற் சேர்ந்து

வரையுடைச் சாரலில் வரூஉங் குற்றத்(து)
உரையுடை முதுமொழி உரைத்தவற் குணர்த்தி
தோற்கை எண்குங் கோற்கைக் குரங்கும்
மொசிவாய் உழுவையும் பசிவாய் முசுவும்
வெருவு தன்மைய ஒருவயின் ஒருநாள்
கண்ணுறக் காணிற் கதுமென நடுங்கி
ஒண்ணுதன் மாதர் உட்கலும் உண்டாம்
பற்றார் உவப்பப் பனிவரைப் பழகுதல்
நற்றார் மார்ப நன்றியின் றாகும்
இன்னெயிற் புரிசை இலாவா ணத்துநின்
பொன்னியல் கோயில் புகுவது பொருளென
உறுவரை மார்பன் உவந்தன னாகி
இறுவரை இமயத் துயர்மிசை இழிந்து
பன்முகம் பரப்பிப் பௌவம் புகூஉம்
நன்முகக் கங்கையின் நகர நண்ணிப்
பன்மலர்க் கோதையைப் பற்றுவிட் டகலான்
சின்னாள் கழிந்த காலைச் சிறந்த
நன்மாண் தோழர் நண்ணுபு குறுகிச்
செய்வினை மடிந்தோர்ச் சேர்ந்துறை விலளே
மையறு தாமரை மலர்மகள் தானெனல்
வையகத் துயர்ந்தோர் வாய்மொழி யாதலின்
ஒன்னா மன்னர்க் கொற்றுப்புறப் படாமைப்
பன்னாட் பிரிந்து பசைந்துழிப் பழகாது
வருவது பொருளென வாசவ தத்தையைப்
பிரிதல் உள்ளம் பெருந்தகை மறுப்பத்
தாழிருங் கூந்தலைத் தணப்ப நின்றதோர்
ஊழ்வினை யுண்மையின் ஒளிவளைத் தோளியும்
வேட்டகம் போகி அடிகள் காட்டகத்(து)
அரும்பினு மலரினும் பெருஞ்செந் தளிரினும்
கண்ணி கட்டித் தம்மின் எனக்கென!
வள்ளிதழ் நறுந்தார் வத்தவ மன்னனும்
உள்ளம் புரிந்தனன் ஒள்ளிழை ஒழியக்
கழிநாட் காலைக் கான நோக்கி
அடுபோர் மாவூர்ந் தங்க ணீங்க

வடுநீங் கமைச்சர் வலித்தன ராகிப்
பிணைமலர்ப் படலைப் பிரச்சோ தனன்றன்
இணைமலர்ப் பாவையை இயைந்ததற் கொண்டும்
ஊக்கம் இலனிவன் வேட்கையின் வீழ்ந்தென
வீக்கங் காணார் வேட்டுவர் எள்ளிக்
கலக்கம் எய்தக் கட்டழல் உறீஇய
தலைக்கொண் டனரெனத் தமர்க்கும் பிறர்க்கும்
அறியக் கூறிய செறிவுடைச் செய்கை
வெஞ்சொன் மாற்றம் வந்துகை கூட
வன்கண் மள்ளர் வந்தழல் உறீஇப்
போர்ப்பறை அரவமோ டார்ப்பனர் வளைஇக்
கோப்பெருந் தேவி போக்கற மூடிக்
கையிகந்து பெருகிய செய்கைச் சூழ்ச்சியுள்
பொய்ந்நிலம் அமைத்த பொறியமை மாடத்(து)
இரும்பும் வெள்ளியும் இசைத்துருக் குறீஇ
அருங்கலம் ஆக்கி யாப்புப் பிணியுழக்கும்
கோலச்சிறை இருவரைப் பொருக்கெனப் புகீஇ
நலத்தகு மாதர் அடிக்கல முதலாத்
தலைக்கலங் காறுந் தந்தகத் தொடுக்கிச்
சித்திரப் பெரும்பொறி உய்த்தனர் அகற்றி
வத்தவர் கோமான் மனத்தமர் துணைவியொடு
தத்துவச் செவிலியைத் தலைப்பெருங் கோயில்
மொய்த்தழல் புதைப்பினும் புக்கவட் பொமினென்(று)
அத்தக வமைத்த யாப்புறு செய்கையொ(டு)
அருமனை வரைப்பகம் ஆரழல் உறீஇய
கருமக் கள்வரைக் கலங்கத் தாக்கி
உருமண் ணுவாவும் ஒருபால் அகலப்
பொறிவரித் தவிசிற் பொன்னிறப் பலகை
உறநிறைத் தியற்றி உருக்கரக் குறீஇய
மாடமும் வாயிலும் ஓடெரி கவர
இளையரு மகளிருங் களைகண் காணார்
வேகுறு துயரமோ டாகுலம் எடுப்பத்
தடங்கண் பிறழத் தளர்பூங் கொடியின்
நடுங்கிவெய் துயிர்க்கு நன்னுதற் பணைத்தோள்

தேவியைப் பற்றித் தெரிமூ தாட்டி
யூகி கூறிய ஒளிநில மருங்கிற்
பெருங்கல நிதியம் பெய்துவாய் அமைத்த
அரும்பிலத் தியாத்த அச்ச மாந்தர்
வாயில் பெற்று வழிப்படார்ந் தாங்குப்
போக அமைத்த பொய்ந்நிலச் சுருங்கையுள்
நற்புடை அமைச்சனை நண்ணிய பொழுதிற்
கற்புடை மாதரைக் காதற் சேவிலி
அற்புடைப் பொருள்பே ரறிவிற் காட்டி
அஞ்சி லோதி அஞ்சல்நம் பெருமான்
நெஞ்சுபுரை அமைச்ச னீதியிற் செய்த
வஞ்சம் இதுவென வலிப்பக் கூறி
அருந்திறல் அமைச்சனொ டொருங்குதலைப் பெய்தபின்
இன்னகை முறுவலோ டெண்ணியது முடிந்ததென்(று)
எதிரெழுந்து விரும்பி யூகி இறைஞ்சி
மதிபுரை முகத்திக்கு மற்றிது கூறும்
இருங்கடல் உடுத்தவிப் பெருங்கண் ஞாலத்துத்
தன்னின் அல்லது தாமீக் கூரிய
மன்னரை வணக்கு மறமாச் சேனன்
காதன் மகளே மாதர் மடவோய்
வத்தவர் பெருமகன் வரைபுரை அகலத்து
வித்தக நறுந்தார் விருப்போடு பொருந்தி
நுகர்தற் கமைந்த புகர்தீர் பொம்மற்
கோல வனமுலைக் கொடிபுரை மருங்குல்
வால்வளைப் பணைத்தோள் வாசவ தத்தாய்
அருளிக் கேண்மோ அரசியல் வழாஅ
இருளறு செங்கோல் ஏயர் இறைவன்
சேனை நாப்பணும் பெருமான் செய்த
யானை மாயத் தருந்தளைப் படுதலிற்
கோங்கலர் நறுந்தார்க் கோல மார்பிற்
பிங்கல கடகர் பெற்றியிற் பிழைப்பப்
பாஞ்சால ராயன் பரந்த படையோடு
மாண்கோ சம்பி வெளவியதும் அறியான்
அருஞ்சுழி நீத்தத் தாழு மொருவன்

பெரும்புணை பெற்ற பெற்றி போல
நிற்பெறு சிறப்பொடு நெடுநகர் புகல
முற்படத் தோன்றிய முகைப்பூண் மார்வன்
தற்படு துயரம் தன்மனத் தணையான்
மட்டுறு கோதாய் மற்றுநின் வனமுலை
விட்டுறை வாற்று வேட்கையிற் கெழுமிப்
பட்டுறை பிரியாப் படிமையின் அவ்வழி
ஒட்டிடை விட்டபின் அல்லதை யொழிதல்
வாணுதன் மடவோய் அரிதுமற் றதனல்
சேண்வரு பெருங்குடிச் சிறுசோல் நீங்க
ஆர்வ நெஞ்சத் தாவது புகலும்
இன்னுயிர் அன்ன என்னையு நோக்கி
மன்னிய தொல்சீர் மரபின் திரியா
நலமிகு பெருமைநின் குலமு நோக்கிப்
பொருந்திய சிறப்பின் அரும்பெறற் காதலன்
தலைமையின் வழீஇய நிலைமையு நோக்கி
நிலம்புடை பெயரினும் விசும்புவந் திழியினும்
கலங்காக் கடவுள்நின் கற்பு நோக்கி
அருளினை யாகி அறியா அமைச்சியல்
பொருளெனக் கருதிப் பூங்குழை மடவோய்
ஒன்று மன்னனை உதயண குமரன்
இன்று செய்துதன் இகன்மேம் படநினைச்
சின்னாள் பிரியச் சிதைவதொன் றில்லை
வலிக்கற் பாலை வயங்கிழை நீயென்(று)
ஒலிக்குங் கழற்கால் யூகி இரப்ப
நெறிதாழ் ஓதி நெஞ்சின் அகத்தே
பொறிதாழ் மார்பிற் புரவலற் கியைந்த
நூல்வல் லாளர் நால்வ ருள்ளும்
யூகி முடிந்தனன் உருமண் ணுவாவொடு
வாய்மொழி வயந்தகன் இடபகன் என்ற
மூவரும் அல்லன் முன்னின் றிரப்போன்
யாவன் கொல்இவன் என்றவற் கெதிர்மொழி
யாவதுங் கொடாஅள் அறிவிற் சூழ
விம்முறு நிலைமை நோக்கித் துன்னிய

உறுதி வேண்டும் யூகி மற்றிவன்
இறுதி செப்பி இவண்வந் தோனெனத்
தாய்தெரிந் துரைப்பச் சேயிழை தேறி
உரைத்த கருமத் துறுதி விழுப்பமும்
கருத்துநிறை காணுது கண்புரை தோழன்
வலித்த கருமமும் வத்தவர் பெருமகன்
உதயண குமரன் யூகி என்பதை
உரையினும் உடம்பினும் வேறெனின் அல்ல(து)
உயிர்வே றில்லாச் செயிர்தீர் சிறப்பும்
திண்ணிதின் அறிந்த செறிவினள் ஆயினும்
பெண்ணியல் பூர்தரப் பெருங்கண் பில்கிக்
குளிர்முற் றுலி குளிர்ப்புள் ளூறுஅ(து)
ஒளிமுத் தாரத் துறைப்பவை அரக்கி
அரிமான் அன்ன அஞ்சுவரு துப்பினெம்
பெருமான் பணியன் றுயினுந் தெரிமொழி
நூலொடு பட்ட நனிப்பியல் வழாமைக்
கால வகையிற் கருமம் பெரிதெனல்
நெறியின் திரியா நீர்மையிற் காட்டி
உறுகுறை அண்ணல் இவன்வேண் டுறுகுறை
நன்றே யாயினுந் தீதே யாயினும்
ஒன்று வலித்தல் உறுதி யுடைத்தெனக்
கைவரை நில்லாது கனன்றகத் தெழுதரும்
வெய்துயிர்ப் படக்கிநீ வேண்டியது வேண்டாக்
குறிப்பெமக் குடைமை கூறலும் உண்டோ
மறத்தகை மார்வன் மாய யானையிற்
சிறைப்படு பொழுதிற் சென்றவற் பெயர்க்க
மாய விறுதி வல்லை யாகிய
நீதி யாளநீ வேண்டுவ வேண்டென
முகிழ்நகைக் கிளவி முகமன் கூறி
அண்ணல் அரசற் காகுபொருள் வேண்டும்
ஒண்ணுதன் மாதர் ஒருப்பா டெய்தி
அரிதின் வந்த பெருவிருந் தாளரைச்
சிறப்புப் பலியருச் செல்வனிற் பேணும்
பெறற்கரும் பெரும்பண் பெய்திய தெனக்கென

அசதிக் கிளவி நயவர மிழற்றி
நேர்ந்த மாதரை நெடுந்தகைக் குருசில்
பெயர்ந்த காலைப் பிழைப்பிலன் ஆகுதல்
அறியு மாத்திர மவ்வழி அமைத்துச்
செறியச் செய்த செவிலியுந் தானும்
மறுதர வுடைய மாயச் சூழ்ச்சி
உறுதியோ டொளித்தனர் உள்ளியது முடித்தென்.

---

## ௧எ. தேவியைப் பிரித்தது

அஃதாவது: உதயணனைத் திருத்தும் பொருட்டு அமைச்சர் அவன்பானின்றும் வாசவதத்தையைச் சூழ்ச்சியாலே அகற்றிய செயலைக் கூறும் பகுதி என்றவாறு.

### உரை

[௧ - ௧எ. யூகியின் செயல்]

௧ - ௧௦ : கழிக்குங்காலை......................உணர்த்தி.

(பொ - ரை.) இவ்வண்ணம் உதயணன் காட்டகத் திருந்து பொழுது போக்காநிற்ப, முன்னர்க் காட்டினூடே தன் தோழரோடு கூடியிருந்து குற்றமின்றி ஆராய்ந்து துணிந்து அவ்விலாவாண நகரில் வந்து மறைந்திருந்த யூகி அந்நகரத்தில் சுருங்கை வழியுடையதோர் அரண்மனையமைத்து அதன்கண் உதயணனை வாசவதத்தை யுடனே குடிபுகச் செய்து அவ் வரண்மனையின்கண் தீயிட்டு வாசவதத்தையை உதயணனிடத்தினின்றும் பிரித்துத் தன் மகவினை அலைத்து ஆன்பாலை அதன் வாயிலே பெய்யுமோர் அன்புடைய தாய் போன்று இன்னா செய்தும் அவனை நன்னிலைக்கண் நிறுத்தக் கருதி அச்செயலையும் செயன்முறைகளையும் சாங்கியத்தாய் வாயிலாய் உருமண்ணுவாவிற்கும், வயந்தககுமரனுக்கும் உணர்த்தியும் என்க.

(வி - ம்.) ௧. கானத்து அகவயின் - காட்டின் நடுவிடத்தே வழுக்கு - தவறு. ௨. இழுக்கு - குற்றம். இழுக்கின்றி எனற்பால குற்றியலிகரம் உகரமாயிற்றுச் செய்யுளாகலின். ௩. அவண் - அவ் விலாவாணத் தயலிலே ஒருசார் என்க. ஒடுங்கிய - மறைந்திருந்த. வெவ்விய அமைச்சுத் தொழில் ஆற்றலுடைய யூகி என்க.

௪. பொய்ந்நிலம்-உட்பொய்யாகிய சுருங்கை. புரிசைக் கோயில்-மதிலையுடைய அரண்மனை.

௬. வெவ்விய தீயினைக் கொளுவி என்க. விளங்கிழை: அன் மொழித் தொகை ; ஈண்டு வாசவதத்தை என்க.

௯. நன்மையாற் றகுதியுடைய சிவப்புப் பசுவினது நறிய நெய் யுடைய இனிய பாலை என்க. பசுக்களில் சிவப்புப் பசு சிறந்தது என்ப. நெய்த்தீம்பால்-நெய்யைத் தன்பாலுடைய இனியபால்; நெய்ப் புடைய பாலுமாம்,

எ. அலைத்து - துன்புறுத்தி. தாயின் - தாய்போல.
அ. இன்று செய்தும் எனற்பால சிறப்பும்மை செய்யுள் விகாரத் தால் தொக்கது. நன்னிலைக் கண் நிலைபெறச் செய்யும் கருமம் என்க. கடுக்கம்: கடி என்னும் உரிச்சொல் அடியாகப் பிறந்தது; மிகுதி என்க.
௯. ஒருமையின் - ஐயமின்றி ஒன்றுபட. நாடி - ஆராய்ந்து ௧0. சாங் கியத்தாய் வாயிலாய் உணர்த்தி என்க.

௧௧ - ௧எ : தவமுதுமகளை ..........................கரந்தனளிருப்ப.

(பொ - ரை) அச் சாங்கியத் தாய்க்கும் தகுந்த எடுத்துக் காட்டுக்களைக் காட்டி அறிவுறுத்தி அரண்மனையகத்தே வாச வதத்தையைப் பிரியமாட்டாத குருசிலை உலாப்போகும்படி செய் வித்து அவ் வரண்மனையின்கண் தீக்கொளுவிப் பின்னர் வாச வதத்தையை அழைத்து வந்து இன்னவிடத்தே என் முன்னிலை யில் கொணர்ந்து தம்மின் என்றுகூறி, பின்னரும் அவளை எய்திய அவ்விடத்தே நிகழவேண்டிய நிகழ்ச்சிகளையும் பிற நிகழ்ச்சிகளையும் எடுத்துக்கூறி, அவளை அவ்வழிப் போக்கிய பின்னர்த்தான் கற்களைக் கூட்டியியற்றிய மறைவிடத்தே புகுந்து மறைந்திருந்தானாக இங்ஙனமிருப்ப என்க.

(வி - ம்.) ௧௧. தவமுதுமகள் - சாங்கியத்தாய். தக்கவை-தகுந்த நீதிகளை. அவையாவன :—

"அற்றங்காத்தலின் ஆண்மைபோலவும்.........இனையன பிறவும் இனியோர்க் கியன்ற படுகடன்" என ௯-ஆம் காதையில் வருவன போல்வன என்க.

௧௨. உயர்ந்த பெரிய அரண்மனையின்கண் என்க. தேவி - வாச வதத்தை. ௧௩. ஒளிவிடும் மணிகளிழைக்கப்பட்ட வளைந்த அணி கலன்களையும் நீண்ட புகழினையும் உடைய தலைவனாகிய உதயண குமரனை என்க. தகை - ஈண்டு புகழாற் பெற்ற தகுதி என்க. குருசில்- தலைவன்.

௧௪. ஒள்ளழல் - ஒளியுடைய நெருப்பு.

௧௫. இன்னுழி - இன்ன இடத்தே. தம்மின் - தாருங்கள். என் முன்னிலையிற் கொணர்ந்து தருக என்பது கருத்து.

அன்னுழி அவளொடு பின் கூட்டு அமைவும் - அவ்விடத்தே அவ் வாசவதத்தையோடு பின்னர் நிகழ்த்த வேண்டிய நிகழ்ச்சியும் என்க. அன்னுழி - அவ்விடத்தே "அன்னுழி உமையவள் அகத் துள் ஓர் செயல்" என்பது கந்தபுராணம் (பார்ப்பதி - ௧ ). கற்கூட்

டெனற்பாலது எதுகை நோக்கி மெலிதல் விகாரமெய்திக் கன்கூட்டு என நின்றது. கல்கூட்டு - கல்லைக் கூட்டிச் செய்ததொரு மறைவிடம் என்க. கரந்தனன் : முற்றெச்சம்.

[சாங்கியத்தாயின் செயல்]

௧அ - ௩௧ : மந்திர..............................பொருளென.

(பொ - ரை.) இனிச் சாங்கியத்தாய், ஈண்டு மலைச் சாரலிலே விளையாட்டு விரும்பிப் பொழுது கழியாநின்ற உதயணகுமரனைத் தக்கதொரு செவ்வியிலே அணுகி மலைச் சாரலிலே உறைவார்க்கு வருங்குற்றங்களைப் பழைய கதைகள் வாயிலாய்க் காட்டி அறிவுறுத்தி மேலும் நற்றார் மார்ப! கரடி முதலிய கொடிய காட்டு விலங்குகளை என்றேனும் ஒருநாள் வாசவதத்தை காணநேரின் அஞ்சி நடுங்கவும் நேரும்; ஆதலால் நமது பகைவர்க்கு மகிழ்ச்சி உண்டாகும்படி யாம் இம் மலைச்சாரலில் உறைதல் நன்மையில்லாததொரு செயலாகும். யாம் நின்னுடைய இலாவாண நகரத்துள்ள பொன்னலியன்ற அரண்மனைக்குச் சென்று உறைதல் நன்றாகும் என்றுகூற என்க.

(வி - ம்.) ௧அ. மந்திர நாவின் அந்தணாட்டி - இடையறாது மந்திரம் மிழற்றாநின்ற செந்நாவினையுடைய பார்ப்பனியாகிய சாங்கிய மகள் என்க.

௧௯ - ௨௦. தேர் முதலிய படைப்பெருக்கமுடைய பகைமன்னர் வலிமை கெட வென்ற போர்த் தொழிலையுடைய உதயணகுமரனைத் தக்க செவ்வியில் அணுகி என்க.

௨௧ - ௨௨. மலையினது சாரலில் உறைவார்க்கு வருகின்ற குற்றங்களைக் கூறாநின்ற பழங்கதைகளை எடுத்துக் கூறி என்க.

௨௩. தோற்கை எண்கு - உறுதியான தோலானமைந்த கையினை யுடைய கரடி. தோல் என்பது உறுதியான தோல் என்பதுபட நின்றது. கை என்றது ஈண்டு முன்னங்கால்களை.

கோற்கைக் குரங்கு—கோல் போன்ற நெடிய கையினையுடைய குரங்கு.

௨௪. மொசிவாய் உழுவை - ஈக்கள் மொய்த்தற்குக் காரணமான புலானாற்றமுடைய வாயினையுடைய புலி. பசிப்பிணி வாய்த்த கருங் குரங்கென்க.

௨௫. கண்டோர் அஞ்சும் தன்மையையுடையனவாகிய விலங்குகளை என்க. ஒருவயின் ஒருநாள்-யாண்டேனும் ஓரிடத்தே என்றேனும் ஒருநாள் காணநேரின் என்க.

௨௬. கண்ணுற - எதிர்ப்பட.

௨௭. ஒண்ணுதல் மாதர் - ஒளியுடைய|நெற்றியினையுடைய வாசவதத்தை. உட்கல் - அஞ்சுதல்.

உஅ. பற்ருர் உவப்ப - பகைவர் மகிழும்படி. நமக்குத் தீங்கு நேரின் நம்பகைவர் மகிழ்வர் ஆதலின் அவர் மகிழ்தற்குக் காரணமான இவ்விடத்தே பழகுதல் நன்றன்று என்பதாம்.

உகூ. நல்ல மாலையணிந்த மார்பையுடையோனே! என்க.

௩௦. காண்டற் கினிய மதிலையுடைய என்க.

௩௧. பொன்னுனியன்ற அரண்மனை என்க. பொருள் - உறுதிப் பொருள். என்றது, நன்று என்றவாறும்.

[உதயணகுமான் அவள் கூற்றுக்கிணங்கி நகரம்புக் கிருத்தல்]

௩௨ - ௩௭ : உறுவரை..............................காலை.

(பொ - ரை.) அதுகேட்ட மார்பனும், அதற்கிணங்கி மகிழ்ச்சியுடையவனாய் இமயமலையினது உச்சியினின்றும் இறங்கிப் பலமுகங்களைப் பரப்பிக் கடலிலே புகாநின்ற கங்கையாறு போன்று அம் மலைச்சாரலின்றும் தன் பரிசனங்களுடன் பல வழியானும் அவ்விலாவாண நகரத்திற் புகுந்து ஆண்டுள்ள அரண்மனையின்கண் வாசவதத்தையின்பால் அன்பு தவிராதவனாய் உவளகம் தனதாக உறையாநிற்பச் சில நாள்கள் கழிந்தன; அப்பொழுது என்க.

(வி - ம்.) ௩௨. பெரிய மலைபோன்ற மார்பினையுடைய உதயண குமரன் என்க.

௩௩. இறுவரை இமயம் - உலகினுள் பெரிய மலையாகிய இமய மலை. உயர்மிசை - உயர்ந்த உச்சி.

௩௪. பன்முகம் - பல வழிகளானும் (தன் நீரைப் பரப்பிச் சென்று என்க.)

௩௫. நல்ல புகுமுகத்தை (சங்கமுகம்) உடைய கங்கை யாறு போன்று.

௩௬. பலவேறு மலர்களானும் தொடுத்த மாலையினையுடைய வாசவதத்தையை. பற்று - நீங்காத அன்பு; (காமம்).

௩௭ - ௪௪ : சிறந்த........................பொருளென.

(பொ - ரை.) சிறந்த தோழர் சிலர் உதயணன்பாற் சென்று பெருமானே! "தாம் செய்யத் தகுந்த செயல்களைச் செய்யாமல் சோம்புதலுற்ருேரைத் திருமகள் வெறுத்து நீங்குவள்" என்பது சான்ருேர் கூறிய மெய்ம்மொழியாகும். ஆதலின் நின் பகைவேந்தர்க்கு நினது ஒழுக்கம் ஒற்றர் வாயிலாய்ப் புலப்படுதற்கு முன்னரே நீ இவ்வாறு பற்றுள்ள இடத்தேயே ஒடுங்கியிருத்தலை விட்டு இவ்விடத்தினின்றும் பிரிந்து சென்று பலநாள்கழித்து மீள்வது நன்ருகும் என்று கழறுநிற்ப என்க.

(வி - ம்.) சிறந்த நன்மாண் தோழர் - உயர்ந்த நன்மைகளை யுடைய மாட்சிமை பொருந்திய நண்பர் என்க.

தெய்வத்தானுக மக்களானுக அரசனுக்கு வந்த துன்பங்களை நீக்குமாறறிந்து நீக்கிப்பின் அத்தகைய துன்பம் வாராவண்ணம் காக்கவல்ல தன்மையுடையோரும், மிகுதிக்கண் மேற் சென்றிடித்துத் திருத்தும் உரிமையுடையோரும் நன்மை பலவற்றையும் எய்துவிப் போருமாகிய தோழர் என்பார், "சிறந்த நன் மாண் தோழர்" என விதந் தெடுத்துரைத்தார். நண்ணுபு - நண்ணி. நண்ணுபுகுறுகி என்றது ஒரு சொன்னீர்மைத்தாய் நின்றது.

௩௯. செய்வினை மடிந்தோர் - தமது கடமையாகிய தொழிலைச் செய்யாமற் சோம்பியிருந்தவர்.

௪௦. மையறு தாமரை மலர் மகள் - குற்றமற்ற செந்தாமரை மலரில் உறையும் திருமகள்.

௪௧. வாய் மொழி - மெய்ம் மொழி.

(௩௯ - ௪௧:) இப்பகுதியோடு

"மடியுளான் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையினுள்."　　　　(குறள். ௬௧௭)

என்னும் திருக்குறளையும் நினைக.

ஆதலின் என்றது நீ அவ்வாறு மடிந்திருத்தலான் என்பதுபட நின்றது.

௪௨. ஒன்னு மன்னர் - பகை மன்னர். பகை மன்னர்க்கு ஒற்றர்வாயிலாய் இக் குற்றச் செய்தி புறப்பட்டுச்சேர்தற்கு முன்னரே என்பது கருத்து. அறிந்தவழி அவை வாயிலாகப் புகுந்து வஞ்சிப்பா ராகலின் "ஒன்னு மன்னர்க்கு ஒற்றுப் புறப்படாமை" என்ருர் இதனை,

"காதல காதல் அறியாமை யுய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல்,"　　　　(குறள். ௪௪௦)

என்னுந் திருக்குறளானும் அதற்குப் பரிமேலழகர் வகுத்த உரை யானும் அறிக.

௪௩. பசைந்துழி - பற்றிய இடத்திலேயே. பசைந்துழிப் பழகாது பன்னுட் பிரிந்து (போய்) வருவது பொருள் என மாறுக.

௪௪ - ௫௪: வாசவதத்தையை................அங்கண்நீங்க.

(பொ - ரை.) அது கேட்ட உதயண குமரன் வாசவ தத்தையைப் பிரிந்து செல்லும் கருத்தினை மரு நிற்பவும், அவன் வாசவதத்தையைப் பிரிந்து போதற்குரியதோர் ஊழ்வினை இருந்தமையானே கணப் பொழுதும் பிரிதற்கு உடன்படாத இயல்பையுடைய அவ் வாசவதத்தையும் ஒருநாள் உதயணனை நோக்கி, "அடிகளே! நீயிர் வேட்டைமேல் கானஞ் சென்று அரும்பானும் மலரானும் தளிரானும் மாலை தொடுத்துக்

கொணர்ந்து எனக்குக் கொடுமின்'' என்று இரந்து கூற, அவ் வத்தவவேந்தனும் அவள் வேண்டுகோளை நிறைவேற்ற விரும்பிஒள்ளிய அணிகலன்களையுடைய அந் நங்கையைப் பிரிந்து மறுநாள் விடியற் பொழுதில் ஒரு போர்ப்புரவியிலேறிக் காட்டிற்குச்செல்லாநிற்ப, என்க.

(வி - ம்.) ௪௫. பிரிதல் உள்ளம் - பிரிதற்குரிய கருத்து. பெருந்தகை: அன்மொழி; உதயண குமரன்.

௪௬. தாழ்ந்த கரிய கூந்தலையுடைய வாசவதத்தையை என்க. தணப்ப நின்றது, பிரிதற்குக் காரணமாய் நின்றது.

௪௭. தோளியும் என்னும் உம்மை சிறப்பு. பிரிதற்கு உடன் படாத இயல்புடைய அவளும் என்பதுபட நின்றது.

௪௮. அடிகள் : விளி. அடிகள் காட்டகத்து வேட்டம் போகி என மாறுக.

௫0. கண்ணி - தலையிற் சூடும் மாலை.

௫௧. வள்ளிதழ் - பெரிய இதழ்.

௫௨. ஒள்ளிதழ் : அன்மொழி; வாசவதத்தை.

௫௩. கழிநாட்காலை - மறுநாள் விடியற் காலத்தில்.

௫௪. போர்மா - போர்க்குதிரை.

[ஏவலர் அரண்மனையில் தீக்கொளுவுதல்.]

௫௫ - ௬௭ : வடுநீங்கு.......................சூழ்ச்சியுள்.

(பொ - ரை.) குற்றமற்ற அமைச்சர் தாங்கருதிய செயலைச் செய்யத் துணிந்தனராகிப் பகைவராகிய வேடர், உதயண மன்னன் பாவையை மணந்த நாள் தொடங்கிக் காம வேட்கையுள் அழுந்தி ஊக்கமிலன் ஆயினான்; ஆதலின் இவனை வெல்லுதல் எளிதென்றும் அவன் பெருமையைக் கருதாதும் இகழ்ந்து அவன் கலக்கமுறும் பொருட்டு அரண்மனையில் தீக் கொளுவத் தலைப்பட்டனர் என்னும் ஒரு செய்தியைத் தஞ் சுற்றத்தாரும் பிற மாந்தரும் அறியும்படிப் பரப்பிய கருத்துச் செறிந்த அக் கொடுஞ்சொல் யாண்டும் பரவாநிற்ப, அச் செயலுக்குக் கருவியா யமைந்த தறுகண்மையுடைய மறவரும் அவ்வாறே போர்ப்பறை முழக்கத்தோடே ஆரவாரித்து வந்து அவ்வரண்மனையைச் சூழ்ந்து அதனகத்திருந்த வாசவதத்தை புறம் போகாதபடி அதன் வாயில்களை மூடி அதன்கண் தீக்கொளுவிய வரை கடந்து பெருகிய இச் சூழ்ச்சிச் செயல் நிழுங்கால் என்க.

(வி - ம்.) ௫௫. தீயசெயல் போலத் தோன்றுமாத்திரையே; அதனைச் செய்வோர் தூயரே என்பார் வடுநீங்கு அமைச்சர் என விதந்தார்.

௪௬ - ௭. பிணைத்த மலர் மாலையும் தளிர் மாலையும் அணியும் பிரச்சோதனன் மகளாகிய திருமகளை ஒத்த வாசவதத்தையை மணந்த நாள் தொடங்கி என்க. படலை - தளிர்விரவியமாலை. மலர்ப்பாவை : திருமகள். அவளை ஒத்த வாசவதத்தை என்க.

௪௮. ஊக்கமிலன் - தன்வினை செய்தற்கண் மனக் கிளர்ச்சி யிலாது மெலிந்தான் என்று கருதி என்க. எனவே இவனை அழித் தல் மிக எளிது என்று எள்ளி அழலிட்டனர் என்று கருதும்படி என்பது கருத்து.

௪௯. வீக்கம் - பெருமை. எள்ளி - இகழ்ந்து ; மதியாமல் என்ற வாறு.

௫௦. உறீஇய - கொளுவ; செய்யிய என்னும் வாய்பாட் டெச்சம்.

௫௩. அறியும் பொருட்டு அவ் அமைச்சர் கூறிவிடுத்த மாற்றம் என்க. இங்ஙனம் கூறிவிடுத்தது தஞ் சூழ்ச்சி வெளிப்படாமைப் பொருட்டென்க. செறிவுடைச் செய்கை - கருத்துச் செறிவுடைய செயல் ; ஆராய்ந்து துணிந்த செயல் என்றவாறு.

௫௪. ஆர்ப்பனர் - ஆர்த்து. வளைஇ - வளைத்துக்கொண்டு.

௫௫. கோப்பெருந்தேவி - வாசவதத்தை.

௫௭. கையிகந்து - மிக்கு. சூழ்ச்சிச் செய்கையுள் என மாறுக.

[உருமண்ணுவாவின் செயல்]

௫௮ - ௮௭: பொய்ந்நிலம்..................கவர.

(பொ - ரை.) சுருங்கை வழி யுடனே இயந்திரமமைந்த மாடத்தின்கண் கொலைத் தண்டனை விதிக்கப்பட்ட இரண்டு கள்வரை விரைந்து புகுத்தி வாசவதத்தையின் அடியணிகலன் முதலாகத் தலையணிகலன் ஈருகவுள்ள அணிகலன்களையும் வாங்கி அம்மாடத்துள் ஒருசார் வைத்துச் சித்திரத் தொழி லமைந்த சுருங்கை வாயிலியந்திரத்தை அகற்றிக் கோமான் துணைவியையும், தத்துவச் செவிலியையும், அழைத்து நீவிரிரு விரும் இவ்வரண்மனையைத் தீப்பற்றி அழிப்பினும் அஞ்சாது இச் சுருங்கை வழியே குறிப்பிட்ட அவ்விடத்திற்குச் செல்வீராக என்று அறிவுறுத்தி அங்ஙனம் அவர் வெளியேறியவுடன் அவ் வாயில் தானே மூடிக்கொள்ளத் தகுந்ததொரு செய்கையும் செய்தமைத்துப் பின்னர் அவ்வரண்மனையின்கண் தீக்கொளு விய பொய்க் கள்வரைக் கலங்கி ஓடும்படி அவரோடே பொய்ப் போர் புரிதல் தலைக்கிடாக அவ்வுருமண்ணுவா ஒருசார் அகலா நிற்பப் பொன்னிறப் பலகையின் மேல் புலி மான் இவற்றின் தோலால் ஆகிய இருக்கைகளைப் பொருந்த இடப்பட்டதும் ; அரக்கால் இயற்றப்பட்டதுமாகிய அவ்வரண்மனை மாடங்களை

யும் வாயில்களையும் விரையும் தீ விரைந்து கவர்ந்துகொள்ளா நிற்ப என்க.

(வி - ம்.) ௬௮. பொய்ந்நிலம் - சுருங்கை வழி. பொறி - இயந்திரம்.

௬௯ - எ௧. அரசனுக்கு முடிக்கலன் செய்யுங்கால் பொன்னைக் களவு கொண்டு, அதற்கீடாக இரும்பையும் வெள்ளியையும் உருக்கிச் சேர்த்து அம் முடிக்கலனைச் செய்து அக் குற்றத்தின் பொருட்டு விலங்கிட்டுக் கொலைத்தண்டனை விதிக்கப்பட்டுச் சிறையிடைக் கிடந்த இரண்டு கள்வரை விரைந்து அம் மாடத்துள்ளே புகுத்தி என்க. இங்ஙனம் புகுத்தியது அம் மாடத்திலிருந்த மகளிரிருவரும் தீயான் மாண்டனர் என்று இக் கள்வர் உடலைக் காட்டி உதயண குமரனை நம்பச் செய்தற் பொருட்டென்க.

எ௨. நலத்தகுமாதர் - வாசவதத்தையின். அவள் அணிகலன்களைப் பின்னர் இறந்த வாசவதத்தையினுடையன இவை என உதயணனுக்குக் காட்டும் பொருட்டு அம் மாடத்துள்ளிட்டு வைத்தனர் என்பது கருத்து.

எ௩. தலைக்கலம் - தலைக்கோல முதலிய அணிகலன்.

எ௪. சித்திரத் தொழில் அமைந்த பெரிய பொறி என்க. உய்த்து அகற்றி - தள்ளிநீக்கி.

எ௫. துணைவி - மனைவியாகிய வாசவதத்தை. எ௬. தத்துவ முணர்ந்த சாங்கியத்தாய் ஆகிய செவிலி என்க. பெருங்கோயிற்றலை அழல் மொய்த்துப் புதைப்பினும் (அஞ்சாமல்) என்று மாறுக. புதைத்தல் - மூடுதல்.

அ௦. கருமக் கள்வர் - ஒரு கருமத்தின் பொருட்டுக் கள்வராய் நடித்த அவ்வேடரை. கலங்கும்படி பொய்யாகத் தாக்கி என்க.

அ௨. பொறிவரித் தவிசு-புள்ளியுடைய மான்தோலிருக்கையும், வரியுடைய புலித் தோலிருக்கையும் என்க.

அ௩. அரக்குறீஇய - நிறமூட்டிய எனினுமாம். ஒடெரி - விரையும் நெருப்பு.

**[அ௫ - ௧௦௧. சாங்கியத் தாய் வாசவதத்தையை அழைத்துக் கொண்டு யூகியின்பாற் செல்லுதல்.]**

அ௫ - ௬௫ : இளையரும்....................பொழுதில்.

(பொ - ரை.) அவ்வரண்மனையின்கண் உள்ள சிறுவரும், மகளிரும், தமக்குற்ற துயரம் போக்குவாரைக் காணப் பெறாராய் வேதலுற்ற பெரிய துன்பத்தோடே ஆரவாரஞ் செய்யா நிற்பத் தன் கண்கள் பிறழும்படி தளரா நின்ற பூங்கொடி போல நடுங்கி வெய்தாக உயிர்க்கும் வாசவதத்தையை மூதாட்டி தன் கையிலே பற்றிக்கொண்டு யூகியால் தனக்குக் கூறப்பட்ட மறை விடத்தே அமைந்த சுருங்கை வழியில் புழுக்கறைப்படுத்தப்

பட்ட அச்சமுடையவர் தமக்கோர் வாயில் திறக்கப்பட்டு அவ்வழியே விரைந்து செல்லுமாறு போலச் சென்று யூகி இருக்கை யருகே செல்லா நின்றனள்; அங்ஙனம் சென்ற பொழுது என்க.

**(வி - ம்.)** ௭௫. அங்குறைந்த இளையரும் மகளிரும் என்க. களைகண் - புகலாவார்; துன்பங் களைந்து ஆதரவு நல்குவோர்

௭௬. நீயானே வேதனுறுகின்ற துயரத்தோடே என்க. ஆகுலம் - பூசல்; ஆரவாரம்.

௭௭ - ௯. மூதாட்டி தேவியைப் பற்றி என மாறிக் கூட்டுக. தனது பெரிய கண்கள் பிறழாநிற்பச் சூறைக்காற்றாலே தளராநின்ற பூங்கொடிபோல நடுங்கி வெய்தாக உயிர்க்கின்ற தேவி, நன்னுதலையும் பணைபோன்ற தோளையும் உடைய தேவி எனத் தனித்தனிக் கூட்டுக.

௭௮. வெய்துயிர்த்தல் - வெய்தாகப் பெருமூச் செறிதல். பணை - மூங்கில்.

௭௯. தேவி - கோப்பெருந்தேவி; வாசவதத்தை. தெரிமூதாட்டி: வினைத்தொகை. மெய்ப்பொருள் உணர்ந்த முதியவளாகிய சாங்கியத் தாய் என்க.

௯௦. முன்னர் யூகி தனக்குக் கூறிய என்க. ஒளிநிலம் - மறைவான நிலம்.

௯௧. பெருங்கல நிதியம் - பேரணிகலன்களாகிய பொருள். வாய் அமைத்த - வாயை மூடிவைக்கப்பட்ட.

௯௨. அரும்பிலம் - தப்புதற்கரிய நிலவறை. இதனைப் பொதியறை என்றும் கூறுப. "பொதியறைப்பட்டோர்" (௪ : ௧௦௫. ௧௯. ௮.) என்பது மணிமேகலை, அச்சமாந்தர் - அச்சத்தையுடைய மனிதர்.

௯௩. வெளியேறுதற்கு ஒருவாயில் திறக்கப் பெற்று என்க.

௯௪. வெளியேறுதற் பொருட்டு அமைக்கப்பட்ட உட்பொய் யாகிய சுருங்கையுள் சென்று என்க.

௯௫. நற்பு உடை அமைச்சனை - நன்மையுடைய அமைச்சனாகிய யூகியை என்க. நற்பு - நன்மை.

௯௯ - ௧௦௪ : கற்புடை......................கூறும்.

**(பொ - ரை.)** கற்புக்கடம் பூண்ட வாசவதத்தைக்கு அன்புமிக்க அச்செவிலி தன் பேரறிவுடைமையாலே பொருணீதியை எடுத்துக் கூறி அறிவுறுத்தி, "அஞ்சிலோதி! அஞ்சாதே கொள்! நும்பெருமானாகிய உதயணவேந்தனுடைய நெஞ்சினை ஒத்த அமைச்சன் ஒருவன் தனக்குரிய நீதியை மேற்கொண்டு இயற்றியதொரு வஞ்சகச் செயல் இஃதாகும்; இச்செயல் நுங்கள் நலத்தின் பொருட்டே செய்யப்படுவதாம்;" என்று, அவள் நெஞ்சம் தெளிந்து உறுதி கொள்ளும்படி கூறி

(அழைத்துச் சென்று), அவ்வமைச்சன் இருக்கையை எய்திய பின்னர் அங்கிருந்த அவ்வமைச்சன் யாம் எண்ணிய செயல் நிறைவேறியது என்று மகிழ்ந்து இனிய முகமலர்ச்சியோடு அவர்தம் எதிரே வந்து அவரை விரும்பி வரவேற்று அவருள் வாசவதத்தையை வணங்கி நின்று அவளுக்குப் பின்வருமாறு கூறுநின்றனன் என்க.

(வி - ம்.) ௯௬. கற்புடை மாதர் என்றது அயலார்முற் செல்ல நாணும் இயல்புடையாள் என்பதுபட விதந்தோதியபடியாம்.

௯௭. அற்பு - அன்பு, அன்போடளாவிய பொருள்நீதி என்க. தனது பேரறிவுடைமையாலே காட்டி என்க.

௯௮. அஞ்சிலோதி : அன்மொழித் தொகை; விளியேற்று நின்றது. அழகிய சிலவாகிய கூந்தலையுடைய நங்காய் என்றவாறு. அஞ்சல் - அஞ்சாதே கொள். நம்பெருமான் என்புழிப் பன்மை நினக்கும் ஏனையோர்க்கும் பெருமான் என்றபடி; ஒருமைப் பன்மை மயக்கமன்று.

௯௯. நெஞ்சுபுரை - நெஞ்சத்தை ஒத்த. நீதியிற் செய்த வஞ்சம் என்பது வஞ்சித்தும் தன்னரசனை நன்னெறிச் செலுத்தல்வேண்டும் என்னும் அமைச்சியனீதியால் செய்த என்றவாறு.

௧00. இது - இச்செயல். வலிப்ப - நெஞ்சம் உறுதிகொள்ளும்படி.

௧0௧. அருந்திறல் அமைச்சன் - பெறலரும் திறலையுடைய அமைச்சனாகிய ஒருவன் என்க. என்றது யூகியை நினைந்து கூறியதாம்.

௧0௨ - ௪. தான் கருதிய செயல் இனி நிறைவேறுதல் திண்ணம் என்னும் நினைவாலுண்டான இனிய மகிழ்ச்சியோடும் முறுவலோடும் விரும்பி எதிர்வந்து முகத்தியை இறைஞ்சி அவட்கு இது கூறும் என இயைக்க.

௧0௩. இறைஞ்சி - வணங்கி.

௧0௪. திங்களை ஒத்த முகத்தையுடைய வாசவதத்தைக்கு என்க. இது - பின்வருமிம் மொழியை.

[௧0௫ - ௧௪௭. யூகி வாசவதத்தைக்குக் கூறல்]

௧0௫ - ௧௧௪ : இருங்கடல்......................கேண்மோ.

(பொ - ரை.) மறமாச் சேனன் காதல் மகளே! மாதர் மடவோய்! வாசவதத்தாய்! கேட்டருள்க! என்க.

(வி - ம்.) ௧0௫ - ௮. பெரிய கடலை ஆடையாக உடுத்த பேரிடத்தையுடைய இவ்வுலகத்தின்கண் தன்னருள் பெற்றல்லது தாமே மீக்கூர்ந்த மன்னரை எல்லாம் தன்னை வணங்கும்படி செய்யா நின்ற மறமாச் சேனனுடைய மகளே என்க. ௧0௬. தன்னின் அல்லது - தன் அருளானன்றி. மீக்கூர்தல் - உயர்தல். ௧0௭. மறமாச்சேனன் - பிரச்சோதனன்.

௧0அ. காதலையுடைய மகளே என்க. மாதர் மடவோய் - அழகிய மடப்பமுடையோய்.

௧0௯ - ௧௩. வத்தவர் மன்னனாகிய உதயணகுமரனுடைய மலையை ஒத்த மார்பிலணிந்த தொழிற்றிறனமைந்த நறிய மாலையை விருப்பத்தோடே பொருந்தி இன்பம் நுகர்தற்குப் பொருந்திய தவத்தையுடையோய்! குற்றந் தீர்ந்த பருமையினையும் ஒப்பனையையும் அழகையும் உடைய முலையினையும், பூங்கொடியை ஒத்த அழகிய நுண்ணிடையினையும் வெள்ளிய சங்கவளையலணிந்த மூங்கில் போன்ற தோளினையும் உடைய வாசவதத்தையே! என்க.

௧௧௪. அருளிக் கேண்மோ - கேட்டருள்க.

௧௧௪ - ௧௨௭ : அரசியல்....................கோதாய்.

(பொ - ரை.) கோதாய்! அரசியலின்கண் வழுவுதலில்லாத ஏயர்குலத் தோன்றலாகிய நம் மன்னன் நுந்தந்தையாகிய பிரச்சோதன மன்னன் இயற்றிய யானை மாயத்தாலே விடுபெறலரிய தளையிற் பட்டமையாலே அவன் தம்பியராகிய பிங்கல கடகர் தம் நிலையின்கண் நிற்றலாற்றாதவராய்ப் பிழைசெய்வாராயினர்; அச் சூழ்நிலை உணர்ந்த பாஞ்சால மன்னன் பெரிய படையோடு வந்து மாட்சிமையுடைய கோசம்பி என்னும் நந்தலை நகரத்தைக் கைப்பற்றிக் கொண்டான்; மற்று உதயண மன்னனோ இவ்விழிதகவையும் உணராதவனாய் வெள்ளத்திலே ஆழ்ந்துபடுமொருவன் அங்குப் பெற்றதொரு புணைபோன்ற நும்மைப் பெற்றதொரு சிறப்பையே மேற்கொண்டு, நெடிய உவளகத் தொடுங்குத லொன்றையே விரும்பி முன்னரே தனக்குத் தோன்றியுள்ள துயரத்தை நினைதலில்லாதவன் ஆயினன் என்க.

(வி - ம்.) ௧௧௪ - ௧௫. அரசியல் வழா - அரசியற் காரியங்களிலே சிறிதும் வழுவுதலில்லாத. ௧௧௫. இருள் - துன்பம்.

அத்தகைய சிறந்த மரபிற் பிறந்து வைத்தும் இங்ஙனம் ஆயினன் என்பான், குலத்தை விதந்தெடுத் தோதினான்.

ஏயர் இறைவன் - ஏயர் குலத்திற் பிறந்த மன்னன்; உதயணன்.

௧௧௬. நாப்பண் - நடுவே. சேனையின் நடுவேநிற்கும் பொழுதே செய்த மாயத்தால் என்க.

௧௧௭. நும்பெருமான் என்றது, பிரச்சோதனனை. அருந்தளை - தப்பலறிய சிறை.

௧௧அ. தேன்விரியும் நறிய மாலையணிந்த அழகிய மார்பினையுடைய பிங்கல கடகர் என்க. மார்பழகர் அல்லது ஆற்றலற்றவர் என்றிகழ்ந்தவாறு. ௧௧௯. பெற்றி - தன்மை; ஈண்டுக் கடமை என்க.

௧௨௧. மாண் கோசம்பி - மாட்சிமையுடைய கோசம்பி நகரம். வௌவியதும் - கைப்பற்றியதும்.

௧௨௨. நீத்தம் - வெள்ளம். இது காமப் பெருக்கத்திற்கு உவமை.

௧௨௩. புணை - தெப்பம். இது வாசவதத்தைக்குவமை.

௧௨௪. நின்னைப் பெற்றதாகிய அவ்வொரு சிறப்போடு என்க.

நெடுநகர் என்றது உவளகத்தை; (அந்தப்புரத்தை.) புகல என்னும் எச்சத்தைப் புகன்று எனத் திரித்துக் கொள்க. புகன்று - விரும்பி.

௧௨௫. முகைப்பூண் மார்பன் முற்படத் தோன்றிய தற்படுதுயரம் தன் மனத்து அணியான் என மாறுக.

முகை - மலர். மார்வன் - உதயணகுமரன்.

௧௨௬. தனக்குண்டாகிய துயரம் என்க. துயரம் என்றது, காரணத்தைக் காரியமாகக் கூறியபடியாம்.

௧௨௭. மட்டு - தேன். கோதாய்: விளி.

௧௨௭ - ௧௩௭ : வேட்கையில்...............யூகி இரப்ப.

(பொ - ரை.) மடவோய்! நினது முலைப்போகத்தை விட்டுத் தனித்துறைதல் ஆற்றுமைக்குக் காரணமான காம வேட்கையான் நிறைந்து உறையினின்றும் நீங்கமாட்டாத படிமைபோல நின் கணவன் அவ்வழி உறைதலினின்றும் விலகினலன்றி அவ் வொழுக்கத்தினின்றும் அவன் ஒழிதல் அரிதேயாகும். அங்ஙனமாதலினுல் தொன்றுதொட்டு வருகின்ற அவனுடைய பெருங்குடிக்கு எய்திய பழிச்சொல் நீங்குதல் வேண்டும் என்னும் ஆர்வ நெஞ்சமுடைமையானே இனி ஆகும் காரியங்களைக் கூறுகிற்கும் நுங்கள் உயிர் நண்பனுகிய என் கடமையும் அஃதே யாதல் கருதியும், நிலைபெற்ற பழைய புகழினையுடையதும், முறைமையிற் பிறழாததும் நன்மைமிக்க பெருமையினையுடையதுமாகிய உன்னுடைய குலப்பெருமையைக் காத்தல் கருதியும், சிறப்புடைய நின் கணவன் தன் தலைமைத் தன்மையினின்றும் தப்பிய நிலைமையினை நோக்கி அவனை மீட்பது கருதியும், நின் கற்புச் சிறப்பினைக் கருதியும், இதனைப் பொறுத்தருள்க! என் கடமையையே பொருள் எனக் கருதி யான் உதயணகுமரன் தன் பகைமன்னனுக்கு இன்னுசெய்து இகலின்கண் மேம்பட்டுத் திகழ்தலை விரும்பியே இச்செயல்களைச் செய்யத் துணிந்தேன் ஆதலானும், அவ்வுதயண வேந்தன் நின்னை ஒருசில நாள் பிரிய நேர்ந்தமையால் அவனுக்குக் கெடுவது ஒன்றுமில்லையாதலானும், இச்செயலை ஒரு குற்றமாக நின் திருவுளத் தடைட்பாயல்லை என்று கூறி இரவா நிற்ப என்க.

(வி - ம்.) ௧௨௭. வனமுலை - அழகிய முலை.

௧௨௮. விட்டுறைவு - நீங்கியிருத்தல். கெழுமி - நிரம்பி.

௧௨௬. பட்டு உறைபிரியாப் படிமையின் - பட்டாலாகிய உறையி னின்றும் அகலாத பொம்மை போல.

௧௨௯ - ௩௦. அவ்வழி ஒட்டு - அந்த நெறியிலுண்டான பற்று. அல்லதை - அல்லது.

௧௩௧. வாள்நுதல் மடவோய் - ஒளியுடைய நெற்றியையும் மடப் பத்தையும் உடையோயே.

௧௩௨. சேண்வரு பெருங்குடி - நீண்டகாலமாகப் பெருமையைப் பேணி வருகின்ற குடி. சிறு சொல் - பழிச்சொல்; சிறுமையைக் குறிக்குஞ் சொல்.

௧௩௩. நும்பால் உண்டாகிய ஆர்வத்தையுடைய நெஞ்சுடைமை யானே. ஆவது - நுமக்கு ஆக்கந்தருஞ் செயலை.

௧௩௪. நுங்கட்கு இனிய உயிரை ஒத்த கேண்மையுடையேனாகிய என் தன்மையைக் கருதியும் என்க.

௧௩௫ - ௬. மன்னிய தொல்சீர் மரபில் திரியா நலமிகு பெருமை நின் குலமும் நோக்கி - நிலைபெற்ற பழைதாகிய சிறப்பினையுடைய தன் முறைமையினின்றும் பிறழாத நன்மைமிக்க பெருமையினையுடைய நினது பிறந்தை (பிறந்த குலம்) யின் தன்மையினையும் கருதி என்க. எனவே அதற்கும் சிறு சொல் பிறவாமற் பேணும் பொருட்டு என்றவாறு.

௧௩௭. பொருந்திய சிறப்பினையுடைய பெறுதலரிய காதலை யுடைய நின் கணவன் தனக்குரிய தலைமைத் தன்மையினின்றும் இழிந்த தன்மையையும் கருதி என்க.

௧௩௯. நீ சிலநாள் தனித்துறைதலானே நின் கற்புடைமைக்கு இழுக்குண்டாங்கொல் என்று அஞ்ச வேண்டாத கடவுட் கற்புடையை ஆதலின் அவனைப் பிரிதலும் நினக்குக் குற்றமாகாமையுங் கருதுக! என்பான். "நிலம்புடை பெயரினும் விசும்பு வந்து இழியினும் கலங்கா நின் கற்பும் நோக்கி'' என்றான். நின்கடவுட் கற்பு என மாறுக.

௧௪௧. அருளினையாகி என்றது இச் செயலைப் பொறுத்தருள் வாயாக என்றவாறு.

௧௪௨. யான் நன்கு இன்னும் அறிந்து கொள்ளமாட்டாத அமைச்சு இயலினை என்க.

௧௪௩. ஒன்னா மன்னன் என்றது, ஆருணி அரசனை.

௧௪௪. இகல் - போர்: ஆகுபெயர்.

௧௪௫. அவனுக்குக் கெடுவது ஒரு பொருளும் இல்லை யாகலான் என்க.

௧௪௬. வலிக்கற் பாலை - திருவுளத்தே உறுதி கொள்ளற் பாலை. வயங்கிழை : அன்மொழி.

௧௪௭. ஆரவாரிக்கும் வீரக்கழல் அணிந்த காலையுடைய யூகி என்க.

[வாசவதத்தை தன்னுள்ளே ஆராய்ந்து தெளிதல்.]

௧௪௮ - ௧௫௩ : நெறிநார்............அறிவிற் சூழ.

(பொ - ரை.) அறல்பட்டுத் தாழ்ந்த கூந்தலையுடைய வாசவதத்தை அங்ஙனம் இரக்கும் யூகியை நோக்கித் தன் நெஞ்சினுள்ளே "நம் புரவலனுக்குப் பொருந்திய அமைச்சர் நால்வருள் வைத்து, யூகி என்பான் இறந்துபட்டான்; இவன் எஞ்சிய உருமண்ணுவாவும், வயந்தக குமரனும், இடபகனும் என்று கூறப்படும் மூவருள்ளும் ஒருவன் அல்லன். ஆயின் இவன்றான் யாவனோ?" என்று ஐயுற்று, அவனுக்கு ஏதும் எதிர் மொழி கொடாதவளாய் நின்று தன் அறிவினாலே ஆராயா நிற்ப என்க.

(வி - ம்.) ௧௪௮. நெறி-நெறிப்பு; அறல்படுதல். ஓதி : கூந்தலையுடைய வாசவதத்தை.

௧௪௯. திருமகள் விரும்பி நெடிது வீற்றிருத்தற்குக் காரணமான மார்பினையுடைய வேந்தனாகிய உதயண குமரனுக்கு என்க.

௧௫௦. நூல் வல்லாளர் - அமைச்சியல் நூல் கற்று வல்லவராகிய அமைச்சர் என்க. ௧௫௧. முடிந்தனன் - இறந்துபட்டான்.

௧௫௨ - ௪. மூவருள் வைத்து ஒருவன் அல்லன் என்க. அங்ஙனமாயின் முன்னின்று இரக்கும் இவன் யாவன் என்று ஐயுற்று என்க.

[சாங்கியத்தாய் வாசவதத்தைக்கு இவன் யூகி என்று உணர்த்துதல்.]

௧௫௫ - ௧௫௯ : விம்முறு........................தேறி.

(பொ - ரை.) இவ் வண்ணம் வாசவதத்தை ஐயுற்றுத் துன்பமுறு நின்ற நிலைமையினை அறிந்த சாங்கியத்தாய் "அன்னாய்! நின்னை எய்திய இவன் நுங்கட்கு எப்பொழுதும் ஆக்கத்தையே விரும்பா நின்ற யூகி என்னும் அமைச்சனே ஆவன்; நுமக்கு நலஞ் செயற் பொருட்டுத் தனது பொய்ச் சாவினை உலகுக்குக் காட்டி இவ்விடத்தே தோன்றினான்" எனத் தெரியும்படி கூறா நிற்ப, அதுகேட்ட வாசவதத்தையும் ஐயந் தெளிந்தவளாய் என்க.

(வி - ம்.) ௧௫௫ - ௭. விம்முறு நிலைமை. துன்னிய இவன் (நுங்கட்கு) உறுதிவேண்டும் யூகியே என இயைக்க. உறுதி வேண்டும்- ஆக்கத்தையே விரும்புகின்ற. அவ்வாக்கத்தின் பொருட்டே தனது மாய இறுதியை உலகிற்குக் காட்டி இவ்விடத்தே வந்தான் என விரித்து ஓதுக.

௧௮. இறுதி - சாக்காடு. செப்பி என்றது, காட்டி என்னும் பொருட்டு. இவன் - இவ்விடத்தே. வந்தோன் என்புழி ஆகாரம் ஓகாரமாய்த் திரிந்தது செய்யுளாகலின்.

௧௫௯. தெரிந்துரைப்ப என்புழித் தெரிந்து என்னும் எச்சத்தைச் செயவெனெச்சமாக்குக.

[வாசவதத்தையின் செயல்.]

௧௯௦ - ௧௯௯: உரைத்த.........அரக்கி.

(பொ - ரை) அவ்வமைச்சன் கூறிய செயலினால் விளையும் ஆக்கச் சிறப்பையும், அவன், தன் கண்போன்ற நண்பனாகிய உதயணன்பாற் கருத்தினை நிறுத்தும் தன்மை காணுமையானே செய்தற்குத் துணிந்த செயலையும், இவன் உதயணன், இவன் யூகி என்பது அவர் தம் உரை வேற்றுமையானும் உடல் வேற்றுமையானும் கண்டு கூறப்படுதலன்றி உயிரான் நோக்குழி இரு வேறுயிருடையராகாமல் இருவரும் ஒருயிரே உடையராகும் குற்றமற்ற சிறப்பினையுடையராதலையும், நன்கு தெரிந்துணர்ந்த திண்ணிய கருத்தினை உடையளாயிருந்தும், தன் பெண்ணியல்பு மிகுதலானே பெரிய தன் கண்ணினின்றும் வீழாநின்ற கண்ணீர்த்துளிகள் குளிர்ப்பின்றி வெவ்வியவாக முத்தாரம் போல ஒன்றன்பின் ஒன்ருகத் துளிப்பவற்றைத் தன் கையாலே துடைத்துக்கொண்டு என்க.

(வி - ம்.) ௧௯௦. உரைத்த கருமம் என்றது யூகியாற் கூறப்பட்ட உதயணனையும் வாசவதத்தையையும் பிரியச் செய்யும் சூழ்ச்சிச் செயலினை. உறுதி விழுப்பம் - ஆக்கத்தினது சிறப்பு.

௧௯௧. கண்புரை தோழன் கருத்து நிறை காணுது என மாறுக. கண்ணை ஒத்த நண்பனாகிய உதயணனுடைய நெஞ்சின்கண் நிறையினைக் காணுமையானே என்பது கருத்து.

௧௯௨. வலித்த கருமம் - துணிந்த செயல்.

௧௯௩ - ௧௯௫. இவன் உதயண குமரன், இவன் யூகி என்று அவ்விருவர் தம் உரை வேற்றுமையானும் உடல் வேற்றுமையானும் கண்டு கூறுதல் அன்றி உயிரால் இருவர்க்கும் இரு வேறுயிர்கள் உண்டென்றற்கு அவர் தம்பால் வேற்றுமை இல்லாத குற்றமற்ற சிறப்பினையும் என்க. ஈரிடத்தும் இவன் என்னுஞ் சுட்டுச்சொல் வருவித்துக் கொள்க.

௧௯௫. உயிர் வேறென்றற்கு வேற்றுமை காண்டல் இல்லாத என்க. செயிர் - குற்றம்.

௧௯௬. திண்ணிதின் - திண்மையாக. செறிவினள் - மனத்திட்ப முடையள்.

௧௯௭. பெண்ணியல்பு - பெண்மைத்தன்மை.

௧௯௮-௯. ஆலி - ஆலங்கட்டி; கண்ணீர்த்துளிக்கு உவம ஆகு பெயர். குளிர் முதிர்தல் காரணமாகத் திரண்ட ஆலி என்பார் குளிர் முற்று ஆலி என்ருர். ஆலி தனக்கு இயல்பாகவுள்ள குளிர்ப்பு உள்ளே பொருந்தாமல் (வெப்பமுடையனவாக) முத்தாரம் போலத் துளிப்ப வற்றை அரக்கி என்க. துன்பக் கண்ணீராகலின் குளிர்ப்பு உள்ளுருது என்ருர். அரக்கி - துடைத்து.

௧௭௦ - ௧௭௬ : அரிமான்............. அடக்கி.

(பொ - ரை.) இஃது எம்பெருமான் பணியன்றாயினும், ஆராய்ந்தமைத்த மொழியினையுடைய மெய்ந்நூலோடு பொருந்திய ஆராய்ச்சியின் இயல்பிற் பிறழாமல் அந்நூலின்கண், காலஞ் செவ்விதாம்பொழுது அக்காலத்தே செய்யக்கடவதாகிய கருமத்தைத் தாழாது இயற்றல் பெருமையுடைத்தாம் என்று கூறுநின்ற நெறியினின்றும் பிறழாத தன்மையோடே எடுத்துக் காட்டி. அண்ணலாகிய இவன் நம்பால் வேண்டாநின்ற வேண்டுகோள் நன்றேயாயினும், அன்றித் தீதேயாயினும், யாதாயினும் அவன் கருத்தோடே பொருந்தித் துணிதலே எமக்கு உறுதியுடைத்தாகும் என்று தன் நெஞ்சினுள்ளே கருதித் தன் வயப்படாமல் தன்னெஞ்சம் கனலுதலானே உள்ளே நின்றும் எழாநின்ற உயிர்ப்பினை வலிந்தடக்கிக் கொண்டு, என்க.

(வி - ம்.) ௧௭௦. அரிமான் - சிங்கம். துப்பு - வலிமை. இது, சிங்கத்தை ஒத்த வலிமையுடைய எம் தலைவனாகிய உதயணனுடைய கட்டளை அல்லவானாலும் என்க. நீ சின்னாள் பிரிந்திருப்பாயாக என்று என் கணவன் இட்ட கட்டளை அன்றாயினும் என்பது கருத்து.

௧௭௧. பணி - கட்டளை. தெரிமொழி - ஆராய்ந்த சொல்: வினைத்தொகை. தெரிமொழியையுடைய நூலோடு என்க. நூல் - ஈண்டுப் பொருள் நூல் (அரசியல் நூல்) என்க. நுனிப்பியல் - நுணுகி ஆராயுந்தன்மை.

நுனிப்பியல் வழாமைக் காலவகையானும் வழாமை ஆற்றா நின்ற கருமம் (ஆக்கத்தால்) பெரிது என்பது நூலிற் கூறப்படும் நீதியாகக் கொள்க. இதனை முறையே,

"சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது." (குறள் - ௬௭௧.)

என்றற் றொடக்கத்துத் திருக்குறள்களானும் உணர்க.

நம்பாற் குறைவேண்டுவோனும் ஒப்பற்ற பெரியோனே என்பாள் 'அண்ணல் இவன்' என்றாள். குறையுறும் இவனும் அண்ணல் என மாறுக. ஆதலால் இவன் வேண்டுகுறை நன்றேயாதல் ஒருதலை; அங்ஙனமன்றாயினும் உடன்படலே நமது கடமை என்பாள், நன்றேயாயினும் தீதேயாயினும் ஒன்றாவலித்தல் உறுதியுடைத் தென்று துணிந்தாள் என்பது கருத்து.

இங்ஙனமே அரக்கனுடைய அருஞ்சிறையிடத்தே முதன் முதலாக மாருதியைக் கண்ட சீதை அவனுடைய மொழியினாலே அவனைத் தூயன் என்று துணிந்து அவனோடு உரையாடத் தொடங்கினாள் எனக் கம்பநாடர் கூறுவதனையும் ஈண்டு எண்ணுக.

"என்றவன் இறைஞ்ச நோக்கி இரக்கமும் முனிவும் எய்தி
நின்றவன் நிருதன் அல்லன் நெறிநின்று பொறிகள் ஐந்தும்

வென்றவன் அல்லனாகின் விண்ணவன் ஆகவேண்டும்
நன்றுணர் உரையன்தூயன் நவையிலன் போலும் என்னா''
(சுந்தர-உருக்காட்டு. ௨௬)

"அரக்கனே ஆக வேறோர் அமரனே ஆகஅன்றிக்
குரக்கினத் தலைவனேதான் ஆகுக கொடுமைஆக
இரக்கமேஆக வந்திங் கெம்பிரான் நாமஞ்சொல்லி
உருக்கினன் உணர்வைத் தந்தான் உயிர்இதின் உதவியுண்டோ' ''
(ஷை. - ௨௭)

"வினவுதற் குரியன் என்னா வீரநீ யாவன்? என்றாள்.'' (ஷை. - ௨அ)

என வரும்.

௧௭௭. ஒன்று வலித்தல் - ஒன்றித்துணிதல்.

௧௭அ. கைவரை நில்லாது - தன்வயத்தே நில்லாமல்.

௧௭௯. வெய்துயிர்ப்பு - வெப்பமுடையதாகிய பெருமூச்சு.

[வாசவதத்தை யூகிக்கு முகமன் மொழிதல்]

௧௭௯-௧௯௦ : நீ வேண்டியது..................எனக்கென.

(பொ - ரை.) பின்னர் அவ்வியூகியை விளித்து "நீதியாளனே! நீ விரும்பியதொன்றனை யாங்களும் விரும்பும் கருத்துடையேமாதல் அன்றி அதனை விரும்பாததொரு குறிப்பும் எம்முடைமையாகக் கூறுதலும் உளதாமோ? ஆகாதன்றே! எனவே, மார்பன் மாயயானை காரணமாகச் சிறைப்பட்டபொழுது அந்நகரத்தே சென்று பொய்ச் சாக்காட்டினால் அவனை மீட்கும் வலிமையுடையையாகிய நீ, வேண்டாநின்றன அனைத்தும் எம்முடைய வேண்டுகோளே ஆவன'' என்று புன்சிரிப்புத் தோன்றுதற்குக் காரணமான மொழிகளாலே முகமன் கூறித் தன் தலைவனுக்கு ஆக்கத்தையே விரும்பாநின்ற அவ்வாசவதத்தை யூகியின் கருத்திற்கிணங்கிப் பின்னரும் "அரிதாக எம்பால் எய்திய பெரியதொரு விருந்தினரை இறைவனைப் போற்றுமாறு போற்றுதல் ஆகிய பெறலரிய பெரும்பண்பு இப்பொழுது எனக்கு வந்து எய்தியது'' என்று அசதியாடன் மொழிகளைக் கேட்போர்க்கு நயத்தல் வரும்படியாக இனிதே கூறி என்க.

(வி - ம்.) ௧௭௯. நீவேண்டியதனைத்தும் யாங்கள் ஆராயாமலே வேண்டுமியல்புடையேம், ஆகலின் நீ எம்பால் வேண்டுவது மிகையாயிற்று. நீ அங்ஙனம் வேண்டாநின்ற செயலே, நீ வேண்டியதனை ஒரோவழி யாங்கள் வேண்டாத குறிப்பும் உடையேம் ஆதலை வெளிப்படுத்தா நின்றது. அங்ஙனம் நீ கூறுதலும் உண்டோ என்று வினவினள் என்பது கருத்து.

௧அ௦. குறிப்பு - கொள்கை. எமக்கு என்றது உதயணனையும் உளப்படுத்தியபடியாம்.

கஅக. மறத்தகை மார்வன் - வீரத்தகுதியுடைய மார்பையுடைய உதயணன். பொய் யானை காரணமாகச் சிறை புக்க காலத்தே என்க. அவற் பெயர்க்க-அவனை மீட்கும் பொருட்டு. கஅஙு. பொய்ச்சாவினை வெளிப்படுத்தி அவ்வுபாயத்தானே அச்செயலில் வல்லையாகிய நீ என்க.

சாவினைக் காட்டி வல்லையாகினை முன்னர்; இப்பொழுதும் எம் சாவினை எம்மிறைவற்குக் காட்டி அதன் வாயிலாய் எமக்கு ஆக்கம் அளிக்கவும் வல்லையாகுதல் ஒருதலை என்று பாராட்டியபடியாம்.

கஅச. வேண்டுவ - நீவிரும்புவன. வேண்டு - எம்முடைய விருப்பமும் ஆகும். வேண்டு - விருப்பம்.

கஅரு. சதுரப்பாடுடைய இம்மொழியைக் கேட்க நேர்ந்த யூகிக்கும் சாங்கியத்தாய்க்கும் (இதனை ஓதாநின்ற எம்மனோர்க்கும்) நகை முகிழ்த்தலானே, முகிழ்நகைக் கிளவி என்றார்.

நகை முகிழ்த்தற்குக் காரணமான சொல் என்க.

கஅசு. அண்ணலரசன் : இருபெயரொட்டு. ஆகுபொருள் ; ஆக்கம் ; உறுதிப் பொருள்.

கஅஎ. ஒள்ளிய நுதலையுடைய வாசவதத்தை என்க. ஒருப்பாடு-உடம்பாடு.

இறந்துபட்டோர் என்றும் இவ்வுலகில் மீண்டு வருதல் இல்லையாகலின் முன்னர் இறந்துபட்ட நீ என்பாள் அரிதின்வந்த பெருவிருந்தாளரை என்றாள். பெருவிருந்தாளர் : முன்னிலைப் புறமொழி

கஅஅ. சிறப்புப் பலியாருச் செல்வன் - அருகக் கடவுள். அருகக் கடவுளைப் போற்றுமாறு போற்றத் தகுந்த சிறந்த விருந்தினர் என்றவாறு. எனவே, நீ எமக்குக் கடவுளையே ஒக்கின்றனை என்று பாராட்டிய படியாதல் உணர்க.

" இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு " (குறள் - அக.)

என்பவாகலான் அவ்விருந்தாளர் தாமும் இறைவனை ஒத்த சிறப்புடையர் ஆயவழி அவரை ஓம்புதல் பெறற்கரும்பண்பு ஆமன்றோ அத்தகையதொரு பேற்றினை இப்பொழுது யான் எய்தினேன் என்று பாராட்டியபடியாம்.

" அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது," (குறள் - சரு)

என்பவாகலின், விருந்தோம்பல் அறத்தைப் பெறலரும் பெரும்பண்பு என்றாள் என்க. கசுக. அசதிக்கிளவி - பரிகாசச்சொல். நயவர-கேட்போர்க்கு நயத்தல் வருமாறு. மிழற்றி - மொழிந்து.

கசுஉ - கசுஎ : நேர்ந்த..............................முடித்தென்.

(பொ-ரை.) இவ்வண்ணம் உடம்பட்ட வாசவதத்தைக்குக் குருசில் காட்டினின்றும் மீண்டகாலத்தே அவன் திங்கிலன் ஆதலை அறிவித்தற்பொருட்டு அதுகாறும் அவ்விடத

தேயே ஓர் மறைவிடம் அமைத்துக்கொண்டு அவ்வியூகியும் செவிலித் தாயும் அவ்வாசவதத்தையுடனே, அப்பொய்யாகிய சூழ்ச்சிக்குப் பொருந்தத் தாம் எண்ணிய காரியத்தை முடித்துக் கொண்டு மறைந்து உறைவராயினர் என்க.

(வி - ம்.) ௧௧௨. இவ்வாற்றால் உடம்பட்ட வாசவதத்தைக்கு என்க. மாதரை என்புழி இரண்டனுருபு நான்காவதன்கண் மயங்கிற்று. நீண்ட புகழையுடைய தலைவனாகிய உதயணன் கானத்தினின்றும் மீண்டகாலத்தே திங்கிலனாய் உயிரோடிருத்தலை அறிவிக்கும் பொருட்டு என்க. அங்ஙனம் அறிவியாதுவிடின் வாசவதத்தை தேறுதலரிதாகலின் அங்ஙனம் செய்தனர் என்க. அறியும் : அறிவிக்கும் எனப் பிறவினையாக்குக.

௧௧௬. மறுதரவு - மீட்சி. மீட்சியைத் தன்பாலுடைய சூழ்ச்சித் துணிவோடே உள்ளியது முடித்து ஒளித்தனர் என்க. உள்ளியது - கருதிய செயல். அஃதாவது உதயணனிடமிருந்து வாசவதத்தையைப் பிரித்தல்.

௧௭. தேவியைப் பிரித்தது முற்றிற்று.

---

# கஅ. கோயில் வேவு

இதன்கண்-காட்டிற்குச் சென்ற உதயணன் வாசவதத்தை விரும்பிய அரும்பு, மலர், தளிர் முதலியவற்றைக் கைக் கொண்டு மலைச் சாரலினின்றும் நகர்நோக்கி வருதலும், அவன ஏறிவரும் புரவியின் மாண்பும், வரும் வழியில் தீய நிமித்தங் காண்டலும், நகரத்தில் புகையெழுதலை அவ்வுதயணன் காண்டலும், உருமண்ணுவாவும் வயந்தகனும் உதயணனுக்குத் தீங்கு நிகழாமற் பாதுகாத்தற் பொருட்டு விழிப்புடனிருத்தலும், காஞ்சன மாலை கலங்குதலும், உதயணன் நகரத்துட் புகுந்து அரண்மனை வாயிலின்கண் நினைவிழந்து விழ்தலும், தோழர் உபசரித்தலும், அவன் நினைவுமீண்டெழுதலும் பிறவும் கூறப் படும்.

உள்ளியது முடித்த யூகியுஞ் சேவிலியும்
ஒள்ளிழை மாதரோ டொளித்த பின்னர்ப்
பலாவமல் அசும்பிற் பயமலைச் சாரல்
உலாவேட் டெழுந்த உதயண குமரன்
குழையணி காதிற் குளிர்மதி முகத்திக்குத்
தழையுந் தாருங் கண்ணியும் பிணையலும்
விழைபவை பிறவும் வேண்டுவ கொண்டு
கவவிற் கமைந்த காமக் கனலி
அவவுறு நெஞ்சத் தகல்விடத் தழற்றத்
தனிக்கன் றுள்ளிய புனிற்றுப் போல
விரைவிற் செல்லும் விருப்பினன் ஆகிக்
கலினங் கவவிக் கான்றுநுரை தெவிட்டும்
வலியுடை யுரத்தின் வான்போற் றுலிப்
படலியம் பழுக்கமோடு பஃகறை வில்லாப்
பருமக் காப்பிற் படுமணைத் தானத்(து)
அருமைக் கருவி அலங்குமயிர் எருத்தின்
வயமாப் பண்ணி வாய்க்கயிறு பிணித்துக்
குறுக்கை புக்க கோளுவமை கச்சையன்
அறைக்கண் மருங்கின் அகத்துளை இன்றிக்
கண்ணள வமைந்து கதிர்த்த மூங்கிற்
பண்ணமை காழ்மிசைப் பசும்பொன் வலக்கும்

அடிநிலைச் சாத்தோ டியாப்புப் பிணியுறீஇ
வடியிலைக் கதிர்வாள் வைந்நுனைக் குந்தமொடு
வார்ப்பின் அமைத்த யாப்பமை அரும்பொறி
மணிக்கை மத்திகை அணித்தகப் பிணித்துக்
கோற்கமை வுறுநடைக் குதிரைக் கோதிய
நூற்க ணாளரொடு நனித்துக் கதிவிணய்
வாக்கமை வாளன் கூப்புபு வணங்கிக்
கடுநடைப் புரவி கைம்முதல் கொடுப்ப
அடுதிறல் அண்ணல் அணிபெற ஏறி
மறுவில் மாணகர் குறுக வருவழி
இடுக்கண் தருதற் கேது வாகி
இடக்கண் ஆடலுந் தொடித்தோள் துளங்கலும்
ஆருயிர்க் கிழத்தி அகன்றனள் இவணிலள்
நீர்மலர்ப் படலை நெடுந்தகை யாள
காணு யாகி ஆனு இரக்கமோ(டு)
இழுக்கில் தோழரோ டியங்குவை இனியென
ஒழுக்கும் புட்குரல் உட்படக் கூறிய
நிமித்தமுஞ் சகுனமு நயக்குணம் இன்மையும்
நினைத்தனன் வரூஉ நேரத் தமைத்த
தண்ணிதிப் பலகைச் சந்தனச் சார்வணைக்
கண்ணுற நினைத்த கைப்புடை ஆவணத்
திருமணி அருங்கலம் எளிதினின் தரீஇக்
காலத்தின் நடக்குங் கூலக் கொழுங்கடைக்
கடுவுங் கோட்டமுங் காழகிற் குறையும்
அரக்கும் அதிங்கும் அரும்பெறற் பயினும்
நறையு நானமு நாறிரு வேரியும்
அறைவெள் ளாரமும் அன்னவை பிறவும்
அண்ணரும் பேரழல் ஆக்கிய கமழ்புகை
மாதிரத் தியங்குஞ் சோதிடர் விமானமும்
வாச மூட்டும் வகையிற் றாகி
மஞ்சொடு நிரைஇ வெஞ்சுடர் மழுக்க
இருள்படப் பரந்த மருள்படு பொழுதிற்
கண்டா னாகித் திண்டேர் உதயணன்
வண்டார் கோதை வாசவ தத்தை

இருந்த இடமும் பரந்தெரி தோன்றஅவட்(கு)
ஏதுகோல் உற்றதென் றெஞ்சிய நெஞ்சின்
ஊறவண் உண்மை தேறின ளாகிச்
செல்லா நின்ற காலை வல்லே
மாய மள்ளரை ஆயமோ டோட்டி
உருமண் ணுவாவும் வயந்தக குமரனும்
பொருமுரண் அண்ணல் புகுதரும் வாயிலுள்
பொச்சாப் போம்புதல் புரிந்தனர் நிற்ப
எச்சார் மருங்கினும் எரிபுரை தாமரை
கண்ணுற மலர்ந்த தெண்ணீர்ப் பொய்கையுள்
நீப்பருஞ் சேவலை நிலைவயிற் காணது
பூக்கண் பொழும் புள்ளிற் புலம்பி
எரிதவழ் கோயில் எவ்வழி மருங்கினும்
திரிதரல் ஓவாள் தீய்ந்துநிற மழுங்கிக்
கட்டழற் கதிய நெட்டிருங் கூந்தல்
புதையெரி பற்றப் புன்சொற் கேட்ட
பெரியோர் போலக் கருகி வாடிய
தகையழி தாமமொடு தாழ்வன பரப்பித்
தோழியைக் காணள் சூழ்வளிச் சுழற்றியள்
செவ்விய தன்மையின் அவ்வயி றதுக்கா
நாவலந் தண்பொழில் நண்ணூர் ஒட்டிய
காவலன் மகளே கனங்குழை மடவோய்
மண்விளக் காகி வரத்தின் வந்தோய்
பெண்விளக் காகிய பெறலரும் பேதாய்
பொன்னே திருவே அன்னே அரிவாய்
நங்காய் நல்லாய் கொங்கார் கோதாய்
வீணைக் கிழத்தீ வித்தக உருவீ
தேனேர் கிளவீ சிறுமுதுக் குறைவீ
உதயண குமரன் உயிர்த்துணைத் தேவீ
புதையழல் அகவயின் புக்கனை யோவெனக்
கானத் தீயிடைக் கணமயில் போலத்
தானத் தீயிடைத் தானுழன் றேங்கிக்
காணல் செல்லாள் காஞ்சனை புலம்பிப்
பூசல் கொண்டு புறங்கடைப் புரளும்

ஆகுலத் திடையே அண்ணலுங் கதுமென
வாயில் புகுந்து வளங்கெழு கோயில்
தீயுண விளியுந் தேமொழிச் செவ்வாய்க்
காஞ்சன மாலை கலக்கமுங் காணாப்
பூங்குழை மாதர் பொச்சாப் புணர்ந்து
கருவி யமைத்த காலிற் செலவிற்
புரவியின் வழுக்கிப் பொறியறு பாவையின்
முடிமிசை அணிந்த முத்தொடு பன்மணி
விடுசுடர் விசும்பின் மீனெனச் சிதறச்
சாந்துபுலர் ஆகத்துத் தேந்தார் திவளப்
புரிமுத் தாரமும் பூணும் புரள
எரிமணிக் கடகமுங் குழையும் இலங்க
வாய்மொழி வழுக்கி வரையின் விழுந்தே
தேமொழிக் கிளவியின் திறல்வே றுகி
இருநில மருங்கிற் பெருநலந் தொலையச்
சோரு மன்னனை ஆர்வத் தோழர்
அடைந்தனர் தழீஇ அவலந் தீர்க்கும்
கடுங்கூட் டமைத்துக் கைவயிற் கொண்ட
போகக் கலவை ஆகத் தப்பிச்
சந்தனங் கலந்த அந்தண் நறுநீர்த்
தண்தளி சிதறி வண்டினம் இரியக்
குளிரிமுதற் கலவையிற கோடிபெறக் குலாஅய்
……………………யோண்மணி தட்டப்
பவழப் பிடிகை பக்கங் கோத்த
திகழ்பொன் அலகின் செஞ்சாந் தாற்றியிற்
பன்முறை வீசத் தொன்முறை வந்த
பிறப்பிடைக் கேண்மைப் பெருமனைக் கிழத்தியை
மறப்படை மன்னன் வாய்சோர்ந் தரற்றச்
சேற்றெழு தாமரை மலரிற் செங்கண்
ஏற்றெழுந் தனனால் இனியவ ரிடையென்.

---

## ௯௮. கோயில் வேவு

*அஃதாவது, அரண்மனை தீயின்கண் வேகா நின்ற பொழுது நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறும்பகுதி என்றவாறு.*

## உரை

[கானஞ் சென்ற உதயணகுமரன் மீண்டு வருதல்.]

க - கக: உள்ளியது.....................விரும்பினனாகி.

(பொ - ரை.) தாங் கருதிய செயலைச் செய்து முடித்த பூகியும், சாங்கியத்தாயும், வாசவதத்தையோடு மறைந்த பின்னர்ப் பலா மரங்கள் செறிந்த பயன்மிக்க மலைச்சாரலின்கண் உலாவுதலை விரும்பிச் சென்ற உதயணகுமரன், வாசவதத்தைக்குத் தளிருந் தாருங் கண்ணியும் பிணையலும் இன்னோரன்ன பிறவுமாகிய அவள் விரும்புவனவற்றைக் கைக்கொண்டு பிரிவு நேர்ந்த அவ்விடத்தே பெரிதும் காமத்திச்சுடா நிற்றலால், தனது தலைக்கன்றினை நினைந்து செல்லும் ஈன்றணிமையுடைய ஆன் போல விரைந்து செல்லும் விருப்பமுடையனாகி என்க.

(வி-ம்.) க. உள்ளியது-கருதிய செயல். செவிலி-சாங்கியத்தாய்.

உ. ஒள்ளிழை மாதர் - ஒள்ளிய அணிகலன்களையுடைய வாசவதத்தை.

௩. பலா மரங்கள் நெருங்கியதும் நீரூற்றுக்களை யுடையதும் பயன் தருவதுமாகிய மலைச்சாரலின்கண் என்க. அமலுதல் - நெருங்குதல்; மிகுதலுமாம். "பலாவமல் அடுக்கம்" (அ.) என்றார் அகத்தினும். அசும்பு - நீரூற்று. பயம் - பயன். மணி முதலியன படுதலும் தேன் கனி முதலியன உண்டாதலும் பிறவும் என்க. இனி மிளகு கோட்டம் அகில் தக்கோலம் குங்குமம் என்பனவுமாம்.

௪. உலா - உலாவுதல். வேட்டு - விரும்பி.

௫-எ. குழையணிந்த செவியினையும், குளிர்ந்த திங்கள் மண்டிலம் போன்ற முகத்தினையும் உடைய வாசவதத்தைக்கு என்க. தழை முதலியனவும் பிறவுமாகிய அவள் விரும்புவனவற்றைக் கைக்கொண்டென்க. தழை - தளிர். தார் - மார்பிலணியும் மலர் மாலை. கண்ணி - தலையிற் சூடும் மாலை. பிணையல்-ஒருவகை மாலை. வேண்டுவ - வேண்டுமளவினவாக என்க.

அ. தழுவுங்கால் வெப்பம் நீங்குமியல்புடைய காமத் தீ என்க.

௯. அகல்விடத்து - பிரிந்த விடத்தே. அவவு - அவா: குறியதன் கீழ் ஆகாரம் குறுகி உகரம் ஏற்றது.

"கவவிற்கு அமைந்த காமக்கனலி அகல்விடத்து அழற்ற" என வரும். இதனுடன்,

> "நீங்கின் தெறூஉங் குறுகுங்கால் தண்ணென்னுந்
> தீயாண்டுப் பெற்றாள் இவள்." (குறள் - ௧௧0௪.)

எனவரும் அருமைத் திருக்குறளையும் நினைக.

அழற்ற - சுடாநிற்ப.

௧0 - ௧௧. தளிக்கன்று -தலைக்கன்று ; (முதன் முதலீன்ற கன்று) புனிற்று - ஈன்றணிமையுடைய ஆ. ஆ விரைவிற் செல்லுமாறு போல விரைவிற் செல்லும் விருப்பினன் என்க.

[உதயணன் இவர்ந்து வரும் குதிரையின் மாண்பு.]

௧௨ - ௧௭ : கலினம்..............................பிணித்து.

(பொ - ரை.) கடிவாளம் அகத்திடப்பட்டு நுரைகான்று உமிழா நிற்ப வலிமையுடைய நெஞ்சின்கண் அணியப்பட்ட தாலியினையும், படலியினையும், அழகிய பழுக்கத்தினையும், பல வாகிய மூட்டுவாய் இல்லாத பருமமாகிய காப்பினையும், இருக்கை யிடத்திற்குரிய அரிய பிற கருவிகளையும், அசையா நின்ற மயிரினையுடைய எருத்தினையும் உடையதொரு சிறந்த புரவி யைப் பண்ணுறுத்தி வாய்க்கயிறிட்டுக்கட்டி என்க.

(வி - ம்.) ௧௨. கலினம்-கடிவாளம். கவவி - அகத்திடப்பட்டு. நுரை கான்று தெவிட்டும் என மாறுக. நுரை கக்கி உமிழும் என்க.

௧௩. உரம் - மார்பு. வான் பொன்தாலி - உயரிய பொன்னு லியற்றப்பட்டதொரு அணிகலன்.

௧௪. படலி பழுக்கம் என்பனவும் குதிரையணிகலன்கள் என்க. பல் தகைவு - பல மூட்டுவாய்.

௧௫ - ௬. பருமம் - குதிரைக் கலணை. பருமக் காப்பு - பண்புத் தொகை. படுமணைத்தானத்து அருமைக் கருவி என்பது, ஏறி அமர்தற் குரிய இருக்கைக்குரிய சிறந்த கருவிகள் என்றவாறு. அலங்கு-அசையா நின்ற. எருத்து - பிடர்.

௧௭. வயமா - குதிரை. பண்ணி - பண்ணுறுத்தி; ஒப்பனை செய்து. வாய்க்கயிறு - வாயிலிடப்படும் கயிறென்க.

௧௮ - ௩௧ : குறுக்கை......................வருவழி.

(பொ - ரை.) கச்சையுடையனாய், மூங்கிற் கோல் மிசைப் பொற்பூண் சுற்றிய அடிநிலைச் சாத்தோடு கால் யாப்பினையும் கட்டி, வாள் குந்தம் முதலியவற்றோடு வார்த்தியற்றிய அரிய பொறியினையும், மணிக் காம்பினையும், உடைய மத்திகையினையும் அழகுறப் பிணித்துக் குதிரைக்குக் கூறப்பட்ட நூல்களைக் கற்றுமுதிர்ந்த ஆசிரியர்பால் துறைபோகக் கற்று மேலும் அக் குதிரையின் செலவுவகையினையும் கேட்டுணர்ந்த அக் குதிரைப் பாகன் அக் குதிரையோடு வந்து உதயண குமரனைக் கை குவித்து வணங்கி அதனை அவன் கையிலே கொடாநிற்ப அவ் வண்ணலும் அக் குதிரை அவ்வழகின் மேலும் அழகினைப் பெறுமாறு அதன்மேல் ஏறிக் குற்றமற்ற அவ் விலாவாண நகரத்தை எய்துதற் பொருட்டு வாரா நிற்கும் பொழுது என்க.

(வி - ம்.) ௧௮. குறுக்கைபுக்க கொளூஉ - புலிவடிவமமைந்த மூட்டுவாய். குறுக்கை - புலி.

௧௯-௨௧. அறைக்கண் மருங்கின் அகத்துளையின்றிக் கண் அளவு அமைந்து கதிர்த்த மூங்கில் பண்ணமை காழ்மிசை பசும் பொன் வலக்கும் அடிசாத்து - வெட்டுவாயிடத்தும் உட்டுளை யில்லாததாய் ஒன்றற்கொன்று சமஅளவமைந்த கணுக்களையுடையதாய் ஒளிவிடா நின்ற சிறந்த மூங்கிலினது திருத்தப்பட்ட கழியின் மேல் பசிய பொற் பூணைச் சுற்றிய அடிச்சாத்து என்னும் கருவியோடே என்க. அடிச் சாத்து - ஏறுவோர் அடியைப் பிணித்துக்கொள்வதொரு கருவி; அங்கவடி.

அறைக்கண் - வெட்டுவாய். அகத்துளை - உட்டுளை. கண் - கணு. கதிர்த்த - ஒளிவிடாநின்ற. பண் - திருத்தம். வலக்கும் - சுற்றும். பிணியுறீஇ - பிணித்து.

௨௨ - ௨௫. வடித்த இலையினையுடைய ஒளிவாளும் கூர்த்த நுனியையுடைய குந்தமும் ஆகிய இவற்றோடு இரும்பை உருக்கிச் செய்த தொடர்புபட்ட அரிய பொறியினையுடைய மத்திகையினையும் அழகுண்டாகத் தொடுத்தென்க. வடியிலை: வினைத்தொகை. கதிர் வாள்: இரண்டாம் வேற்றுமைத் தொகை. வை - கூர்மை. குந்தம் - ஒருபடைக்கலம். வார்த்தற்றொழிலானே அமைத்த பொறி என்க. இது நீளவும் சுருங்கவும் அமைத்த இயந்திரம் போலும். மணிக்கை - மணிகளிழைத்த கைப்பிடி. மத்திகை - குதிரைச் சம்மட்டி.

௨௬. அம்பின் வேகத்தை ஒத்த வேகத்தையுடைய நடையை உடைய குதிரைகளுக்கு என்க.

௨௭. நூல் - குதிரை நூல். நுவித்து - கூரிதாய்க்கற்று. கதி வினுய் - செலவினை வல்லார்வாய்க் கேட்டுணர்ந்த (வாக்கமைவாளன்; திருத்த அமைதியுடைய குதிரைப் பாகன் என்க.) ௨௮. கூப்புபு-கூப்பி.

௨௯. கைமுதல் - கையில்.

௩௦. அடுதிறல் அண்ணல் - உதயண குமரன்.

௩௧. மறு - குற்றம். மாணகர் - மாட்சிமையுடைய இலாவாண நகர். அரண்மனையுமாம்.

[உதயணனுக்குத் தீய நிமித்தம் தோன்றுதல்]

௩௨ - ௪௦: இடுக்கண்..............................நேரத்து.

(பொ - ரை.) அவ்வுதயண குமரன் தனக்குத் துன்பந் தருதற்குக் காரணமாகத் தன் இடக்கண்ணும் தோளும் துடித்தலையும், மேலும் "நெடுந்தகையாள! நின் உயிர்க்கிழத்தி நின்னி னின்றும் பிரிந்து போயினள் ஆதலான் இனி அவளை நீ அரண் மனையகத்தே காணப் பெறுயாய், இரக்கத்தோடே நினது குற்ற மற்ற தோழரோடு இயங்கா நிற்பை" என்று கூறுநின்ற பறவைக் குரலுட்பட உண்டான நிமித்தங்களும் சகுனங்களும் நயக்

குணமில்லாமையையும் நெடிது நினைத்து நினைந்து வருந்தி வாராநின்ற பொழுது என்க.

(வி - ம்.) ௩௨. இடுக்கண் - துன்பம். ஏது - காரணம். ௩௩. இடக்கண் துடித்தலும் இடத்தோள் துடித்தலும் ஆடவர்க்குத் தீ நிமித்தமாம் என்ப. தொடி - தோள்வலயம். துளங்கலும் - துடித்தலும்.

௩௪. அரிய உயிர்போன்ற மனைக்கிழத்தி - (தலைவி). இவண் - இவ் வரண்மனையின்கண்.

௩௫. நீர்ப்பூவாற்றொடுத்த படலைமாலை. இதனை,

"தாமரைக் கொழுமுறித் தாதுபடு செழுமலர்க்
காமரு குவளைக் கழுநீர் மாமலர்ப்
பைந்தளிர்ப் படலை."

எனவரும் சிலப்பதிகாரத்தானும் உணர்க. (௪: ௩௬. ௪௧.)

நெடுந்தகையாள : விளி.

௩௬. காணாய் ஆகி - காணமாட்டாயாகி. ஆறா இரக்கம் - அமையாத துன்பம்.

௩௭. இழுக்கு - குற்றம். ௩௮. ஒழுகும் எனற்பாலது ஒழுக்கும் என எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது. ஒழுகும் - இயங்காநின்ற. புட்குரல் முதலியன நிமித்தம் - சகுனம், செல்லுங்கால் எதிர்ப்படும் பறவை விலங்கு முதலியவற்றுற் றோன்றுவன. நினைத்தனன்: முற்றெச்சம்.

[உதயணன் புகைத் தோற்றத்தைக் காணுதல்.]

௪௦ - ௫௩: அமைத்த..............................பொழுதில்.

(பொ - ரை.) பொற்பலகையும் சந்தனப்பலகையுமாகிய சார்வணைகளிடப்பட்ட அவ்விருக்கையின் கண்ணிருந்து வணிகர் தாம் கருதிய பேரணிகலன் முதலியவற்றை எளிதாகவே வருவித்துக் காலத்திலே விற்கும் கடைத்தெருவின் கண் பல பண்டங்களும் குவிக்கப்பட்ட கூலக்கடைகளின்கண் உள்ள கடுவும், கோட்டமும், அகிற்கட்டையும், அரக்கும், அதிமதுரமும், பயினும், நறையும், நாகமும், வெட்டிவேரும், சந்தனக் குறடும், இன்னோரன்ன பிறவுமாகிய நறுமணப் பொருள்களிற் பற்றி அணுகுதற்கரிதாகிய அப் பெருநெருப்பு உண்டாக்கிய நறுமணமுடைய புகை, வானத்தின்கண் இயங்கும் சோதிடருடைய விமானத்தையும் மணமூட்டும் தன்மையுடையதாகி முகில்போல நிரம்பி ஞாயிற்று மண்டிலத்தையும் மறைத்தலானே இருள் உண்டாகப் பரவிய மயங்குதற்குக் காரணமான அந்தப் பொழுதிலே என்க.

(வி - ம்.) ௪0. அமைத்த - அமைக்கப்பட்ட. ௪௧. தன்னிதிப் பலகை - பொற்பலகை சார்வணை - சார்தற்குரிய அணை. வணிகர் அணைக்கன்னுற இருந்து என்க.

௪௨ - ௪௪. தாம் நினைத்த அருங்கலங்கள் முதலியவற்றைக் காலத்தில், எளிதினில் தரீஇ நடக்கும் ஆவணக் கூலக் கொழுங்கடை என மாறிக் கூட்டுக. வணிகர் தாம் விரும்பிய கல முதலியவற்றை அவ் வவற்றைக் கொள்ளத்தகுந்த காலத்திலே எளிதாக வருவித்து விற்றலாகிய தொழில் நடத்தா நின்ற ஆவணத்தில் இருமருங்கினும் உள்ள கூலக்கடைகளில் உள்ள கடுமுதலியவற்றை என்க.

௪௩. திருமணி அருங்கலம் - அழகிய மணிகளிழைத்த பேரணி கலம். மணியும் கலமும் எனினுமாம். எளிதினில் - எளிதாக. தரீஇ- வருவித்து.

௪௪. காலத்தில் - அவ்வப்பொருள் மலிவாகக் கிடைக்கும் காலத் திலே என்க. நடக்கும் - நடத்தாநின்ற என்க. கூலக்கொழுங்கடை- பல பண்டங்களும் விற்கும் கொழுவிய கடை. ௪௫. கடுமுதலியன நறுமணப் பொருள்கள். கடு - கடுக்காய். கோட்டம் - ஒருவகை மணப்பொருள். கொட்டம் என்றும் பாடம். கொட்டம்-இதுவும் ஒரு மணப்பொருள். "கொட்டமே கமழும் குழலாளொடு" (தேவார- திருஞா. கோயில். ௨) எனவருதல் காண்க. காழ் - வயிரம். அகிற் குறை - அகிற்கட்டை.

௪௬. அரக்கு - சாதிலிங்கம். அதிங்கு - அதிமதுரம். பெறுதலரிய பயின் என்க. பயின் - பிசின். நறுமணமுடைய மரத்தினின்றும் வடிந்த பிசின் என்பது கருத்து. அஃதாவது, சாம்பிராணி. ௪௭. நறை- ஒருவகை மணமுடைய கொடி. நானம் - புழுகு. இருவேரி - வெட்டி வேர். ௪௮. அறை வெள்ளாரம் - அறுக்கப்பட்ட வெள்ளிய சந் தனக் குறடு. அன்னவை - இவைபோல்வன.

௪௯. அண்ணரும் - அணுகுதல் அரிய. பேரழல் - பெருநெருப்பு.

௫0. மாதிரம் - வானம். சோதிடர் - தேவருள் ஒருவகையினர். அவராவர் கோளும் நாளும் ஆகியதேவர், இதனை,

> "சந்திரரும் சூரியரும் தாரகையு நாண்மீனும்
> வெந்திறல கோட்களுமாம் எனவிளங்கி விசும்பாரு
> மந்தரத்தை வலஞ்சூழ்ந்து வருபவரும் நிற்பவருஞ்
> சுந்தரஞ்சேர் மணிமுடியாய் சுடர்பவருஞ் சோதிடரே"

எனவரும் சூளாமணியானும் உணர்க. (துறவு. ௨0௬.)

௫௧. வகையிற்று-வகையினையுடைத்தாகி; தன்மையை உடைத் தாகி என்பது கருத்து.

௫௨. மஞ்சொடு - முகில்போல என்க. ஓடு - ஈண்டு உவமம் கருதி நின்றது. இனி முகிலோடு எனினுமாம். வெஞ்சுடர்-ஞாயிறு.

௫௩. மருள் - மயக்கம்.

௫௪ - ௫௯ : கண்டாளுகி..............................காலை.

(பொ - ரை.) அவ்வுதயணகுமரன் அப்புகைப் படலத்தைக் கண்டதோடன்றி மேலும் வாசவதத்தை இருந்த மாடத்தின் மீதும் தீப்பரவித் தோன்று நிற்பவும் கண்டு அவளுக்கு யாதுற்றதோ? என்று பெரிதும் கலங்காநிற்ப எஞ்சிய சிறு கூற்றையுடைய நெஞ்சாலே அவளிருந்த மாடத்தினும் இடையூறு உண்டாதலைத் தெளிந்து செல்லாநின்ற பொழுது என்க.

(வி - ம்.) ௫௪. திண்ணிய தேரினையுடைய உதயணன் என்க,

௫௫. வண்டுகள் முரலாநின்ற மலர் மாலையினையுடைய வாசவதத்தை என்க.

௫௬. எரி பரந்து தோன்ற என மாறுக. எரி - நெருப்பு.

௫௭. அவட்கு - அவ்வாசவதத்தைக்கு. உற்றதென்று கலங்கி அக்கலக்கத்தினின்றும் எஞ்சிய (கூருகிய) நெஞ்சினுலே - நெஞ்சினைக் கலக்கமே பெரிதும் கவர்ந்துகொள்ள எஞ்சிய சிறு கூருகிய நெஞ்சினுலே தெளிந்து என்பது கருத்து.

௫௯ - ௬௩ : வல்லே..............................நிற்ப.

(பொ - ரை) பொய்மையையுடைய பகைமறவரைக் கூட்டத்தோடே ஓடும்படி அவருடன் பொய்ப்போர் புரிந்து உருமண்ணுவாவும் வயந்தக குமரனும் அண்ணல் வந்து புகுதற்குரிய வாயிலினிடத்தே அவன் புகுங்கால் உண்டாகும் சோர்வினைத் தவிர்த்து அவனை உய்யக்கோடல் செய்வாராய் விரைந்துவந்து நிற்ப என்க.

(வி - ம்.) ௫௯. வல்லே - விரைந்து. ௬0. மாய மள்ளர்-பொய்யாகப் பகைவர்போல வந்து அரண்மனையில் தீக்கொளுவிய மறவர். ஆயம் - கூட்டம்.

௬௨. பொருமுரண் - போர்செய்யும் வலிமை. அண்ணல் - உதயணகுமரன்.

புகும்பொழுது அவ்வாயிலின்கண் துன்ப மிகுதியாலே தீயினுட் புகுதலும் கூடும் அன்றே! அத்தகைய பொச்சாப்பு நேராதபடி பாதுகாவல் செய்தனராய் நிற்ப என்க.

௬௩. பொச்சாப்பு-ஈண்டுத் துன்பமிகுதியால் உண்டாகும் சோர்வு.

[காஞ்சன மாலையின் கலக்கம்]

௬௪ - ௭௫ : எச்சார்..............................அதுக்கா.

(பொ - ரை.) காஞ்சனமாலை தாமரைப் பொய்கையின்கண் தன் சேவலைக் காணமல் எல்லாப் பக்கங்களினும் அத்தாமரை மலர்களை ஊடறுத்துச் சென்று தேடாநின்ற பெடையன்னம்

போன்று வருந்தித் தித்தவழா நின்ற அவ்வரண்மனையகத்து எல்லாப் பக்கங்களினும் அத் தீம்பிழம்பினை ஊடறுத்துச் சென்று தேடித்திரிதல் ஒழியாளாய்த் தியானே உடல் தீய்ந்து நிறங்கெட மழுங்கி அத்திப்பற்றுதலானே தன்னெடிய கரிய கூந்தலைப் புன்சொற் கேட்ட பெரியோர் உள்ளம்போலக் கருகுத லானே, வாடிப்போன அழகழிந்த மாலைகளோடு தாழும்படி விரித்துத் தன் தோழியாகிய வாசவதத்தையைக் காணப் பெறுதவளாய்ச் சூறைக் காற்றுப்போலச் சுழலும் சுழற்சியை யுடையளாய்த் தன் கையாலே தனது அழகிய வயிற்றைப் பிசைந்துகொண்டு என்க.

**(வி - ம்.)** ௬௪. எச்சார் மருங்கினும்-எல்லாப் பக்கங்களினும். எரிபுரை தாமரை - தீப்பிழம்பை ஒத்த தாமரை மலர்.

௬௫. கண்ணுற மலர்ந்த - இடமெலாம் நெருங்கும்படி மலர்ந்த என்க. பொய்கை - நீர்நிலை.

௬௬. நீப்பருஞ்சேவல்-பிரிதலில்லாத தன் சேவலாகிய அன்னம். நிலைவயின் - இருப்பிடத்தில்.

௬௭. பூக்களை ஊடறுத்துச் சென்று தேடாநின்ற என்க. புள்-ஈண்டுப் பெடையன்னம். புலம்பி - வருந்தி.

௬௮. கோயில் - அரண்மனை.

௬௯. திரிதரல் - திரிதலை. ஓவா - ஒழியாத.

௭௦. கட்டழல் - மிக்க நெருப்பு. கதிய - கதுவிய. நெட்டிருங் கூந்தல் - நீண்ட கரிய கூந்தல். புன்சொல் - தீச்சொல். பெரியோர் உள்ளம்போல என்க.

௭௧. தகை - அழகு. தாமம் - மாலை.

(௭௦) கூந்தல் (௭௧) தாமமொடு தாழ்வனவாகப் பரப்பி என்க.

௭௪. தோழி - வாசவதத்தை. சூழ்வளிச் சுழற்சியள் - சுற்று நின்ற சூறைக் காற்றினது சுழற்சியைப் போன்று சுழலும் சுழற்சியை உடையளாய் என்க.

௭௫. அவ்வயிறு - அழகிய வயிறு. அதுக்கா-அதுக்கி; பிசைந்து என்றவாறு. இதன்கண், நெருப்புக்குத் தாமரைமலரும் வாசவதத் தைக்குச் சேவலும், காஞ்சன மாலைக்குப் பெடையன்னமும், பொய்கை, அரண்மனைக்கும் கருகி வாடிய மாலைக்குப் பெரியோர் உள்ளமும் உவமைகள் என்க.

௭௬ - ௮௬: **நாவலந்தண்பொழில்..............புரளும்.**

**(பொ - ரை.)** காவலன் மகளே! மடவோய்! விளக்காகி வந்தோய்! விளக்காகிய பேதாய்! பொன்னே! திருவே! அன்னே! அரிவாய்! நங்காய்! நல்லாய்! கோதாய்! வீணைக்

கிழத்தி! கிளவி! முதுக்குறைவி! தேவி! தீயினுள்ளே புகுந்து மாண்டாயோ? என வாய்திறந்தரற்றிக் காட்டுத்தீயிடைப் பட்ட மயில்போல அத்தீயினுள்ளே கிடந்துழன்று, ஏங்கி வாசவதத்தையைக் காணப் பெறாதவளாய் அழுது அரற்றி முற்றத்திலே விழுந்து புரளா நின்றனள் என்க.

**(வி - ம்.)** எசு - அடு. நாவலந் தீவினுள் தனக்குப் பகைவர் இல்லாதபடி துரத்திய பிரச்சோதன மன்னனின் மகளே! கனவிய குழையையும் மடப்பத்தையும் உடையோய்! உலகத்திற்கோர் விளக்காகி இவ்வுலகம் பெற்ற வரத்தினாலே பிறந்தோய்! மகளிர்க்கு விளக்குப் போன்றோய்! பொன்போன்ற நற்குணமுடையோய்! இலக்குமி போன்ற அழகுடையோய்!

எவ்வுயிர்க்கும் தாய்போன்ற அன்புடையோயே! அரிவையே! மகளிருள் தலைசிறந்தவளே! நல்லொழுக்கமுடையோயே! மணம் பொருந்திய மாலையணிந்தவளே! வீணை வித்தையில் மிக்க உரிமையுடையோயே! சித்திரம் போன்ற உருவமுடையோயே! தேன்போன்ற மொழி பேசுமியல்புடையோய்! இளமைப் பருவத்திலேயே பேரறிவு படைத்தவளே! உதயணவேந்தனுக்கு உயிர்போன்ற வாழ்க்கைத் துணைவியாகிய கோப்பெருந் தேவியே! என விரித்தோதுக. அடு. புக்கனையோ! - புகுந்து மாண்டனையோ!

அசு. கானத்தீ - காட்டுத்தீ. கணமயில் - கூட்டமாக வாழுமியல்புடைய மயில்.

அஅ. காணல் செல்லாள்: ஒருசொல்; காணாதவளாய் என்க. அகூ. புறங்கடை - முன்றில். புரளும் - புரளாநின்றனள்.

(உதயணன் நினைவிழத்தல்)

கூ0 - க0சு: ஆகுலந்திடையே....................தழீஇ.

**(பொ - ரை)** இவ் வாரவாரத்தினிடையே அண்ணலும் வாயிலின்கண் விரைந்து புகுந்து ஆண்டுத் தீயினூடே புரண்டு பூசலிடும் காஞ்சன மாலையின் துயரத்தையும் கண்டு வாசவதத்தையின் சோர்வின் காரணத்தையும் ஊகித்துணர்ந்த அளவிலே, கருவிகள் அமைக்கப்பட்ட விரைந்த செலவினையுடைய குதிரையினின்றும் வழுக்கிப் பொறியற்ற இயந்திரப் பாவைபோலத் தன் முடிமீது அணியப்பட்ட முத்தும் மணியும் விண்மீன் உதிருமாறு போல உதிராநிற்பவும், மார்பிடத்தே மாலைகள் திவளா நிற்பவும், ஆரமும் அணிகலனும் புரளாநிற்பவும், மணிக் கடகமும் குழையும் பிறழ்ந்து விளங்கா நிற்பவும், மொழிகுழறி மலை வீழுமாறுபோல பெரிய நிலத்தின்மேற் சாய்ந்தனனாக, வாசவதத்தையின் பொருட்டு இவ்வாறு தனது பெரிய நலமெல்லாம் அழியும்படி சோராநின்ற அவ் வுதயணகுமரனுடைய அன்புடைய தோழர் விரைந்தெய்தி அவனைத் தழுவிக் கொண்டு என்க.

(வி - ம்.) கூ0. ஆகுலம் - ஆரவாரம்; பூசல். அண்ணலும் என் புழி உம்மை இறந்தது தழீஇயது. காஞ்சன மாலையே அன்றி அண்ண லும் என இயையும். கதும் : விரைவுக் குறிப்பு.

கூக. வளம்பொருந்திய அரண்மனையின்கண் என்க.

கூஉ - ங. விளியும் - பூசலிடாநின்ற. இனிய மொழியினையும் சிவந்த வாயினையும் உடைய காஞ்சனமாலை என்க. காணூ - கண்டு.

கூச. பூவேலையமைந்த குழையையுடைய அழகியாகிய வாச வதத்தை என்க. பொச்சாப்பு - தற்காத்தலின்கண் உற்ற சோர்வு. எனவே வாசவதத்தை தற்காத்தலிற் சோர்வெய்தி இறந்துபட்டாள் என ஊகித்துணர்ந்து என்பது கருத்து.

கூரு. கருவி - அங்குசம் வாள்குந்தம் அனை கடிவாளம் முதலியன. காலியற் செலவின் - காற்றை ஒத்த செலவினையுடைய.

கூசு. பொறியறு பாவையின் - விசையற்ற இயந்திரப் பாவை விழ்வது போல.

கூஅ. விடுசுடர் மீன், விசும்பின் மீன் எனத் தனித்தனிக் கூட்டுக.

கூகூ. சந்தனம் பூசிப் புலர்ந்த மார்பின்கண் அணியப்பட்ட தேன் துளிக்கும் மலர்மாலை திவள என்க. திவள்தல் - துவள்தல்.

க00. புரி - நூல். ஆரம் - வடம். பூண் - அணிகலன்.

க0க. ஒளிருகின்ற மணிகளிழைத்த கடகம். கடகம் - ஒரு தோளணிகலன். குழை - செவியணிகலன். இலங்க - விளங்க.

க0உ. மொழி வழுக்கி - மொழிகுழறி. வரையின் - மலை வீழ் வதுபோல.

க0ங. தேமொழிக் கிளவியின் : (பன்மொழித் தொகை,) வாச வதத்தையின் பொருட்டென்க. திறல் - ஆற்றல்.

க0ச. பெருநலம் - அறிவு அழகு முதலியன.

க0ரு. சோரும் - நினைவிழக்கும். மன்னனை : அவ்வுதயணனை. ஆர்வத் தோழர் ஆர்வமுடைய நண்பர்.

க0சு. அடைந்தனர் : முற்றெச்சம், தழீஇ - தழுவி.

[தோழர் உதவிச் செயலான் உதயணன் நினைவு மீளப்பெறுதல்]

க0சு - கககூ : அவலம்......................இனியவரிடையென்.

(பொ - ரை.) நினைவிழப்பினை விரைந்தகற்றி உணர்ச்சி தரும் கடிய மருந்தினைக்கூட்டி இயற்றி அக்கூட்டு மருந்தினை உத யணன் மார்பின்கட் பூசிச் சந்தனங் கலந்த அழகிய பனிநீரைத் தெளித்துக் குளிரி முதலியவற்றை ஒழுங்குற வளைத்து............ ஒள்ளிய மணிகளிழைக்கப்பட்ட தட்டத்தினையும் பவழக் கைப் பிடியினையும், பக்கங்களிலே கோக்கப்பட்ட பொன்னலகினையும்,

உடைய சாந்தாற்றியினாலே பலகாலும் விசாகிற்றலான் அம் மன்னவன் நினைவு மீளப்பெற்றவனாய் "வாசவதத்தாய்! வாசவதத்தாய்!" என வாய்விட்டு அரற்றி மலராநின்ற தாமரை மலர்போன்று தன் செங்கண் மலராநிற்ப அத்தோழரிடையே எழுந்தனன் என்க.

(வி - ம்.) அவலம் - நினைவிழப்பு; அவலம் கவலை. கையாறு அழுங்கல் என்னும் துன்பத்தின் நால்வகை நிலையுள் ஈண்டு அவலம் என்றது மூன்றா நிலையாகிய கையாற்றினை என்க. அதனைத் தீர்த்தலாவது மீண்டும் உணர்ச்சிவரச் செய்தல். கடுங்கூட்டு - கடிதிற் றீர்க்கும் மருந்துக் கூட்டு. கையிலே கொண்ட அப்போகக் கலவையை என்க. (௧0அ) போகக் கலவை - நுகர்ச்சிக்குக் காரணமான உணர்ச்சியை ஊட்டும் அக் கூட்டுமருந்து. ஆகம் - மார்பு. அப்பி - பூசி.

௧0௯. சந்தனங் கலந்த அழகிய குளிர்ந்த பனிநீர் என்க,

௧௧0. தண்துளி - குளிர்ந்த துளி. வண்டின மிரிய (௧௧௫) விச என இயைக்க.

௧௧௧. குளிரி - ஒரு நீர்ப்பூடு; அதனை இக்காலத்தார் துளிரி என வழங்குப. செங்கழு நீருமாம். கொடி - ஒழுங்கு.

௧௧௨. விசிறியின் பக்கங்கள் தட்டுப் போறலின் - தட்டம் எனப் பட்டன.

௧௧௩. பிடிகை - கைப்பிடி.

௧௧௪. பொன்னலகு - பொன்னாற் செய்த கதிர் (குஞ்சம்). சாந்தாற்றி - ஒருவகை விசிறி; பூசிய சந்தனம் புலர்வதன் பொருட்டு வீசப்படுதோர் விசிறி என்க.

௧௧௫ - எ. தொன்முறை............அரற்றா - பண்டும் பண்டும் முறையே பிறவிகள் தோறும் தொடர்ந்து அடிப்பட்டு வந்த காதற் கேண்மையையுடைய தன்மனைக் கிழத்தியினது பெயரை வாய்விட்டுச் சொல்லிப் புலம்பியபடியே என்க.

௧௧எ. மறம்படை மன்னன்-வீரமிக்க படையையுடைய உதயண மன்னன். அரற்றா - அரற்றி.

௧௧அ - ௧௯. இனியவரிடை செங்கண் ஏற்று எழுந்தனன் என மாறுக. இனியவர் - தோழர்.

தாமரை மலர் மலர்வது போலக் கண் மலர்ந்து எழுந்தனன் என்க.

௧அ. கோயில் வேவு முற்றிற்று.

---

## க௯. தேவிக்கு விலாவித்தது

இதன்கண், உதயணகுமரன் வாசவதத்தை தீயின்கண் அகப்பட்டு இறந்துபட்டாள் என்று கருதி ஆற்றுமையால் தானுந் தீயின் மூழ்கி உயிர்விடப் போதலும், தோழர் அவனை விலக்குதலும், உதயணன் வாசவதத்தையின் உடம்பையேனும் எனக்குக் காட்டுமின் என்று தோழரை இரத்தலும், உருமண்ணுவா உதயணனை அழைத்துச் சென்று அரண்மனை அகத்தே வெந்து கிடந்த அணிகலன்களையும், கள்வர் இருவர் உடம்புகளையும் காட்டி வாசவதத்தை இறந்தே விட்டாள் என்று அவ்வுதயணன் நம்பும்படி செய்தலும், உதயணன் பொன்னரிமாலை முதலிய அணிகலன்களைக் கையிலெடுத்து நோக்கி அரற்றுதலும், முன்னிகழ்ச்சிகளை நினைத்து நினைத்துப் புலம்புதலும், தோழர் இச் செவ்வியறிந்து பகைவர் படை யெடுத்து வருதல் கூடும் என்று கருதித் தம் படைகளை எல்லைப் புறத்திற் சென்றிருக்கச் செய்தலும் பிறவும் கூறப்படும்.

ஏற்றெழுந் ததன்பின் இனியோர் குழீஇ
ஆற்றல் சான்ற நூற்றுறை மருங்கிற்
பழையவும் புதியவும் உழைவயிற் பிரியார்
காரணம் உரைப்பவும் ஓர்வரை நில்லான்
அந்தீங் கிளவியென் அம்பிணை மூழ்கிய
செந்தீ யானும் புகுவென் சென்றென
முரிந்த கந்தின் எரிந்த வேயுள்
அரிந்த யாப்பிற் சொரிந்த கடுங்காழ்
கரிந்த மாடங் காவலன் குறுக
ஆரளைச் செறிந்த அருஞ்சின நாகத்துப்
பேரழற் சாணிய பேதை மாந்தர்
வாயின் மருங்கின் தீயெரி கொளீஇயது
செயிற்படு பொழுதிற் செம்முக நின்றுதம்
உயிரொழிந் ததுபோல் உறுதி வேண்டார்
அடங்கார் அடக்கிய அண்ணல் மற்றுநின்
கடுஞ்சினம் பேணுக் கன்றிய மன்னர்
கறுவு வாயிற் குறுதி யாக
இகப்ப எண்ணுதல் ஏதம் உடைத்தே
ஆகிய தறியும் அரும்பொருட் சூழ்ச்சி

யூகியின் அல்லதை உதயண குமரன்
உள்ளம் இலனேன வெள்ளைமை கலந்த
புறத்தோர் உரைக்கும் புன்சோன் மாற்றம்
அகத்தோர்க் கென்றும் அகஞ்சுடல் ஆகு(து)
ஆங்ஙனம் அந்நிலை அறிந்துமனங் கவலா(து)
ஓங்கிய பெருங்குலந் தாங்குதல் கடனுப்
பூண்டனை யாகுதல் பொருண்மற் றிதுவேன
மாண்ட தோழர் மாற்றுவனர் விலக்கக்
காலங் கலக்கக் கலக்கமோ டுறூஅய்
ஞால முழுது நவைக்குற் றெழினும்
ஊர்திரை யுடைய ஒலிகெழு முந்நீர்
ஆழி இறத்தல் செல்லா தாங்குத்
தோழரை இகவாத் தொடுகழற் குருசில்
சூழ்வளை முன்கைச் சுடர்க்குழை மாதர்
மழைக்கால் அன்ன மணியிருங் கூந்தல்
அழற்புகை சூழ அஞ்சுவனள் நடுங்கி
மணிக்கை நெடுவரை மாமலைச் சாரற்
புனத்தீப் புதைப்பப் போக்கிடங் காணு(து)
அலைச்சேறி மஞ்ஞையின் அஞ்சுவனள் விம்மி
இன்னுயிர் அன்ன என்வயின் நினைஇத்
தன்னுயிர் வைத்த மின்னுறழ் சாயல்
உடப்புச் சுட்டகம் உண்டேனிற் காண்கம்
கடுப்பழல் அவித்துக் காட்டுமின் விரைந்தேனக்
கரிப்பிணங் காணூர் காவலர் என்னும்
மொழிப்பல காட்டவும் ஒழியான் அழிய
முன்னையர் ஆதலின் முதற்பெருந் தேவி
இன்னுயிர் இகப்ப விடாஅர் இவரேன
மன்ன குமரன் மதித்தனன் ஆயின்
எண்ணிய சூழ்ச்சிக் கிடையூ றுமேனத்
தவலரும் பெரும்பொருள் நிலைமையின் எண்ணி
உலைவில் பெரும்புகழ் உருமண் ணுவாவிரைந்(து)
ஆய்புகழ் அண்ணல் மேயது விரும்பி
நீள்புடை இகந்துழி ஞாயில் ஒதுங்கிக்
கோயில் வட்டத் தாய்நலங் குயின்ற

பள்ளிப் பேரறை உள்ளகம் புக்காங்
கழிவுறு சுருங்கை வழிமுதன் மறைஇ
விம்முறு துயரமோடு விளிந்துயிர் வைத்த
கும்மனத் தாளர் குறைப்பிணங் காட்டித்
தாயுந் தையலுந் தீயுண விளிந்தமை
மாயம் அன்றெனை மன்னனைத் தேற்றி
மணியு முத்து மணியு மிழந்துதிர்ந்(து)
ஆரக் கம்மஞ் சாரவிற் றிருந்து
கொள்கைக் கட்டழல் உள்ளுற மூட்டி
மாசுவினை கழித்த மாதவர் போலத்
தீயகத் திலங்கித் திறல்விடு கதிரொளி
சேடுறக் கிடந்த செம்பொன் செய்கலம்
பொன்னணி மார்பன் முன்னண விடுதலின்
ஒண்செங் தாமரை ஒள்ளிதழ் அன்ன
பண்கெழு விரலிற் பன்முறை தொகுத்து
நான மண்ணி நீனிறங் கொண்டவை
விரித்துந் தொகுத்தும் வகுத்தும் வாரியும்
உளர்ந்தும் ஊறியும் அளந்துகூட் டமைத்த
அம்புகை கழுமிய அணிமா ராட்டம்
வெம்புகை சூழ்ந்து மேலெரி யூர
விளிந்தது நோக்கி ஒழிந்தனை ஆதலின்
நன்னுதன் மாதர் பின்னிருங் கூந்தற்
பொன்னரி மாலாய் பொருளில என்றும்
கொடியு மலருங் கொழுந்துங் குலாஅய்
வடிவுபெற வகுத்த மயிர்வினைச் சிப்பத்து
வத்தவ மகடூஉச் சித்திரத் தியற்றிய
பல்வினைப் பரிசரத் தெல்லை யாகி
மதிப்புறங் கவைஇய வானவிற் போல
நுதற்புறங் கவவி மிகச்சுடர்ந் திலங்கும்
சிறப்புடைப் பட்டஞ் சிறியோர் போல
இறப்புக் காலத்துத் துறப்புத்தொழில் துணிந்த
வன்கண்மை பெரிதெனத் தன்கணு நோக்கான்
பட்டப் பேரணி விட்டெறிந் திரங்கியும்
பனிநாட் புண்ணியத் தணிபெறு திங்கள்

அந்தியுண் முளைத்த வெண்பிறை போலச்
செந்தீச் சிறுநுதன் மூழ்கத் தீந்து
நிலமிசை மருங்கின் வீழ்ந்தனை யோவெனத்
திலக நோக்கிப் பலபா ராட்டியும்
வெண்மதிக் கைப்புடை வியாழம் போல
ஒண்மதி திகழ ஊச லாடிச்
சீர்கெழு திருமுகத் தேரணி யாகிய
வார்நலக் காதினுள் வனப்புவீற் றிருந்த
நன்பொற் குழைநீ நன்னுதன் மாதரை
அன்பிற் கரந்தே அகன்றனை யோவெனப்
போதணி கூந்தற் பொற்பூம் பாவை
காதணி கலத்தொடு கவன்றனன் கலங்கியும்
பொய்கையில் தீர்ந்து புன்கண் கூர
எவ்வ மாந்தர் எரிவாய் உறீஇய
பொருங்கயல் போல வருந்துபு மிளிராக்
களைகண் பெறூஅக் கலக்க நோக்கமொடு
தனையவிழ்ந் தகன்ற தாமரை நெடுங்கண்
அகையற அருளா யாகிக் கலிழ்ந்து
செவ்வழல் புதைத்திடச் சிதைந்தனை யோவென
அவ்விழிக் கிரங்கி வெவ்வழல் உயிர்த்தும்
செஞ்சாந்து வரித்த சின்மேல் லாகத்(து)
அஞ்சாய் மருங்குல் வருந்த அடிபரந்து
வீங்குபு செறிந்த வெங்கண் வனமுலை
பூங்கொடிப் பொற்கலம் பொழிந்துவடுப் பொறிப்ப
மகிழ்ச்சி எய்தி மனம்ஒன் றாகிய
புணர்ச்சிக் காலத்து மதர்த்துமுகஞ் சிவப்ப
நோய்கூர்ந் தழியு நீயே அளியை
வேக வெவ்வழல் வெம்புகை அணிந்த
பொங்கழற் போர்வை போர்த்ததோ எனவும்
இலைப்பெரும் பூணும் இதயவா சனையும்
நலப்பெருங் களிகையு நன்முத் தாரமும்
பன்மணிப் பூணுஞ் சின்மணித் தாலியும்
முத்தணி வடமுஞ் சித்திர வுத்தியும்
நாணுந் தோடரும் ஏனைய பிறவும்

மெய்பெறப் புனைந்து கைவல் கம்மியச்
செய்கையிற் குயிற்றிய சித்திரங் கொளீஇப்
பூணணி யுள்ளு மாண்அணி யுடையவை
ஆகக் கேற்ப அணிகம் வாராய்
வேகத்தானை வேந்தன் மகளே
தனித்தாய் இயங்கலுந் தாங்கினை யோவெனப்
பனித்தார் மார்பன் பலபா ராட்டியும்
ஓங்குவரை மருங்கின் ஒளிபெற நிவந்த
காம்போசிந்தன்ன கவினை யாகிய
நலங்கிளர் தடந்தோள் நவையறச் சேஎந்(து)
அலங்குமலர்த் தாமரை அகவயின் அமர்ந்த
திருமகள் இருக்கை உருவுபடக் குயிலாக்
காமுறப் புனைந்த தாமம் உளப்படப்
பொறிவரி ஒழுக்கம் போலு மற்றிம்
மறியிலைக் கம்மமொடு மகரங் கவ்விக்
கொடியோடு துளங்கி அடிபெற வகுத்த
அருமணிக் கடகமோ டங்குலி யழியச்
செற்றுபு சிறந்த சிறப்புமுள் ளாது
கற்றதேன் அமர்ந்த கலப்பின வாகியும்
பற்றுவிட் டகறல் பண்போ எனவும்
பவழக் காசொடு பன்மணி விரைஇத்
திகழக் கோத்த செம்பொற் பாண்டில்
கைவினைக் கொளுவிற் செய்துநலங் குயின்ற
எண்ணுற் காழ்நிரை கண்ணுமிழ்ந் திலங்க
உருவக் கோலமொ டுட்குவீற் றிருந்த
அரவுப்பை அன்ன ஐதேந் தல்குல்
புகைக்கொடிப் புத்தேள் பொருக்கென ஊட்டி
அழற்கொடி அரத்தம் மறைத்தவோ எனவும்
மணிக்கண் அன்னம் அணித்தகு பெடையைப்
பயிலிதழ்ப் பனிநீர்ப் பக்க நீக்கி
வெயில்கெழு வெள்ளிடை விட்டிசி னாங்கு
மணியரிக் கிண்கிணி சிலம்பொடு மிழற்ற
…………………… ……………………………
நின்னணி காண்கஞ் சிறிது சிறிதுலாஅய்

மராஅங் துணரு மாவின் தழையும்
குராஅம் பாவையுங் கொங்கவிழ் முல்லையும்
பிண்டித் தளிரும் பிறவும் இன்னவை
கொண்டியான் வந்தேன் கொள்குவை யாயின்
வண்டிமிர் கோதாய் வாரா யெனவும்
அணிவரைச் சாரல் அருவி யாடியும்
பணிமலர் கொய்தும் பாவை புனைந்தும்
திருவிழை மகளிரோ டொருவழி வருவோய்
மருவின் மாதவன் மாசின் மடமகள்
விரிசிகை வேண்ட வேறுபடு வனப்பின்
தாமந் தொடுத்தியான் கொடுத்தது தவறெனக்
காம வேகங் கடுத்த கலப்பிடை
முகத்தே வந்தோர் முசுக்கலை தோன்ற
அகத்தே நடுங்கி அழற்பட வெய்துயிர்த்(து)
அஞ்சி அடைந்த அஞ்சில் தேமொழிப்
பஞ்சி மெல்லடிப் பாவாய் பரந்த
கடுந்தீக் கஞ்சாது கரத்தியோ எனவும்
அங்கண் மாநிலத் தகன்றுயிர் வாழ்வோர்
வன்க ணுளர் என்றுபண் டுரைப்போய்
நின்கண் அம்மொழி நிற்ப என்கண்
புன்கண் நோக்காது போதியோ எனவும்
இளைப்புறு ஞமலி நலத்தகு நாவிற்
செம்மையு மென்மையுஞ் சிறந்துவனப் பெய்தி
அம்மை முன்னும் அணிபெறப் பிணங்கி
இலைபடக் குயிற்றிய எழிலொளிக் கம்மத்துத்
தலைவிரற் சுற்றுந் தாதணி வளையமும்
வட்ட ஆழியுங் கட்டுவட இணையும்
மகர வாயொடு நகைபெறப் புனைந்த
விரலணி கவ்வி நிரலொளி எய்திப்
பூவடர் மிதிப்பினும் புகைந்தழ லுறாஉம்
சேவடிக் கேற்ற செம்பொற் கிண்கிணி
பாடகக் குரலொடு பரடுபிறழ்ந் தரற்றக்
கழனிக் கண்பின் காயெனத் திரண்ட
அழகணி சிறுதுடை அசைய ஒதுங்கி

ஆயத் திறுதி அணிநடை மடப்பிடி
கானத் தசைந்து தானத்தின் தளர்ந்தபின்
கரிப்புற் பதுக்கையும் கடுநுனைப் பரலும்
எரிப்புள் ளுறீஇ எஃகின் இயலவும்
எற்கா முறலின் ஏதம் அஞ்சிக்
கற்கால் பயின்ற காலவி சில்லதர்
நடுக்கம் எய்தி நடப்பது நயந்தோய்
இடுக்கண் யான்பட என்னையு நினையாது
கடுப்பழல் அகவயிற் கரத்தியோ எனவும்
படிகடந் தடர்ந்த பல்களிற் றியானை
இடியுறழ் முரசின் இறைமகன் பணிப்ப
நூலமை வீணைக் கோலமை கொளீஇக்
கரணம் பயிற்றினுங் காந்தண் முகிழ்விரல்
அரணங் காணு அஞ்சின போலப்
பயத்தின் நீங்காச் சிவப்புள் ளுறுவின
அடைதற் காகா ஆரழற் செங்கோடி
தொடுதற் காற்றத் துணிந்தவோ எனவும்
வடிக்கண் மாதர் முடிக்கல முதலா
அடிக்கலந் தழீஇ முடித்தார் மார்பன்
அரற்றியும் அயர்ந்தும் உரற்றியும் உயிர்த்தும்
வீழ்ந்தும் எழுந்துந் தாழ்ந்துந் தளர்ந்தும்
செருவடு செங்கண் தெண்பனி சிதறி
உருவுடை அகலத் தூழ்ழ் உறைத்தரக்
கோல இரும்பிடி குழிப்பட் டாழ
நீல வேழ நினைந்துழன் றுங்கு
மாலை மார்பன் மாதரைக் காணு(து)
இன்னவை பிறவும் பன்முறை அரற்றச்
செறுநர் முன்னர்ச் சீர்மை யன்றென
உறுநர் சூழ்ந்த ஒருபால் ஒடுங்கித்
தேரும் புரவியும் வார்கவுள் யானையும்
மறப்படை இளையரொடு திறப்பட வகுத்துப்
போரணி கலமும் பொருளு நல்கி
ஆருணி அரசன் அடுதிறல் ஆண்டகை
அற்றம் அறியாச் செற்றச் செய்கையோடு

மேல்வர வுண்டெனின் மீளி வாட்டிச்
சென்று நெருங்காது பின்றியும் விடாது
௨௨௫ குன்றகம் அடுத்துக் கூழவண் ஒடுக்கி
யாப்புற நிற்கெனக் காப்புறு பெரும்படை
திசைசெலப் போக்கி அசைவில் ஆண்மை
மன்பெருங் குமரனை மரபுளிக் காட்டித்
துன்பந் தீரிய தொடங்கினர் துணிந்தென்.

---

## ௧௪. தேவிக்கு விலாவித்தது

அஃதாவது, உதயணன் வாசவதத்தை தீயினுள் மூழ்கி இறந்தாளாகக் கருதி வருந்தி அரற்றியதனைக் கூறும் பகுதி என்றவாறு.

### உரை

[உதயணன் ஆற்றமையால் தீயுள் மூழ்கி உயிர்விடச் செல்லல்.]

௧ - ௬: ஏற்றெழுந்து......................குறுக.

(பொ - ரை.) இவ் வண்ணம் உதயண குமரன் நினைவு மீண்டு கண் மலர்ந்து எழுந்த பின்னர் இனிய தோழர்கள் சூழ்ந்து கொண்டு அவனது துன்பம் துடைத்தற் பொருட்டு அறிவாற்றல் நிரம்பிய மெய்ந்நூல்களினின்றும் துன்பந் தவிர்தற்குக் காரணமான பழையனவும் புதியனவும் ஆகிய நீதிகளை எடுத்துக் கூறு நிற்பவும், அவ்வறி வெல்லையில் நில்லானாய் "என் அந்திங் கிளவியையுடைய அம்பிணை போல்வாள் மூழ்கி யிறந்த இச் செந்தியின்கண் யானும் மூழ்கி உயிர் நீப்பென்" என்று கூறி முரிந்த தூணையும் எரிந்த கூரையினையும் அறுபட்ட கட்டினையும் வீழ்ந்த கைமரங்களையும் உடைத்தாய்க் கரிந்து போன அம்மாடத்தை அணுகாநிற்ப என்க.

(வி - ம்.) ௧. உணர்ச்சி ஏற்று எழுந்த பின்னர் என்க.

௨. ஆற்றல் நிறைந்த அறிவுரைகளையுடைய மெய்ந்நூல்களினின்றும் என்க.

௩ - ௪. பழைய காலத்தனவும் புதிய காலத்தனவும் ஆகிய காரணங்களை எடுத்துக்காட்டிக் கூறவும் என்க.

உழைவயின் - பக்கத்தினின்றும். ஓர்வரை - ஓர் அறி வெல்லை.

௫ - ௬. அழகிய இனிய மொழிகளையுடையவளும், அழகிய பெண்மான் போன்றவளுமாகிய என் தேவி மூழ்கியிறந்த தீயின்கண் என்க.

௭. கந்து - தூண். வேயுள் - கூரை.

௮. அரிந்த யாப்பு - அறுபட்ட கட்டு. கடுங்காழ் - திண்ணிய கைமரங்கள்.

௯. காவலன் : எழுவாய். உதயணகுமரன்.

[௰-௨௭. தோழர் உதயணனைத் தடுத்துப் பாதுகாத்தல்.]

௰ - ௰௮ : ஆரளை ....................ஏதமுடைத்தே.

(பொ - ரை.) அது கண்ட தோழர் உதயணனைத் தடுத்து நின்று "அண்ணலே! வளையின்கண் அடங்கிய அரிய சினத்தை யுடைய நாகத்தினது பெரிய சினத்தைக் கண்டுகளிக்க எண்ணிய அறிவிலிகள், அவ்வளையினது வாயிலின்கண் நெருப் பினைக் கொளுவிப் பின்னர் அந் நாகம் சினங்கொண்டு எழா நின்ற பொழுது அதன் முன்னரே நின்று அதனாற் கடியுண்டு உயிர் நீத்ததுபோல் நினது வெகுளியைப் பொருட்படுத்தாது நின்னைச் சினப்பித்துக் கெடத்துணிந்த பேதையராகிய நின் பகை மன்னர் சினத்திற்கு உறுதியாக நீ இறந்துபடத் துணிதல் குற்றமுடைய செயலாகும்" என்று கூறித்தடுத்து என்க.

(வி - ம்.) ௰. ஆர் அளை - பொருந்தாநின்ற வளை. ஆரளை : வினைத்தொகை. நாகம் - நல்லபாம்பு.

௧௧. பேரழல் - பெரிய சினம். காணிய - கண்டு களித்தற் பொருட்டு. பேதை மாந்தர் - அறிவில்லாத மனிதர்.

௧௨. வாயின் மருங்கில் - அவ்வளையின் வாயிலில். தியெரி: வினைத் தொகை; தீய்க்கும் நெருப்பென்க. அது - அந்நாகம்.

௧௩. செயிர் - சினம். செம்முகம் - நேர்முகமாக.

௧௪. உறுதி - தம்முயிர்க்கு ஆக்கத்தை.

௧௫. பகைவரை அடக்கிய தலைவனே! அண்ணல் : விளி.

௧௬. கடிய வெகுளியைப் பொருட்படுத்தாத நின் பகைவராகிய பேதை மன்னர் என்க.

இதன்கண், நாகம், உதயண குமரனுக்கும். வளை, அரண்மனைக் கும் பேதை மாந்தர் கன்றிய மன்னர்க்கும் உவமைகள்.

௧௭. கறுவு வாயிற்கு - வெகுள்தற் குரிய வழிக்கு. உறுதியாக - ஆக்கமாக.

௧௮. இகப்ப - உயிர்நீப்ப. ஏதம் - குற்றம்.

௧௯ - ௨௭ ஆகியது ............................விலக்க.

(பொ - ரை.) மேலும் யூகி என்னும் அமைச்சனையன்றி உதயண குமரன் தனக்கென ஊக்கமுடையானல்லன் என்று

பகைவர் கூறுகின்ற பேதைமை கலந்த இச் சொல் நின் தோழராகிய எம்முடைய நெஞ்சத்தை என்றும் சுடுதல் ஒழியாது; ஆதலின் அங்ஙனமாகிய அந்நிலைமையினையும் நீ கருதியுணர்ந்து நெஞ்சம் கவலாமல் உயர்ந்த நின் பெருங்குலச் சிறப்பினைப் பேணிக்கோடலே நின் கடமையாக மேற்கொள்ளுதலே சிறந்த செயலாகும் என்று கூறித் தடுத்து விலக்காநிற்ப என்க.

(வி - ம்.) கக-உ0. ஒரு செயலாலே விளையும் பயனை முன்னரே அறிதற்குக் காரணமான அரிய பொருளாராய்ச்சியிற் சிறந்தவனாகிய யூகியென்னும் அமைச்சனுக்குப் பின்னர் என்க.

உ0. அல்லதை - அன்றி.

உக - உ. தனக்கென ஓர் ஊக்கமுடையானல்லன் என்க. எனப் புறத்தோர் உரைக்கும் வெள்ளைமை கலந்த புன்சொல் என மாறுக.

உஉ - உ௩. புன்சொல்லாகிய மொழி என்க. புறத்தோர் அகத்தோர் என்பன பகைவர் நண்பர் என்னும் பொருள்பட நின்றன. ஆனாது - ஒழியாது.

உச. அங்ஙனமாகிய அந்நிலைமையினை என்க.

உரு. குலத்தின் சிறப்பினை மேற்கோடல் நினது கடனாகக் கொண்டென்க.

உசு. பொருள் - உறுதிப் பொருள்.

உஎ. மாண்ட தோழர் - மாட்சிமையுடைய நண்பர்.

[உதயணன் வாசவதத்தையின் உடலைக்காண விரும்புதல்.]

உஅ - சஉ: காலம்......................விரைந்தென.

(பொ - ரை.) காலம் தன்னைப் பெரிதும் கலக்கிய விடத்தும் அலையெறியா நின்ற கடல்நீர் தன் எல்லையைக் கடவாதே அடங்குதல் போன்று தன்னைத் துயரம் கலக்கிய விடத்தும் நண்பர் கூற்றினைக் கடத்தல் இல்லாத அக் குருசில் அச் செயல் தவிர்ந்து நீலநிறமுடைய தன் கூந்தலின்கண் தீ பற்றாநின்ற பொழுது காட்டுத் தீ வளைத்துக் கோடலானே உய்ந்துபோமிடங் காணப் பெறாமல் கூட்டின்கண் அடங்கி மாண்ட மயில் போன்று அஞ்சி நடுங்கி என்னை நினைந்து விம்மித் தன் உயிரை விட்டவளாகிய அம்மெல்லியல் நல்லாளுடைய உடம்புச் சட்டகமேனும் உளதாயின் யாம் காண்பேம்; விரைந்து இத் தீயினை அவித்து அதனைக் கண்டு எமக்குக் காட்டுங்கோள் என்று கூறா நிற்ப என்க.

(வி - ம்.) உஅ. காலம்: ஈண்டு ஆகுபெயரான் சூறைக் காற்றைக் குறித்து நின்றது. உராய் - உலாவி. நவைக்குற்று - துன்பத்திற்கு ஆளாகி.

௩0. இயங்கா நின்ற அலைகளையுடைய ஆரவாரம் பொருந்திய முந்நீர் என்க. முந்நீர் - கடல்; ஆற்றுநீர் மழைநீர் ஊற்றுநீர் என மூன்றுவகை நீரையுமுடையது என்பது பொருள். உலகினை ஆக்கலும் அளித்தலும் அழித்தலுமாகிய மூன்று நீர்மையையும் உடையதாகலின் முந்நீராயிற்று எனினுமாம்.

௩௧. ஆழி - கடல். கடல்நீர் அக் கடலை இறத்தல் செல்லா தானாற் போன்று என்க.

காலம், (காற்று) துன்பத்திற்கும் கடல்நீர் உதயணனுக்கும் கடலிடம் தோழர்க்கும் உவமைகள்.

௩௨. தோழர் கூற்றைக் கடவாத கட்டிய வீரக் கழலையுடைய உதயண குமரன் என்க.

௩௩. சூழாநின்ற வளையலணிந்த முன்கையினையும் ஒளிருகின்ற குழையினையும் உடைய வாசவதத்தையை என்க.

௩௪. மழைக்கால் போன்றதும் நீலமணி போன்ற நிறமுடையது மாகிய கரிய கூந்தலை என்க.

௩௫. அழலும் புகையும் சூழா நிற்ப என்க. அஞ்சுவனள் : முற்றெச்சம்.

௩௬. மணிகளையுடைய பக்கங்களையும், நெடிய மூங்கிலையும் உடைய பெரிய மலைச்சாரலின்கண் என்க.

௩௭. புனத்தீ - காட்டுத்தீ. புதைப்ப - வளைத்துக் கொள்ள.

௩௮. அளை - வளை; ஈண்டுக் கூட்டினைக் குறித்து நின்றது. மஞ்ஞை - மயில்.

௩௯. அவட்கு இனிய உயிர் போன்ற என்னை நினைத்து என்க.

௪0. உயிர் வைத்த - உயிர் விட்ட. மின்னலை ஒத்த சாயலை யுடையாளது என்க.

௪௧. உடப்பு சட்டகம் - உடம்பின் உருவம். உளதாதலும் ஐயமே என்பான் உண்டெனில் என்றான். காண்கம் - காண்பேம்.

௪௧. கடுப்பழல் - விரைந்துபற்றும் நெருப்பு.

[உருமண்ணுவா அநற்றுடன்படுதல்.]

௪௩ - ௫௧ : கரிப்பிணம்............................விரும்பி.

(பொ - ரை.) அது கேட்ட தோழர் அரசர் கரிந்த பிணத்தைக் காண்டல் வழக்கன்று என்னும் வழக்கினையும் இன்னோரன்ன பிறமொழிகளையும் எடுத்துக் காட்டவும் தவிரானாய் நெஞ்சழியா நிற்ப, உருமண்ணுவா என்னும் பெரிய புகழையுடைய அமைச்சன் இவ்வுதயண குமரன் நம் நண்பர் இந் நிகழ்ச்சி நிகழ்தற்கு முன்பே இவ்விடத்திருந்தனராதலின் இவர் நங் கோப்பெருந்தேவி உயிரிழக்கும்படி விட்டிரார்; ஆகலின் அவள் உயிரோ

டிருத்தல் ஒருதலை என்று தனக்குள் கருதுவானாயின் அக் கருத்து நம் சூழ்ச்சியாற் செய்த செயலுக்கோர் இடையூறாகும் என்று எண்ணி அங்ஙனமாகாமல் இவனுக்கு மற்றோர் சூழ்ச்சி யாலே வாசவதத்தையின் உடலைக் காட்டிவைத்தலே நன் றென்று துணிந்து உதயணன் விரும்பியதனையே தானும் விரும்பி (விரும்புவான்போல்) விரைந்து அவ்வுதயணனுடன் நீண்ட அவ்வரண்மனைப் பகுதியைக் கடந்து ஞாயிலின் வழியா கச் சென்று அவ்வரண்மனை அகத்தேயுள்ள அழகு நன்மை நிரம்பிய பெரிய பள்ளியறையினது உள்ளே புகுந்து அங்குள்ள சுருங்கை வழியினை மட்டும் அவ்வுதயணன் காணாதபடி செய்து அவ்வறையினுள்ளே அகப்பட்டுத் துயரத்தோடு இறந்துபட்ட கள்வருடைய இரண்டு கரிப்பிணங்களையும் காட்டி, "இவை செவி லித்தாயும் வாசவதத்தையுமாகிய அவ்விருவருடைய உடலங் கள் ஆகும், ஆகவே அவ்விருவரும் தீயினுள் பட்டு இறந்து போன நிகழ்ச்சி பொய்யன்றுகாண்" என்று கூறி உதயணனை நம்பச்செய்து என்க.

(வி - ம்.) ௪௨ - ௪௩. கரிப்பிணம் - தீயில் வெந்து கரிதலை யுடைய பிணம். காவலர்-அரசர். அரசர் கரிப்பிணத்தைக் காண்டல் கூடாது என்பதோர் வழக்கினையும் இன்னோரன்ன பிறவற்றையும் எடுத்துக்காட்ட என்க.

௪௫. இந்நிகழ்ச்சிக்கு முன்னரே இங்கிருந்தாராதலின் என்க. முதற்பெருந்தேவி : வாசவதத்தை.

௪௬. உயிர் இகப்ப - உயிர் நீங்க. இவர் - இத்தோழர்.

௪௭. மதித்தனனாயின் - கருதுவானாயின்.

௪௮. எண்ணிய சூழ்ச்சி - கருதிய செயல். அஃதாவது வாசவ தத்தை இறந்தாளாகக் காட்டி உதயணனைத் தன் கடமையில் ஈடுபடச் செய்தல். இடையூறு - தடை.

௪௯. தவல்-குற்றம். பெரும்பொருள் - மெய்ம்மை. நிலைமையின் எண்ணி - அச் சூழ்நிலையோடு சார்த்தி ஆராய்ந்து என்க.

௫0. கெடுதல் இல்லாத பெரிய புகழினையுடைய உருமண்ணுவா என்க.

௫௧. ஆய்புகழ்-பலரும் ஆராய்தற்குரிய பெரியபுகழ். அண்ணல்: உதயணன். மேயது-விரும்பியது. அஃதாவது வாசவதத்தையின் உடம் பைக் காணல்வேண்டும் என்று விரும்பியது. விரும்பி - தானும் விரும்பு வான் போன்று என்க.

௫௨. நீள்புடை - நீண்டபக்கத்தை. இகந்துழி எதிர்ப்படும் ஞாயில்வழியாகச் சென்று என்க. ஞாயில் : ஒரு மதிலுறுப்பு.

௫௩. உள்ளிருந்து வெளியே உய்ந்து போதற்குரிய சுருங்கை வழியை என்க. அதனை மறையாவிடத்துத் தஞ்சூழ்ச்சி வெளிப்படும் என்றஞ்சி அதனை அவன் காணாதபடி மறைத்து என்பது கருத்து.

௩௪ - ௩௭. தீயினுள் அகப்பட்டமையான் மனம் விம்முதற்குக் காரணமான துயரத்தோடே பூசலிட்டு உயிர்விட்ட கும்மனத்தாளருடைய குறைப்பிணங்களை என்க. விளிந்து - பூசலிட்டு; இறந்து எனினுமாம்.

கும்மனத்தாளர் - வஞ்ச நெஞ்சுடைய கள்வர்; இவர் அரசன் முடிக்கலனின் பொன்னைத் திருடிச் சிறைப்பட்டோர். இங்ஙனம் காட்டற்பொருட்டு இப் பள்ளியறையுள் சேர்க்கப்பட்டோர்; இதனைப் பதினேழாங் காதையில்,

"பொய்ந்நில மமைத்த பொறியமை மாடத்
திரும்பும் வெள்ளியும் இசைத்துருக் குறீஇ
அருங்கலம் ஆக்கி யாப்புப் பிணியுறுக்கும்
கொலைச்சிறை யிருவரைப் பொருக்கெனப் புகீஇ"

எனக் கூறிப் போந்தமையானும் உணர்க.

௩௮. தாய் - சாங்கியத்தாய். தையல் : வாசவதத்தை. விளிந்தமை - இறந்துபட்டமை.

௩௯. மாயம் - பொய். மன்னன் - உதயணன்.

௬௦ - ௬௬ : மணியும்............முன்னணை விடுதலின்.

(பொ - ரை.) பின்னர்த் தம்பாலமைந்த மணிகளையும் முத்துக்களையும் இழந்து உதிர்ந்த வடங்களின் பக்கலிலே அழுக்காகிய இருவினைகளையும் கழித்துவிட்ட மாதவர்போலத் தீயினூடே கிடந்து விளங்கித் திறலோடே விசாநின்ற ஒளி அழகுறக் கிடந்த செம்பொன்னாலியன்ற அணிகலன்களை உதயணன் பக்கலிலே கொணர்ந்து இட்டமையானே, என்க.

(வி - ம்.) ௬௦-௬௩. இதனுள் துன்பஞ் சுடச்சுட நோற்றலாலே தம் இருவினையாகிய குற்றத்தைக் கழித்த துறவியர், தீயினுட் கிடந்து அது சுடுதலானே தம்பாற் பதித்த முத்து முதலியன கழியப்பெற்று மாசுநீங்கி மிக்கொளிரும் பொன்னணிகலன்கட்கு உவமை.

௬௦. மணி என்றது, முத்தொழிந்த மணிகளை. அணி - அழகு.

௬௧. ஆரமாகிய கம்மம். ஆரம் - வடம். கம்மம் : ஆகுபெயரான் அணிகலனைக் குறித்து நின்றது.

௬௨. கொள்கை-அவாவறுத்தற் கருத்து. அக் கருத்து அவரைத் துன்புறுத்துதலின் தியை உவமை எடுத்துக் கூறினர்.

௬௩. மாசுண்டாக்கும் இருவினைகளையும் என்க. மாசு ஆகுபெயராற் பிறப்பினைக் குறித்து நின்றது. "இருள்சேர் இருவினை" என்றார் வள்ளுவனாரும்." இதனோடு,

"சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு" (குறள் - ௨௬௭)

எனவரும் திருக்குறளையும் நினைக.

௩ரு. சேடு - அழகு. செம்பொன்னாற் செய்த அணிகலன் என்க.

௩௬. மார்பன் : உதயணன். அண இடுதலின் - அணுக இடுதலானே என்க.

[உயணகுமரன் வாசவதத்தையின் அணிகலன்களைக் கண்டு ஆற்றாது அரற்றுதல்.]

(பொன்னரிமாலை)

௩௭ - எ௬ : ஒண்செந்தாமரை......................என்றும்

(பொ - ரை.) அவற்றைக் கண்ணுற்ற உதயணகுமரன் அவற்றுள் பொன்னரிமாலை என்னும் கூந்தலணிகலனை நோக்கி "நல்ல நெற்றியினையுடைய வாசவதத்தையினது பின்னுதலுற்ற கரிய கூந்தல் அணியாகிய பொன்னரிமாலாய்! செந்தாமரைமலரின் ஒள்ளிய இதழ்போன்றனவும் யாழ் வருடுதல் பொருந்தியனவுமாகிய அவளுடைய விரல்களாலே பலகாலும் தொகுக்கப்பட்டு நறுமணப்பொடியிட்டு முழுகித் தூய்மை செய்யப்பட்ட நீலநிறமிக்கனவும் பன்முறை விரித்தும் தொகுத்தும் வகுத்தும் வாரியும் கோதியும் திண்டியும் பேணப்பட்டனவும் கூட்டாக இயற்றிய நறுமணப்புகையை நிரம்ப ஊட்டப்பட்டனவும் மாராட்டம் என்னும் ஒப்பனையை உடையனவுமாகிய அவளுடைய கூந்தலை வெவ்விய புகை சூழ மேலும் தீயும் பரவாநிற்ப அவள் இறந்தமை நோக்கி அவளைப்பிரிந்தனை ஆதலின் நீ நற்பண்பில்லாய் காண் என்று அரற்றியும் என்க.

(வி - ம்.) ௩௭-௩௮. ஒள்ளிய செந்தாமரையினது ஒள்ளிய இதழை ஒத்த விரல், யாழிடத்தே பொருந்திய விரல் எனத் தனித் தனிக் கூட்டுக. பண் : யாழ் ; ஆகுபெயர். பன்முறை - பலகாலும். தொகுத்து - சேர்த்து.

௬௬. நானம் - மணப்பொடி. மண்ணி - குளித்துக் கழுவி என்க. நீலநிறங்கொண்ட அவற்றை என்க. ஐம்பால் என்னும் வழக்கு நோக்கிக் கூந்தற்குப் பன்மை கூறினர்.

எக - எ௨. உளர்ந்தும் - கோதியும். ஊறியும் - திண்டியும். அளந்து கூட்டமைத்த அம்புகை - மணப்பொருள்களை அளந்து கூட்டி இயற்றிய அழகிய மணப்புகை என்க. கழுமிய - நிரம்பிய. மாராட்ட அணி என மாறுக. மாராட்ட நாட்டினர் இயற்றிய ஓர் அணிகலன் என்க. மாராட்டம் - மகாராட்டிரதேயம்.

எ௪. விளிந்தது - இறந்தமை கண்டு.

எரு. மாதர் : வாசவதத்தை. பின்னுதலுற்ற கரிய கூந்தல் என்க.

எ௬. பொன்னரி மாலாய் : விளி. பொருள் - நன்மை.

நீண்டநாள் நண்புடையராயிருந்து உற்றுழித் தீர்தல் தீயோர் செயலாம் என்பதுபடப் பொருளிலை என்றான்.

[பட்டப் பேரணி]

௭௭ - ௮௬ : கொடியும்.................. ........இரங்கியும்.

(பொ - ரை.) பின்னர் நெற்றிப்பட்டம் என்னும் அணிகலனைத் தன் கையிலெடுத்துக் கொடியும் மலரும் கொழுந்தும் உடையையாய் வளைந்து அழகுற வத்தவ நாட்டுப் பணிமகளிராலே விசித்திரமாக இயற்றப்பட்டுப் பலவேறு தொழிற் கூறுபாட்டையும் உடைய ஒப்பனைப் பொருட்கெல்லாம் உயர்ந்த எல்லையாகிய திங்களைக் கவ்விக்கிடந்த வானவிற்போல வாசவதத்தையின் நெற்றியைக் கவ்விக் கிடந்து மிகவும் விளங்கித் திகழாநின்ற சிறப்புடைய பட்டமே! நீ சிறியோர் போன்று இறந்த இன்னாக் காலத்தே துறந்துபோந் தொழிலைத் துணிந்த நின் தறுகண்மை மிகவும் பெரிதுகாண் என்று கூறி அதனைத் தன் கண்ணால் நோக்கவும் பொறாளாய் ஒருபுறம் வீசியெறிந்து ஆற்றியும் என்க.

(வி - ம்.) ௭௭-௭௮. கொடி மலர் கொழுந்து முதலியவற்றின் உருவம் பதிக்கப்பட்டு வளைந்து அழகுறும்படி மகடூஉ சித்திரத் தொழிலோடே இயற்றப்பட்ட பட்டமே ஒப்பனைத் தொழிற்கு எல்லையாகிய பட்டமே சிறப்புடைப் பட்டமே என்று தனித்தனிக் கூட்டி இயைக்க.

௭௭. குலாய் - வளைந்து.

௭௮. வடிவு - அழகு. மயிர்வினைச் சிப்பம் - கூந்தலை அணிசெய்யும் சிற்பத்தொழில்

௭௯. வத்தவ மகடூஉ - வத்தவ நாட்டுப் பணிமகள். அந்நாட்டுப் பணிமகளிர் ஒப்பனைத் தொழிலில் சிறப்புடையோர் என்பதுபற்றி அங்ஙனம் கூறினார்.

"வத்தவநாட்டு வண்ணக் கம்மரும்" (௫௮ : ௪௪) என்றார் உஞ்சைக் காண்டத்தும்

௮௦. பரிசரம் - சேடியர் செய்யும் ஒப்பனைத்தொழில்.

௮௧. திங்களை வளைத்துக்கிடந்த வானவில்போல என்க.

௮௨. கவவி - அகத்திடாகக் கொண்டு; பொதிந்து என்றவாறு. சுடர்ந்து - ஒளிர்ந்து. இலங்கும் - விளங்காநின்ற.

௮௩. பட்டம் : விளி.

உறின் நட்டு அறின் ஒரூஉம் சிறியோர்போல என்பது கருத்து.

௮௪. துறப்புத்தொழில் - கைவிட்டுப்போதல்.

௮௫. தன் கணும் - தன் கண்ணானும்.

௮௬. பட்டமாகிய அப் பேரணிகலனை என்க.

[திலகம்.]

அஎ - சுக : பனிநாள்..................பாராட்டியும்.

(பொ - ரை.) பின்னர் வாசவதத்தையின் திலகத்தை நோக்கித் "திலகமே! நீ பனி நாளையும் புண்ணியப் பண்பினையும் அழகினையும் உடைய மார்கழித் திங்களில் மாலைப்பொழுதிலே செக்கர் வானத்தே தோன்றிய வெண்பிறை அச் செக்கர் வானத்துள்ளே மூழ்கி மறைந்தாற் போன்று வாசவதத்தையின் சிறிய நெற்றி சிவந்த நெருப்பினுள் மூழ்கித் தீய்ந்தொழியா நிற்பப் புகலிடம் பிறிதின்றி நிலத்தின் மேல் வீழ்ந்தனையோ" என்று இன்னோரன்ன பலவும் பாராட்டிக் கூறியும் என்க.

(வி - ம்.) அஎ. பனிநாட் திங்கள், புண்ணியத் திங்கள் அணி பெறுதிங்கள் எனத் தனித்தனிக் கூட்டுக.

திங்கள்-ஈண்டு மார்கழித் திங்கள். அக் காலத்தே செக்கர் வானம் தீப்பிழம்பு போன்று சிறந்து தோன்றுதல் கண்டுணர்க. அங்ஙன மாகலின் பனிநாட்டிங்களை விதந்தோதினர்.

திங்களுள் வைத்து மார்கழித் திங்கள் சிறந்தது என்பது பல சமயத்தார்க்கும் ஒப்பமுடிந்ததோர் உண்மை. ஆகலின் புண்ணியத் திங்கள் என்றார். உலகினுள் செந்நெல் முதலியன எல்லாம் சிறந்து பயனீன்று அழகாகத் தோன்றுதலுண்மையின் அணிபெறு திங்கள் என்றார்.

அஅ. அந்தி என்றது ஆகுபெயரான் செக்கர் வானத்தைக் குறித்து நின்றது. அது தீயிற்குவமை. சிறுநுதற்கு வெண்பிறை உவமை.

அகூ. தீந்து - தீய்ந்து.

கூ0. நிலமிசை மருங்கின் - நிலத்தின்மேல்.

கூக. திலகம்-நெற்றியிற் பொட்டாக அணிவதொரு பொற்பட்டமாகிய அணிகலன். இதனை கலியின்கண் வரும், "திலக அவிரோடை" (கூஎ : கக) என்னும் அடியானும் உணர்க.

[காதணி.]

கூஉ - கூகூ : வெண்மதி..................கலங்கியும்.

(பொ - ரை.) பின்னர் மலரணிந்த கூந்தலையுடைய திருமகளை ஒத்த வாசவதத்தையின் அழகிய பொற் குழையினை நோக்கித், "திங்கள் மண்டிலத்தின் பக்கத்தே இருந்த வியாழக் கோள் போன்று, வாசவதத்தையின் முகத்தின் பக்கத்தே அத் திருமுகத்திற்கு மேலும் ஓரழகாக அமைந்த நெடிய செவியின்கண் அம்முகமதி மேலும் திகழும்படி அழகோடே ஊசலாடி விற்றிருந்த பொற்குழையே! நீ நினக்கு உறையுளாயிருந்த

அவ் வாசவதத்தையை அன்பின்றிப் பிரிந்தனையோ!" என்று அரற்றித் துன்புற்றுக் கலங்கியும் என்க.

(வி - ம்.) ௯௨. வெண்மதி - வெள்ளிய திங்கள் மண்டிலம். கைப்புடை - பக்கத்தில். வியாழம் : ஒருகோள்.

௯௩ - ௯௫. சீர்கெழு திருமுகத்து ஏர் அணியாகிய வார் நலக் காதினுள் (அம்முக) ஒண்மதி திகழ ஊசலாடி வனப்பு வீற்றிருந்த நன்பொற் குழையே! என மாறிக் கூட்டுக.

௯௩. ஒண்மதி - ஒள்ளிய முகமாகிய மதி என்க.

௯௪. சீர்கெழு திருமுகத்து ஏர் அணியாகிய காது, வார்நலக்காது எனத் தனித்தனிக் கூட்டுக. சீர் திரு என்பன ஒரு பொருட் பன்மொழி; எனவே பேரழகு பொருந்திய முகத்தினது அழகிற்கு மேலும் அழகாக அமைந்த நீண்ட நன்குகிய காதினுள் வனப்போடு வீற்றிருந்த குழையே! என்க.

௯௫. வார் - நீண்ட. வனப்பு - அழகு. வீற்றிருத்தலாவது நெடிதுநாள் அகலாது உறைதல்.

௯௬. குழை : விளி.

௯௭. அன்பிற் கரந்து - அன்பு செலுத்துதலின்கண் உலோவி.

௯௮. பொற் பூம்பாவை - திருமகள்; ஈண்டு வாசவதத்தை.

௯௯. கவன்றனன் : முற்றெச்சம்; துன்புற்றென்க.

[கண்களை நினைந்து இரங்குதல்.]

௧௦௦ - ௧௦௭ : பொய்கையில்.............புன்கண்கூர.

(பொ - ரை.) தாமரை மலர் போன்ற அழகிய நீண்ட விழிகளே! நீயிர் நீர் நிலையினின்றும் எடுத்துக்கொடியோரானே தீயிலிடப்பட்ட கயல்மீன் போன்று வருந்திப் புகலிடமாவாரை நாடி அவரைக் காணப் பெருமையானே அலமந்த பார்வையோடே எம்மை அருளாதிராகி அழுது, சிவந்த நெருப்பு மறைத்தலானே அழிந்தனிரோ! என்று அவற்றின் அழிவிற்கு இரங்கி அரற்றி வெய்தாக மூச்செறிந்தும் என்க.

(வி - ம்.) ௧௦௦ - ௧. எவ்வமாந்தரான் பொய்கையிற்றீர்ந்து அவரானே எரிவாய் இடப்பட்ட என விரிக்க.

எவ்வத்தைச் செய்யும் மாந்தர் என்க. பிறவுயிர்க்குத் துன்பஞ் செய்யும் தீவினைமாக்கள் என்பது கருத்து. புன்கண்கூர - துன்பமிகும் படி. எரிவாய் - தீயின்கண். உறீஇய-இடப்பட்ட; (உறுவித்த)

௧௦௨. ஒன்றனோடு ஒன்று போர் செய்யும் இரண்டு கயன் மீன்கள் போல என்க. இஃது இரண்டு விழிகட்கும் உவமை. வருந்துபு - வருந்தி. மிளிரா - மிளிர்ந்து; பிறழ்ந்து.

௧0௫. களைகண் - புகலிடமாவார். பெருக்கலக்க நோக்கம்-பொருமையானே உண்டான அலமரலையுடைய பார்வை என்க.

௧0௬. கட்டவிழ்ந்து விரிந்த தாமரை மலர் போன்ற அழகுடைய நெடிய கண்களே! கண் : விளி.

௧0௫. அகையற - துன்பந்திரும்படி - "அகையேல் அமர்தோழி" (௧௫௨௪) எனவரும் சீவகசிந்தாமணியானும் அஃதப் பொருட்டாதல் உணர்க. என் துன்பந்திரும்படி அருளாயாகி என்றவாறு. கலிழ்ந்து - அழுது.

௧0௭. சிதைந்தனையோ - அழிந்தனையோ!

[முலைகட்கிரங்கல்.]

௧0அ - ௧௧௬ : செஞ்சாந்து....................எனவும்

(பொ - ரை.) அழகிய முலையே! நீ மகிழ்ச்சியுற்று மனம் ஒன்றுகிய புணர்ச்சிக் காலத்தும் பொற் கலம் நின்பாலழுந்தி வடுவுண்டாக்குதலானும் களித்து முகஞ் சிவந்து காமநோய் மிக்கு அழியா நிற்றலானும் இரங்கத் தக்கனையாயிருந்தனை! அத் தகைய நின்னை அழற் போர்வை போர்த்தது; ஆகலின் இப் பொழுதும் இரங்கத்தக்கனையாகவே ஆயினை என்று அரற்றியும் என்க.

(வி - ம்.) ௧0அ-௧0. பிறரை வருத்துதற்குச் சிறிதும் அஞ்சாயாய் இடை வருந்தும்படி செவ்விய சந்தனத்தானே தொய்யில் எழுதப் பட்ட சிலவாகிய உரோமங்களையுடைய மெல்லிய மார்பின்கண் அடிப் பகுதி பரந்து பருத்து நெருங்கிய அழகிய முலையே! என்க. ௧0அ. வரித்த - எழுதப்பட்ட. சில்மெல்லாகம் - சிலவாகிய உரோமங்களை யுடைய மெல்லிய மார்பு என்க.

௧௧0. விங்குபு - வீங்கி; பருத்து. செறிந்த - நெருங்கிய. வன முலை: விளி.

௧௧௧. பூங்கொடி வடிவிற் செய்யப்பட்ட பொன் அணிகலன் என்க.

புணர்ச்சிக் காலத்தும் பொறித்தலானும் சிவத்தலானும் நோய் கூர்ந்தழியும் நீ அளியையாயிருந்தாய். அத்தகைய நின்னை அழற் போர்வை போர்த்தது ஆகலான் இப்பொழுதும் அளியை ஆயினை என்று விரிக்க.

௧௧௩. மதர்த்து - களித்து.

௧௧௪. நோய்மிக்கு என்க. அளியை - அளிக்கத்தக்காய்.

௧௧௫. அழல் - அழற்சி.

௧௧௬. பொங்கழல் - மிக்க நெருப்பு.

[பிற அணிகலன்களைக் கண்டு இரங்கல்.]

௧௧௭ - ௧௨௮ : இலை......................பாராட்டியும்.

(பொ-ரை.) மன்னன் மகளே ! இலைத் தொழிலமைந்த பிற பேரணிகலன்களும், இதயவாசனையும், களிகையும், முத்தாரமும், பல மணிகளும் இழைத்த அணிகலன்களும், தாலியும், முத்து வடமும், சித்திரவுத்தியும், பொன்னாணும், சங்கிலியும், இன்னோ ரன்ன பிற அணிகலன்களுமாய் உடலில் அணியும் பொருட்டுக் கைவன்மையுடைய கம்மத் தொழிலாளே சித்திர வேலையையும் சேர்த்துச் செய்த அணிகலன்களுள்ளும் ஆராய்ந்து மாட்சிமை யுடைய அழகுடையவற்றைத் தேர்ந்து நினது உடலுக்குப் பொருந்தியவற்றை யாம் அணிவேம் வருக! வருக! எம்மைப் பிரிந்து தனித்தியங்குதலையும் பொறுக்கும் வன்மையுடையை ஆயினையோ என்று குளிர்ந்த மலர்மாலை யணிந்த அவ்வுதயண குமரன் மேலும் பல அணிகலன்களையும் நோக்கிப் பாராட்டி அரற்றியும் என்க.

(வி - ம்.) ௧௧௭. இலைப் பெரும்பூண் - இலைத் தொழிலமைந்த பேரணிகலன். இதயவாசனை - ஒரு மார்பணிகலன். களிகை - ஒரு பேரணிகலன். பேரணிகலன் என்பது தோன்ற நலப்பெருங் களிகை என்றார். இவ்வாசிரியரே "கலங்கவின் பெற்ற கண்ணூர் களிகை" (௧ - ௪௧: ௮௨.) என்றும், "திருக்கேழ்க் களிகை" (௩-௨௨ : ௨௨௨) என்றும்பிறண்டும் ஓதுவர்.

நன்முத்தாரம் (௧௨௦) முத்தணிவடம் என்பன முத்தாலியன்ற வேறு வேறு அணிகலன்கள்.

௧௨௦. சித்திரவுத்தி-சித்திரமமைந்த சிதேவி என்னும் அணிகலன்.

௧௨௧. நாண் - பொற்கயிறு. தொடர் - சங்கிலி.

௧௨௨. மெய்யில் அணிதல் பெறும் பொருட்டென்க.

௧௨௩. குயிற்றிய - செய்த. சித்திரங் கொளீஇக் குயிற்றிய என மாறுக.

௧௨௪. பூணணி : வினைத்தொகை. மாண்அணி - மாட்சிமை யுடைய அணிகலன்.

௧௨௫. ஆகக்கு-ஆகத்திற்கு. உடலுக்கு-மார்பிற்கு எனினுமாம்.

௧௨௬. சினமுடைய படைகளையுடைய பிரச்சோதன மன்னன் மகளே என்க.

௧௨௮. மார்பன் : உதயணகுமரன்.

[தோளணிகள்]

௧௨௯ - ௧௪௧ : ஓங்கு......................பண்போ எனவும்.

(பொ - ரை.) உயர்ந்த மலைப்பக்கத்தே ஒளியுண்டாக வளர்ந்த மூங்கில் அசைந்தாற் போன்ற அழகுடையையாகிய

நலமிக்க பெரிய தோளே! குற்றந்திரச் சிவந்து அசையா நின்ற தாமரை மலரினகத்தே வீற்றிருந்த திருமகளினது வடிவம் உண்டாக இயற்றிக் கண்டோர் விரும்பும்படி நின்னை ஒப்பனை செய்யப்பட்ட இம்மாலையுடனே புள்ளியையுடைய வண்டுகளினது நிரல் போன்ற மடங்கிய இலைத் தொழிலையுடைய இம் மணிமாலையும் மகரமீனால் கவ்வப்பட்ட பூங்கொடியுருவம் உண்டாக இயற்றப்பட்ட அரிய மணிகள் பதித்த இக்கடகமும் மோதிரங்களும் இங்ஙனம் அழிந்துகெட இவற்றைச் சினந்து நீக்கும் அழகு தருவனவாகச் சிறந்த இவற்றின் சிறப்பினையும் கருதிப்பாராமல், இவை நின்னோடு பெரிதும் நட்புடையன ஆகியிருந்தும், இவற்றின்பாற் பற்றுவிட்டு அகன்றொழிதல் நினக்குத் தகவாகுமோ? நீதான் கற்றது பிறிதியாதோ கூறுக! என்றும் என்க.

(வி - ம்.) தடந்தோள்! இத்தாம முதலியன அழிய இவற்றின் சிறப்பும் உள்ளாது இவை நின்னோடு கலப்பினவாகியும் அகறல் பண்போ நீ கற்றதுதான் என்? என இயைத்துக்கொள்க.

கூ௰. காம்பு - மூங்கில். கவினை - அழகுடையை.

கூ௧. தடந்தோள் : விளி. நவை - குற்றம். சேஎந்து - சிவந்து.

கூ௨. அலங்கு தாமரைமலர் அகவயின் என மாறுக.

கூ௩ - கூ௪. திருமகளிருக்கை வடிவமாக இயற்றிப் புனைந்த இத் தாமம் என்க. குயிலா - இயற்றி.

கூ௫. வண்டொழுங்கு போன்று மணிகளை நிரல்படப் பதித்து இடையிடையே மடங்கிய இலையுருவம்பட இயற்றிய மாலை என்க. கம்மம் : ஆகுபெயர்; அணிகலன் என்க.

கூ௬ - கூ௮. மகரம் மகரமீனாற் கவ்வப்பட்ட கொடியுருவத்தில் அமைக்கப்பட்ட மணிக்கடகம் என்க. அங்குலி - மோதிரம்.

கூ௯. செற்றுபு - செற்று; சினந்தென்க. நட்டாரைக் கைவிடுதல் கற்றோர் செய்யத்தகாத செயலாகலின் நீ கற்றதென் என்றான். கற்றதென் என்னும் வினா நீ கற்றிலை என்பதுபட நின்றது.

௧௪௧. பண்பு - தகவுடைமையைக் குறித்து நின்றது. பண்போ என்புழி ஒகாரம் எதிர்மறை. பண்பன்று என்றவாறு.

[௧௪௧ - கரு௯. இடையணி முதலியன]

௧௪௨ - ௧௪௯ : பவழ...............மறைத்தவோ எனவும்.

(பொ - ரை.) பவழமணியோடு பிற மணிகளையும் விரவித் திகழும்படி கோத்த செம்பொன் பாண்டிலும், தொழிற்றிறனுடைய பொருத்துவாய்களுடனே செய்து அழகுமிக மேகலையணியும் காண்போர் கண்கூச ஒளிவீசி விளங்கா நிற்பச் செய்த

அழகிய ஒப்பனையோடு பாம்பின் படத்தை ஒத்த மெல்லிதாய் உயர்ந்த அல்குலினைத் தீப்பிழம்புகளாகிய சிவந்த ஆடைகள் தீக்கடவுளுக்கு ஊட்டி மறைத்தழித்தனவோ என்றும், என்க.

(வி - ம்) ௧௪௨. காசு: மணிப்பொதுப்பெயர். விரைஇ-விரவி.

௧௪௩. பாண்டில் - வட்டவடிவமான பொற்காசுமாலை.

௧௪௪. கொளுவு - பொருத்துவாய்.

௧௪௫. எண்ணூற் காழ்நிரை - விரிசிகை என்னும் ஒருவகை மேகலை அணி.

௧௪௬. உட்கு - அச்சம்; அச்சம் விற்றிருத்தற்கு இடமான அரவு என்க.

௧௪௭. பை - படம். ஐது - மெல்லிதாக.

௧௪௮. புகைக் கொடிப் புத்தேள் - தீக்கடவுள்.

௧௪௯. அழற்கொடி அரத்தம்-தீப்பிழம்புகளாகிய நெடிய ஆடை என்க.

பட்டாடை முதலியவற்றுல் மறைத்தற்குரிய மெல்லிய அல்குலைத் தீப்பிழம்பாகிய செவ்வாடைகள் மறைத்தனவோ என்றிரங்கிய படியாம். அரத்தம் - செவ்வாடை.

௧௫௦ - ௧௫௯: மணி..............................வாராயெனவும்.

(பொ - ரை) மணிபோன்ற ஒளியுடைய கண்ணையுடைய அன்னச் சேவல் தன் பெடையை நற்றாமரைக் குளத்துக் குளிர்ந்த நீரினின்றும் அகற்றி வெப்பமிக்க பாலைநிலத்திலே விட்டாற்போன்று நின்னை இத்தீயிடை விட்டேம் என் செய்கோம் யாம்!......................வாசவதத்தாய்! நினது அழகினைக் காண்பேம்! வண்டுகள் இசையாநின்ற மலர்மாலையினையுடையோய்! யாம் நின் பொருட்டுக் காட்டினின்றும் மராஅம் பூங்கொத்தும் மாந்தளிரும் குரவம்பூவும் தேன்பிலிற்றும் முல்லைப் பூவும் அசோகந்தளிரும் இன்னோரன்ன பிறவும் கொண்டு வந்துள்ளேம்; இவற்றை ஏற்றுக்கொள்வாயாயின் மாணிக்கப் பரலிடப்பட்ட கிண்கிணியும் சிலம்பும் ஒலிப்ப மெல்ல மெல்ல நடந்து எம்முன் வருவாயாக நினக்கு இவற்றை அணிந்து நின்னழகினை யாமும் நுகர்வேம் காண் என்றும், என்க.

(வி - ம்.) ௧௫௦. அணித்தகு பெடையை - அழகுத் தகுதியையுடைய தன் பெடையன்னத்தை என்க.

மணிக்கண் அன்னம்: உதயணன் தனக்குத்தானே எடுத்துக் கூறிய உவமை. பெடையன்னம்: வாசவதத்தைக்கு உவமை.

௧௫௧. பயிலிதழ்: அன்மொழித்தொகை. தாமரைமலர் என்க.

௧௫௨. வெயில் கெழுவெள்ளிடை என்றது பாலை நிலத்தை. விட்டிசினுங்கு - விட்டாற்போன்று.

௧௫௩. மணியரி - மாணிக்கப்பரல். மிழற்ற - ஒலிப்ப............ ஈண்டு ஓர் அடிமுழுதும் காணப்பட்டிலது.

௧௫௪. காண்கம் - காண்பேம்: ஒருமைப் பன்மை மயக்கம்.

௧௫௫. மராஅம் பூங்கொத்தும் என்க.

௧௫௬. குராஅம் பாவை - குரவமலர்.

௧௫௭. பிண்டித்தளிர் - அசோகந்தளிர்.

[உதயணகுமரன் முன்னிகழ்ச்சிகளை நினைத்துப் புலம்புதல்.]

௧௬௦ - ௧௭௧: அணிவரை................கரத்தியோ யெனவும்.

(பொ-ரை.) அழகிய மலைச்சாரலிலே விளையாட்டயர்ந்தும், கைக்கெட்டும்படி தாழ்ந்த கிளைகளில் உள்ள மலர்களைக் கொய்தும், பாவை புனைந்தும் திருமகளும் விரும்புதற்குக் காரணமான அழகுடைய தோழியரோடு வாராநின்ற நீ பழகுதல் இனிய மாதவன் மகளாகிய குற்றமற்ற விரிசிகை என்பாள் என்னை வேண்டிக்கோடலால் மாறுபட்ட அழகோடே மலர்மாலை தொடுத்து யாம் அவட்குக் கொடுத்தமையைக் கண்டு அங்ஙனம் செய்தது தவறென்று கருதினையாய் ஊடிய அக் காமவேக மிக்க ஊடற்பொழுதில் நின்கண் முன்னர் ஒரு கருங்குரங்கு வந்து தோன்றிற்றாக. அதனைக்கண்டு உள்ளத்தே நடுங்கி வெப்பமுண்டாக உயிர்த்து அஞ்சி என்னைத் தழுவிக் கொண்ட அழகிய சிலவாகிய மொழிகளையுடையோய்! அலத்தகமூட்டப்பட்ட மெல்லிய அடியையுடைய பாவையே! அத்தகையோய் பரவிய இக்கடிய தீயினுக்கு அஞ்சாமல் அதனுட்புகுந்து மறைந்தனையோ என்றும் என்க.

(வி - ம்.) ௧௬௦. அணிவரைச்சாரல் - அழகிய மலைச்சாரல்.

௧௬௧. பணி மலர் - தாழ்ந்துள்ள மலர் என்க. பாவை - விளையாட்டுப்பாவை.

௧௬௨. திருவிழைதற்குக் காரணமான அழகுடைய மகளிரொடு என்க. ஒருவழி - ஒருங்கே.

௧௬௩. மருவுதல் இனிய மாதவன் என்க. ஈண்டு,

"நவில்தொறும் நூனயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு" (குறள் - ௭௮௩)

எனவரும் திருக்குறளை நினைக.

௧௬௭. முசுக்கலை - கருங்குரங்கில் ஆண்.

௧௬௬. அழகிய சிலவாகிய இனிய மொழிகளைப் பேசும் இயல்புடையோய் என்க.

௧௭௦. பஞ்சி - அலத்தகம்.

௧௭௧. கரத்தியோ - மறைத்தனையோ.

௧௭௨ - ௧௭௫ : அங்கண்.....................போதியோ வெனவும்.

(பொ - ரை.) "இவ்வுலகத்தே காதலரைப் பிரிந்து வாழும் இயல்புடையோர் வன்கண்மையுடையோரே ஆவர்" என்று பண்டு நீயே கூறுவை, அவ்வசைமொழி நின்மேல் நிற்கும்படி எம்பாற்றோன்றிய துன்பத்தையும் நோக்காயாய்ப் பிரிந்து போயினையோ ! என்றும் என்க.

(வி - ம்.) ௧௭௨. காதலரைப்பிரிந்து தனித்து வாழ்வோர் என்க.

௧௭௪. அம்மொழி - அவ்வசைமொழி.

௧௭௫. புன்கண் - துன்பம்.

௧௭௬ - ௧௯௫ : இளைப்புறு....................நடந்தோய்.

(பொ - ரை.) ஓடி இளைத்த நாயினது அழகு தக்கிருக்கின்ற நாப்போன்று செவ்விய நிறத்தானும், மென்மையானும், சிறப்புற்று அழகெய்தி அமைதியுடையவாய் மேலும், அணிகலன்களை அணியப்பெறுதலானே வருந்தி இலையுருவமுண்டாக இயற்றிய அழகிய ஒளியுடைய கம்மக் கலன்களுள் வைத்து, விரற் சுற்றும், வளையமும், ஆழியும், இரட்டை வடமும, மகரவாயும், ஒளியுண்டாகச் செய்த விரலணியும் ஆகிய அணிகலன்களாற் கவ்வப்பட்டு ஒழுங்குபட்ட ஒளியெய்தி மலரிதழை மிதித்தவிடத்தும் பொறுதே வருந்தி அழுதற்குக் காரணமானவும் ஆகிய நின் சிவந்த அடிகளுக்கேற்ற செம்பொன்னாலியன்ற கிண்கிணி, பாடகத்தின் ஒலியோடே பரட்டின்கட் பிறழ்ந்து ஒலியா நிற்பச் சம்பங்கதிர் போன்று திரண்டுள்ள அழகுடைய நின் சிறிய துடைகள் அசையும்படி நடந்துவந்து தோழியர் நின்றுவிட்ட இறுதிப் பொழுதில், பத்திராபதி என்னும் அப் பிடியானையை ஊர்ந்து அதுவும் காட்டின்கண் இறந்து வீழ்ந்த பின்னர்ப் பதுக்கையும், பரற்கற்களும் வெப்பத்தைத் தம்மகத்தே ஏற்றுக்கொண்டு வேல்போலத் துன்புறுத்தா நிற்பவும், எம்மைக் காதலித்தமையாலே எமக்கு உண்டாகும் துன்பத்திற்கே அஞ்சிக் கற்கள் காலைப் பொதுக்கும் காற்று வழக்கற்ற சிறிய வழிகளிடத்தே நடுக்கமுண்டாகியும் எம்மோடு நடந்து வருதலை விரும்பா நின்றனையே என்க.

(வி - ம்) ௧௭௬. இளைப்புறு ஞமலி-ஓடியிளைத்தலுற்ற நாயின் என்க. நாவின் - நாப்போன்று.

களஅ. அம்மை - அமைதி. அஃதப் பொருட்டாதல் "அம்மை என்பது குணப்பெயர். அமைதிப்பட்டு நிற்றலின் அம்மை என்ரு யிற்று" (தொல். செய். சூ. ௩௪௭. உரை.) எனவரும் பேராசிரியர் உரையானும், உணர்க.

முன்னும் என்றது மேலும் என்பதுபட நின்றது. அவ்வமைதியின் மேலும் அணி பெறற்குப் பிணங்கி என்றியைபு காண்க.

பிணங்கி - வருந்தி.

களகூ. கம்மம் : ஆகுபெயர் ; அணிகலன்.

கஅ0. விரற்சுற்று - ஓரணிகலன்.

கஅக. ஆழி - மோதிரம். கட்டுகின்ற இணைவடம் என்க.

கஅஉ. மகரவாய் - ஓரணிகலன். நகை - ஒளி.

கஅங. கவ்வப்பட்டு என்க.

கஅச. அடர் - இதழ். புகைந்து - நெஞ்சம் வருந்தி. அழுதற்குக் காரணமான சேவடி என்க.

கஅரு. பாடகம் - ஒரு காலணிகலன். பரடு - காலில் ஒருறுப்பு. அரற்ற - ஒலிக்கும்படி.

கன்பு - சம்பங்கோரை. அதன் கதிர்க்கு ஆகுபெயர்.

கஅகூ. ஆயம் - தோழியர் கூட்டம். அத்தோழியர் கூட்டம் நின்றுவிட்ட இறுதிப் பொழுதில் என்க.

ககூ0. தானத்தில் - இடத்தில்.

ககூக. கரிந்த புல்லையுடைய பதுக்கை என்க. பதுக்கை-கற்குவியல். பரல்-பருக்கைக்கல். எரிப்பு-வெப்பம். எஃகின்-வேல்போன்று.

ககூச. கால்அவி - காற்றடங்கிய.

ககூகூ-உ0ரு : இடுக்கண்..........துணிந்தவோ எனவும்.

(பொ - ரை.) தத்தாய்! யாம் பெரிதும் துன்பம் எய்தும்படி எம்மையும் நினையாயாய்க் கடிய தீயின்கட்புக்கு மறைந்தாயோ என்றும், நின் தந்தையாகிய பிரச்சோதன மன்னன் பணியை மேற்கொண்டு வீணையினது நரம்பினைக் கொளுவிக் கரணஞ் செய்யினும் குவிந்த நின் விரல்கள் அஞ்சி அவ்வச்சத்தின் நீங்காதனவாய்ச் சிவந்தன வாயினவே, அத்தகைய மெல் விரல் இப்பெருந்தீயின் கொழுந்துகளை அஞ்சாது தொடத் துணிந்தனவோ என்றும் என்க.

(வி - ம்.) ககூள. கடுப்பழலகவயின்-கடுமையுடைய தீயினூடே.

ககூஅ - ககூகூ. பகைவரைக் கடந்து வென்ற பலவாகிய களிற்று யானைப்படைகளையும் இடிபோல முழங்கும் வெற்றி முரசினையும், உடைய நினது தந்தையினது பணியை மேற்கொண்டென்க.

படி - பகை. "படிமதம் சாம்ப" எனவரும் பரிபாடற்குப் பரிமேலழகர் உரைத்த நல்லுரையானும் அஃதப் பொருட்டாதலறிக. இறைமகன் - வேந்தன்; ஈண்டுப் பிரச்சோதனன்.

௨௦௦. இசைநூல் இலக்கணத்திற்குப் பொருந்திய வீணை என்க. கோல் - நரம்பு. கொளீஇ - கொளுவி. ௨௦௧. கரணம் - கிரியை அவை எட்டுவகைப்படும். என்னை?

"வார்தல் வடித்தல் உந்தல் உறழ்தல்
சீருடன் உருட்டல் தெருட்ட லள்ளல்
ஏருடைப்பட்டடை என இசையோர் வகுத்த
எட்டுவகையின் இசைக் கரணத்து" (சிலப். ௭ : ௧௨-௧௫)

எனவரும் இளங்கோவடிகளார் கூற்றானும் உணர்க.

௨௦௨. அரணம் - புகலிடம்.

௨௦௩. உள்ளுறுவின - உள்ளுறுத்தின.

௨௦௪. அழற்செங்கொடி - தீயினது சிவந்த கொழுந்து.

௨௦௫. ஆற்ற - மிக.

௨௦௬ - ௨௧௫ : வடிக்கண்.............................அரற்ற.

(பொ - ரை) இங்ஙனம் மாவடு பிளவு போன்ற கண்ணையுடைய வாசவதத்தையின் முடியணிகலன் முதலாக அடியணிகலன் ஈருகவுள்ள அணிகலன்களை எடுத்து மார்போடணைத்துக் கொண்டு உதயணகுமரன் அழுதும், அயர்ந்தும், உரற்றியும், உயிர்த்தும், நிலத்தின்மேல் விழுந்தும் எழுந்தும் தாழ்ந்தும் தளர்ந்தும் போரினை வெல்லுதற்குக் காரணமான தனது செங்கண்ணினின்றும் பெருநின்ற கண்ணீர்த்துளி அழகிய தனது மார்பின்கண் முறையே முறையே விழாநிற்பவும், அழகிய பிடியானை குழியின்கண் விழ்ந்து ஆழக்கண்ட நீலக்களிற்றியானை அப்பிடியை நினைந்து நினைந்து வருந்திறற் போன்று அவ் வாசவதத்தையினைக் காணப் பெறுறுய் இன்னோரன்ன பிறவும் கூறிப் புலம்பா நிற்ப என்க.

(வி-ம்.) ௨௦௬. வடி-மாவடு. முடிக்கலம்-தலைக்கோலம் முதலியன

௨௦௭. அடிக்கலம் - சிலம்பு முதலியன.

௨௦௮. உரற்றி - உரக்கக் கூவி.

௨௧௦. செரு - போர்.

௨௧௧. உரு - அழகு. உறைத்தர - துளிப்ப.

௨௧௨. குழி - யானைவேட்டுவர் அகழ்ந்த குழியின்கண் என்க.

௨௧௩. நீலயானை - யானையினுள் ஒரு சாதி.

௨௧௪. மாதரை : வாசவதத்தையை.

[தோழர் செயல்]

உகசு - உஉ௦ : செறுநர்...............................நல்கி.

(பொ - ரை.) அதுகண்ட உருமண்ணுவா முதலிய அமைச்சரும் தோழரும் மன்னன் இங்ஙனம் அரற்றுதலை நம் பகைவர் அறியின் அஃது ஏதந்தரும் என்று கருதித் தேர் புரவி யானை காலாள் என்னும் நால்வகைப் படையையும் திறம்பட அணிவகுத்துப் படைமறவர்க்குந் தலைவர்க்கும் போர் அணி கலன்களும் பொருளும் வழங்கி என்க.

(வி - ம்.) உகசு. செறுநர் - பகைவர். சீர்மை - நன்மை.

உகஎ. உறுநர் - தோழர். சீர்மை அன்றெனச் சூழ்ந்த உறுநர் ஒருபால் ஒடுங்கி எனக் கூட்டுக.

உஉ௦. போர் அணிகலம் - போரில் வெற்றியுடைய வீரர்க்கு வழங்கும் பொற்பூ முதலியன.

உஉக - உஉசு : ஆருணி...................துணிந்தென்.

(பொ - ரை) அப்போர் வீரர்களுக்கு "நம்பகைவனாகிய ஆருணிவேந்தன் நம் மன்னனுடைய சோர்வினையறிந்து போர்த் தொழிலை மேற்கொண்டு வருதலும் கூடும்; அங்ஙனம் வருவானாயின் அவனுடைய பெருமையைக் கெடுத்து அவனை நீயிரே வலிந்து சென்று போர்தொடுக்காமலும், புறங்கொடுத்து விடாமலும், மலைச்சாரலின்கண் எய்தி நுங்கட்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் அவ்விடத்திலேயே மறைத்து வைத்துக் கொண்டு எம்மோடு தொடர்புண்டாக நின்று காமின்" என்று கூறி அப் பெரும்படையை அத்திசை நோக்கிச் செலுத்திவிட்ட பின்னர் உதயணகுமரனுக்குப் பல்வேறு ஏதுக்களையும் எடுத்துக்காட்டி அவனது துயரத்தைப் போக்குதற்குத் துணிந்து அம்முயற்சியைத் தொடங்கினர் என்க.

(வி - ம்.) உஉக. ஆருணி அரசன் - கோசம்பியைக் கைப்பற்றி ஆளும் பாஞ்சால மன்னன். அடுதிறல் ஆண்டகை என்றது உதயணகுமரனை.

உஉஉ. அற்றம் - சோர்வு. செற்றச்செய்கை - போர்த்தொழில்.

உஉங. மீளி - பெருமை.

உஉ௪. கூழ் - உணவுப்பொருள்.

உஉரு. யாப்புற - சேர.

உஉசு. தீரிய - தீர்த்தற்கு. துணிந்து தொடங்கினர் என மாறுக.

கசு. தேவிக்கு விலாவித்தது முற்றிற்று.

---

## ௨௦. சண்பையுள் ஒடுங்கியது

இதன்கண், வாசவதத்தையின் பொருட்டுப் பெரிதும் துன்புற்ற உதயண குமரனுக்குத் தோழர் மெய்ம்மொழிகள் பற்பல எடுத்துக் கூறித் தேற்றுதலும், காமத்தால் உளதாகும் கேடும், யூகி, சாங்கியத்தாய், வாசவதத்தை மூவரும் அவ்விலாவாண நகரத்தின் நீங்கி அங்க நாட்டிலுள்ளதொரு மலைச்சாரலை எய்துதலும், அங்குள்ள துறவோர் இருக்கையின் அழகும், அம் மூவரும் அத்துறவோர் பள்ளியில் வதிதலும், சாங்கியத்தாய் தம்மைப் பிறர் அறியாதிருக்கும் பொருட்டு முயலும் முயற்சியும், காஞ்சனமாலையை உருமண்ணுவா வாசவதத்தையிடம் அழைத்து வருதலும், யூகி முதலியோர் அவ்விடத்தினின்றும் புறப்பட்டுச் சென்று அவ் வவந்தியின் தலைநகரமாகிய சண்பையை எய்துதலும், அச்சண்பை நகர மாண்பும், அதனை ஆளும் வேந்தன் சிறப்பும், யூகி முதலியோர் அந்நகரத்திலுள்ள ஒரு வணிகன் இல்லத்தில் பிறர் அறியாதபடி மறைந்துறைதலும் பிறவுங் கூறப்படும்.

துணிவுடை யாளர் துன்னினர் குழீஇ
அணியுடை அண்ணற் கமைந்தமை காட்டிப்
படுதிரைப் பௌவத்துக் கடுவளி கலக்கப்
பொறியவிழ்ந்து கவிழ்ந்த பொருகலத் துய்ந்தோர்
நெறிதிரிந் தோரீஇ நீத்துயிர் வழங்காத்
தீவகம் புக்குத் தாவகங் கடுப்பப்
பெருந்துயர் உழக்கும் அருந்துபசி மூளத்
திண்ணிலை வரைப்பிற் சினைதொறுஞ் செறிந்து
கண்நவை உறாஉங் கனிபல கண்டவை
நயவரு நஞ்செனப் பெயர்தெரி வின்மையின்
ஊழுறுத் தக்கனி தாழ்விலர் வாங்கித்
துன்ப நீக்குந் தோற்றமு மன்றி
இன்ப நாற்றமும் இயைந்தன இவையென
நச்சுபு தெரிந்த நாற்றமுஞ் சுவையும்
ஒப்புமை இன்மையின் உயிர்முதல் தாங்க
அமரர் காட்டிய அமுதுநமக் கிவையெனப்
பசிநோய் தீர அயிறலிற் கதுமெனத்
தசைபோழ்ந்து கழற்றித் தபுத்திசி னுங்குத்

தாமரைச் செங்கண் தகைமலி மார்ப
காமத் தியற்கையுங் காணுங் காலை
இறுதியில் இன்பமோ டினியது போல
உறுபயன் ஈனா உடம்புமுதல் தபுத்தலிற்
பெறுபயம் இதுவெனப் பேணார் பெரியோர்
வெற்றித் தானையொடு விசயம் பெருக்கிக்
கோற்றம் வேண்டாய் பற்றோடு பழகிய
ஆர்வப் புனலகத் தழுந்துவை யாயின்
ஊர்கடல் வரைப்பின் ஆருயிர் நடுக்குறீஇப்
பெரும்பே துற்று விளியுமற் றதனாற்
கரும்பேர் கிளவிக் கனங்குழை திறவயிற்
கழுமிய காதல் கைவிடல் பொருளெனக்
காமத்துக் கடையுங் காதற் குற்றமும்
ஏமாப் பிலவென எடுத்துரை நாட்டி
அமைச்சத் தொழிலர் விலக்குபு காட்ட
இகுப்பம் ஒடுங்கிய இயல்பினன் ஆகிய
அண்ணல் நிலைமை திண்ணிதின் அறிந்து
வண்ணக் கோதை வாசவ தத்தைக்குக்
காதற் கணவன் ஏதம் இன்மை
அறியக் கூறி அகல்வது பொருளெனப்
பொறியமைத் தியற்றிய பொய்ந்நிலம் போகி
வேண்டிய அளவிற் காண்தகக் கூட்டிக்
கரந்துநிறம் எய்தும் அரும்பெறல் யோகம்
யாவரும் அறியாத் தன்மைத் தாக
மூவரும் உண்டு வேறுநிறம் எய்தி
அந்தண வுருவோடு சந்தனச் சாரல்
பெருவரை அடுக்கத் தருமைத் தாகிய
கல்சூழ் புல்லதர் மெல்லடி யொதுங்கிப்
பிரிவுதலைக் கொண்ட எரிபுரை வெந்நோய்
தலைமை நீரில் தண்ணெனத் தெளித்து
முலைமுதற் கொழுநன் நிலைபெற வேண்டும்
உள்ள ஊர்தி ஊக்கம் பூட்டக்
கள்ளக் காதல் தாங்கினள் ஆகி
இமிழ்வினை விச்சையின் இடுக்கட் பட்ட

மகிழ்மணி நாகர் மடமகள் போல
யூகி நீதியிற் பேதை பிணிப்புண்டு
வேண்டுவயிற் சென்ற காலை யாண்டே
தண்கோல் அல்லது வெங்கோல் புகாஅச்
செங்கோ லாளன் சேதியம் பெருமலைத்
தாண்முதல் தழீஇ நாண்மதுக் கமழும்
கற்சுனை நீலமுங் கணிவாய் வேங்கையும்
நற்சினை நறவமு நாகமு நந்தியும்
பருமம் அன்றியும் பயன்கோடுப் பறுஅப்
பலவு மாவுங் குலைவளர் வாழையும்
இருங்கனி நாவலும் இளமா துளமும்
ஒருங்குடன் கஞலி உள்ளம் புகற்றும்
மாசின் முனிவரொடு மகளிர் குழீஇயதோர்
ஆசில் பள்ளி அறிந்துமுன் நாடி
மற்றதன் அகவயின் தெற்றெனத் தெரியும்
உருமண் ணுவாவின் பெருமுது குரவன்
அவமில் சூழ்ச்சித் தவமுது மகனொடு
கருமங் கூறிக் கண்ணுற்றுப் பிரியார்
அணித்துஞ் சேய்த்தும் அன்றி அமைவுற
மணிப்பூண் மாதரு மனம்புரி தோழனும்
காதற் சேவிலியுங் கரந்தவண் ஒடுங்கி
மாதவர்த் தேரீஇ மரீஇ யோழுகப்
பள்ளியும் பதியு மலையுஞ் சேணிடத்(து)
உள்ளவை உரைத்துத் தள்ளாத் தவநெறி
அற்றந் தீர உற்றுப்பிரிந் தொழுகிய
உருவுடை முதுமகள் ஒருவயிற் றியன்றமை
நீப்பிடந் தோறும் யாப்புற அறிவுறீஇ
நாட்ட ஒழுக்கொடு நன்னுதல் இவளை
வேட்டோன் விட்டுக் காட்டக நீந்திக்
குண்டுநீர்க் குமரித் தெண்திரை ஆடிய
போயினன் என்னும் பொய்ம்மொழி பொத்தித்
தீவினை யாளரைத் தெளியக் கூறி
வாய்மொழி யாக வலித்தனள் வழங்கி
மறுவின் மன்னற் குறுதி வேண்டித்

தண்டமிழ் மகளிரொடு தலைநின் றேழுக
கண்டனிர் உளிரோ காவலன் மகளையென்(று)
ஒண்டொடிக் காஞ்சனை உயிர்நனி நில்லாச்
செல்லல் நோக்கிச் செயற்பாற் றிதுவென
ஒல்லு நண்பின் உருமண் ணுவாஅவட்
கொண்டனன் வந்து கோமகட் காட்டிக்
கருமக் காரணம் அவள்வயிற் பேசி
விண்டலர் கழுநீர் வென்ற கண்ணியொடு
தலைப்படுத் தனனத் தானவட் போகி
வண்டுளர் ஐம்பால் வயங்கிழை மாதரை
ஆற்றுவித் தோம்பிப் போற்றுபு தழீஇ
நீங்கல் செல்லா நேரிமையின் ஓங்கி
யாங்கினி திருத்துமேன் றறிவினிற் சூழ்ந்து
பற்றார் ஆயினும் உற்றார் ஆயினும்
ஒற்றவர் உளரெனின் அற்றந் தருமென
மற்றவண் ஒடுங்கார் மறைந்தனர் போகி
உருமண் ணுவாவின் பெருமுது குரவன்
அவமில் சூழ்ச்சித் தவறில் தோழன்
பெரும்புனற் கங்கை பெருவளங் கொடுக்கும்
அங்க நன்னாட் டணிபெற இருந்த(து)
எங்குநிகர் இல்ல தெழிற்கிடங் கணிந்தது
பொங்குமலர் நறுந்தார்ப் புனைமுடிப் பொற்கழல்
விச்சா தரருந் தேவ குமரரும்
அச்சங் கொள்ள ஆடுகொடி நுடங்கிச்
சத்திக் குடத்தொடு தத்துறல் ஓம்பி
விளங்குபு துளங்கும் வென்றித் தாகி
அளந்துவரம் பறியா அரும்படை அடங்கும்
வாயிலும் வனப்பு மேவிவீற் றிருந்து
மதிலணி தெருவிற் றாகி மற்றோர்க்(கு)
எதிரில் போக வியல்பமை மரபொடு
குதிரையுங் களிறுங் கொடுஞ்சித் தேரும்
அடுதிறன் மள்ளரும் வடுவின்று காப்ப
நெடுமுடி மன்னருண் மன்னன் நேரார்
கடுமுரண் அழித்த காய்சின நெடுவேல்

படுமணி யானைப் பைந்தார் வெண்குடை
உக்கிர குலத்துள் அரசருள் அரசன்
விற்றிறல் தானை விசயவரன் என்னும்
நற்றிறன் மன்னன் நாளுங் காக்கும்
சண்பைப் பெருநகர்ச் சால்போடும் விளங்கிய
முட்டில் வாழ்க்கைச் செட்டியர் பெருமகன்
மித்திர காமன் மிக்குயர் பெருமனை
வத்தவன் காதலி வாசவ தத்தையென்(று)
அத்தக வறிந்தோர் அவ்விடத் தின்மையின்
ஆப்புடை நண்பின் அந்த ணாட்டியும்
நீப்பருங் காதல் நிலைமைத் தோழியும்
ஓங்கிய பெரும்புகழ் யூகியும் உகவாக்
காப்போடு புறநகர் மேற்படி பிழையாப்
பூங்குழன் மாதரோடு புகுந்தன ராகி
ஆங்கினி திருந்தனர் அவ்வழி மறைந்தேன்.

---

## ௨௦. சண்பையுள் ஒடுங்கியது

அஃதாவது, யூகி சாங்கியத்தாய் வாசவதத்தை காஞ்சன மாலை என்னும் நால்வரும் இலாவாணகத்தினின்றும் புறப்பட்டு அங்க நாட்டிலுள்ள சண்பை நகரத்திற் சென்று அந் நகரத்தே அயலார் அறியாதபடி மித்திரகாமன் என்னும் ஒரு வணிகன் இல்லத்தே மறைந்திருந்ததனைக் கூறும் பகுதி என்றவாறு.

### உரை

[காமத்தால் உளதாகும் கேட்டினைத் துணிவுடைய தோழர் உதயணனுக்கு எடுத்துக் கூறித் தேற்றுதல்.]

க - கூ: துணிவுடையாளர்...............களிபலகண்டு.

(பொ - ரை.) இங்ஙனம் பல்லாற்றானும் புலம்பா நின்ற உதயண குமரன்பால் துணிவுடைத் தோழர் சென்று குழுமி அம் மன்னனுக்குப் பொருந்துவனவாகிய மெய்ம் மொழிகளை எடுத்துக் கூறித் (கூ) தாமரைக் கண்ணையும், அழகுமிக்க மார்பினையும் உடைய பெருமானே! (௨௦) காமத்தினது தன்மையை ஆராயின் அலையெறியா நின்ற கடலினூடே சூறைக் காற்று மோதி அலைத்தலானே பொறி கலங்கிக் கவிழ்ந்த மரக் கலத்தினின்றும் உடை மரம் பற்றி உயிர் உய்ந்தோர் வழி

தப்பிச் சென்று உயிரிலங்கள் வாழ்தலில்லாததொரு தீவின்கட் சென்று புகுந்தனராகக் காட்டுத் தீப்போன்ற கடிய பசிப்பிணி தோன்றி அவரை வருத்தா நிற்ப அவர் அத் தீவினகத்தே உள்ள மரங்களிற் கிளைகள் தொறும் நெருங்கிக் கனிந்துள்ள காண்போர் கண்கள் துன்புறுதற்குக் காரணமான ஒளியினை யுடைய பலவேறு கனிகளைக் கண்டனர் என்க.

(வி - ம்.) க. வேந்தனுக்கு அறிவுறுத்தப் புகுதல் அஞ்சத் தகுந்த செயல் ஆதலின் தலைமகன் வெகுண்டபோதும் தம்முயிர்க் குறுதி எண்ணாமல் நீதி விடாமல் நின்றுரைக்கும் வீரமுடைமை தோன்றத் 'துணிவுடையாளர்' என்றார்.

உ. அண்ணல் - உதயண குமரன். அமைந்தமை - பொருந்து பவற்றை.

௩. பௌவம் - கடல். கடுவளி - கடிய சூறைக் காற்று.

௪. பொறி - இயந்திரம். பொருகலம் - அலை முதலியவற்றாற் பொரப்படும் மரக்கலம் என்க.

௫. நெறி திரிந்து - வழிதப்பி. ஓரீஇ - ஒருவி - விலகி.

௬. நீத்து - விலகி. உயிரினங்கள் வாழ்தலில்லாத என்பது கருத்து. ௬. தாவகம் - காட்டுத் தீ.

எ. பெருந்துயர் உழத்தற்கும் அருந்துதற்கும் காரணமான பசிப் பிணி மூள என்க.

அ. திண்ணிய நிலையினையுடைய அத் தீவக வரைப்பின் என்க. சினை - கிளை.

௯. காண்போர் கண்கள் கூசித் துன்புறுதற்குக் காரணமான ஒளியுடைய கனி என்க.

௯ - கஎ : அவை......................அயிறலின்.

(பொ - ரை.) அக்கனிகள் நயத்தல் வருதற்குக் காரண மான வஞ்சமுடைய நச்சுக் கனிகள் என்பதும், அவற்றின் பெயர் இவை என்பதும் தெரியாமையானே அவற்றை வீழ்த்திக் காலந் தாழ்க்காமற் கைக்கொண்டு நோக்கி இவை தமது தோற் றத்தானே நமது பசித் துன்பத்தை நீக்குமியல்பினவாதலோடு இன்பமும் நறுமணமும் பொருந்தியுள்ளன என்று அவற்றைப் பெரிதும் விரும்பி மணத்தானும் சுவையானும் இவை நிகரற்றன ஆதலின் இவை நமக்கு அருள் செய்யக் கருதிய தேவர்கள் நாம் நம்முயிரை ஓம்புதற் பொருட்டுக் காட்டிய அமிழ்தமே ஆகும் என்று கருதித் தம் பசிப்பிணியகலும்படி அவற்றை உண்ணா நிற்றலானே என்க.

(வி - ம்.) க0. நயவரு - நயத்தல் வருதற்குக் காரணமான வஞ்ச முடைய என்க.

நஞ்சென்றும் அவற்றின் பெயரின்ன வென்பதும் தெரியாமை யான் என்க.

௧௧. ஊழுறுத்து - (ஊழுறுதல் - வீழ்தல் எனவே) வீழ்த்தி என்க. தாழ்விலர் : முற்றெச்சம். தோற்றமேயன்றி ௧௨. இன்ப மும் மணமும் உடையன என்று மகிழ்ந்து என்றவாறு.

௧௪. நாற்றத்தானும் சுவையானும் தமக்கு ஒப்பில்லாதன என்க.

௧௭. அயிறலின் - உண்ணுதலானே.

௧௭ - ௨௩: கதுமென....................தபுத்தலின்.

(பொ - ரை.) அக் கனிகள் விரைந்து அங்ஙனம் உண்ட வர்களின் தசைகளைப் பிளந்து கழற்றிக் கொன்றொழித்தாற் போன்று இக்காமத்திற்குக் காரணமான இவ்வுலகப் பொருள் கள் தாமும் தொடக்கத்தே அழிவில்லாத இன்பந்தருவன போன்றும் இனியனபோன்றும் காட்டி அவற்றைக் கைப்பற்றி அப்பொருள்களின் இயல்பறியாமல் நுகர்ந்தவருடைய பிறவிப் பயன் எய்தப் பெறாத உடம்பினை அழித்துவிடும் இயல்புடையன ஆதலான் பெரியோர் இக்காம நுகர்ச்சிப் பொருளே பெறக் கடவதாகிய பயன் என்று கருதுவதிலர் என்றார் என்க.

(வி - ம்.) ௧௭. கதுமென : விரைவினைக் காட்டுவதொரு குறிப்புச் சொல்.

௧௮. தபுத்திசினாங்கு - கொன்றொழித்தாற் போன்று.

௧௯. தகை - அழகு. மார்ப : விளி.

௨௧. இறுதியிலின்பம் - முடிவில்லாத இன்பம்.

௨௨. பிறவிப்பயனை விளைவியாத இவ்வுடம்பினையும் என்க. உடம்பு முதலும் என வேண்டிய உம்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது.

௨௪ - ௩௩: வெற்றி....................காட்ட.

(பொ - ரை.) வேந்தர் பெருமானே! நீ நினக்குரிய கடமை யாகிய வெற்றியினை நினது படைஞரோடு சென்று பெருக்கி நினது அரசவுரிமையை மீட்டுக்கோடலை விரும்பாயாய் இங்ஙனமே பற்றோடு மிகவும் பழகி ஆசைக் கடலிலே இன்னும் அழுந்தியே கிடப்பாய் எனின், இவ்வுலகத்தே வாழும் உயிர்கள் துன்புற்று நடுங்கி மயங்கிமாய்வன மன்; ஆதலாலே நீ கரும்பினை ஒத்த மொழியினையும் கனவிய குழையினையும் உடைய நின் பெருந்தேவியின்பாற் கொண்டுள்ள காமத்தினைக் கைவிடுதல் உறுதியுடைத்தாம், என்று கூறி மேலும் காமத்தினது இழி தகவும், காதலானே உண்டாகும் குற்றங்களும் இன்பந்தருவன

அல்ல என்றும் பல்லாற்ருனும் எடுத்துக்காட்டி அவ் வுதயணனை அத் துன்ப நிலையினின்றும் நீக்கித் தேற்ரு நிற்ப என்க.

(வி - ம்.) ௨௪. விசயம் - வெற்றி. கொற்றம் - வெற்றி; இஃதாகு பெயராய் அரசவுரிமையைக் குறித்து நின்றது.

௨௫. பற்று - பற்றுதற்குரிய பொருள். பழகியதனுற் பெருகிய (௨௬) ஆர்வப்புனல் என்க. ஆர்வப்புனல் - ஆசை வெள்ளம்.

௨௭. ஊர்கடல் : வினைத்தொகை. நடுக்குறீஇ - நடுங்கி. ௨௮. பெரும்போது - பெரிய மயக்கம். விளியும் - அழியும்.

௨௯. கரும்பேர் - கரும்புபோலத் தித்திக்கும். கனங்குழை : வாசவதத்தை.

௩0. கழுமிய - மிக்க. பொருள் - உறுதிப் பொருள்.

௩௧. கடையும் - இழிதகவும்.

௩௨. ஏமாப்பில - இன்பந்தருவன அல்ல; காவலாவன அல்ல எனினுமாம்.

[யூகி முதலியோர் ஒருமலைச்சாரலுக்குச் செல்லுதல்.]

௩௪ - ௩௯ : இருப்பம்................................போகி.

(பொ - ரை.) துன்பம் நீங்கிய தன்மையுடையனுகிய அவ் வுதயணனுடைய நிலைமையினை யூகி ஒற்றரானே திண்ணிதாக அறிந்து கொண்டு வாசவதத்தைக்கு அவளுடைய காதலுக்குக் காரணமான கணவனுக்குத் தீங்கில்லாமையை நன்கு அறிவித்துப் பின்னர் அவ்விடத்தினின்றும் அகன்று விடுதல் நன்றென்று நினைத்து அவ் வாசவதத்தையோடும் சாங்கியத்தாயோடும் ஒரு சுருங்கை வழியிற்சென்று என்க.

(வி - ம்.) ௩௪. இருப்பம் - தாழ்வு ; என்றது துன்பத்தை.

௩௫. அண்ணல் - உதயணன்.

௩௬. நிறமிக்க மாலையினையுடைய வாசவதத்தைக்கும் என உம்மை விரித்தோதுக. அங்ஙனம் அறிவியா விடத்து அவள் நெஞ்சமைதி கொள்ளல் அரிதாகலின் அவட்கும் அறிவித்தான் என்பது கருத்து.

௩௯. பொய்ந்நிலம் - சுருங்கை.

௪0 - ௪௬ : வேண்டிய.............ஒதுங்கி.

(பொ - ரை.) ஆங்கொருசார் இருந்து, சரக்குகளை வேண்டுமளவிற் கூட்டிச் செய்ததும் உண்போர் உருவம் மாறி வேற்று நிறம் எய்துதற்குக் காரணமானதும் பெறற்கரியது

மாகியதொரு கூட்டு மருந்தினைத் தம்முருவம் பிறர் யாரும் அறிந்து கொள்ளப்படாத வாதற்பொருட்டு அம் மூவரும் உண்டு நிறம் மாறிப் பார்ப்பன வடிவத்தோடு சந்தன மரங்கள் மிக்க சாரலையுடைய பெரிய மலைநிலத்திலே நடந்து செல்லுதற்கு அரியதாகிய கல்லும் புல்லும் சூழ்ந்ததொரு வழியின்மேல் நடந்து (செல்லா நிற்கும் பொழுது) என்க.

(வி - ம்) ௪௦ - க. கூட்டிச் செய்த யோகம் என்க. உண்டோர் நிறம் மறைந்து வேறு நிறம் பெறுதற்குக் காரணமான யோகம், அரும் பெறல் யோகம் எனத் தனித்தனிக் கூட்டுக. ௪௨. தம்முருவம் தம்மை முன்பு தெரிந்துள்ளோர் யாவரும் தெரிந்துகொள்ளமாட்டாத தன்மை யுடையனவாதற் பொருட்டென்க.

௪௪. சந்தன மரங்கள் மிக்க சாரல் என்க.

௪௫. செல்லுதற்கு அருமைத்தாகிய என்க.

௪௬. புல்லதர் - புல்லியவழி எனினுமாம். புலவர் அவருள் வாசவதத்தையை நினைந்தவராய் "மெல்லடி" என்றார்.

௪௭ - ௫௫ : பிரிவுதலைக்கொண்ட....................சென்றகாலை.

(பொ - ரை.) வாசவதத்தையினது பிரிவாற்றுமை என்னும் வெவ்விய நோயாகிய தீயினை யூகி தனது தலைமைத் தன்மையுடைய மொழியாகிய நீரினைத் தெளித்து அவித்து மேலும் அவள் கொழுநன் நன்கு நிலைபெறுதல் வேண்டும் என்னும் ஊக்கமாகிய எருதினை அவளது நெஞ்சமாகிய தேரிற் பூட்டாநிற்ப, அவளும் தன் காதலை அகத்தே கரந்து மறைத் தவளாய்க் கட்டுந்தொழிலையுடைய மந்திரத்தாலே கட்டுண்டதொரு நாககன்னிகை போன்று அவ்வியூகி கூறிய நீதி மொழிகளானே பிணிப்புண்டு அவன் விரும்பிய வழியிலே செல்லா நின்றபொழுது என்க.

(வி - ம்.) ௪௭. எரிபுரை - தீயை ஒத்த.

௪௮. நீரை ஒத்த தன் மொழியாலே குளிரும்படி தெளியச் செய்து என்க. தண்ணென - குளிரும்படி.

௪௯. முலை முதலுக்குரிய கொழுநன் என்க.

௫௦. உள்ள ஊர்தி - நெஞ்சாகிய தேர்; ஊக்கமாகிய குதிரையை எனினுமாம்.

௫௧. கள்ளக் காதல் - பிறர் அறியாதபடி மறைக்கப்பட்ட காதல் என்க. ௫௨. இமிழ்வினை விச்சை - கட்டுந்தொழிலையுடைய மந்திரம்.

[ஒரு தவப்பள்ளியின் மாண்பு.]

௫௫ - ௬௬ : தன்கோல்........ ..........அறிந்து மூன்னுடி.

(பொ - ரை) தண்ணிய அறமல்லது வெவ்விய மறம் புகாமைக்குக் காரணமான செங்கோன்மையையுடைய விசயவர

வேந்தன் ஆளாநின்ற அங்க நாட்டின்கண் உள்ளதும், அருகன் திருக்கோயில் அமைந்ததுமாகியதொரு பெரிய மலையின் எய்தி அம்மலையின் பாங்கர் உள்ளதும், புதுத்தேன் மணக்கும் சுனை நீலமலரும் கணித்தொழிலையுடைய வேங்கையும், நல்ல கிளைகளையுடைய நறவமும், நாகமும், நந்தியாவட்டமும், பருவமல்லாத காலத்தும் பயன் தருதல் தவிராத பலாவும், மாவும், நெடிய குலைகளையுடைய வாழையும், கரிய கனியையுடைய நாவலும், இளமையுடைய மாதுளமும் ஒருங்கே நெருங்கிக் கண்டோரை விரும்பச் செய்யும் இயல்பையுடையதும் குற்றமற்ற துறவோரும் மகளிரும் கூடி உறைவதுமாகியதொரு தவப்பள்ளியை அடைந்து அதன் இயல்பெலாம் முன்னர் ஆராய்ந்து அறிந்து என்க.

(வி - ம்.) ௩௬. தண்கோல் வெங்கோல் என்பன ஆகுபெயர்கள்; அவை நிரலே அறம் மறம் என்னும் பொருள் குறித்து நின்றன.

௩௭- செங்கோலன் என்றது அந்நாட்டு மன்னனாகிய (௧௨௩) விசயவரனை என்க. சேதியம் - அருகன் கோயில்.

௩௮. தாள்முதல் - அடிப்பகுதி. நாள்மது - புதுத்தேன். ௩௯. கல்சுனை நீலம்-மலையிடத்தமைந்த சுனையிலுள்ள நீலமலர். கணிவாய்-கணித்தொழில் வாய்ந்த; குறிஞ்சிநில மாக்கள் வேங்கை மலரும் நாளிலே திருமணஞ் செய்து கொள்ளுதல் மரபு. இதனை "இள வேங்கை நாள்உரைப்ப" எனவரும் திணைமாலையானும் (திணைமாலை. ௧௮) "கணிவாய் வேங்கை" எனவரும் நற்றிணையானும் (௩௭௩) அறிக.

௪௧. கொடுப்பு அரு அ - கொடுத்தலிற் றவிராத.

௪௩. இருங்கனி - கரியபழம்; பரியபழமுமாம்.

௪௪. கஞலி - நெருங்கி. புகற்றும் - விரும்புவிக்கும்.

௪௫. ஆசு - குற்றம். முன்நாடி அறிந்து என மாறுக.

[யூகி முதலியோர் அத் தவப்பள்ளியில் உறைதல்.]

௪௭ - ௭௪: மற்றதன்............................மரீஇயொழுக.

(பொ - ரை.) அத் தவப்பள்ளியின்கண் யூகியால் நன்கு அறியப்பட்டவரும் உருமண்ணுவாவினுடைய தந்தையும் அவமில்லாத முயற்சியாகிய தவத்தையுடையவரும் முதியவருமாகிய ஒரு முனிவரைக் கண்டு அவர்பால் தமது வரலாற்றினைக் கூறி அத்தவப் பள்ளியினின்றும் பிரியாராகவும் அவருள் யூகி வாசவதத்தையினை அகலாதும் அணுகாதும் ஒழுகி ஏனைச் செவிலித்தாயோடும் அவ்விடத்திலேயே ஏனை முனிவர்களையும் அறிந்து பழகிப் புறத்தோர் அறியாதபடி மறைந்துறையா நிற்ப என்க.

(வி - ம்.) ௬௭. தெற்றெனத் தெரியும் என்பதற்கு, மெய்ப் பொருளைத் தெள்ளத்தெளிய உணரும் முனிவன் எனினுமாம்.

௬௮. பெருமுதுகுரவன் : தந்தை.

௬௯. அவமில் சூழ்ச்சித் தவமுதுமகன் என்னுமித் தொடரோடு,

"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு.'' (குறள் - ௨௬௬)

என வரும் திருக்குறளையும் நினைக.

௭௦. கருமம் - தாங்கருதியுள்ள செயல்.

௭௩. மாதர் - வாசவதத்தை.

௭௪. தெரீஇ - தெரிந்து. மரீஇ - மருவி ; பழகி.

[சாங்கியத்தாயின் செயல்]

௭௫ - ௮௭ : பள்ளியும்....................தலைநின்றொழுக.

(பொ - ரை.) அவருள் சாங்கியத்தாய் பிறர்க்கெல்லாம் சேய்மையிலுள்ள தவப்பள்ளியை யாதல் ஊரினையாதல் மலையை யாதல் தாம் பிறந்த விடமாகக் கூறியும், தம்மைப் பிரிந்து சென்று தவநெறியை மேற்கொண் டொழுகுமொரு மூதாட்டி யின் வயிற்றில் தாம் மூவரும் பிறந்ததாகப் பிரிந்து சென்ற இடந்தோறும் அறிவுறுத்தியும் தீர்த்த யாத்திரை செய்தல் வேண்டும் என்னும் குறிக்கோளோடும் அதற்கியன்ற ஒழுக்கத் தோடும் இவ்விளையாளை மணந்த கணவன் இவளை எம்பால் விடுத்துக் காடு முதலியவற்றைக் கடந்து ஆழ்ந்த நீரையுடைய குமரிக்கடலில் ஆடுதற்குப் போயினன் என்னுமொரு பொய்ம் மொழியானே வாசவதத்தை வரலாற்றினை மறைத்துக் கயவர் களுக்கு அதனை அவர் மெய்ம்மொழியாக நம்பும்படி சொல் வன்மையினால் கூறியும் குற்றமற்ற உதயணகுமரனுக்கு ஆக்க முண்டாக்குதலை விரும்பி அத் தவப்பள்ளியிலுள்ள முனிவர் மகளிரோடு கூடி ஒழுகாநிற்ப என்க.

(வி - ம்.) ௭௫. பள்ளி - சேய்மையிலுள்ள தவப்பள்ளி. பதி - ஊர். சேணிடத்துள்ளவை(யாகிய) பள்ளியும் பதியும் மலையும் உரைத்தென மாறுக.

௭௬. தள்ளாத் தவநெறி - குன்றாத தவவொழுக்கம்.

௭௭. அற்றம் - துன்பம் ; ஈண்டுப் பிறவித்துன்பம்.

௭௮. ஒருவயிற்றிற் பிறந்ததாக....................அறிவுறீஇ என்க.

௮௦. நாட்டவொழுக்கு - ஒரு குறிக்கோளோடு அதற்கேற்ப ஒழு கும் ஒழுக்கம் என்க. நாட்டவொழுக்கம்-தேசாசாரம் என்பாருமுளர்.

௮௧. வேட்டோன் - மணந்தவன்.

அ௨. குண்டுநீர்க் குமரித் தெண்டிரை - ஆழ்ந்த நீரினையுடைய குமரிக் கடல். ஆடிய - ஆடுதற்கு.

அ௩. பொத்தி - மறைத்து.

அ௪. தீவினையாளர் என்றது கயமாக்களை.

அ௭. தண்டமை மகளிர் - தழையுடுத்தும் முனி மகளிர்.

[காஞ்சனமாலையின் வரவு]

அஅ - ௬௮: கண்டனிர்......................நெறிமையின் ஓங்கி.

(பொ - ரை.) இவர்கள் நிலைமை இவ்வாறாக; இனி இலாவாணக நகரத்தே வாசவதத்தையை இழந்த காஞ்சன மாலை என்னும் தோழி எதிர்வந்தோரையெல்லாம் எம்மன்னன் மகளைக் கண்டீர் உளீரோ! என்றென்று வினவி உயிர் போதற்குக் காரணமான பெருந்துயரம் எய்தாநிற்ப; அதுகண்ட உருமண்ணுவா அவட்கிரங்கி இவள் திறத்து இப்பொழுது யான் செய்யவேண்டியதாகிய கடமையிஃதாம் என்று துணிந்து அக்காஞ்சனமாலையை அங்க நாட்டுள்ள அத் தவப்பள்ளிக்கு அழைத்துக் கொடுவந்து அங்கே உறைகின்ற வாசவதத்தையையும் அவளுக்குக் காட்டி மேலும் அச்செயலுக்குக் காரணத்தையும் கூறிப் (போயினனாக) இவ்வாறாகக் காஞ்சனமாலை வாசவதத்தையோடு சேர்ந்தபின்னர் அவள் பெரிதும் மகிழ்ந்து வாசவதத்தையைத் தழுவிக்கொண்டு தேற்றிப் பாதுகாத்து அவளைப் பிரியா ஒழுக்கின்கண் உயர்ந்தனள் ஆகப் பின்னர் என்க.

(வி - ம்.) அ௭. காவலன் - பிரச்சோதனன். உயிர்நில்லா நனி செல்லல் எனமாறுக. உயிர் நில்லாமைக்குக் காரணமாய் மிக்கதுன்பம் என்க.

௯0. செல்லல் - துன்பம். "உடுக்கையிழந்தவன் கைபோல" நண்பர் உற்ற இடுக்கண் களைதல் அவரை நட்டோர் கடமையாதல் பற்றிச் செயற்பாற்றிது வெனத் துணிந்து என்பது கருத்து.

௯௧. நண்பின் உருமண்ணுவா என்றது அவன் அங்ஙனம் செய்தமைக்குக் குறிப்பேதுவாய் நின்றது.

௯௨. கோமகள் : வாசவதத்தை.

௯௩. கருமக்காரணம் - அரண்மனையிற் றீயிட்டமை முதலிய செயலுக்குரிய காரணம்.

௯௪. விண்டு - விரிந்து. கண்ணி : வாசவதத்தை.

௯௫. தலைப்படுத்தனளாக என்பது ஈற்றுயிர் மெய்கெட்டுநின்றது. தானவண்போகி - இவ்வாற்றாற்றான் அப்பள்ளியிற் சென்றானென்க.

௯௯. வண்டு கிண்டுதற்குக் காரணமான மலர்மணம் பொருந்திய கூந்தலையும் விளங்குகின்ற அணிகலனையும் உடையவளாகிய வாசவதத்தையை என்க.

௯௮. ஓங்கி என்னும் எச்சத்தைச் செயவெனெச்சமாகக் கொள்க.

**[யூகி முதலிய நால்வரும் அத் தவப்பள்ளியினின்றும் சண்பை நகர்க்குச் செல்லுதல்.]**

௯௯ - ௧0௨ : யாங்கு.................................போகி.

(பொ - ரை.) பகைவராயினும், உறவினரேயாயினும், இரு திறத்தாருள்ளும் ஒரோவழி ஒற்றர் இருத்தலும் கூடும். அங்ஙனம் இருப்பராயின் நமக்குத் துன்பமுண்டாதல் ஒருதலை; ஆகலின் ஈண்டிருத்தல் நன்றன்று என்றும் இனி எவ்விடத்தே சென்றிருத்தல் நன்றாம் என்றும் அந் நால்வரும் தம்முட் கூடி ஆராய்ந்து (ஓரிடத்தைத் துணிந்தனராய்) அத் தவப்பள்ளியினின்றும் பிறர் அறியாமல் புறப்பட்டுச் சென்று என்க.

(வி - ம்.) யாங்கு - எவ்விடத்து. இனிதிருத்தும் - இனிதே சென்றிருப்போம்.

௧00. பற்றார் - பகைவர். உற்றார் - உறவினர். பகைவருள் அல்லது உற்றாருள்ளும் ஒற்றுவர் இருத்தல் கூடும் அங்ஙனம் இருப்பாராயின் என்பது கருத்து.

௧0௧. அற்றம் - துன்பம்.

௧0௨. அவண் - அத் தவப்பள்ளியின்கண். ஒடுங்கார் - உறையாராய். மறைந்தனர் : முற்றெச்சம்.

**[சண்பை நகரின் சிறப்பு]**

**௧0௩ முதல் ௧௨௫ ஈறாக ஒருதொடர்**

௧0௩ - ௧௨௫ : உருமண்ணுவா....................பெருநகர்.

(பொ - ரை.) முற்கூறப்பட்ட உருமண்ணுவாவின் தந்தையாகிய முனிவருடைய நண்பனும், (௧௧௧) முடிமன்னருள்ளும் சிறந்த முடிமன்னனும், பகைவர் வலியை அழித்த நெடிய வேற்படையினையும் யானையினையும் கொற்றவெண் குடையினையும் உடையவனும், உக்கிர குலத்துத் தோன்றிய அரசருள்ளும் சிறந்த அரசனும், வில்லாற்றல் மிக்க படையினையுடையோனும், ஆகிய விசயவரன் என்னும் மன்னன் வீற்றிருந்து ஆட்சி செலுத்தும் தலைநகரமும், (௧0௫) மிக்க நீரையுடைய கங்கைப் பேரியாறு பாய்ந்து பெருவளஞ் செய்யப்பெறுவதும், அவ்வங்க நாட்டிற்கே அழகுதருவதாய் அமைந்திருப்பதும், பிறநாட்டினும் தனக்கு ஒப்பாகும் நகரங்களில்லாததும், அழகிய அகழ்

சூழ்ந்ததும், வானத்தே இயங்கும் கந்தருவரும் தேவரும் அஞ்சு தற்குக் காரணமான வானுற உயர்ந்து நிற்கும் கொடிகள் ஆடா நிற்பதும், சூலம் நாட்டிய குடங்களோடு தன்பால் வாழ்வோர் துன்பத்தை அகற்றிப் பாதுகாக்கும் புகழான் விளங்கித் திசை தொறும் பரவும் வெற்றிப் புகழையும் உடையதும், எண்ணி எல்லைகாண வியலாத பெரும்படை அடங்கும் வாயிலையும் அழகினையும் மதில்களை அணிந்த தெருக்களையும் உடையதும் மற்று அப்படைஞர் முதலிய தன்பால் வாழும் மக்கட்கு ஒப்பற்ற இன்பம் நல்கும் இயல்புடையதும் ஆற்றல்மிக்க நால்வகைப் படையானும் காக்கப்படுவதும் ஆகிய சண்பை என்னும் பெயரையுடைய பெரிய நகரத்தே என்க.

(வி - ம்.) ௧0௩ - ௧0௪. உருமண்ணுவாவின் பெருமுதுகுரவன் தோழன், என்றது அம் முனிவனே இவர்க்கு அங்குச் சென்றுறைவிர் எனக் கூறச் செல்வாராயினர் என்றுணர்தற்குக் குறிப்பேதுவாய் நிற்றல் நுண்ணிதினறிக.

௧0௪. அவமில் சூழ்ச்சி - வீண்போதலில்லாத முயற்சி. அவமில் சூழ்ச்சித் தவறு இல் தோழன் என்றது அவன் நகரத்தே உறைதலாற் றீங்கு நேராதென்று அவர் துணிந்து சென்றனர் என்பதற்குக் குறிப் பேதுவாக நிற்றலும் உணர்க.

௧0௭. கிடங்கு - அகழி.

௧0௮ - ௧0௯. பெரிய மலர்களானுய நறிய மாலைகளணியப்பட்ட முடியினையும் பொற்கழல் கட்டப்பட்ட அடியினையும் உடைய விச்சா தரரும் தேவகுமரரும் என்க.

௧௧0. இக் கொடிகள் நம்மை ஊறுசெய்யுங்கொல் என்று அச்சங் கொள்ளக் காரணமாக அவர் இயங்கும் வானின்கண் உயர்ந்து நிற்கும் கொடிகள் என்பது கருத்து.

௧௧௧. சத்திக்குடம் - சூலம் நடப்பட்ட குடம் (கலசம்)

௧௧௨. துளங்கும் வென்றி - பரவும் வெற்றிப்புகழ்.

௧௧௩. அரும்படை - பகைவர் வெல்லுதற்கரிய படை.

௧௧௫. தெருவிற்றுகி - தெருக்களை உடையதாய்.

௧௧௫. மற்றோர்-அப்படைஞர் முதலிய தன்பால் வாழ்வோர்க்கு.

௧௧௭. கொடுஞ்சி - தாமரைப்பூ வடிவமாகச் செய்து தேரின்முன் பக்கத்தே நடப்படுவதோர் உறுப்பு.

௧௨0. கடுமுரண் - கடிய வலிமை.

௧௨௧. படுமணி - ஓசைபடும் மணி.

௧௨௨. உக்கிரகுலம் - ஐம்பெருங் குலத்துள் ஒன்று. அக் குலத்தே தோன்றிய அரசருள்ளும் சிறந்த அரசனாகிய என்க.

௧௨௪. நற்றிறல் - அரசற்கோதிய நல்ல திறமை எல்லாம் அமையப் பெற்ற என்க.

[யூகி முதலியோர் அந்நகரத்தே மித்திரகாமன் என்னும் ஒரு வணிகன் வீட்டில் உறைதல்.]

௧௨௫ - ௧௩௫ : சால்பொடும்..............மறைந்தென்.

(பொ - ரை.) சான்றாண்மையோடு விளங்கா நின்றவனும், முட்டுப்பாடில்லாத வாழ்க்கையினை உடையவனும், வணிகர் குடியிற்றோன்றியவனும், மித்திர காமன் என்னும் பெயரையுடையவனுமாகிய ஒரு வணிகனுடைய மிக உயர்ந்த இல்லத்தின்கண், இவள் உதயணன் காதலியாகிய வாசவதத்தை என்னும் அவ் வுண்மையினை உணர்ந்தோர் யாரும் அங்கில்லாமையான் சாங்கியத்தாயும் பிரிதலியலாத அன்புடைத் தோழியாகிய காஞ்சன மாலையும் உயர்ந்த பெரிய புகழினையுடைய யூகியும் விரும்பித் தங்களைத் தாங்களே காத்துக் கொள்ளுதலோடு அப் புறநகர்ப் பகுதியில் தனது உயர்குலப் பண்பிற் றப்பாத இயல்புடைய வாசவதத்தையோடு புகுந்து அவ்விடத்திலேயே பிறர் அறியாதபடி மறைந்துறைவாராயினர் என்க.

(வி - ம்.) ௧௨௫. சால்பு - பல நற்குணங்களான் நிறைந்து அக் குணங்களுக் கேற்ப ஒழுகும் இயல்பு. இதனை,

"கடன்என்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு." (குறள் ௯௮௧.)

என்றற் றொடக்கத்துத் திருக்குறள்களானே உணர்க.

வாசவதத்தை முதலிய மேன்மக்கள் இடையூறின்றி உறைதற்குத் தக்கது என்றற்கு ஏதுக் கூறுவார், சால்பொடு விளங்கிய என்றும் முட்டில் வாழ்க்கை என்றும் மிக்குயர் பெருமனை என்றும் விதந்தோதினர்.

௧௨௬. முட்டு - வறுமை.

௧௨௯. அத்தகவு - அத்தன்மை; ஈண்டு தகவு - உண்மை என்பதுபட நின்றது.

௧௩௦. ஆப்பு - யாப்பு; கட்டுதல். அந்தணாட்டி - சாங்கியத்தாய்.

௧௩௧. பிரிதல் இயலாத தலையன்பினையுடைய நிலைமையையுடைய காஞ்சனமாலை என்னும் தோழியும் என்க.

௧௩௨. உகவா - உகந்து; விரும்பி என்றவாறு.

௧௩௩. தம்மைத்தாமே காத்துக்கொள்ளும் காவலோடே என்க. ஈண்டுச்,

"சிறைகாக்குங் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறை காக்குங் காப்பே தலை." (குறள் - ௫௭)

எனவரும் அருமைத் திருக்குறளையும்,

"ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு."

எனவரும் திருக்குறளையும் நினைக.

புறநகர் என்றது ஒரு நகரத்தினை அகநகர் இடைநகர் புறநகர் என்று பகுத்துக் கூறுவராகலின் இம் முக்கூற்றினுள் புறநகர் என்னும் கூற்றின்கண் அமைந்த இடத்தில் (உள்ள அவ் வணிகன் மனையில்) என்றவாறு. இதனைப் புடைநகர் என்றலும் உண்டு.

மேற்படி - மேன்மைக்குணம். படி - குணம். (சூடாமணி நிகண்டு அ : எக.)

"இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு."　　　　(குறள் - கூ௫௧.)

என்னும் குறளையும்,

"ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்."　　　　(குறள் - கூ௫௨.)

என்னும் குறளையும் இதனை ஓதும் நம்மனோர்க்கு நினைவூட்டுவார்,

"மேற்படி பிழையாப் பூங்குழன் மடந்தை."

என வாசவதத்தையை வித்ந்து கூறினர்.

(க0௨) மறைந்தனர் போகி (௧௨௫) சண்பைப்பெருநகர் மித்திர காமன் பெருமனை (௧௩௬) புகுந்தனராகி இனிதிருந்தனர் என இயைபு காண்க.

௨௦ சண்பையுள் ஒடுங்கியது முற்றிற்று.

இரண்டாவது

இலாவாண காண்டம் முற்றுப்பெற்றது.

பெருங்கதை, இலாவாண காண்டத்திற்குப்
பெருமழைப்புலவர், பொ. வே, சோமசுந்தரனர் எழுதிய
பொழிப்பும், விளக்கமும் முற்றும்.

---

# அருஞ்சொற்றொடர் அகரவரிசை

[எண் : காதையையும் அடியையும் குறிக்கும்]

